# பிள்ளைத்தமிழ்க் கொத்து

(முதற் புத்தகம்)



கழக வெளியீடு

கழக வெளியீடு: ௮௮௧

# பிள்ளைத்தமிழ்க் கொத்து

## [முதற் புத்தகம்]

### அரும்பொருள் விளக்கங்களுடன்




திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி—6. சென்னை-1
1964

# பதிப்புரை

செந்தமிழ் மொழியிலே வழங்கும் செய்யுள் நூல்கள் சிற்றிலக்கியம் என்றும் பேரிலக்கியம் என்றும் இருவகையாகப் பகுக்கப்பெறும். பேரிலக்கியமாவது,

"அவற்றுள்,
பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்
றேற்புடைத் தாகி முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப"

என்னுஞ் சூத்திரத்திற் கிணங்க அமைந்து அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும் உரைப்பதாய்ச் சிறந்து விளங்குவது. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன பண்டைக்காலப் பேரிலக்கியங்களாம். மற்றும் பிற்காலத்தெழுந்த கம்பராமாயணம் பாரதம் முதலிய இதிகாசங்களும் புராணங்களும் பெருங்காப்பியங்களே.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இந் நான்கனுள் ஒன்றும் பலவும் குறைந்து வருவது சிறுகாப்பியம் என்றும் கூறப்பெறும். பொருளானன்றி இவைகள் அளவானும் குறைந்தே விளங்கும். சிறுகாப்பியம் எனினும் காப்பியமெனினும் சிற்றிலக்கியம் எனினும் ஒக்கும். அந்தாதி, உலா, மடல், பிள்ளைத்தமிழ், பரணி, ஆற்றுப்படை முதலியன சிற்றிலக்கியங்களின் பாற்பட்டவை. இவைகள் பெரும்பாலுந் தெய்வவணக்க நூல்களாகவே அமைதல் வழக்கம்.

சிற்றிலக்கிய நூல்களை அருஞ்சொற் பொருள் விளக்கங்களுடனும் ஆராய்ச்சி முன்னுரையுடனும் தனி நூல்களாகவும் கொத்துநூல்களாகவும் வெளியிடவேண்டும் என்பது கழக நோக்கங்களுள் ஒன்று. சிறுநூல்கள் தனித்தனியாகச் சிதறிக் கிடத்தலால் அவைகளின் பெருமை நன்கு விளங்குவதில்லை. இவைகள் பல ஒன்று கூடுதல் பெருமைக்குரிய செயலாகும்.

முதற்கண் பிள்ளைத்தமிழ் நூல்களை அம்முறையில் வெளியிடத் தொடங்கி இப்பொழுது செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் ஆகியவைகளைத் தனி நூல்களாக வெளியிட்டிருப்பதோடு இவ்வாறு கொத்துநூலாகவும் வெளியிடுகிறோம். திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ், திருக்குன்றை முருகன் பிள்ளைத்தமிழ், திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ், சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், திருத்தணிகை முருகன் பிள்ளைத்தமிழ், பழனிப் பிள்ளைத்தமிழ் ஆகியன இரண்டாம் புத்தகமாக வெளிவரும். இக் கொத்துநூல்கள் படிப்பகங்களுக்கும் தனிப்பட்டவர்கட்கும் இன்றியமையாவாகலின் அனைவரும் இவ் வெளியீடுகளைப் பெற்றின்புறுவார்கள் என்று நம்புகிறோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**




# உள்ளுறை

பக்கம்

கழக வெளியீடு : கூ0

திருக்கலைசைச்

# செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்

*
* *

பேராசிரியர், பெருநாவலர்,

**திரு பு சி புன்னைவனநாத முதலியார்**

எழுதிய

அரும்பொருள் விளக்கத்துடன்

*
* *

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி-6. சென்னை-1.

1965

# பதிப்புரை

பிள்ளைத்தமிழ் பெற்ற கடவுளர்களுள் முருகவேளும் உமையவளுமே முதன்மையானவர்கள். ஆனைமுகக் கடவுளும் பிள்ளையாகப் பிறந்தவர்தாம். ஆயினும் அவர்மீது பிள்ளைத்தமிழ் மிகுதியாகப் பாடப்பெறவில்லை. மூத்த பிள்ளையார் பிள்ளைத் தமிழ் பெறவில்லை என்னும் குறையை நீக்கக் கருதிய மாதவச் சிவஞான முனிவர் திருக்கலைசை என்னும் பதியில் எழுந்தருளிய செங்கழுநீர் விநாயகர் என்னும் மூத்த பிள்ளையார்மீது பருவத்திற்கு ஐவ்வைந்து பாடல்களைக் கொண்டதாய்ப் பிள்ளைத்தமிழ் ஒன்றை இயற்றியருளினார்.

இப் பிள்ளைத்தமிழ் மூலம் மட்டும் 1927ஆம் ஆண்டில் நம் கழக வாயிலாக வெளியாயிற்று. பிள்ளைத்தமிழ் நூல்களை அரும்பொருள் விளக்கம் முதலியவற்றோடு இப்பொழுது வெளிப்படுத்தும் பணியில் இப் பிள்ளைத் தமிழையுஞ் சேர்த்துப் பேராசிரியர் பெருநாவலர் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்களைக் கொண்டு அரும்பொருள் விளக்கம் எழுதச் செய்து வெளிப்படுத்துகிறோம்.

அரும் பொருள் விளக்கம் அருஞ்சொற்கள் எல்லாவற்றிற்கும் எழுதப்பட்டிருத்தலின் மூலப்பொருளை நன்கு விளக்கமாக உணர்ந்து கொள்வதற்கு இவ் வரும்பொருள் விளக்கமே போதுமானதாகும். இதனை எங்கள் விருப்பப்படி எழுதித்தந்த திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கட்கும் பொருட்குறிப்பு எழுதியுதவிய இராவ்பகதூர், தணிகைமணி வ. சு. செங்கல்வராயபிள்ளை அவர்கட்கும் எங்கள் நன்றி உரியதாகுக. அரும்பொருள் விளக்கத்தோடு கூடிய இப் பிள்ளைத்தமிழ் அனைவராலும் போற்றி வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

தொட்டிக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ் என்பது, மறைமுதற்கட் பிரணவத்தின் அரும் பொருளாய்ப் பார் பூத்த அடியர் வினை கெடுத்தருளும் கற்பகமாய் எழுந்தருளியிருக்கும் விநாயகக் கடவுள்மீது பாடப்பெற்றுள்ள பிரபந்தங்களில் ஒன்று. தொட்டிக் கலைசைச் செங்கழுநீர் விநாயகப் பெருமான் மீது பிள்ளைத் தமிழ் பாடிய மாதவச் சிவஞான முனிவர் வரலாறு இந் நூலில் தனியே பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இந் நூலாசிரியர் குளத்தூர் அமுதாம்பிகை அம்மை மீதும் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார், முனிவரின் அறி வாற்றல், செய்யுள் இயற்றும் திறம், கற்பனையை விளக்கும் காட்சி, சித்தாந்தத் தெளிபொருள் தெரிக்கும் திறம் முதலி யன அவர்கள் பாடலிலே விளங்குவதைப் பயில்வார் கண்டு களியாதிரார்.

பிள்ளைத்தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ்என இருவகைப்படும். ஒவ்வொன்றும் பத்துப் பத்துப் பருவங்களுடையன. முதல் ஏழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவாம். ஆண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதி மூன்று பருவங்களும், சிற்றிற் பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவமாக அமை யும். பெண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதி மூன்று பருவங்களும் அம்மானை, நீராடல், ஊசற் பருவங்களாய் விளங்கும். இப் பருவங்களைப் பாடும் காலம் இந் நூலில் அவ்வப் பருவத் தலைப் படியில் குறிக்கப்பட்டுள்ளது.

இவ் விநாயகர் பிள்ளைத்தமிழில் காப்புப்பருவம் முதல் சிறுபறைப் பருவம் இறுதியர்யுள்ள ஒன்பது பருவங்களி

லும் பருவத்துக்கு ஐந்து பாடல்கள் வீதம் 45 ஆசிரிய விருத்தங்களும் நூல் துவக்கத்தில் விநாயகக் கடவுள், ஆசிரியர் கருத்துப்பற்றிய இரண்டு விருத்தங்களும், 10 ஆவது சிறுதேர்ப் பருவத்தில் ஆறு பாடல்களும் ஆக மொத்தம் 53 பாடல்களிருக்கின்றன.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார் பிள்ளைத்தமிழ் நூல்களைத் தொகுதி தொகுதியாகக் குறிப்புரைகளுடனும், சிறிது கற்றுரும் படித்து மகிழும் முறையில் பொருள் விளக்கத்துக்கேற்ற சந்திப்பிரிப்புடனும் அழகுற அச்சிட்டுத் தமிழ்மக்கள் மன மகிழ்ந்தேற்குமுறையில் வெளிப்படுத்தஉதவ முன்வந் துளார்கள். 1927-இல் இக் கழக மூல வெளியீடாக வந் துள்ள இப் பிள்ளைத் தமிழ்க்கு விளக்கமான குறிப்புரை ஒன்றும் எழுதப்பணித்தனர், மேற்படிக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திருவாளர் **வ. சுப்பையாபிள்ளை அவர்கள்.** அவர்கள் பணித்த பணிக்கிசைந்து என் அறிவுக்கு எட்டிய வண்ணம் குறிப்புரையும் வரைந்துள்ளேன். முனிவர் பெருமானின் உள்ளம் அறிய அவாவுவார்க்குக் குறிப்புரை பயன்படும்.

இத்தகைய தமிழ்ப் பணியில் ஈடுபட அறிவும் ஆற்ற லும் அருளிய முழுமுதற்பொருளை உளம் நிறைந்த அன்புடன் வணங்குகின்றேன்.

புலவரகம், நெல்லை
20—5—1957

**பு. சி. புன்னைவனநாதன்.**

# ஸ்ரீ சிவஞான சுவாமிகள் வரலாறு

இந் நூலாசிரியராகிய சிவஞான சுவாமிகள் பாண்டிவள நாட்டில், பொதியின் சாரலில், பாவநாசத்தைச் சார்ந்த விக்கிரம சிங்கபுரத்தில், உயர் சைவவேளாளர் மரபில் ஆனந்தக் கூத்தர் என்பார்க்கும் மயிலம்மையார் என்பார்க்கும் பிறந்தவர். இவருக்கு முக்களாலிங்கர் என்பது பிள்ளைப்பெயர். ''விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கொப்ப அன்பும் அருளும் வாய்மையுந் தூய்மையுங் கூர்த்த அறிவும் சிறுபிள்ளையிலேயே அமையப் பெற்றவர். ஐந்தாவதாண்டில் இவர் தந்தையார் கல்வி பயிற்று வித்துத் திண்ணைப்பள்ளிக்கு அனுப்பி வந்தனர்.

பள்ளிக்குச் சென்று வருங்கால் ஒருநாள் வழியில் திருவாவடு துறைத் திருமடத்தினின்றும் போந்த சில முனிவர்களைக் கண்டு நிலத்தில் வீழ்ந்திறைஞ்சி, முகமன் வழங்கித் தமது இல்லத்திற் கழைத்துச் சென்று தம் அன்னையாரைக் கொண்டு திருவமுது ஆக்குவித்து அருத்துவிப்பாராயினர். அதனை யன்போடு செய்த அன்னையாரை நோக்கி,

> ' அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றுந்
> திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
> யானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு
> மானந் தவாத மயில்'

என்னுஞ் செய்யுளை அன்பு ததும்பப் பாடினர்.

பின்பு தம் தந்தையாரிடம் விடைபெற்று அம்முனிவர் களோடு பல சிவப்பதிகளையுங் கண்டு வணங்கித் திருவாவடு துறையை யடைந்து திருமடப் பேராசிரியராய் விளங்கிய நமச் சிவாய மூர்த்திகளை இறைஞ்சி அன்னார் அருளைக்குற்று, ஒடுக் கத்தின்கண் எழுந்தருளியிருந்த பின் வேலப்ப தேசிகரைக் கண் கள் களிகூரக் கண்டு, அவர்பால் சிவதீக்கையும், சைவசந்நியாச மும், சிவஞான யோகிகள் என்னும் தீக்கைப் பெயரும் பெற்றுச் சைவசித்தாந்த நுண்ணூல்களைக் கற்று வடநூற்கடலும் தென் னூற் கடலும் எல்லை கண்டுணர்ந்தனர்.

ஒருநாள் திருப்பாதிரிப்புலியூரின்கண் 'கரையேறவிட்ட முதல்வா வுன்னை யன்றியுமோர் கதியுண்டாமோ' என்ற ஈற்றடி வருமாறு ஒரு பாட்டுப்பாடக் குறித்தபடி பாடிப் பொன் முடிப்பு ஒன்று பெற்று அதனைப் பெற விரும்பி வருந்திய பார்ப்பன னொருவனுக்குக் கொடுத்துதவினர்.

## இவர் அருளிச்செய்த நூல்களாவன:

**இலக்கணம்**

௧. தொல்காப்பியச் சூத்திர விருத்தி, ௨. இலக்கண விளக்கச் சூறாவளி, ௩. சங்கர நமச்சிவாயப் புலவர் நன்னூல் விருத்தியுரைத் திருத்தம்.

**இலக்கியம்**

௧. காஞ்சிப் புராணம், (முதற்காண்டம்)௨. சோமேசர் முதுமொழி வெண்பா, ௩. திருவேகம்பரந்தாதி, ௪. திருமுல்லை வாயிலந்தாதி, ௫. கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி. ௬. இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி, ௭. குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, ௮. கச்சியானந்த ருத்ரேசர் பதிகம், ௯. திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு. ௧௦. செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், ௧௧. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், ௧௨. செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம், ௧௩. திருத்தொண்டர் திருநாமக் கோவை, ௧௪. நமச்சிவாயமூர்த்தி கண்மாலை முதலியன.

**தருக்க முதலியன**

௧. தருக்க சங்கிரகம் அன்னம் பட்டீயம்: ௨. சிவஞான போத மகாபாடியம், ௩. சிவஞான போதச் சிற்றுரை, ௪. சிவஞானசித்தியார் சுபக்கம் உரை, ௫. சித்தாந்தப் பிரகாசிகை, ௬. எடுத்து என்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம், ௭. சிவசமவாதவுரை மறுப்பு, ௮. சுலோக பஞ்சக மொழி பெயர்ப்பு, ௯. சிவதத்துவ விவேகம், ௧௦. திருவாவடுதுறை மரபட்டவணை மறுப்பின் மறுப்பு, ௧௧. கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி.

இவ்வாறு பல நூல்களையுஞ் செய்து 'வான்செய்தவுதவிக்கு வையக மென் செயும்' என்றவாறு மாறில்லாத பேருதவியை இவ்வுலகிற்களித்த ஆதீன குலதெய்வமென ஆன்றோர் போற்றும் ஆசிரியர் விசுவாவசு ஆண்டு, சித்திரைத் திங்கள் ஆயிலிய நன்னாளில் சிவபிரான்றிருவடிநீழலடைந்தனர். இவர் ஏறக்குறைய நூற்றைம்பதாண்டுகளுக்குமுன் இருந்தவர் எனத்தெரிகின்றது. இவர் மாணாக்கர்களிற் றலைசிறந்து விளங்கியவர்கள் தணிகைப் புராண ஆசிரியராய கச்சியப்ப முனிவரும். தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவருமாவர்.

---

## சிறப்புப்பாயிரம்

(இவ்விரண்டு செய்யுட்களும் நூலாசிரியர் காலத்தவை.)

இலகுசக னீரெட்டு நூற்றுநாற் பத்தேழி
ஙிற்கரநற் கும்பமிருபத்
தேழிரே வதிவெள்ளி பூர்வபக் கத்துதிகை
யேர்க்கவுல வஞ்சுப்பிரம்
கலவியுறு சுபதினங் கன்னிலக் கினமதிற்
கலைசைப்பதிக் குள்வாழ்செங்
கழுநீர் விநாயகர்த மீதுபிள் ளைத்தமிழ்க்
கவிபாடி வாரேருண
அலைமலி கடல்கடைக் தமிழ்நாட்டு மாலென்ன
அவனியிற் புலவர்செவியால்
ஆர்ந்திடத் துறைசைவாழ் சிவஞான தேசிகன்
அரங்கேற்றி ஞைதலால்
நலசுகுண மணிகுவளை யணிபுயன் வீரப்பன்
நல்குமக ராசயோகன்
நங்கள்கே சவபூபன் அநுசர்சேய் சுற்றமும்
நன்மைதரு வாழ்வுறுகவே. (1)

இன்றிழக்கு மூக்கன்றே யீர்ந்துமா னங்கொடுத்தான்
என்றுசய வீரனையே ஏத்துவாள்—மன்றவே
நற்கலைமான் தூயசிவ ஞானமுனி ஓதுதமிழ்ச்
சொற்சுவையை நோக்குந் தொறும். (2)




உ

திருச்சிற்றம்பலம்

திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர்

# பிள்ளைத்தமிழ்

விநாயகக் கடவுள்

மணிபூத்த மருமத்து நெடுமால் முதற்புலவர்
வான்பதம் வேட்டவர்க்கு
வழங்குவோ னும்தனது பதம்இரந் தோர்க்குதவு
வள்ளலுந் தானேயெனுந்

தணிபூத்த தன்தந்தை போற்பிற குறித்ததூஉந்
தற்குறித் தேன்றதொழிலுந்
தானே கடைக்கூட்ட வல்லசெங் கழுநீர்த்
தடங்களிற்றை யஞ்சலிப்பாம்

அணிபூத்த தொய்யிற் கரும்புசிலை யாகவிழி
அம்பினைப் பூட்டிமடவார்
அம்புயக் கிழவனைச் சீதரனை வென்றவர்கள்
அறிவினைத் திறைகோடலும்

பணிபூத்த மலர்மகளிர் ஆங்கதனை மீட்டிடும்
படிவந் திருந்துசெவ்வி
பார்க்குந் திருக்கலைசை மன்னிவாழ் தன்னையே
பாடுமென் கவிதழையவே.

(அரும்பதவுரை.) மணிபூத்த மருமத்து நெடுமால் - கவுத்துவ மணி விளங்குகின்ற மார்பையுடைய பெருமாள். புலவர்-

தேவர். வேட்டவர்க்கு-விரும்பியவர்க்கு. பதம் - பதவி; அடி. இரந்தோர் - வேண்டினோர். தற்குறித்து - தன்னைக் குறித்து. கடைக்கூட்ட - கொண்டு முடிக்க. அஞ்சலிப்பாம் - வணங்குவாம். தொய்யில் கரும்பு சிலையாக - தொய்யிலாக எழுதப்பட்ட கரும்பே வில்லாக. விழி அம்பு - கண்ணாகிய அம்பு. அம்புயக் கிழவன் - நான்முகன். சீதரன் - இலக்குமியின் நாயகன். திறை - கப்பம். பணி - ஏவல்; தொண்டு. செவ்வி - காலம். தழைய - தழைக்க: வியங்கோள் வினைமுற்று. (க)

## ஆசிரியர் கருத்து

அகளவடி வானபர மானந்த னேனுமெய்
யடியவர்கள் தம்மையாள
அருளுரு வெடுத்தலா லதனிளமை நோக்கிமுன்
அந்நலார் கூறுமொழியாத்

தகவுபெறு சிறுதேரை ஈற்றில் தழீஇநலந்
தாங்குகாப் பாதிபத்துந்
தண்டாத வாஞ்சையிற் கலைசைஉற் பலயானை
தன்னையா னின்றேத்தினேன்

இகலுமொரு வேடம் பரித்துவரும் ஒருவனுழை
யெல்லோரு மொல்லைக்குழீஇ
யியல்பாக அவ்வுருவம் உடையவரி னும்பெருமை
யெண்ணிப் பெருஞ்செல்வமும்

மிகவுதவு நீர்மையை மதித்தியல்ப தாத்துதி
விளம்பும்அத் தாதியரினும்
வினையினேன் றன்னிடத் தோவாத பேரருள்
விளைத்திடும் எனக்குறித்தே.

(அ - ரை.) அகளவடிவு - உருவமில்லாதது; அருவம். அந்நலார் - அழகிற்சிறந்த மாதர். தகவு-தகுதி. காப்பு ஆதி பத்து-காப்புப்பருவம் முதல் பத்துப் பருவங்களும். தண்டாத-நீங்காத. இகலும் - மாறுபடும். பரித்து-தாங்கி. உழை-இடம். நீர்மை-இயல்பு. ஓவாத - நீங்காத, ஓவு : பகுதி. (உ)

## க. காப்புப்பருவம்

[இது, பிள்ளைத்தமிழ் பாடும் இடத்து இரண்டாந்திங்களில் பிள்ளையைக் காக்க என்று, திருமால் முதல் முப்பத்து முக்கோடி தேவர் ஈறாகப் பல கடவுளரை நூலில் வணங்குதல்.]

### திருமால்

கார்கொண்ட கருநிறக் காளத்தை வெண்டிரைக்
    கைகளின் எடுத்துநீட்டுங்
  கடும்பிழையை நோக்காது திருவினொடு சுவையமுது
    கதிர்மணி தனக்குதவிடும்

பேர்கொண்ட நன்றியே பாராட்டி வெண்கேழ்ப்
    பெருங்கடற் பள்ளிகொண்டு
  பிறங்குநீர்ப் புவிமிசைப் புருடோத் தமப்பெரும்
    பெயர்நிறுவும் அண்ணல்காக்க

ஏர்கொண்ட தன்னைத் தளைப்பவரும் ஊருநரும்
    இலரென்ப துலகுதேறக்
  கெடுத்தவெம் பாசமோ டங்குசந் தன்கரத்
    தேந்திமத தாரைசிதறிப்

பார்கொண்ட எண்டிசைத் தறுகட் களிற்றுடல்
    பனிப்பச் செவிக்கால் எழீஇப்
  பகிரண்ட முற்றும் புகுந்துலாய்க் கலைசையிற்
    பதியுமோர் களிறுதனையே.

(அ - ரை.) காத்தற் கடவுள் திருமாலாகையால் பிள்ளைத் தமிழ் நூல்கள் பலவற்றினும் முதற்கண் திருமால் வணக்கங் கூறுதல் வழக்கமாக இருக்கிறது. காளத்தை - விடத்தை. கடும் பிழை-கொடுங்குற்றம். கதிர்மணி-கதிரும் மணியும். வெண்கேழ்-வெண்ணிறம். புருடோத்தமன்-திருமால். அண்ணல் - பெருமை உடையவன். தளைப்பவர் - கட்டுபவர். தாரை - ஒழுக்கு. தறு கண் களிற்று உடல் பனிப்ப - அஞ்சாமையையுடைய யானையின் உடம்பு நடுங்க. உலாய் - உலவி. (க)

## சிதம்பரேசர்

### வேறு

மறம லிந்துல கேழினும் உயிர்க ளஞ்சவு லாவுபு
வதைசெ யும்புர நீறுசெய் புன்சிரிப் பாற்கடி
மலர்து வன்றிய வார்குழல உமையி ளம்பிடி பூதர
மகளு ளஞ்சுக் வாழ்வில் அமிழ்ந்திடத் தேக்கியு
மதுக ரங்குண மாய்வளை சிலைகொ ணர்ந்தமர் ஆடிய
மதனை வென்றருள் சீர்நய னந்தனிற் பாற்குரு
மதியொ டுங்கதிர் வானவன் ஒளியி றந்தமை யாலயர்
மகித லங்களி கூர்தர இன்பினைக் கூட்டியும்

வெறிக மழ்ந்தறு காலுண மதுவு மிழ்ந்தலர் தாமரை
மிசைவ திந்தவ னோர்முடி விண்டகைப் பூத்தனில்
விரிக ருங்கட லூடெழு கொடிய வெங்கடு வானனி
வெருவும் உம்பர்மு னேயப யந்தனைக் காட்டியும்
விறல்பி றங்குக டாமிசை எதிரும் அந்தக னார்தமை
மெலிவு கொண்டுயிர் வீடவு தைந்தபொற் றுட்டுணை
வினையின் என்தலை மேலருள் செயவி ரங்கியும் ஏர்மரு
வியசி தம்பர ரூபனை அன்புறப் போற்றுதும்

அறலொ ழுங்குத ணுதிட முழுவ துஞ்செறி நீள்கரை
அகல்வி சும்பென நீடுத ரங்கமிக் கார்த்தெறி
அவிர்செ ழுங்கதிர் மாமணி பரவி யெங்கணு மேவுவ
ததனி லொன்றிய மீனவி னந்தனக் கேற்றிட
அயல்வ ழிந்திடு மாறுத னகநி ரம்பிய வாலொளி
அணவு தண்புனல் வாவிகு ளிர்ந்திருட் கூட்டம்
தழிய மென்கதிர் வீசிய வெளிய அம்புலி போலுற
அருகு வந்துத ணீரைமு கந்தெடுத் தாற்றல்செய்

துறையு மங்கையர் ஆடவ ரதுவ ழுங்கிடும் ஆரமு
துணும்அ ரம்பையர் வானவர் தங்களில் தோற்றவிண்
உலகி னும்புகழ் மீறிய கலைசை யம்பதி யேதன
துறையு ளென்றுநி லாவிவ ணங்கிநிற் போர்க்கருள்

உதவும் எம்பெரு மானையெவ் வுயிரக ளுங்கொடு மாமலர்
ஒருவி யன்புரு வாகிய டங்கவைத் தாட்கொளும்
உகள பங்கய பாதனை யுலக மெங்கணு மாயெனை
உடைய செங்கழு நீர்மத தந்தியைக் காக்கவே.

(அ - ரை.) மறம் மலிந்து - பாவம் நிறைந்து அல்லது வலிமை நிரம்பி. புரம்நீறுசெய் - திரிபுரத்தைச் சாம்பலாக்கிய. பூதரமகள் - பூமி தேவி. மதுகரம் - வண்டு. நயனம் - கண். அயர் மகிதலம் - தளர்கின்ற பூமி. அறுகால்-வண்டு. விண்ட - விரிந்த. வெருவும் - அஞ்சும். விறல் - பலம், வெற்றி. அந்தகன் - எமன். வீட - அழிய. சிதம்பரரூபனை - அறிவு ஆகாயவடிவனை. தரங்கம் - அலை. அகம் - மனம். அணவு - நெருங்கு. ஆரமுது உணும் - அரிய அமிர்தத்தை உண்ணும். உகளபங்கய பாதம் - தாமரை மலர்போன்ற இரண்டு அடி. தந்தி - யானை. (உ)

## சிவகாமியம்மை

### வேறு

கரும்பு குழையச் சுரும்பொலிப்பக்
கடிப்போ துகுத்த மதனைஎம்மான்
கண்டு மிகையாம் எனக்கருதிக்
கனலிக் கூட்டு மாற்றலும்பின்

விரும்பு முயிர்கட் கிருங்காம
விளைவும் பிரச மலர்க்கணையும்
வில்லுந் தரித்த திருக்கரத்தால்
விளைத்த சிவகா மியைப்பணிவாம்

அரும்பும் வெகுளிக் கயஞ்சாடி
யவனி நடுங்க வுடன்மடங்கல்
ஆண்மை யடக்கி யெதிரேறும்
அடல்வெம் புலிப்போத் துயிர்செகுத்து

வரும்போர்ச் சரபத் துளங்குழைய
மார்பும் புயமுந் துவைத்தாடி
மகிழ்கூர் கலைசைச் செங்கழுநீர்
மழமா களிற்றைப் புரக்கவே.

(அ - ரை.) கடிப்போது உகுத்த மதனை - மணம் பொருந்திய மலரம்புகளைச் சொரிந்த மன்மதனை. கனலி - நெருப்பு. பிரசம் - தாமரை. வெகுளிக்கயம் சாடி - கோபம் பொருந்திய யானையைக் கொன்று. மடங்கல் - சிங்கம். அடல் - வலிமை. புலிப்போத்து உயிர் செகுத்து - ஆண்புலியின் உயிரை அழித்து. சரபம் - எண்காற்புள். இச் செய்யுளில் தாருகாவன முனிகள் பிச்சாடண மூர்த்தியாக வந்த சிவபெருமானை அழிக்கும் பொருட்டுச் செய்த தீய வேள்வியில் தோன்றிய யானை, புலி முதலிய மிருகங்களைக் கொன்றனர் என்பது குறிப்பிடப்பட்டது. (ங)

## சுப்பிரமணியக்கடவுள்

### வேறு

உரவோர்கள் உருவினின் மிகச்சிறிய ரேனுமவ்
வுரணிலாப் பெரியர்தம்மை
உடைந்தழிய வென்றுவிறல் வாகைசூ டுவரெனும்
உரைக்கிலக் கியமாகவே

விரவாது விண்ணம் பொதிந்துயர் அடுக்கலின்
வீறழித் தாண்மைகொண்ட
வெற்றிச் சிறுப்படைச் செய்யவேல் கைவைத்த
வீரனுக் கன்புசெய்வாம்

புரவாக ஐம்பொறியும் வைத்திட் டவற்றுளோர்
பொறியுடைய ஏகதேசம்
பூண்டமற் றவயவங் கட்குமே லாந்தலைமை
பொலிதலாற் பக்திசெய்வோர்க்

கிரவோட்டு தன்குறிப் பெயரையே முழுதிற்கும்
ஏற்பித்த திருமுகத்தின்
எழில்வாய்ந்து தென்கலைசை மேவுசெங் கழுநீர்
இருங்களிற் றைக்கர்க்கவே.

(அ - ரை.) உரவோர்கள்-அறிவுடையவர்கள். விறல்வாகை சூடுவர்-வெற்றிமாலையை அணிவர். இலக்கியம் ஆக - எடுத்துக் காட்டாக. வீறு - தனிப்பெருமை. வீரன் - முருகன். இரவு - இரக்கின்ற தன்மை. (௪)

## வைரவக்கடவுள், பிரமதேவர், தேவேந்திரன், இலக்குமி, கலைமகள், துர்க்கை, சத்தமாதர், முப்பத்துமுக்கோடிதேவர்

### வேறு

அலைத்தலை குலைக்கணம் இடித்தெழு செழும்புன
லாலும் பெருக்கமும்
அனக்குழு வளக்கயல் பிடித்துண நினைந்துற
வாடுஞ் செறுக்களும்
அலர்ச்சிசெய் மலர்த்தலை மிதித்துளர் சுரும்பிசை
யாயுந் தருக்களும்
அடற்கரி பரித்திரள் தருக்கியு ழறுங்கலி
யாருந் தெருக்களும்

நிலக்குல மகட்கணி முடிக்கிணை பொருந்திய
தேரின் பிறக்கமும்
நெருக்கிய மறப்பகை முருக்கிய பெரும்புகழ்
மேவந்த நொச்சியும்
நிரப்பினர் பசிப்பிணி யறக்கெட வழங்கற
நீடுந் தொடர்ச்சியும்
நிலைத்தகலை சைப்பதி நகர்க்குளொரு செங்கழு
நீரைங் கரத்தனை

மலர்ப்பத மெடுத்தவ ரியைப்பட வகிர்ந்துரி
மூடும் புயத்தனும்
வரிச்சிறை அளிக்குல முழக்கஇதழ் விண்டுகள்
வார்அம் புயத்தனும்
மதத்துநிழ லைத்தனி சுழித்தெதிர் கொடும்பகை
மாய்வெண் கயத்தனும்
மணிக்குவை திரைக்கும்அலை யில்துயின் முகுந்தன
வாவுங் குயத்தியும்

உலப்பறு கலைத்திற மனைத்துமுத வுஞ்சுதை
யூர்பங் கயத்தியும்
உருத்திடி யெனக்குர லுரப்புமகி டன்திறல்
ஓவுஞ் சயத்தியும்

உருக்கிளர் முருக்கிதழ் உருக்கும்அத ரம்பெறும்
ஏழ்பெண் குலத்தரும்
உருத்திரர் மருத்துவர் வசுக்கதி ரெனும்புல
வோரும் புரக்கவே.

(அ - ரை.) குலைக்கணம் - கரைக்கூட்டம். செறுக்கள் - வயல்கள். தருக்கள்-மரங்கள். முருக்கிய-அழித்த. நிரப்பினர்- வறிஞர். வழங்கு அறம் - கொடுக்கும் தருமம். உரி-தோல். அளிக்குலம் - வண்டுக் கூட்டம். வெண்கயத்தன்-ஐராவதத்தை யுடைய இந்திரன். முகுந்தன் - திருமால். அவாவும் குயத்தி - விரும்பும் தனமுடைய இலக்குமி. சுதை ஊர்பங்கயத்தி - வெண்மை நிறம் பொருந்திய தாமரை மலரிலுள்ள கலைமகள். மகிடன் - எருமை வடிவுற்ற அசுரன். ஓவும் - நீக்கும். அதரம்- உதடு. ஏழ்பெண் குலத்தர் - சப்த மாதர்கள். உருத்திரர் - பதினொரு உருத்திரர். மருத்துவர் - அசுவனி தேவர் இருவர். வசு- எட்டு வசுக்கள். கதிர் - சூரியசந்திரர். புலவோர்-தேவர். (௫)

## உ. செங்கீரைப்பருவம்

[செங்கீரைப்பருவம் :— அஃதாவது செங்கீரை ஆடும் பருவம். இப் பருவத்தின்கண் நிகழும் செயல், ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்ந்து முகம் அசைய ஆடுதல். இஃது ஐந்தாம் மாதத்தில் நடைபெறும்.]

அண்டர்பணி மூவர்அந சூயைபா லெய்திமழ
வானது நிகர்ப்பவெய்யோற்
கல்லாது தனதுநல மீயாத தாமரை
அணங்கிடை விரும்பியேகித்

தண்தவள வெண்முழு மதிக்கடவுள் குழவியாய்த்
தடைபட்டு நின்றதேய்க்குந்
தனிமுகச் சிறுகோட்டின் அணிநிம் புரிக்கவின்
தன்னைக் குறித்துநோக்கு

மண்டிய விருப்பின தொருப்பாடு தண்டாது
வளர்தலால் விழிகள்சாய்த்து
மாறிமா றித்தெறித் திடுகின்ற தேய்ப்பஒளிர்
மதிமுகம் அசைந்தாடுறத்

திண்டிறல் படைத்தசெங் கழுநீர் மதக்களிறு
செங்கீரை யாடியருளே
இருந்தும்அடி யார்க்கருள் புரிந்தகலை சைப்பிரான்
செங்கீரை யாடியருளே.

(அ - ரை.) அண்டர் - தேவர். மூவர் - திரிமூர்த்திகள். மழவு - குழந்தை. வெய்யோன் - சூரியன். நலம் - இன்பம். தவளம் - வெண்ணிறம். ஏய்க்கும் - நிகர்க்கும். தண்டாது - நீங்காது. (சு)

கந்தமலி பங்கயத் திருமுகம் அசைத்தொறாஉங்
கார்க்குஞ்சி மீதுகவினக்
கால்யாத்த வெண்மலர்த் தொங்கல்பின் ஞான்றுலாய்க்
கன்னத் தளாவிவாசங்

தந்தமத நீரிற் படிந்துகரு நிறமாய்த்
தணந்துழிப் பற்றும்அந்நீர்
தனைஉதறி முன்னைத் தனுதுநிறம் எய்தித்
தரங்கந் துரங்கநிரையிற்

கொந்தலர் உகும்புன்னை மீமிசைத் தாவிக்
குதிக்குமணி ஆழிஅகடு
குழியக் குறைத்துக் கறுத்துமழை தூஉய்வெண்மை
கொண்டுவளர் கொண்டல்ஏய்ப்பச்

சிந்துர முகத்தசெங் கழுநீ ரிளங்களிறு
செங்கீரை யாடியருளே
திருந்தும்அடி யார்க்கருள் புரிந்தகலை சைப்பிரான்
செங்கீரை யாடியருளே.

(அ - ரை.) கந்தம் - மணம். கார்க்குஞ்சி - கரிய குடுமி. தொங்கல் - மாலை. நான்று - தொங்கி, நால் : பகுதி. கன்னம்- காது. தணந்துழி - பிரிந்த இடத்து. துரங்கம் - குதிரை. சிந்துரம் - யானை. (எ)

### வேறு

கொங்கலர் நின்னடி சென்னியில் வைத்துக்
கூப்பிய கையொடுநின்
குளிர்உள மகிழ்தரு தொழில்புரி தாதியர்
கொள்கையின் நிரைநிரையாய்த்

தங்கிய பங்கய மங்கையர் முதலிய
தபனிய உலகுறையுந்
தையலர் மருமத் தொய்யில் பரித்த
தனக்கரி யுலவைகளுள்

திங்களி னொளிர்தன துலவை நிகர்ப்பன
தேர்தர எதிர்நோக்கித்
திரிவது போலிரு புறமு மலர்ந்தவிர்
திருமுகம் இனிதசைய

அங்குசம் ஏந்திய செங்கழு நீர்க்களி
றுடுக செங்கீரை
அணிகிளர் கலைசைந கர்க்கு விருந்தவன்
ஆடுக செங்கீரை.

(அ - ரை.) கொங்கு - வாசனை, தேன். தாதியர் - பணிப் பெண்டிர். நிரைநிரை - வரிசை வரிசை. தபனியம் - பொன். தொய்யில் பரித்த - தொய்யில் எழுதப்பட்ட. பரித்தல் - தாங்குதல். உலவை - கொம்பு. அங்குசம் - தோட்டி. (அ)

சுரும்பு முரன்றலர் கொன்றை செறித்த
துலங்கொளி வார்சடிலத்
தோன்றலை யெய்தி அணைத்திடு காலைத்
தோளொடு மருமமெலாம்

இரும்பு ணுறும்படி யுழுதரு தகைமை
யிரண்டற் குஞ்சமமாய்
இயைவது நோக்கி மகிழ்ந்திவை தம்முள்
இணங்கச் செய்வதென

விரும்பி மயத்து மடப்பிடி கோட்டொடு
வில்உமிழ் தன்உலவை
மேவிட வைத்துக் கொங்கைத் தீம்பயம்
மென்மெல வுண்டுமணம்

அரும்பிய செவ்வாய்ச் செங்கழு நீர்க்களி
றுடுக செங்கீரை
அணிகிளர் கலைசைந கர்க்கு விருந்தவன்
ஆடுக செங்கீரை.

(அ - ரை.) முரன்று - ஒலித்து. சடிலம் - சடை. இயைவது - பொருந்துவது. இமயத்து மடப்பிடி - பார்வதி. (கூ)

**வேறு**

பொங்கொளி வீசு பொலங்குழை காது
புகுந்தேர் கொண்டாடப்
பொன்திகழ் தோளணி தொங்கலி னோடு
புலம்பா நின்றுடத்

துங்க நிலாவு தடங்கையி னீர்சுல
வுங்கார் வென்றுடத்
துன்றிய தேமலி குஞ்சியி னோடு
தொகுந்தார் விண்டாடப்
பங்கயன் ஆதியர் வந்து தவாத
பதந்தா என்றுடப்
பண்பறு நேரலர் நெஞ்சழல் வாயுறு
பஞ்சாய் நைந்தாடச்
செங்கழு நீர்மத தந்திவி நாயக
செங்கோ செங்கீரை
தென்கலை சாபுரி தங்கிய நாயக
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) பொலங்குழை - பொன்னாலாகிய காதணி. துன்றிய - நெருங்கிய. விண்டு - திருமால். தேமலி - தேன் நிறைந்த. நைந்து - வருந்தி. (கo)

## ௫. தாலப்பருவம்

[தாலப்பருவம் - தாலாட்டைக் கவனிக்கும் பருவம். தாலாட்டு-ஒருவகை நாவசைப்பு. தாலாட்டையேல் தாலாட்டையேல் என்னும் அடுக்கு. தாலோ, தாலேலோ என இணைத்தும் தால் எனத் தனித்தும் மரீஇயிற்று. இஃது ஏழாவது திங்களில் நடைபெறும்.]

புதிய வாசந் தனைப்பரப்பிப்
புறத்தே யெங்குந் திரிந்தயரும்
பொறிவண் டினங்கள் தமையழைத்தம்
புயத்தே னூட்டிப் பகலோம்பி

முதிய நிசிவந் திடும்போது
முகைவிண் டலர்ந்த நறுங்குமுத
மூரிச் செழுந்தேன் முகந்தூட்டி
முழுதுங் காத்துக் கடல்வரைப்பின்

வதியு மிரவோர் தமைக்கீர்த்தி
மகளாந் தூதின் வரக்கூவி
மகிழ்ந்தெப் போதும் எவ்வாறும்
வழங்கிக் காக்கும் பெருங்கொடையோர்

கதிய தடஞ்சூழ் திருக்கலைசைக்
கன்றே தாலோ தாலேலோ
கருணை முதிர்ந்த செங்கழுநீர்க்
கன்றே தாலோ தாலேலோ.

(அ - ரை.) அம்புயத்தேன் - தாமரைத்தேன். பகல்ஓம்பி - பகலிற் காத்து. முதிய நிசி - முதிர்ந்த நடு இரவு. முகை விண்டு-மொட்டு விரிந்து. மூரி - வலிமை; பெருமை. வரைப்பு - இடம். வதியும் - தங்கும். கீர்த்திமகள் - கீர்த்தியாகிய பெண். கதிய-போக்குடைய. தடம் - தடாகம். (கக)

தொடுக்குந் தெரியற் கருங்கூந்தல்
தோகை யனையார் துடும்என நீர்த்
துறையுள் பாய்ந்து விளையாடத்
துண்ணென் றெழுந்து மேற்சென்று

தடுக்கும் பசுங்கோட் டலர்கனிகாய்
சாடித் தனது வயிறுருவத்
தாக்கு நெடுவா ளையும்அதனைத்
தன்னுள் பிணிக்குந் தேனடையும்

அடுக்கும் பரிதி நுழைந்துதினம்
அலைக்கும் பகைமை மீக்கொண்டங்
கடர்த்துப் பறித்த அவன்றிருத்தேர்
அச்சும் அதுகோத் திடும்உருளுங்

கடுக்கும் பொழில்சூழ் திருக்கலைசைக்
களிறே தாலோ தாலேலோ
கருணை முதிர்ந்த செங்கழுநீர்க்
கன்றே தாலோ தாலேலோ.

(அ - ரை.) தெரியல் - மாலை. தோகை - மயில், தோகை மயிலுக்குச் சினையாகு பெயர். துடும் என - துடும்மென்று: ஒலிக் குறிப்பு. பசுங்கோடு - இளங்கொம்பு. சாடி - தாக்கி, மோதி. பிணிக்கும் - கட்டுப்படுத்தும். அடுக்கும் - ஒக்கும். அலைக்கும்- வருத்தும். பரிதி - சூரியன். கடுக்கும் - ஒப்பாகும். (கஉ)

**வேறு**

வேய்மருள் தோளியர் குஞ்சி திருத்தி
மிலைச்சிய செம்மணியின்
விற்பயில் கொண்டை வெய் யோனென வாங்கி
உடைத்திரு கூறுசெய்தே

தேய்மதி கொண்டபி ரான்சடை மேலெழில்
செய்கென வோர்பிளவைச்
சேர்த்துப் பின்னொரு பிளவுமை யாள்முடி
செருகிச் சமமாகத்

தூய்மதி யென்றிறை மார்பணி கொம்பைத்
தொடையி லறுத்துடனத்
தோகை முடிக்கண் இசைத்து மகிழ்ச்சி
துளும்பித் தந்தையொடுந்

தாய்மகிழ் கூர நடித்தருள் செல்வா
தாலோ தாலேலோ
தகைபெறு செங்கழு நீர்மத வேழம்
தாலோ தாலேலோ.

(அ - ரை.) வேய்மருள் தோளியர் - மூங்கிலை மயங்கச் செய்யும் தோள்களையுடைய பெண்டிர். குஞ்சி-தலைமயிர். மிலைச்சிய - சூட்டிய. மணி - மாணிக்கம். வில் - ஒளி. வெய்யோன் என - சூரியன்போல். செய்கென - செய்க என்று. தூய்மதி - தூய சந்திரன். முடிக்கண் - முடியில். மகிழ்கூர - மகிழ்ச்சிமிக. தகை - அழகு. (கடு)

வெண்டலை யேந்திய வேணி முடிப்பரன்
மெய்யினும் வெம்பணிசூழ்
வெற்பன் மடக்கொடி மெய்யினும் ஏறி
மிதித்தா டுந்தோறும்

வண்டலை யக்கடி வீசு கவுட்புறம்
வாக்கும தப்புனலும்
வார்தரு தடவுக் கைத்துளை உமிழும்
மதப்புன லுஞ்சிரமேற்

கொண்டலை நிகரக் கொட்டுவ திருமுது
குரவர் தமக்குமணங்
குலவிய மழையுமந் தா னினியுங்
கொடுவந் தாட்டல்பொருந்

தண்டலை சூழ்கலை சைச்சிறு களபந்
தாலோ தாலேலோ
தகைபெறு செங்கழு நீர்மத வேழந்
தாலோ தாலேலோ

(அ - ரை.) வெண்டலை - மண்டையோடு. வேணி - சடை. வெம்பணி - கொடிய பாம்பு. வெற்பன் மடக்கொடி - இமயமலை அரசன் மகளாகிய பார்வதி. வண்டு அலைய - வண்டுகள் சுற்றும் படி. கவுட்புறம் - கன்னத்தில். வாக்கு மதப்புனல் - ஒழுகும் மதநீர். கொண்டலை நிகர - மேகத்தை ஒப்ப. இருமுது குரவர்-

இரண்டு முதிய பெரியவர்களாகிய பெற்றோர்கள். மந்தாகினி - கங்கை. கொடு வந்து ஆட்டல் பொரும்-கொண்டுவந்து நீராட்டு தலையொக்கும். தண்டலை - சோலை. களபம் - யானை. (கச)

## வேறு

மலைம டந்தைஅருள் பாலா தாலோ தாலேலோ
மதமி குந்திழிக போலா தாலோ தாலேலோ
அலகி லன்பர்பணி காலா தாலோ தாலேலோ
அருள்சு ரந்திடும்வி சாலா தாலோ தாலேலோ
இலகு கின்றபணி மார்பா தாலோ தாலேலோ
இனிய மந்திரசொ ரூபா தாலோ தாலேலோ
பொலிபெ ருங்கருணை யாளா தாலோ தாலேலோ
புகழ்பெ றுங்கலைசை வாழ தாலோ தாலேலோ.

(அ - ரை.) மலைமடந்தை அருள்பாலா - பார்வதி பெற்ற பாலனே!, பாலா என்பது விளி. கபோலா - கன்ன முடையவனே!. அலகு இல் - அளவில்லாத. விசாலா. விசாலமானவனே; விசாலம் - பெருமை. இலகு - விளங்கு. பணி - பாம்பு; பணத்தையுடையது; பணம் - படம். மந்திர சொரூபா - பிரணவ வடிவனே!. பொலி-நிறை. கலைசை வாழ கலைசையில் வாழ்ந்திருக்கின்றவனே!: வாழ்நன் என்பதன் விளி வாழ என்பது. (கரு)

## ௪. சப்பாணிப்பருவம்

[இஃது இரு கைகளையும் ஒருங்கு சேர்த்துக் கொட்டும் பருவம். இஃது ஒன்பதாம் மாதத்தில் நடைபெறும்.]

பக்குவ முதிர்ந்துசிவ புண்ணிய நிரம்பிமல
பாகம் பிறந்து சத்தி
பதிந்துவினை ஒப்புப் பழுத்தவர்கள் பந்தநோய்
பாற்றும்ஒரு செங்கை மலரும்
அக்கருணை யடியவர்க ளுயிருடன் பொருள்காயம்
ஆமெவ் வகைப்பந் தமும்
அங்கீ கரிக்குமோர் கைமமலரு மாறுபா
டாதரித் திடுசெய் கையான்
மிக்குறும் பகைமைமேன் மேலெய்தி யாங்கது
விலக்கத் தமக்கு யர்ந்தோர்
மேதினிக் கின்மையாற் போராட் டியற்கையின்
மெலியாமல் ஒன்றை ஒன்று
தக்கவகை தாக்குதல் கடுப்பக் கவின்செயவொர்
சப்பாணி கொட்டி யருளே
தங்குகலை சைப்பதிச் செங்குவளை நாயகன்
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) பக்குவம் - பாகம். மலபாகம் - மலபரிபாகம். சத்தி- அருள். வினைஒப்புப் பழுத்தவர்கள்-இருவினைப் பயனையும் அநுபவிக்குந்தோறும் இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதும் அறிவுள்ளவர்கள். பந்தநோய் பாற்றும் - பாசப்பிணியை அறுக்கும். பாறுதல் - பிளத்தல்; அறுத்தல். காயம் - உடம்பு. மாறுபாடு - பகைமை; வேற்றுமை. எய்தி - பொருந்தி. மேதினி - பூமி. தாக்குதல் கடுப்ப - சாடுதலை ஒப்ப. சப்பாணி - ஒரு கையுடன் மற்றொரு கை சேர்த்தல். (௧௬)

வயங்குமுழு மதியத் திருஞ்சுவைப் புத்தமுது
வாய்மடுத் துண்ணஎண்ணி
வருகின்ற தகுவர்குலம் ஒப்பக் கலித்தலை
மடிக்குந் திரைப்புனற்பூங்

கயங்கிளர் செழுங்கமல வாள்முகத் தூற்றெழூஉங்
கலுழிக் கடாமடுப்பக்
கருதிவரு மெல்லிசைத் தும்பியும் வண்டுங்
கறங்குமிஞி றுஞ்சுரும்பும்

பயங்கதுவ மொய்த்தவை விரைந்தோட ஓச்சுறூஉம்
பண்புபொர வேற்போர்க்குவான்
பரிசிலை யளித்தளித் துச்சிவந் தாங்கொளி
பரப்பிமணி ஆழிபூண்டு

தயங்குமிரு கைகளால் எழில்பூப்ப மதகளிறு
சப்பாணி கொட்டியருளே
தங்குகலை சைப்பதிச் செங்குவளை நாயகன்
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) வயங்கு - விளங்கும். இரும்சுவைப் புத்தமுது-மிக்க சுவையையுடைய புதிய அமுதம். வாய்மடுத்து - உண்டு; வாய்மடு: பகுதி; செவிமடு என்பது கேள் என்பதுபோல. தருவர் குலம் - அசுரர் கூட்டம். பூங்கயம் - பூக்களையுடைய குளம். கமல வாள்முகத்து-தாமரை மலர்போன்ற ஒளிபொருந்திய முகத்தில். கலுழிக்கடம் - மதப்பெருக்கு. மடுப்ப - பருக. மெல்இசைத் தும்பி - மென்மையான இசையோடு கூடிய வண்டு. தும்பி - வண்டின் வகை. கறங்கும் - ஒலிக்கும். மிஞிறு - வண்டு; இது ஞிமிறு என்றும் வழங்கப்படும். சுரும்பும்-வண்டும். பயம்கதுவ-பயனைப் பெற்றுக்கொள்ள. ஓச்சுறூஉம் - ஓச்சப்படும். ஓச்சுதல்-ஓட்டுதல். ஏற்போர் - ஏற்றுக்கொள்கின்ற இரவலர். பரிசில்-வெகுமதி; கொடை. மணிஆரம் - மணிமாலை. எழில்பூப்ப - அழகு தோன்ற. (கஎ)

## வேறு

மும்மல மாமத முற்றுப் போத
முழுத்தறி அறவீசி
முகிழ்த்தலர் அன்பின் சங்கிலி யுதறி
முதிர்ந்த வருட்கூடத்

திம்மென நீங்கி வெளிக்கொடு புவன
மெனுங்கடு வனமோடி
யெப்பா கர்க்கு மடங்கல வாகி
யியங்கு முயிர்க்கரிகள்

தம்மைவி டாது தொடர்ந்து பிணிப்பத்
தருமங் குசபாசந்
தாங்குதல் கண்டுந் தம்போ லெண்ணிச்
சார்பவை தமைநகையாக்

கொம்மைம லர்க்கை கொட்டுவ தேய்ப்பக்
கொட்டுக சப்பாணி
குலைகெழு தடநிறை கலைசை நகர்க்கிறை
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) மும்மலம் ஆம் மதம் - ஆணவம், கன்மம், மாயை என்கிற மூன்று வகைப்படும் மலங்களாகிய மதநீர். போதம்-அறிவு. முழுத்தறி - பெரிய கட்டுமுளை(தூண்). அன்பின் சங்கிலி உதறி - அன்பாகிய தொடரைத் தள்ளி. முகிழ்த்து-அரும்பி. அருட்கூடம்-அருளாகிய இருப்பிடம், கூடம் - நிலையம், தங்குமிடம். வெளிக்கொடு - புறப்பட்டு. புவனம் - பூமி. எப்பாகர்க்கும் - எத்தகைய யானைப்பாகர்க்கும். இயங்கும்-இயலும், நடக்கும். உயிர்க்கரிகள் - உயிர்களாகிய யானைகள். பிணிப்ப-கட்ட. அங்குசபாசம் - தோட்டி கயிறு. சார்பவை - சேர்கின்றவை. கொம்மை - இளமை, அழகு. கொம்மை(கும்மி) குலை-கரை.

இச் செய்யுளில் அமைந்திருக்குங் கருத்து, "உள்ளம் எனும் கூடத்தில் ஊக்கம் எனும் தறிநிறுவி உறுதியாகத் தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி இடைப்படுத்தித் தறுகட்பாசக், கள்ளவினைப் பசுபோதக் கவளம்இடக் களித்துண்டு கருணை என்னும், வெள்ள மதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்" என்ற பரஞ்சோதி முனிவர் சித்தி விநாயகர் காப்புச் செய்யுளைத் தழுவியதாகும். (கஅ)

மட்டுமிழ் கொன்றை மிலைச்சுபொ லன்சடை
வள்ள லும் நள்ளிருள்கூர்
வண்டுளர் குழலுமை யாளுங் கைதொடும்
வள்ளத் தறுசுவையுந்

தொட்டு வளாவி அளைந்தவர் மிசைமுடி
தொட்டடி மட்டுமுறத்
தூவி விடுத்தணி வீதி புகுந்து
தொடர்ந்து சிறூர்குழுமி

யிட்டு நிறைத்திடு புழுதிக் குவைகளை
எற்றி உழக்கியநீ
இயைந்திடு மப்புழு தித்துகள் போம்படி
எண்ணிக் கைகளினைக்

கொட்டுவ தெனவெழில் கொட்டிட வோர்முறை
கொட்டுக சப்பாணி
குலைகெழு தடநிறை கலைசை நகர்க்கிறை
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) மட்டு - தேன், மணம். நள்இருள் - மிக்கஇருள். உளர் - கோது. குழல் - கூந்தல். அளைந்தவர் - பிசைந்தவர். புழுதிக்குவை - தூசிக்கூட்டம். எழில் கொட்டிட - அழகு சொரிய. (கக)

## வேறு

விரிதிரை பொங்கி யுலாவும் அளக்கர் மணிப்பாயல்
மிசைவிட முந்தும ராவணை யிற்றுயில் புத்தேளும்
மருமலர் அம்புய மேவுமி ருக்கை மறைக்கோவு
மதமழை சிந்துவெ ளானை யெருத்தனு மற்றேரும்
அருள்தரு கென்றுப ராவி நினைத்தது செப்பாமுன்
அவரவர் சிந்தையின் ஆர்வன முற்றும் அளித்தோகை
கருதிடு செங்கழு நீரிறை கொட்டுக சப்பாணி
கலைசை புரந்தருள் காரண கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) அளக்கர் - கடல். மணிப்பாயல் - அழகியபள்ளி. அராவணையில் - பாம்பணைப் பள்ளியில். புத்தேள் - திருமால். மறைக்கோ - பிரமன். வெளானை எருத்தன் - இந்திரன். பராவி- துதித்து. சிந்தையின் ஆர்வன - மனத்தில் நிறைந்திருப்பன. காரண - காரணமாயிருப்பவனே. (உ0)

# ரு. முத்தப்பருவம்

[குழந்தையை முத்தம் தருமாறு தாய தந்தை முதலியோர் வேண்டும் பருவம். இஃது பதினொன்றும் மாதத்தில் நடைபெறும்.]

அதிரும் தரங்க முரசறைய
அளிபண் பாடத் துள்ளுவரால்
அனைத்தும் வெடிபோய்த் தாவிமறிந்
தாடிக் குதிக்கச் சங்கினங்கள்

பிதிருந் தரளம் பரிசிலெனப்
பேணிச் சொரியும் புனல்தடஞ்சூழ்
பெருநீர்க் கலைசைச் செங்கழுநீர்ப்
பிள்ளாய் அல்குல் மணிப்பாம்புங்

கதிரும் பசும்பொன் தனக்கோடுங்
காயத் துடையே நீயணியுங்
கலனும் பணிக்குங் கோட்டினுக்குங்
கடுத்து வெருவேம் அணுகவந்து

முதிருஞ் சிவப்பூர் செழுங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முழுதும் உணர்ந்த பரபோக
முதல்வா முத்தந் தருகவே.

(அ - ரை.) தரங்கம் முரசு அறைய - அலைகள் முரசுபோல் ஒலிக்க. அளி - வண்டு. பண் - இசை. வரால் - வரால் மீன். பிதிரும் தரளம் - ஈனும் முத்தம். புனல்தடம் - நீர்த்தடாகம். அல்குல்மணிப் பாம்பு - அல்குலாகிய அழகிய பாம்பு. தனக் கோடும் - கொங்கையாகிய கொம்பும். கலனும்பணி - ஆபரண மாகிய பாம்பு. கடுத்து வெருவேம் - கோபித்து அஞ்சேம். முதிரும் சிவப்பு ஊர் - முதிர்ந்த சிவப்புப்பொருந்திய. பரபோகம் - முத்தி, இன்பம். (உக)

கொத்து நிரைத்த மலர்ச்சோலைக்
குயில்கூஉங் கலைசைச் செங்கழுநீர்க்
குழகா அம்மை உனையீன்ற
கோமான் தனக்குப் பணிநிலைக்க

வைத்து நிரைத்த பலஅண்ட
வகுப்பும் வெள்ளிற் கனியெனநீ
மதித்துக் கவளங் கொளக்கரத்தால்
வளையேல் எந்தாய் தளவமலர்

ஒத்து நிரைத்த நகையாடி
உன்னோ டுரிமை பாராட்டும்
ஓகை மடவா ரெனயாமும்
உலவா இன்பக் கடல்மூழ்க

முத்து நிரைத்த கனிவாயான்
முத்தம் தருக முத்தமே
முழுதும் உணர்ந்த பரபோக
முதல்வா முத்தம் தருகவே.

அ - ரை.) கூஉம் - கூவும்: இன்னிசை அளபெடை. வெள்ளிற்கனி - விளாம்பழம். அண்ட வகுப்பு - அண்டங்களின் ஒழுங்கு. தளவமலர் - முல்லைப்பூ. நகையாடி - சிரித்து. முத்து நிரைத்த - முத்துப்போன்ற பற்களைப் பொருந்திய. (உஉ)

### வேறு

துளிதூங்கு தேந்தொடை மிலைச்சிய கருங்கூந்தல்
சுவல்மிசைப் புரளநின்று
தொடித்தோள் பெயர்த்தர மடந்தையர்கள் இருபுறந்
தூமணிக் கவரிவீசத்

தெளிதூங்கு நவமணி குயிற்றிஅணி வாலுளைச்
சிங்கஞ் சுமந்த தவிசில்
செங்கோல் நடாத்தும்இறை வைப்புமுத லெங்கணுஞ்
செல்லப் பரந்துவிரியும்

அளிதூங்கும் எமதுளப் பங்கயங் குவியஅது
அல்காமை நிற்குமளவும்
அவிரொளி பெருதவெம் முகமதியும் ஆலிப்ப
அமிழ்தம் பொழிந்தாலெனக்

களிதூங்கு நகைநிலவு சிறிதே அரும்புநின்
கனிவாயின் முத்தம் அருளே
கலைசைநகர் வந்தசெங் கழுநீர் மதக்களிறு
கனிவாயின் முத்தம்அருளே.

(அ - ரை.) சுவல்மிசை - பிடரியில். துளிதூங்கு தேந் தொடை மிலைச்சிய - தேன் துளிகள் ஒழுகப்பெற்ற மாலையை அணிந்த. தொடித்தோள் பெயர்த்து - தொடியென்னுந் தோளணியை அணிந்த தோளை அசைத்து. கவரி - சாமரம். குயிற்றி - பதித்து. தவிசு - இருக்கை, ஆசனம். அல்காமை- குறையாமை. முகமதியும் - முகமாகிய சந்திரனும். (உ௩)

திரைபூத் தொடுங்குவ தெனப்படி அளிக்குலஞ்
சிறைபுடை பெயர்த் தொடுக்கித்
தீஞ்சுவை மடுத்துண்டு களிதரப் பூங்கவுள்
திறந்தூற் றிருந்துவட்டும்

விரைபூத்த கடமும் கொலைத்தொழில் பழுத்தொழுகும்
வெய்யகூர்ங் கோடும்எங்கள்
மென்மலர் முகத்திற் பெருங்கறையும் ஊறும்
விளைத்திடின் விளக்கஎங்கள்

மரைபூத்த கண்ணிமைக் குள்எழுது மையும்
வயங்குமுக் கணியும்ஐயன்
வதனத் திருங்கறையும் ஊறுஞ்செயா அன்பு
வாய்ப்பப் பவக்கடற்கோர்

கரைபூத்த செம்மொழிப் பழமறை முளைத்தநின்
கனிவாயின் முத்தம்அருளே
கலைசைநகர் வந்தசெங் கழுநீர் மதக்களிறு
கனிவாயின் முத்தம்அருளே.

(அ - ரை.) திரை பூத்து ஒடுங்குவது என - அலைகள் உண் டாகி ஒடுங்குவதைப்போல. பூங்கவுள் - அழகிய கன்னம். பூ- மலருமாம். உவட்டும் விரை பூத்த கடம்-பெருக்கெடுக்கும் மணம் பொருந்திய மதநீர். பெருங்கறையும் ஊறும் - பெரிய கறுப்பும் கேடும். மரை - தாமரை. வதனம் - முகம். பவக்கடல் - பிறவிக் கடல். (உ௪)

### வேறு

மறைநெறி யொழுகுநர் தங்களை ஆள
மதித்த மறைப்பொருளே
வளிவெளி சலநிலம் அங்கியெ லாம்உரு
வத்து நிறுத்தவனே

நிறைவளை மகளிர் நலம்படர் வோர்தம்
நினைப்பி லொளித்தவனே
நிருமல அறிவினர் சிந்தை நிலாவிய
நிர்க்குண அற்புதனே

அறைகடல் உலகொடு பங்கயன் மாலை
அளித்து வளர்த்தவனே
அவரவர் பெறவுறு பந்தமும் வீடும்
அமைத்த அறக்கடலே

முறைவளர் கலைசைகொள் செங்கழு நீரிறை
மூத்தம் அளித்தருளே
முனிவர்கள் அமரர்கள் வந்தடி தாழ்பவ
மூத்தம் அளித்தருளே.

(அ - ரை.) மறைநெறி ஒழுகுநர்-வேதியர். வளி வெளி சலம் நிலம் அங்கி - காற்று. ஆகாயம், நீர், மண், நெருப்பு. மகளிர்நலம் படர்வோர்-பெண்களுடைய இன்பத்தைக் கருதி இருக்கின்றவர். நிருமலர் - குற்றமற்றவர். பந்தம் - பாசம், வீடு-முத்தி. தாழ்பவ-வணங்கப்படுகின்றவனே. முறை - நீதி. (உரு)

## ௬. வருகைப்பருவம்

[இது நடக்கும் பருவக் குழந்தையைத் தம்பால் நடந்து வருமாறு தாய் தந்தை முதலியோர் வேண்டுதல். இஃது ஓராண்டில் நடைபெறுவதாம்.]

சுத்தவொளி யாகியறி வாகிமல மாயைத்
தொடக்கிற் படாதநிறைவாய்த்
தொல்லுலகம் எங்கணுங் கரைபுரண் டலையெறி
சுகாதீத வாரியில்எமை

வைத்தருள எம்போ லெடுத்தநின் றிருமேனி
மழுமையைக் கண்டினமென
மதித்தளவ ளாவிவிளை யாடக் குறித்தோடி
வருமிள மகார்கள்குழுமி

மொய்த்தவழி நீதவழ்ந் தெதிர்வரவு காண்டலும்
முழுக்களிறி தென்னவெருவி
மொய்யொளிக் கண்களைக் கையாற் புதைத்தலறி
முன்விரைந் தோடமுளரிக்

கைத்தலத் தங்குசம் பாசந் தரித்தசெங்
கழுநீர்ப் பிரான்வருகவே
கண்கதுவும் எழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசைநா யகன்வருகவே.

(அ - ரை.) தொடக்கு - சம்பந்தம், கட்டு. சுகஅதீத வாரியில் - பேரின்பக் கடலில். மழமை - இளமை. இளமகார்கள் - இளஞ்சிறுவர்கள். குழுமி - கூடி, குழுமு: பகுதி. புதைத்து - மூடி. முளரிக்கைத்தலம் - தாமரை மலர் போன்ற கையாகிய இடம். முளரி - முள் + அரி; முள்பொருந்திய தண்டை உடையது. கதுவும் - பற்றும். (௨௬)

அலங்கொளி ததும்பிக் கொழுந்துவிடு நித்திலம்
அலைத்துக் கொழிக்கும்அலையால்
ஆற்றல்புரி தன்கரை கரைத்துத் தமக்குறுதி
யாக்குநர்தம் ஊக்கமாய்க்கும்

விலங்கனைய புல்லியர் பொருஉம்புனற் பூந்தடம்
விலங்கா மலங்குமீன்போல்
விழையுநின் முன்புறங் காண்டொறு மூற்றிய
விலாழிக் கடாங்கொள் களபக்

குலங்களெதிர் கொண்டோகை கூர்ந்திடப் பின்புறக்
கோமளங் காணுந்தொறுங்
குழமைச் சிறுருங் குழீஇத்தொடர்ந் துன்போற்
குலாவிவர எம்முளத்துக்

கலங்குமருள் ஈர்ந்திட் டிலங்கும் அருள் காட்டுசெங்
கழுநீர்ப் பிரான்வருகவே
கண்கதுவும் எழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசைநா யகன்வருகவே.

(அ - ரை.) அலங்கு ஒளிததும்பி - அசைகின்ற ஒளி நிரம்பி. நித்திலம் - முத்து. விலங்கு - மிருகம். விழையும் - விரும்பும். விலாழி - நுரை. களபக் குலங்கள் எதிர்கொண்டு ஓகை கூர்ந்திட - யானைக்கன்றின் கூட்டங்கள் எதிரே வந்து உவகை பொருந்த. கோமளம் - அழகு. குழமை - மழமை; இளமை.
(உஎ)

மண்டலத் துண்டுடுத் திளநகை மடந்தையர்
வடந்தழுவு கொங்கைதோயும்
மருளன்றி அருளிலாப் பூரியரும் ஆரியரும்
வாக்குமன மெட்டாதநீ

கொண்டநல் திருமேனி உண்மையைத் தத்தங்
குறிப்பினுக் கேற்பமொழியுங்
கொள்கைபோற் சேயிடையி னின்வரவு கண்டுசிலர்
கூடும் பொதுக்காட்சியால்

வெண்டரள நீள்கோட் டுவாவென றுளங்கொள்ள
வேறுசிலர் உற்றுநோக்கி
வேழமன் றீங்கிது தவழ்ந்துவிளை யாடுநம்
விநாயகன் கோலமென்னக்

கண்டனர் மொழிந்துளத் தள்ளூற வெங்கள்செங்
கழுநீர்ப் பிரான்!வருகவே
கண்கதுவும் எழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசைநா யகன்வருகவே.

(அ - ரை.) இளநகை - புன்சிரிப்பு. மருள் - மயக்கம். பூரியர் - கீழ் மக்கள். ஆரியர் - உயர்ந்தோர். சேயிடை - தூரத்தில். உவா - யானை. அள்ளூற - இனிமைபொருந்த. (உஅ)

## வேறு

இருகை ஊன்றித் தவழ்ந்துமழ
ஏற்றின் வருந்தோ ருங்காங்கே
எறும்வன் புழைக்கை நெட்டுயிர்ப்பான்
இருமா நிலத்தைக் குழிப்பதுவும்

பெருகுங் கடைக்காற் செயுஞ்செவிவான்
பிளப்ப தேய்ப்பப் பல்காலும்
பெயர்ந்து மடங்கி யசைந்தாடும்
பீடுந் தத்தம் பொறிதமக்கு

மருவும் புலனை அவற்றிடமா
மண்ணை அகழ்ந்தும வெளிப்பரப்பை
வளைத்துங் கவ்விக் கொடுத்துதவும்
வண்மை காட்ட அசைந்தசைந்து

முருகு விரியுந் தொடைப்புயத்து
முதல்வா வருக வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர்
முனியே வருக வருகவே.

(அ - ரை.) மழ ஏற்றின் - இளங்காளைபோல். எறும்வன் புழைக்கை - மிகுந்த வலிமை பொருந்திய தும்பிக்கை, குழிப்பதுவும் - குழி ஆக்குவதும். கடைக்கால் - ஊழிக்காற்று. பீடு - பெருமை. அகழ்ந்தும் - தோண்டியும். முருகு விரியும் - மணம் பரப்பும். (உகூ)

உருகும் அடியார் அள்ளூற
உள்ளே யூறுந் தேன்வருக
உண்ணத் தெவிட்டாச் சிவாநந்த
ஒளியே வருக புலன்வழிபோய்த்

திருகும் உளத்தார் நினைவினுக்குச்
சேயாய் வருக எமையாண்ட
செல்வா வருக உமையீன்ற
சிறுவா வருக இணைவிழியாற்

பருகும் அமுதே வருகஉயிர்ப்
பைங்கூழ் தழைக்கக் கருணைமழை
பரப்பு முகிலே வருகநறும்
பாகே வருக வரைகிழித்த

முருக வேட்கு முன்உதித்த
முதல்வா வருக வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர்
முனியே வருக வருகவே.

**(அ - ரை.)** திருகும் உளத்தார் - மாறுப்பட்ட மனம் உடையவர். சேயாய் - தூரத்தில் இருப்பவனே. சேய்மை - தூரம். உயிர்ப்பைங்கூழ் - உயிராகிய பயிர்கள். நறும்பாகே - இனியபாகு போன்றவனே. வரைகிழித்த முருகவேள் - கிரவுஞ்ச மலையைப் பிளந்த முருகனாகிய செவ்வேள். (௯0

## எ. அம்புலிப்பருவம்

[வானத்திலுள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடுதற்குச் செவிலித்தாயர் முதலியோர் அழைக்கின்ற பருவம். அம்புலி - நிலவு. அழ்கு பொருந்தியது என்னும் பொருளுடையது. இது பதினெட்டாம் மாதத்தில் நடைபெறும்.]

தண்டரள மேந்தித் தயங்குநீள் கோட்டைத்
தழீஇச்சித் திரம்பெற்ற வான்
தனியுவாத் தரவந்து மல்குநா கத்தார்கள்
தண்டாது சூழ்ந்துமகிழ்வு

கொண்டிட விலங்குதொட் டிக்கலயின் அளியமிழ்து
கொட்டியெமை யாளுமுக்கண்
குழகன் படைத்தபெரு வையஞ் சுமந்தாற்று
கொள்கையின் உருக்கொண்டெதிர்

கண்டவர் வியப்புறும் படியருண மணியுருக்
கவினாரும் ஒளிவீசிடுங்
காட்சியா னின்னையிவ னொத்துளான் நீயுமிக்
கடவுளை நிகர்த்துளாய்காண்

அண்டரும் பழமறையும் ஓலமிட நின்றவனோ
டம்புலீ ஆடவாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) தண்தரளம் - குளிர்ந்த முத்து. சித்திரம் - அழகு, பன்னிறம். நாகத்தார்கள் - தேவர்கள். தண்டாது - நீங்காது. கவினாரும் - அழகு பொருந்திய. அண்டர் - தேவர். (௩௧)

ஒளிவந்த நீஉடற் கூறுபடு வெம்பாந்தள்
ஒன்றனுக் கஞ்சியஞ்சி
உழிதந்து திரிவைஇவ னண்டபகி ரண்டமும்
ஒருங்கஞ்ச வெய்துயிர்க்கும்

துளிவந்த காரிபடு துளைவெள் எயிற்றுவாய்த்
துத்திப் படக்கோள் அராத்
தொகையெலா மெய்யினுங் கையினுங் கலனெனச்
சூழ்ந்துகொண் டான்வெண்மைகூர்ந்

திளிவந்து தேயுங் களங்கஉரு உடையைநீ
இவன்செம்மை வாய்ந்துதேயா
தென்றுமக ளங்கவுரு உடையனு கலிஞிவனை
எவ்வாறும் ஒப்பாய்அலை

அளிவந்து நின்னையும் அழைத்தனன் காண்விரைந்
தம்புலீ ஆடவாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறெரு
டம்புலீ ஆடவாவே.

**(அ - ரை.)** கூறுபடு-**பிளவுபட்ட.** வெம்பாந்தள்-கொடிய பாம்பு. உழி - இடம். காலிபடு - நஞ்சு பொருந்திய. துளை வெள் எயிறு - துளைபொருந்திய வெள்ளிய பற்கள். துளை: நஞ்சு வெளிப்படுந் துளை. துத்தி - புள்ளி. அராத்தொகை - பாம்பின் கூட்டங்களையெல்லாம். கோள் - வலிமை, தீங்கு. கலன் - அணி. களங்கம் - குற்றம், கறை. அகளங்க உருவு - குற்றமற்ற வடிவம். (௩உ)

கரும்பினை நெருக்கிநெரி செய்ததன் தேறலைக்
காற்றுநெட் டாலைஏய்க்குங்
கயமுகன் கையகப் பட்டுநல நீங்குசுரர்
களைகணுய்த் தோன்றியவனைத்

துரும்புபட வென்றழித் தவ்வமர ரோடுநின்
துயருந் தவிர்த்தளித்த
சூழ்கருணை நீஅறிவை அன்றியும் யாருந்
தொடங்குதொழி லினிதுமுற்ற

இரும்புவியி லூறுதீர்த் தருள்பவனு மிவனலால்
இல்லையிவ னிசையையின்னும்
இயம்பிடின் உலப்புறு நீங்குநீ வரினுன்பி
னெய்திடும் பாம்புமணியும்

அரும்பணிக ளொடுவைத்து மீண்டுதொட ராதுசெயும்
அம்புலீ ஆடவாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) தேறல் - தெளிவு, கள். கயமுகன் - யானைமுக அசுரன். சுரர் களைகணாய் - தேவர்களுக்கு ஆதாரமானவனாய். இரும்புவியில் - பெரிய பூமியில். ஊறு-கேடு, விக்கினம். இசை-கீர்த்தி, புகழ். அரும்பணிகள் - அரிய பாம்புகளாகிய ஆபரணங்கள். (கூங)

தெருளாத தக்கனார் வேள்வியை அழித்தும்பர்
சென்னியை உருட்டிநினையுந்
தேய்த்தசய வீரனும் இவன்றம்பி யென்பதுந்
திருமார்பன் அவமதிப்ப

உருளாழி கைக்கொண்டு மற்றவன் இரந்தாங்
குஞற்றும்விக டக்கூத்தினுக்
குள்ளம் பெருங்கருணை பூத்தபின் ஆங்கதனை
உதவினா னிவனென்பதும்

வெருளாது சீறிய அரக்கனைப் பந்தாடி
விட்டதுங் கேட்டிலாய்போல்
வேண்டிநா மேவலி னழைத்திடவு மதியாது
விண்ணூறு சேறிகண்டாய்

அருளா திவன்கடியில் வேறுபுக லேதுனக்
கம்புலீ ஆடவாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) தெருளாத - தெளிவுறாத. தக்கனார் - தட்சப் பிரசாபதி. சென்னி - தலை. சயவீரன் - வீரபத்திரன். திருமார்பன் - இலக்குமியை மார்பில் தரித்திருக்கின்றவனாகிய திருமால். ஆழி - சக்கரம். உஞற்றும் - செய்யும். வெருளாது - அஞ்சாது. ஏவலின் - கட்டளையுடன்- விண்ணூறு சேறி - ஆகாய வழி செல்லுகின்றாய்: சேறி செல் + ற் + இ. கடியில் - நீக்கில். புகல் - புகுமிடம். (கூச)

வையகம் போற்றும்எம் மானிவனை நீஅவ
மதித்துவெஞ் சாபம்எய்தி
வசையிடைப் பட்டனைமுன் இன்றும்அவ மதிசெய்து
வாராம லொழியின்அங்கண்

எய்தியொரு தண்டமும் புரியவேண் டாதிவண்
இருந்தாங் கிருந்துநீளகை
எடுத்துவிண் ணூறநிமிர்த் தொருதுருவ ணர்பிணித்
திடுஞ்சூத் திரத்தினின்றும்

ஒய்யென அறுத்துனைப் பற்றிப் படுப்பனிவன்
உடல்பூண்ட பாம்பினத்துள்
ஒன்றறியின் அண்ணாந்து தாவியுனை யுண்டுபின்
உமிழாது விடினும்விடுமால்

ஐயமிலை யாகலான் மற்றிவன் வெகுளுமுனம்
அம்புலீ ஆடவாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறு
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) வெஞ்சாபம் - கொடிய சாபம். வசை - பழிப்பு, அவமதிப்பு. தண்டம் - தண்டனை. இவண் இருந்தாங்கு இருந்து - இவ்விடத்தில் இருந்த வண்ணமே இருந்து. பற்றிப்படுப்பன் - பிடித்து வருத்துவன். அண்ணாந்து - வாய் திறந்து. வெகுளுமுன் - கோபிக்குமுன். வெம் சாபம்: விநாயக மூர்த்தியின் பெருவயிறு முதலியவற்றை நோக்கிச் சந்திரன் பரிகசித்துச் சிரிக்க, விநாயகர் கோபித்து 'யாவரும் நிந்திக்க நீ நீசனாக' எனச் சந்திரனைச் சபித்தனர். பின்னர் பிரமதேவர் முதலானோர் வேண்ட, சுக்ல பக்ஷம் நான்காம் நாள் ஒன்றில் மாத்திரம் உலகம் உன்னை நோக்கற்க எனச் சாப விமோசனம் கூறினர். [கந்த புராணம், 6-4-11-14.]

(௯௫)

# அ. சிற்றிற்பருவம்

[இது சிறுமியர் சிறு வீடு கட்டி விளையாடுகின்ற காலை அதனைச் சிறுவர் தம் காலால் அழித்துக் கெடுத்தலைக் கூறுகின்ற பருவம். இதில் சிறுமியர் 'எம் வீட்டை அழிக்கவேண்டா' என வேண்டுவதாகக் கொண்டு அமைத்துக் கூறுவது. இது மூன்ரும் ஆண்டில் நடைபெறும்.]

கூன்பாய் வடிவச் சிலைநுதலும்
குவவுத் தனமும் வாய்த்தமலைக்
குமாரி உள்ளமும விழியுமகிழ
கூரக் குறும்பு விளையாடி

வான்பாய் கருணை பூத்திங்கும்
வந்தாய் எந்தாய் சிறுவீடு
வகுக்குந் தொடக்கத் துணைப்போற்ற
மறந்தேம் சிறியேம் அதனால்நீ

தான்பாய் வெகுளி மீக்கொண்டுன்
தன்மை காட்டல் அடாதுனக்கித்
தாழ்வு தீரச் சிறுசோறு
தருவேம் முன்னர் வாவிதொறுந்

தேன்பாய் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) கூன்பாய் வடிவ சிலைநுதல் - வளைவு மிகுந்த வடிவத்தையுடைய வில்போன்ற நெற்றி. குவவு - திரட்சி. மலைக்குமாரி - பார்வதி. கருணை பூத்து - அருள் மலர்ந்து. எந்தாய் - எந்தந்தையே. தொடக்கத்து - துவக்கத்து. போற்ற - வழிபட. வெகுளிமீக்கொண்டு - கோபமேற்கொண்டு. அடாது - பொருந்தாது. தாழ்வு - குற்றம், குறைவு. வாவிதொறும் - தடாகங்கள் தோறும். தெள்ளித்தெளிந்தோருக்கு-கசடற அறிந்த அறிவுடையோருக்கு. (௩௬)

விருந்து விளிப்போம் எனக்கருதும்
வேலை அடிகேள் இவண்ணீயே
விரும்பி வந்தாயென மகிழ்ச்சி
மீக்கூர் தலினாற் செவ்வாயின்

முருந்து தோன்ற முறுவலித்தேம்
அல்லா லொருநின் கரிமுகம்போன்
முகமும் பூதப் பெருவயிறும்
முடங்குங் குறள்தாள் நகுநடையும்

இருந்தவாறு நோக்கிநகைத்
திட்டேம் அல்லேம் இடந்தோறும்
இருக்கு முழக்குந் தேவாரத்
திசையுந் துவன்றி யோங்கவளந்

திருந்துங் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) விருந்து விளிப்போம் - விருந்தாக அழைப்போம். வேலை - பொழுது, இவண் - இவ்விடம். மீக்கூர்தலினால் - மேம்படுதலினால். முருந்து - பல். முறுவலித்தேம் - சிரித்தோம். கரிமுகம்போல் முகமும் - யானை முகத்தைப்போல் முகமும். முடங்கும் குறட்டாளும் - வளைந்த குறுகிய அடிகளும். நகைத்திட்டேம் அல்லேம் - சிரித்திட்டேம் அல்லேம். இருக்கு முழக்கும் - இருக்கு வேதமுழக்கமும். துவன்றி-நெருங்கி. வளம் திருந்தும் - செல்வம் சிறக்கும். (கூஎ)

தவளம் பழுத்த கூனலிளஞ்
சசிநே ருனது கோட்டினொடு
தடந்தாழ் புழைக்கைக் கெதிராகத்
தனத்தோ டுரோமா வலிதாங்கும்

பவளம் பழுத்த சேயிதழார்
பயிலு மனைக ளன்றியொன்றும்
பற்றாச் சிறியேஞ் சிறுவீடுன்
பதத்துக் கிலக்கோ பசுபோதக்

கவளந் தெவிட்டு மதகளிறே
கண்ணின் மணியே நான்மறையுங்
கதறித் திரிந்துங் கண்டறியாக்
கதியே துறைகள் தொறுந்தரளம்

திவளுங் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) தவளம் - வெண்மை. சசி-கற்பூரம்; வெண்மை. உரோமாவலி - மயிர் வரிசை. சேஇதழ் - சிவந்த இதழ். பதத்துக்கு இலக்கோ-அடிக்குக் குறியோ. பசுபோதக் கவளம் - ஆன்ம போதமாகிய உணவை. துறை - நீர்த்துறை. திவளும் - ஒளி வீசும். (௩௮)

நென்னற் பொழுது விருந்தாக
நின்னை விளிப்பேம் கடக்கலுழி
நீத்தஞ் சிற்றில் அழிக்குமெனு
நினைவால் விடுத்தேம் நான்மறையும்

உன்னற் கரிய பரம்பொருளே
உண்மை இதுவாம் அவமதியாய்
உன்னை அழையா திருந்தேமென்
றுள்ளங் கறுவிச் சிறியேமை

இன்னற் படுப்பக் குறும்புபல
இயற்றா நின்றாய் நின்பெருமைக்
கேலா தடிகேள் பெருங்கருணைக்
கெல்லாய் எளியேங் தவப்பேறே

தென்னற் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளத் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) நென்னற்பொழுது-நேற்றைப்பொழுது. விளிப்பேம் - அழைக்க விரும்பிய நாங்கள். கடக்கலுழி நீத்தம் -

மதஆற்றின் பெருக்கம். நீத்தம் - நீந்தப்படுவது. அம்:செயப்படு பொருள் உணர்த்தும் விகுதி. விடுத்தேம் - விட்டேம்:தன்மைப் பன்மை வினைமுற்று. உன்னற்கு - நினைத்தற்கு. உண்மை - வாய்மை. உள்ளங்கறுவி - மனம் சினந்து. இன்னல் - துன்பம். அடிகேள் - அடிகளே, தேவரீர். ஏலாது - பொருந்தாது. தென்னற்கலைசை - அழகிய சிறந்த கலைசைப்பதி. (௩௯)

பெருத்த வயிறு தயங்கமெல்லப்
பெயர்ந்து நடந்து குடங்கைமிசைப்
பெரும்பண் ணியமும் ஏந்தியெம்பாற்
பேணி வருநின் வரவினைக்கண்

டருத்தி யொடுநீ உண்டபரி
கலசே டத்தை அடியேங்கட்
களிக்க வருவாய் என்றுவகை
அரும்பி வழிபார்த் திருந்தேமை

வருத்தல் அழகோ விக்கினஞ்செய்
மன்ன னெனும்பேர் பேதையரேம்
மாட்டுத் தெரிப்ப தொருபுகழோ
மடவார் ஊடல் மவுணரென்றும்

திருத்துங் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) தயங்க - விளங்க. குடங்கை - உள்ளங்கை. பண்ணியம் - பணிகாரம். அருத்தியோடு - ஆசையோடு. பரிகல சேடம் - உணவின் மிச்சம். உவகை அரும்பி - மகிழ்பூத்து. வருத்தல் - வருத்துதல். பேதையரேம்மாட்டு - அறிவில்லாத சிறுமிகளாகிய எங்களிடத்து. மவுணர் - கணவர். (௪0)

## ௬. சிறுபறைப்பருவம்

[சிறு பறைப்பருவம் என்பது குழந்தை, சிறு பறை கொட்டுதலைக் கூறுகின்ற பருவம். இதுவும் மூன்றும் ஆண்டில் நடைபெறும்.

குறுகுறு நடந்தெய்தி எம்பிரான் திருமேனி
குழையமேல் ஏறிவேணிக்
கொத்தினைக் கோட்டினிற் கோத்தலைத் துதறிவான்
குளிர்புனல் புழைக்கைஎற்றிப்

பொறியரவு தலைமாலை வெள்ளென்பு கைம்மாப்
புலிச்சரும முதலணியெலாம்
பொள்ளென எடுத்தெடுத் தங்கையன லிற்பெய்து
போக்கியிள மதியைவன்றி

யெறுழுலவை யொன்றப் பொருத்தித் திருக்கைமா
னிடைவைத்து முற்றுமதிசெய்
திருவிசும் புய்த்துவான் தருத்தரும் போரணிகொ
டெங்கணு மலங்கரித்துச்

சிறுமையிலே இனியென வசைக்குங் கரங்கொண்டு
சிறுபறை முழக்கியருளே
தென்கோ விருந்தநக ருற்பல விநாயகன்
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) குறுகுறு நடந்து - மிகச்சிறிய நடை நடந்து. திருமேனி குழைய - அழகிய உடம்பு நெகிழும்படி. வேணிக் கொத்து - சடைக்கற்றை. கோட்டினில் கோத்து அலைத்து - கொம்பிற் சேர்த்து அசைத்து. வான்குளிர்புனல் - குளிர்ச்சி பொருந்திய ஆகாய கங்கை. வான் - உயர்வும் ஆம். எற்றி-தாக்கி. பொறி அரவு - புள்ளியமைந்த பாம்பு. தலைமாலை - மண்டையோட்டு மாலை. என்பு - எலும்பு. கைம்மா - கையையுடைய மிருகமான யானை. புலிச்சருமம் - புலித்தோல். அணி - ஆபரணம், அணியப்படுவன. அங்கை - அழகிய கை. எறுழ் - வலிமை. ஒன்ற - பொருந்த. விசும்பு உய்த்து - விண்ணிற் செலுத்தி. வான் தரு - விண்ணுலக மரம்; கற்பகம் மந்தாரம் முதலியன. கரம் - கை. தென்கோ - அழகிய தலைவன். (௪௧)

இருக்கோலம் இட்டின்னும் அறியாத நின்தாள்
இறைஞ்சாது தபுமாந்தருக்
கிறுதியிற் கட்கடை நெருப்புகச் சீறிவரும்
இயமன் தருக்கோதையும்

உருக்கோல மேவச் சிரக்கவச மாகமை
யுண்டவிழி வாளிபுருவம்
ஒருதனு வெனக்கொண்ட சேனைகள் நிரைத்தமர்
உழக்குமதன் வெற்றிமுரசுங்

கருக்கோடி கோடியுற் றுழல்புறச் சமயக்
கருத்தினர் குரைக்கும்ஒலியுங்
காதுரு வண்ணம்அமிழ் தஞ்சொரிவ தேய்ப்பக்
கறங்கஅடி யார்கள்உள்ளத்

திருக்கோயின் மேவிவிளை யாடுமிள மதகளிறு
சிறுபறை முழக்கியருளே
தென்கோ விருந்தநக ருற்பல விநாயகன்
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) இருக்கு - வேதம். ஓலம் இட்டு - முறையிட்டு. இறைஞ்சாது-வணங்காமல். தபு மாந்தருக்கு-வாழ்நாளைப் போக்குகின்ற மனிதருக்கு. இறுதியில்-வாழ்நாள் முடிவில். கண்கடை-கண்ணில். உக-சிந்த. சீறி-கோபித்து. இயமன்தருக்கு ஓதையும்-இயமனுனவன் செருக்குடன் செய்கின்ற ஒலியும்; உருக்கோலம் - அழகிய வடிவம். வச்சிரக்கவசம்-வயிரச்சட்டை. கவசம்-காப்பாவது. மையுண்ட - மை தீட்டப்பட்ட. விழி வாளி - கண் அம்பு. புருவம் ஒரு தனு - புருவம் ஒரு வில். சேனை - படை. அமர் உழக்கும் - போரால் வருத்தும். மதன் - மன்மதன். கரு - பிறப்பு. உழல் - வருந்தித் திரி. குரைக்கும் - இரைக்கின்ற. காது உரு வண்ணம் - செவியிற் படாதபடி. ஏய்ப்ப - போல. உள்ளத்திருக் கோயில் - மனமாகிய அழகிய கோயில். இருக்கு வேதங்கூட இன்னும் அறியாத நினது தாளைப் போற்றுதவர்களாய்த் திரிகிற மனிதர்களைப் பிடிக்கவருகிற இயமன் தருக்கொலி என்பது முதலடிக்குப் பொருள்.

(சஉ

## வேறு

சழக்குப் படுசில பேய்கள் மடிந்தவர்
சரிகுடர் வலைதாங்கித்
தடவுத் தோற்பல கைத்தொகை யாவும்
தளைதரு தெப்பமெனப்
பழக்கித் திரையெறி குருதிச் செக்கர்ப்
பரவைப் பூம்புனலுள்
படர்ந்து நெடுந்தசை மூளை வழும்புகள்
பற்றி விருந்தயர
உழக்கிக் கடல்படு படைகள் அனைத்தும்
உடைந்து பிதிர்ந்தலற
ஒன்னலர் சென்னி உருட்டிக் கயமுகன்
உரமிரு பிளவுசெய்து
முழக்குற் றிடுவிறல் மாமுர சாள
முழக்குக சிறுபறையே
முற்படு கலைசையில் உற்பல வேழம்!
முழக்குக சிறுபறையே.

(அ - ரை.) சழக்குப்படு - பசியால் தளர்ச்சியுற்ற. மடிந்தவர் - இறந்தவர். குடர் - குடல். தளைதரு - கட்டப்படுகின்ற. குருதிச்செக்கர்ப் பரவை - இரத்தமாகிய சிவந்த கடல். பரந்திருப்பது - பரவை. படர்ந்து - சென்று. தசை - சதை. வழும்பு-கிணம். விருந்து அயர - விருந்தாகச் சாப்பிட. உழக்கி - கலக்கி. உடைந்து - கெட்டு. அலற - ஓலமிட. ஒன்னலர் சென்னி உருட்டி - பகைவருடைய தலைகளை உருளப் பண்ணி: உருள் என்பதன் பிறவினைப்பகுதி உருட்டு. கயமுகன் உரம் - கயமுகாசுரனுடைய மார்பம். விறல் - வெற்றி. உற்பல வேழம் - உற்பல விநாயகனே. வேழம்: அண்மைவிளி, இயல்பானது. (௩௫)

குடங்கை குவித்திமை யோர்தொழ நின்று
குனிக்குந் தாதையிடம்
குறுகி உரத்தொளிர் பன்றிக் கோடும்
குளிர்சடை யிளமதியும்

உடங்கு பறித்துக் குணிலிற் கைக்கொண்
டுயர்துடி கொட்டியவன்
உரித்தணி யும்பற் கோடு பிடுங்கிமு
னந்தி யியத்தையெழீஇ

வடங்கிளர் கொங்கைத் தூர்க்கை மிதித்திவர்
மகிடத் துலவைபறீஇ
மாலவ னின்னிய மோதி யெவர்க்கு
மகிழ்ச்சி தரக்களியான்

முடங்க லுருதெதிர் ஆட்டயர் களிறு!
முழக்குக சிறுபறையே
முற்படு கலிசையில் உற்பல வேழம்
முழக்குக சிறுபறையே.

(அ - ரை.) குடங்கை குவித்து - அங்கை கூப்பி. குனிக்கும் - கூத்தாடும். தாதை - தந்தையாகிய சிவன். உரத்துஒளிர் - மார்பில் விளங்குகின்ற. பன்றிக்கோடு - பன்றிக்கொம்பு. மதி - பிறை. உடங்கு - உடன். குணில் - குறுந்தடி. உம்பற்கோடு - யானைக்கொம்பு. எழீஇ - எழுப்பி. மகிடத்து உலவை - மகிடாசுரன் தோல். பறீஇ - பறித்து. மால்அவன் - திருமாலானவன். இன்இயம் - இனிய வாத்தியம். முடங்கல் - மடங்குதல். ஆட்டு அயர் - விளையாட்டைச் செய்கின்ற. (௪௪)

### வேறு

மலைவற முபமொரு ளியல்பு தெளித்தருள்
ஒருமுதலே
மலையென முற்படு வினைகள் அறச்செயும்
எமதுயிரே

அலையு மனத்தையு நிலையில் நிறுத்திடும்
அருளுருவே
அமிழ்தி னினித்துட லிடனு முகிழ்த்தொளிர்
சிவவிளைவே

உலைவறு கற்பகம் எனவருள் கொட்டிய
மழுகளிறே
உலக மனைத்துநின் உடலி லடக்கிய
நிறைபொருளே

கலைசையி னுற்பல இறைவ முழக்குக
சிறுபறையே
கடலொலி பிற்பட இனிது முழக்குக
சிறுபறையே.

(அ - ரை.) மலைவு அற - மயக்கம் நீங்க. முப்பொருள் இயல்பு - இறை உயிர் உலகு என்னும் மூன்று உள்பொருள்களின் தன்மை. தெளித்து அருள் - தெளிவித்தருள்கின்ற. வினைகள் - நல்வினை தீவினைகள். நிலையில் - ஒரு நிலைமையில். முகிழ்த்து - தோன்றி. உலைவுஅறு - கேடற்ற. உடலில் அடக்கிய - மெய்யில் அடக்கிக்கொண்ட. நிறை பொருளே - எங்கும் நிறைந்துள்ள பரம் பொருளே! கடல் ஒலி - கடல் ஓசை. பிற்பட - தோல்வியுறுமாறு. முழக்குக - கொட்டுக: வியங்கோள் வினைமுற்று.

(சரு)

---

## ௯௦. சிறுதேர்ப்பருவம்

[குழந்தை சிறு தேர் உருட்டி விளையாடுதலைத் தெரிவிக்கும் பருவம். இது நான்காம் ஆண்டில் நடைபெறும்.]

செக்கர்க் குரூஉமணிச் சுடிகைப் பொறிப்படச்
சேடன் சுமந்தாற்றிடுந்
திண்புடவி முழுதுங் கிளைத்தறுத் தப்புறஞ்
சென்றுதன் பகைவாழ்விடம்

ஒக்கப் பெருந்துகள் படுத்திமோட் டாமையோ
டுடையநிணை முண்டுபல்லின்
ஒண்குடரி னுதிகவ்வி யீர்த்துரீஇச் சிவபிரான்
உகளபத மன்றுதேடப்

புக்குற்ற கேழல்பல் லூழிகள் இடந்தெய்த்த
புலமெலா மொருகணத்திற்
போந்துகீ ழண்டச் சுவர்த்தலை துளைத்துப்
புறங்கோத்த நீர்சுவற்றித்

திக்கெட்டு முட்டியுல வாகுப் பரிப்பாக
சிறுதேர் உருட்டியருளே
சிற்பரன் றெண்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) செக்கர்க்குரூஉ மணிச்சுடிகை - சிவந்த நிறம் வாய்ந்த மாணிக்கத்தையுடைய உச்சிக்கொண்டை. பொறிப்படச் சேடன்-புள்ளியுற்ற படங்களையுடைய ஆதிசேடன். திண்புடவி-வலிய பூமி. தன்பகை - தன்னுடைய பகைவன். ஒக்கப்பெரும் துகள்படுத்தி-ஒருசேரப் பெருந்தூசி யுண்டாகச் செய்து. நிணம்-கொழுப்பு. குடரின் நுதி - குடலின் நுனி. ஈர்த்து உரீஇ-பிளந்து உரித்து. உகளபதம்-இரண்டடிகள். கேழல் - பன்றி. பல் ஊழிகள் - பல ஊழிக்காலம். இடந்து எய்த்த - தோண்டி எய்த்துப்போன. புலம் - இடம். கீழ் அண்டம் - கீழ் உலகம். புறம்கோத்த நீர் சுவற்றி - வெளியே சேர்ந்துள்ள கடல்நீரை வற்றச்செய்து. திக்கு-திசை. ஆகுப் பரிப்பாக-பெருச்சாளியாகிய குதிரையைச் செலுத்துபவனே! சிற்பரன் - அறிவுருவான மேலோன்.

(௬௬)

நிறந்துளை கொடும்படை திறந்தபுண் வழிதொறு
நெருப்பெனக் குருதிபாய
நெடுங்கிரி யெனப்புரண் டார்த்துக் கடாக்கரியின்
நிரையெலா மெங்குமின்னுப்

புறந்தர விடித்தெழுங் கார்முகிற் கூட்டம்
பொரக்கிடந் தலறமள்ளர்
பொன்முடி கரங்கால் வழும்புகுடர் சோரிப்
புனல்மேல் மிதப்பமுற்றும்

பறந்தலைப் புக்குநரி கொடிகழுகு வெம்பேய்
பருந்தொடு விருந்துசெய்யப்
பகைத்தகுவர் சேனைக் கடற்கிடைத் தோணியிற்
பாயுங் கொடிஞ்சிகிடுகாற்

சிறந்ததிண் டேர்பல வுருட்டும் பகட்டண்ணல்
சிறுதேர் உருட்டியருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) நிறம் - மார்பு. நெருப்பு என - தீப்போல். குருதி - இரத்தம். நெடுங்கிரி என - பெரிய மலைபோல. வழும்பு - நிணம். சோரிப்புனல்மேல் - இரத்த வெள்ளத்தின்மீது. பறந்தலை - போர்க்களம். கொடி-காகம். விருந்து செய்ய-விருந்தார. தகுவர்- அசுரர். கொடிஞ்சி - தேர் உச்சிப்பகுதி. கிடுகு - தேரின் மரச் சுற்று. பகட்டண்ணல் - யானைமுகனாகிய பெரியோனே! அண்ணல்:அண்மைவிளி. (சஎ)

விண்ணத் தியங்கும் பசும்புரவி யேழபூண்ட
வில்லுமிழ் கொடிஞ்சிஅந்தேர்
வீற்றிருந் தூருஞ் சுடர்ப்பருதி வானவன்
வியந்துனைக் காணுந்தொறும்

பண்ணப் பணைத்தநந் தேரினும் விசைத்தேகு
பாழிமான் றேரும்இருளைப்
பருகிக் கதிர்க்கற்றை காலுநம் ஒளியின்மேம்
பட்டபே ரொளியும்வாய்ப்பத்

தண்ணற் கருங்கட லுடுக்கைத் தலத்துச்
சரிக்குமொரு பரிதிப்பிரான்
தானுகு மென்றுள்ள மருளநின் திருமேனி
தண்பவள வொளிவீசிடத்

திண்ணப் பொலன்சகட் டவிர்மணிக் கூவிரச்
சிறுதேர் உருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பல விநாயகன
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) விண்ணத்து - ஆகாயத்தில். இயங்கும் - செல்லும். பசும்புரவி ஏழ் - ஏழு பச்சைக் குதிரைகள். வில் - ஒளி. சுடர்ப்பருதி - சுடரையுடைய சூரியன். வியந்து - வியப்படைந்து. பண்ணப்பணைத்த - மிகப்பருத்த. விசைத்து ஓடும் - வேகமுடன் செல்லும். பாழி - பெருமை. கதிர்க்கற்றை காலும் - கிரணக் கூட்டத்தைச் சொரியும். வாய்ப்ப - பொருந்த. தண்நல்.குளிர்ந்த நல்ல. கருங்கடல் உடுக்கைத் தலத்து-கரிய கடலாகிய உடையை அணிந்த பூமியில். சரிக்கும் - இயங்கும். உள்ளம் மருள - மனம் மயங்க. தண்பவள ஒளி - குளிர்ந்த பவளத்தின் சுடர். பொலன் சகடு - பொற்றேர். "பொன்னென்கிளவி ஈறுகெட முன்னர்த் தோன்றும் லகார மகாரம்." கூவிரம் - தேரின் தலையலங்காரம். (சஅ)

அலைக்கும்அயில் வேல்விழிக் கன்னிமைப் பருவத்
தணங்கினர் முலைக்கு நிகராம்
அம்பொற் பொருப்பினைக் கோட்டினுற் கன்னிமை
யழிந்தபரு வத்து மடவார்

முலைக்குநிக ராகச் செயும்பிரம சாரியே
மூதண்ட மூன்றும் அந்த
மூரிப் பொலஞ்சிகரி பேர்த்தெடுத் தங்கையான்
முனியென்ன வாங்கி முற்றுங்

தொலைக்கும்அடல் முப்புரிசை யெனறநாட் சிவபிரான்
துண்ணென் றுகைத்த திண்டேர்த்
தொன்னிலை யழித்தக் கிரிக்குவான் பூதரச்
சொற்பெயரை நிலைபெ றுத்துஞ்

சிலைக்குனிக ரொற்றையங் கோட்டுத் தனிக்களிறு
சிறுதேர் உருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதேர் உருட்டி யருளே.

(அ - ரை.) அலைக்கும் அயில் - வருத்தும் கூர்மை. அணங்கினர்-அழகுடைய பெண்கள். அம்பொற் பொருப்பினை - அழகிய பொன்மலையை. கன்னிமைப் பருவம் - மணமாகாத இளம் பருவம். உகைத்த - செலுத்திய. சிலை - வில். (௫௯)

பெருங்கருணை சூற்கொண் டிருந்தசிவ காமிப்
பிராட்டியொர் சிதம்ப ரேசப்
பெருமா னெனப்படுங் கீர்த்தியிரு முதுகுரவர்
பேணியுனை யேக காலத்

தொருங்குமார் பத்துற வெடுத்தணைத் தொண்முத்த
முண்டுச்சி மோந்து கொள்ள
வுன்னுதோ றிருவர்களு மொற்றித்த வடிவுகொண்
டுறைபயன் பெற்று மகிழ

வருங்கரட மாமதச் சிந்துரக் களபமே
மதிமுடிச் சடில மோலி
மாசுணப் பேரணியி னைங்கைக் குறுத்தாள்
மதிவகிர்ந் தனைய வொற்றைச்

சிருங்கனே சச்சிதா நந்தபர போகமே
சிறுதேர் உருட்டி யருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதேர் உருட்டி யருளே.

(அ - ரை.) சூற்கொண்டிருந்த - கருப்பமுற்றிருந்த. இருமுது குரவர்: சிவகாமி, சிதம்பரேசுவரர் என்ற பெற்றோர். பேணி - விரும்பி. ஏககாலத்து - ஒரே வேளையில். உன்னுதோறும் - நினைக்கும்பொழுதெல்லாம். ஒற்றித்த வடிவு - அர்த்தநாரீசுவரர் வடிவம். சிந்துரக் களபமே - யானைக்கன்றே!. மாசுணம்-பாம்பு. ஐங்கைக்குறுத்தாள்-ஐந்து கைகளையும் குறுகிய தாள்களையும். சிருங்கனே - கொம்பனே. (௬௦)

வண்டின முழக்கமுகை விண்டலர் பசுந்துழாய்
மாலையம் படலைமார்பின்
மாயோன் கிடக்கையை உடுக்கையென் றுண்டமட
மங்கைக்கு மகுடமான

தொண்டைமண் டலம்வாழ மகுடம் பதித்தபொற்
சுடர்மணி நிகர்த்ததொல்சீர்த்
தொட்டிக் கலைப்பதி தழைக்கஅப் பதிமருவு
தூயசிவ பத்தர்வாழக்

கண்டிகையும் வெண்ணீறு மஞ்செழுத் தும்பொலிவு
காட்டவை திகமார்க்கமுங்
கரிசற்ற சைவமும் வளர்ந்தோங்க வாங்கும்
கடற்புவி மகிழ்ச்சிதூங்கத்

திண்டிமந் தாக்குங் குறட்கணஞ் சூழநீ
சிறுதேர் உருட்டியருளே
சிற்பரன் றென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) முகைவிண்டு அலர் - மொட்டு விரிந்து அலர்கின்ற. படலை - மாலை. கிடக்கை - கடல். மடமங்கை - பூதேவி. மகுடம்-கிரீடம்: முடி. சுடர்மணி நிகர்த்த தொல்சீர்த் தொட்டிக் கலைப்பதி - ஒளிவிடுகின்ற மணியை ஒத்த பழைய சிறப்புடைய தொட்டிக்கலை என்னும் ஊர். கண்டிகை - உருத்திராக்கமாலை. வைதிக மார்க்கம் - வேதநெறி ஒழுகும் சமயம். கரிசு - குற்றம். வாங்கும் - வளைந்த. திண்டிமம் - மத்தளம். குறள் கணம் - பூதக்கூட்டம். (௯௪)

## செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்

### முற்றிற்று

---

# பொருட் குறிப்புக்கள்

[எண் : பாட்டின் எண்]

---

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை





கழக வெளியீடு : கூசுஅ

வைத்தீசுவரன் கோயில்

# முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்



குமரகுருபர அடிகள்

அருளியது

சொற்பொருள், விளக்கவுரையுடன் கூடியது.



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6 சென்னை-1.
1968

## பதிப்புரை

தென்றலொடு சேர்ந்து தவழ்ந்த நம் கன்னித்தமிழ் தோன்றிய நாடு, நந்தென்பாண்டி நாடே. அந் நாட்டில் தோன்றிப் பெருமை பெற்ற முனிவரர் குமரகுருபர அடிகளார். அவர் அருளிய துறைத்திந் தமிழ் நூல்களில் ஒன்றாக இலகுவது முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்.

இது, மணங்கமழ் தெய்வத்து இளமையோனாகிய முருகப் பெருமான்மீது பாடப் பெற்றது. காவிரி புரக்கும் கவின்பெறு நாடாகிய சோழவள நாட்டின் கண்ணதான வைத்தீசுவரன் கோவில் நகரில் எழுந்தருளி யிருக்கின்ற முத்துக்குமாரசாமி யெனும் முருகப்பெருமான்மீது உளங்கனிந் துருகிப் பாடிய சிறப்புடையது.

தேனென இனிக்கும் சீர்மைச் சொல்லழகும், பொருளழகும், இசையினிமையும், கலந்து கற்பார் நெஞ்சை ஈர்த்து ஈர்த்து என்பையும் உருக்கும் நீர்மையது, இந்நூல். இதன் சிறப்பால் வித்துவான் முதனிலைத் தேர்வுக்குப் பாட நூலாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் அமைத் துள்ளனர். இத்தகைய அருமை சான்ற இப் பிள்ளைத்தமிழ் நூலுக்குப் பேராசிரியர் பெருநாவலர் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்களைக் கொண்டு குறிப்புரை யெழுதுவித்து முன்னர் வெளியிட்டிருந் தோம். இப்போது அக்குறிப்புரையாற் பெரும்பயனின்மை யாய்ந்து யாவர்க்கும் எளிதில் விளங்குமாறு அப்பேராசிரியர் பெருநாவலர் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்களைக் கொண்டே சொற்பொருள் விளக்கவுரை எழுதுவித்துப் புதிய முறையில் முதற்பதிப்பாக இந்நூலை வெளியிடுகின்றோம்.

முத்தமிழால் வைதாரையும்வாழவைக்கும் முருகப்பெருமான் அன்பர்களும் ஆசிரிய மாணவப் பெருமக்களும் வாங்கிக்கற்று இன்புறுவார்களென நம்புகின்றோம்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

தென்றலொடு சேர்ந்து தவழ்ந்த நம் கன்னித் தமிழ்மொழி தோன்றிய நாடு மங்கலம்புனை தென்பாண்டி நாடே. இந்நாட்டில் தோன்றிப் பெருமைபெற்ற முனிவர்கள் இருவர். இவர்களில் முதியவர் குமரகுருபர அடிகள். மற்றவர் விக்கிரமசிங்கபுரத்து ஆனந்தக்கூத்தர்க்கு மயிலம்மையாரிடம் தோன்றிய மாதவச் சிவஞான முனிவர். இவ்விரு முனிவர்களும் தனித்தனி ஆண்பாற் பிள்ளைத்தமிழ் ஒன்றும், பெண்பாற் பிள்ளைத்தமிழ் ஒன்றும் பாடியுள்ளார்கள். குமரகுருபர முனிவர் அருளியவை மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழும், முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழும் ஆம். சிவஞான முனிவர் அருளியவை கலைசைச் செங்கழு நீர் விநாயகர் பிள்ளைத்தமிழும், குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழும் ஆம். இப் பிள்ளைத் தமிழ்கள் மிகச்சிறந்த சுவை அழகுறுப்புக்களுடன் விளங்குபவை.

இப் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் குமரகுருபர முனிவர் திருச் செந்தில் முருகப்பெருமான் திருவருளாணைக்கிணங்க, ஞான குருவை நாடி வடநாட்டிற்குப் புறப்பட்டுச் செல்கையில் தரும புரம் சார்ந்து அங்கே மடாலயத்தில் நான்காவது குருமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரிடம் ஞானோபதேசம் பெறவிரும்பி அவர் ஆணைப்படி சிதம்பரம் செல்லப் புறப்பட்டுப் புள்ளிருக்குவேளூர் என்கின்ற வைத்தீசுவரன் கோவிலை அடைந்து குமரக்கடவுள் விருப்பப்படி முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் பாடி யருளினார்.

பிள்ளைத்தமிழ், ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்றிருதிறப்படும். மொத்தம் பருவங்கள் பத்து. இவற்றில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி ஆகிய முதல் ஏழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத் தமிழ்க்கும் பொதுவான பருவங்களாம். இனி ஆண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதியில் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் மூன்று பருவங்களும், பெண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதியில் அம்மானை, நீராடல், ஊசல் என்ற மூன்று பருவங் களும் அமைக்கப்படும்.

தேன் என இனிக்கும் சீர்மைச் சொல்லழகும், பொருளழகும், இசையினிமையுங்கலந்து, கற்பார் நெஞ்சை ஈர்த்து என்பையும்

உருக்கும் இயல்பினது இந்நூல். இதன் சிறப்பால் சென்னைப் பல்கலைக்கழகத்தார் இந்நூலை வித்துவான் முதனிலைத் தேர்வுக்குப் பாடமாக அமைத்துள்ளார். பல இடங்களிலும் பயிலும் மாணவர்கள் விரிவுரையில்லாது வருந்துகின்ற நிலைகண்டு விரிவுரை எழுதி வெளியிட முன்வந்தனர், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள். 1957 இல் வெளியிடப்பட்ட பிள்ளைத்தமிழ் முதற்கொத்திலமைந்த பிள்ளைத் தமிழ் நூல்கட்கு அரும்பொருள் விளக்கம் எழுதும்படி எம்மைப் பணித்த அவர்களே இந்தப் பிள்ளைத்தமிழ் முதலிய சில நூல்கட்கு விரிவுரையும் எழுதியுதவ வேண்டினார்கள். அதற்கிணங்க இவ்வுரை விரிவாக எழுதப்பட்டுள்ளது. இற்றைக்கு நாற்பத்து நான்காண்டுகட்கு முன் காஞ்சி வித்துவான் திரு. இராமசாமி நாயுடு அவர்கள் எழுதிய விரிவுரை நூல் ஒன்றுள்ளது. அது பலரும் அடைய அரிதாயுள்ளது. அதில் பதம்பதமாக உரை வகுக்கப்பட்டுள்ளது. உயர்நிலைப் படிப்புப் பெறும் மாணவருக்குப் பொருத்தமான தொடர்களின்வழி உரை விரிப்பது சிறப்பாம் ஆதலின் கருத்தமைந்த தொடர்களை யணிபட வகுத்து விரிவுரை எழுதியுள்ளோம். கழகப் பதிப்பாக வெளிவந்த நூல்களில் அமைந்த குறிப்புரைகளும் வேண்டுமளவு செய்யுள்தோறும் சேர்க்கப்பட்டுள்ளன. பயிலும் மாணவர்க்கின்றியமையாது வேண்டப்படும் இலக்கணக் குறிப்புக்களும் ஆங்காங்கு அமைக்கப்பட்டுள்ளன.

இவ்விரிவுரை எமது ஐம்பதாண்டு ஆசிரியப் பயிற்சி முதிர்ச்சியின் அமைவதால் திருந்திய முறையில் அமைந்திருக்குமென்று நம்புகின்றேம். இத்தகைய திருப்பணிகளைத் தொடர்ந்து ஆற்றிவரத் திருவருள்புரியும் தமிழிறைக்கும், கழக ஆட்சிப்பொறுப்பாளர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளையவர்கட்கும் எமது உளமார்ந்த நன்றியை வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்கின்றேம்.

மெய்ப்பொருள் கண்டு மகிழவிரும்பும் மாணவர் அனைவரும் இத்தகைய நூலுரைகளைப் படித்து நலமடைவார்களாக.

'புலவரகம்'
நெல்லை
12-7-58

பு. சி. புன்னைவனநாதன்.

## குமரகுருபர அடிகள்

# வரலாற்றுச் சுருக்கம்

பாண்டி நாட்டிலேயுள்ள ஸ்ரீ வைகுண்டத்திலே சைவ வேளாளர் குலத்திலே சண்முக சிகாமணிக் கவிராயரும் அவர்மனை வியார் சிவகாமியம்மையாரும் செய்த தவப்பயனாக நன்மகனார் ஒருவர் பிறந்தனர். அவர் ஐந்தாண்டளவும் பேசாதிருந்தமை கண்ட பெற்றோர் திருச்செந்தூர் சென்று முருகக்கடவுளை வழிபட, அப் பெருமான் அருளால் அம் மகனார் ஊமை நீங்கிச் சைவ சித்தாந்த சரித்திரச் சாரமாய் விளங்கும் 'கந்தர் கலி வெண்பா' என்னும் பாடலை அப்பெருமான்மீது அருளிச்செய் தனர். முருகக்கடவுள் அவர் கனவிலே குமர வடிவங்கொண்டு 'நீ குருபரனாகுக' என்றருளியதால், அன்றுமுதலாக அவர் குமர குருபரரென அழைக்கப்பட்டார்.

முருகக்கடவுள் ஆணைப்படி குமரகுருபரர் ஒருசமயம் வட திசை செல்லும்போது 'மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' பாட, அக்காலத் தரசராகிய திருமலை நாயகர் மீனாட்சியம்மை யருளால் அதனைத் தெரிந்து அப் பிள்ளைத்தமிழை அம்மையார் திருமுன் அரங்கேற்றுவித்தனர். அப் பிள்ளைத்தமிழின் வரு கைப்பருவத்து ஒன்பதாவது செய்யுளாகிய 'தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே' என்று தொடங்குஞ் செய் யுளுக்குக் குமரகுருபரர் பொருளுரைக்கும்பொழுது மீனாட்சியம் மையார் அருச்சகருடைய பெண் போன்று திருக்கோலங் கொண்டு அரசர் கழுத்திலணிந்திருந்த மணிவடத்தைக் கழற்றிக் குமரகுருபரர் கழுத்திலிட்டு மறைந்தருளினர். குமர குருபரர் பின்னர் 'மீனாட்சியம்மை குறம்,' 'மீனாட்சியம்மை யிரட்டை மணிமாலை,' 'மதுரைக் கலம்பகம்,' 'நீதிநெறி விளக்கம்' என்பவற்றை இயற்றி யருளினார்.

பின்பு திருவாரூர் சென்று தியாகராசப் பெருமானை வணங் கித் 'திருவாரூர் நான்மணிமாலை' என்னும் பிரபந்தத்தைக் குமர குருபரர் பாடினார். அப்பால் தருமபுரஞ் சென்று அங்கே நான்

காவது குருமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிக ரிடம் ஞானோபதேசம் பெற விரும்பி அவராணைப்படி சிதம் பரஞ் செல்லப் புறப்பட்டு வைத்தீசுவரன் கோயில் அடைந்து குமரக்கடவுள்மீது 'முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்' என்னும் பிர பந்தம் பாடினார். பின் சிதம்பரஞ் சென்று நடராசப் பெருமான் மீது 'சிதம்பர மும்மணிக்கோவை,' 'சிதம்பரச்செய்யுட் கோவை' என்னும் இரண்டு பிரபந்தங்களையும், அம்பிகை மீது 'சிவகாமி யம்மை யிரட்டைமணிமாலை' என்னும் நூலையும் பாடினார். பின் தருமபுரஞ் சாரவும் மாசிலாமணி தேசிகர் அவருக்கு ஞானோபதேசஞ் செய்தார். அக் கருணையை வியந்து தம் ஆசிரியர்மீது 'பண்டார மும்மணிக்கோவை' யென்னும் பிரபந்தம் பாடி அதனை அவ் வாசிரியர்க்கு உரிமை யாக்கினர்.

பின்னர், அம் மாசிலாமணிதேசிகர் ஆணைப்படி தமக்குத் திருமலைநாயகரால் கொடுக்கப்பட்ட பொருளைக்கொண்டு காசிக் குப் போய், விசுவநாதப் பெருமான்மீது 'காசிக் கலம்பகம்' என்னும் பிரபந்தம் பாடினார். அந் நாட்டு மகம்மதிய அரசனிடம் மடங்கட்ட இடம்பெற விரும்பிக் கலைமகள்மீது 'சகலகலாவல்லி மாலை'ப் பிரபந்தம்பாடி இந்துஸ்தான் மொழியை அறிந்து, அர சனிடம் சென்று அநுமதிபெற்றுப் பல சைவ மடங்களும் கேதார நாதர் கோயிலும் அமைத்தனர்.

பின்னர் மூன்றுமுறை தருமபுரம் வந்து தம்முடைய ஆசிரி யரைத் தரிசித்துக் காசிக்குப் போய்ச் சைவ சமயவளர்ச்சி கருதிப் பல திருப்பணிகள் செய்து காசியில் ஒரு வைகாசித் திங்கள் தேய் பிறைத் திருதியையில் முத்தி யெய்தினர்.

---

உ

# வைத்தீசுவரன் கோயில்

# முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

## [மூலமும் விளக்கவுரையும்]

---

*[முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் என்பது புள்ளிருக்கு வேளூரில் எழுந்தருளிய முத்துக்குமாரசாமிமீது பாடிய பிள்ளைத் தமிழ் என்னும் பிரபந்தம் ஆகும்.]*

### விநாயக வணக்கம்

*[ஆசிரிய விருத்தம்]*

பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்
பொருப்பிற் பிறந்துதவளப்
பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தோர்
போர்க்களிற் றைப்புணர்ந்து
தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற்
செழும்பிடி பயந்தளித்த
சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு
செஞ்சரணை யஞ்சலிப்பாம்
மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள்
வேழங் கடம்படுபடா
வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்கமுகை
விண்டுதண் தேன்றுளிக்கும்

கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக்
குரிசிலைப் பொருசிலைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
கொழிதமிழ்க் கவிதழையவே.

(சொற்பொருள்) *மின்பூத்த சிறுஇடை பேர்அமர்க்கண் கடவுள்வேழம் - மின்கொடி போன்ற சிறிய இடையினையும் பெரிய போர் செய்கின்ற கண்களையும் உடைய தெய்வயானை யினது, கடம்படுபடா வெம்முலைக்கோடு கொண்டு உழுது உழுது உழக்க முகைவிண்டு தண்தேன் துளிக்கும் - குடம் போன்ற சாயாத விருப்பத்தைத் தருகின்ற முலைக்கொம்பினால் இளைத்துக் இளைத்து அலைக்க மொட்டு விரிந்து குளிர்ந்த தேனைத் துளிக்கின்ற, கொன்பூத்த தெரியல் கடம்பு அணி தடம்புயம் குரிசிலை பொருசிலைக்கை குமரனை-பெருமை பொருந்திய கடப்ப மலர்மாலையைத் தரித்த மலைபோலும் திருத்தோள்களை உடைய பெருமையிற் சிறந்தவனை, போர்செய்யக்கூடிய வில்லைத் தாங்கிய திருக்கையையுடைய குமரவேளை, கந்தபுரி முருகனை - கந்தபுரியில் வாழ்கின்ற முருகக்கடவுளை, பரவும் என்கொழி தமிழ்க் கவிதழைய - துதிக்கின்ற எனது வடித்த தமிழ்க்கவிகள் செழிக்கும்பொருட்டு, பொன்பூத்த குடுமிப்பொலன் குவட்டு இமவான் பொருப்பில் பிறந்து - அழகு அமைந்த குடுமியாகிய பொற்சிகரங்களையுடைய மேலான இமயமலையில் தோன்றி, பொழிதவள நிலவு தவழும் முழுவெள்ளி வேதண்டத்து ஓர் போர்க்களிற்றைப் புணர்ந்து - சொரியப்பட்ட வெண்ணிலாத் தவழ்கின்ற நிறைவாகிய வெள்ளிமலையிலுள்ள ஒப்பற்ற போர் யானையைக் கூடி, தென்பூத்த பாட்டு அளி துதைந்த பைங் கூந்தற் செழும்பிடி - அழகு பொருந்திய பாட்டுப் பாடுகின்ற வண்டுகள் மொய்த்த பசிய கூந்தலையுடைய செழிய பெண்யானை யானது, பயந்து அளித்த சிறுகண் பெருசெவிக் குஞ்சரக் கன்றின்-ஈன்று வளர்த்த சிறிய கண்களையும் பெரிய காதுகளையும் உடைய யானைக்கன்றின், இரு செம்சரணை அஞ்சலிப்பாம் - இரண்டு செம்மையாகிய திருவடிகளைக் கைகூப்பி வணங்குவாம்* (எ - று.)

(விளக்கம்) *இது பொது விநாயக வணக்கம். பின்காப்புப் பருவத்தில் வருவது தலத்திலுள்ள கற்பக விநாயகர் வணக்க மாகும். யாதானும் ஒரு நூல் செய்யப்புகுவோர் முதற்கண் மங்கலமொழி வகுத்துக்கொள்ளும் மரபுக்கு இசைய 'பொன்' என்ற மங்கலமொழி அமைவதாயிற்று. 'பொன்பூத்த குடுமி' என்பது முருகக்கடவுள் திருவருள்வழி வானொலியாகக் கிடைத்*

தது. பொன்மலை மேரு என்பர். மேருவே இமயமும் என்பர். இமம் - பனி. பனியால் மூடப்பெறுமியல்பு குறித்து இமயமலை என்றனர். இப்பொருப்புக்கு மேன்மையாவது கங்கை, பார்வதி என்னும் பெண்கள் இருவரைப் பெற்று, ஈடும் எடுப்புமில்லா இறைவனாகிய சிவபெருமானுக்கு அளித்தது. வெள்ளிவேதண்டம்- வெள்ளிமலை ; இதுவே கயிலைமலையாம். 'வெள்ளிவேதண்டத் தோர் போர்க்களிறு' என்றது சிவபெருமானை. சிறுகண் பெருஞ் செவி : என்பது முரண்தொடை. குஞ்சரக்கன்று - யானைமுகக் கடவுளாகிய மூத்த பிள்ளையார். இருசரணுக்குச் செம்மையாவது அடைந்தாரைப் பிறவிப் பெருங்கடலினின்றும் கடத்தி முத்திக் கரையிற் சேர்ப்பது. கொன் அச்சமுமாம். படா - படாத; இஃது ஈறு குறைந்தது ; பெயரெச்சம். கடம்படு - குடம் போன்ற. விண்டு, விரிந்து. விள் - பகுதி. குரிசில் - பெருமையிற் சிறந்தவன் ; ஆண்பாற் சிறப்புப் பெயர். புள்ளிருக்கு வேளூர் - வைத்தீசுவரன் கோவில்.

கந்தபுரி முருகனைப் பரவு தமிழ்க்கவிதை தழைய, வெள்ளி வேதண்டத்து ஓர் போர்க்களிற்றைப் புணர்ந்து செழும்பிடி பயந்தளித்த குஞ்சரக் கன்றின் இருசெஞ்சரணை அஞ்சலிப்பாம் என்று முடிக்க. (க)

---

## க. காப்புப் பருவம்

[காப்புப்பருவம் என்பது பிள்ளைத்தமிழ் பாடுவோர், திருமால் முதல் முப்பத்து முக்கோடி தேவர் ஈருகப் பல கடவுளர் பிள்ளையைக் காக்க என வேண்டுவது. இஃது இரண்டாம் திங்களில் நிகழ்வது ஆகக் கூறுதல் மரபு.]

திருமால்

பூமேவு கற்பகப் பொங்கரில் சேர்கட்
புலோமசை வளர்த்தரும்பப்
புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு
பொருப்பனை விருப்பனைத்தும்
கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த
குழகனைக் கழகந்தோறும்
கோத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக்
குமாரனைத் நவிபுரக்க
தேமேவு கடவுட் பொலங்கிரி திசைக்கரிகள்
திகிரிகிரி குலகிரியொடும்
திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடல்
தெண்டிரை முகட்டுதித்த
பாமேவு மதுரம் பழுத்தமுதம் ஒழுகும்
பசுங்குதலை மழலையஞ்சொல்
பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் பசுங்கொண்டலே.

(சொ - ள்.) தேம்மேவு கடவுள் பொலம்கிரி திசைக்கரிகள் திகிரிகிரி குலகிரியொடும் திரியத்திரித்து மத்துஎறிய - இடம் பொருந்திய தெய்வத்தன்மை அமைந்த அழகாகிய மந்தர மலையை எட்டுத்திசை யானைகளும் சக்கரவாள மலையும் குலமலைக ளோடும் சுழலச் சுழற்றி மத்தாக வீச, தடம்கடல் தெள்திரை முகட்டு உதித்த-அகலமாகிய திருப்பாற்கடலில் தெள்ளிய அலை யில்மேல் தோன்றிய, பாமேவு மதுரம் பழுத்து அமுதம் ஒழுகும் பசுகுதலை மழலை அம்சொல் பங்கயச்செல்வி - பாக்களிற் பொருந்

திய இனிமை முதிர்ந்து அமுதம்போல் ஒழுகாநின்ற பசுங்குதலை யாகிய மழலைச்சொற்களையுடைய தாமரையை இருப்பிடமாகக் கொண்ட திருமகளது, இருகொங்கைக் குவட்டுவளர் பச்சைப் பசுங்கொண்டல் - இரண்டு கொங்கைகளாகிய மலைகளின்மேல் தாங்குகின்ற பச்சைப்பசு மேகமாகிய திருமால், பூமேவு கற்பகப் பொங்கரில் செங்கண் புலோமசை வளர்த்த கும்பம் புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு பொருப்பனை - பூக்கள் பொருந்திய கற்பகச்சோலையில் சிவந்த கண்களையுடைய புலோமசையால் வளர்க்கப்பட்ட குடம்போன்ற நெருங்கின கொங்கைகளை யுடைய களிப்பையுடைய தெய்வயானையானது விளையாடுதற்கு இடமாகிய பன்னிரண்டு தோள்களாகிய மலைகளையுடையவனை, விருப்பு அனைத்தும் கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த குழகனை - விருப்ப முழுதும் மலைச்சாரலில் வாழ்கின்ற குறச் சிறுமியாகிய வள்ளிநாயகிமேல் வைத்த கட்டழகனை, கழகந் தொறும் கொத்து முத்தமிழ் மொய்த்த கந்தபுரி முத்துக்குமர னைத் தனிபுரக்க - சங்கங்கள்தோறும் கூட்டமாகிய முத்தமிழ் நிறைந்த கந்தபுரியில் வாழ்கின்ற முத்துக்குமாரசாமியைச் சிறப்பாகக் காக்கக்கடவன் ; (எ - று.)

(வி - ம்.) புலோமசை - இந்திராணி. புலோமன் என்பவன் மகள் : "புலோமசை வளர்த்த களியானை விளையாடு பன்னிரு பொருப்பு" என்றதனால் பொருப்பு எட்டுத் தோள்களாகிய மலைகள் எனப்பட்டது. பொலங்கிரி - மந்தரமலை. 'குலகிரி யொடும் திரியத் திரித்து மத்தெறியுந் தடங்கடல் தெண் திரை முகட்டுதித்த 'பங்கயச்செல்வி' என வருதலால் அழகிய மந்தரமலையென் றுரைக்கப்பட்டது. மேகம் மலைமீது கண் வளர்தல் இயல்பாதலால், பங்கயச்செல்வி இரு கொங்கைக் குவட்டுவளர் பச்சைப் பசுங்கொண்டல்' எனப்பட்டது. களி யானை விளையாடுதற்கு ஒரு பொருப்புச் சாலாதாதலின், 'பன் னிரு பொருப்பு' என்றார். கிரிசரம், வனசரம், நதிசரம் என்ற மூவகை யானைகளுள் இது கிரிசரம். கிரிசரம் - மயிலையில் வாழ் வது. முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்ற மூன்று பகுப் புடைய தமிழ்மொழி. அகத்திய முனிவருக்குத் தமிழ் அறிவுறுத் திய பரமாசாரியனாதலாலும், தமிழ் வழங்கும் இடத்தில் தனக் குப் பெருவேட்கையாதலானும், 'கொத்து முத்தமிழ் மொய்த்த கந்தபுரி முத்துக்குமரன்' என்றார். குழகன் - கட்டழகன், இளைஞன். தே - தேம், இடம். திகிரி - சக்கரவாளம். பச்சைப் பசுங்கொண்டல் ; உவமையாகுபெயர். இக்காப்புப் பருவத்தில் எல்லாத் தேவர்களையும் துதித்தல் இயல்பாயினும் காத்தற் றொழிலில் இன்றியமையாச் சிறப்பினராதல்பற்றித் திருமால் துதி முதற்கண் கூறப்பட்டது.

*''பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர் பச்சைப் பசுங்கொண்டல் கந்தபுரி முத்துக்குமரனைத் தனிபுரக்க' என்று முடிக்க.* (க)

## வைத்திய நாதர்

### [சந்த விருத்தம்]

ஒருபு றத்துமர கதம்இ மைப்பவொளிர்
மாமேரு மற்றொரு மேருவைச் சாய்த்தென
உலக ளக்கநிமிர் வடபொ ருப்பையொரு
தோளால்வ ளைத்தபி னாகியைத் தீக்கனல்
உமிழ முக்குடுமி அயில்தி ரித்துவரு
வாய்வாள்ம ழுப்படை வீரனைப் பார்த்தனொ
டொலு மற்றொழிலின் அறவி ளைத்துமெதிர்
ஓடாது டற்றுகி ராதனைக் கூக்குரல்
விரிக டற்புடவி முழுது ணச்சமையும்
ஓர்காளை கட்டுப்ர தாபனைக் கார்க்கடு
விடமெ டுத்தரிய திருமி டற்றிலிடு
காமாரி யைக்கவு மாரியைப் போற்றிகு
விழிமுன் நிற்கும்வடி வழகு டைக்கடவுள்
மாமோகி னிக்கும ணாளனைச் சூக்கும
வெளியி னிற்பரம நடந விற்றுதிறல்
வேளூர்வ யித்திய நாதனைப் போற்றுதும்
குரவு செச்சையொடு நறவு யிர்ப்பவிரி
தேனாறு வட்டெழு மார்பனைப் பேய்த்திரள்
குரவை யிட்டவுணர் தடிசு வைத்திடஓர்
கூர்வேல்வி டுத்தகு மாரனைப் பார்ப்பதி
குமர னைச்சமரில் உருமு கக்குளிறு
காலா யுதக்கொடி யாளனைக் கோட்டிய
குறந கைக்குமனம் உருக வெற்பவர்த
மானோ டுமெற்பொரு தோளனைத் தாக்கிய

திரண்ம ருப்பினமர் பொருத னிக்கடவுள்
மால்யானை யைப்புணர் காளையைச் சாற்றிய
செழும றைப்பொருளி னுரைவி ரித்துமெனும்
வேதாமு டித்தலை மோதுகைக் காய்ப்பொடு
திருவ டித்துணையென் முடிப தித்தவடு
ஆறாத மெய்ப்புகழ் ஆளியைப் பூட்டிய
சிறைவி டுத்தமரர் குறைமு டித்துதவு
சேனாப திப்பெரு மாள்தனைக் காக்கவே.

(சொ - ள்.) குரவு செச்சையொடு நறவு உயிர்ப்பவிரி தேன்ஆறு உவட்டெழும் மார்பனை - குராமலர் வெட்சிமலருடன் வாசனைவீச விரிதலால் உண்டாகிய தேன் யாறானது பெருகி ஓடுதற்கு இடமாகிய மார்பையுடையவனை, பேய்த்திரள் குரவையிட்டு அவுணர் தடி சுவைத்திட ஓர் கூர்வேல் விடுத்த குமாரனை - அலகைக் கூட்டமானது குரவைக் கூத்தாடி அசுரருடைய தசையைச் சுவைக்கும்படி கூரிய வேற்படையை ஏவின குமாரனை, பார்ப்பதி குமரனைச் சமரில் உரும் உகக் குளிறு கால் ஆயுதக் கொடியாளனை - பார்வதி மகனைப் போர்க்களத்தில் இடியேறுகள் சிந்தும்படி ஒலிக்கின்ற சேவலாகிய கொடியையுடையவனை, கோட்டிய குறுநகைக்கு மனம்உருக வெற்பவர் மாதோடு மல்பொரு தோளனை - செய்த புன்சிரிப்புக்கு மனம் உருகிக் குன்றவர் பெண்ணோடு மற்போர் புரிந்த திருத்தோளையுடையவனை, தாக்கிய திரள்மருப்பில் அமர் தனிமால் கடவுள் யானையைப் புணர் காளையை - இடித்த திரண்ட கொம்பினால் போர்செய்த ஒப்பற்ற பெரிய தெய்வயானையைச் சேர்ந்த இளம் பருவமுடையவனை, சாற்றிய செழுமறைப் பொருளின் உரை விரித்தும் எனும் வேதா முடித்தலையில் மோதுகைக் காய்ப்பொடு திருஅடித்துணையில் முடிபதித்த வடு ஆறாத மெய்ப்புகழ் ஆளியை - சொல்லப்பட்ட செழிய மறைப்பொருட்கு உரையை விரித்துச் சொல்வோம் என்ற பிரமனது முடிஅணிந்த தலையின் மீது குட்டின கைத்தழும்போடு இரண்டு திருஅடிகளில் என் முடி அழுத்தின தழும்பும் நீங்காத உண்மையாகிய புகழையுடையவனை, பூட்டிய சிறை விடுத்து அமரர் குறைமுடித்து உதவு சேனாபதிப் பெருமாள்தனை - அடைக்கப்பட்ட சிறையினின்றும் விடுவித்துத் தேவர்களுடைய குறை தவிர்த்தருளின சேனாபதியாகிய பெருமானை, காக்க - காக்கும்பொருட்டு; ஒருபுறத்து மரகதம் இமைப்ப ஒளிர் மாமேரு மற்றொரு மேருவைச் சாய்த்து என - ஒரு பக்கத்தில் மரகதமணி விளங்க ஒளிவிடுகின்ற மகா

மேரு மலையானது வேறொரு மேருமலையைச் சாய்த்தாற்போல, உலகு அளக்க நிமிர் வடபொருப்பை ஒரு தோளால் வளைத்த பிநாகியை தீக்கனல் உமிழும் முக்குடுமி அயில் திரித்துவரு வாய் வாள் மழுப்படை வீரனை - உலகங்களை அளக்கும்பொருட்டு நிமிர்ந்த வடமலையை ஒப்பற்ற திருத்தோளால் வளைத்த பிநாகத்தையுடையவனை, தீக்கின்ற நெருப்பை உமிழ்கின்ற முத்தலையையுடைய சூலத்தைச் சுழற்றி வருகின்ற வாயில் ஒளியுள்ள மழுவாயுதத்தையுடைய வீரனை, பார்த்தனொடு உடலும் மல் தொழிலில் அறஇளைத்தும் எதிர் ஓடாது உடற்று கிராதனை - அருச்சுனனோடு கோபித்து எதிர்ந்த மற்போரினால் மிக மெலிந்தும், அவன் எதிரே கோபித்து எதிர்த்த வேடனை, கூக்குரல்விரி கடல்புவி முழுதும் உண்ணச்சமையும் ஓர் காளைகட்டு பிரதாபனை- ஒலிமிகுந்த கடல்சூழ்ந்த உலக முழுவதும் உண்ண அமைந்த ஒரு காளையை ஊர்தியாகப் பிணித்த மகிமையுள்ளவனை, கார்க்கடு விடம் எடுத்து அரிய திருமிடற்றில் இடுகாமாரியை-கரிய கடுமையான நஞ்சை எடுத்து அருமையாகிய திருமிடற்றில் அடக்கிக் கொண்ட மன்மதனை யழித்தவனை, கவுமாரியைப்போல் திருவிழி முன்வடிவு அழகுஉடை கடவுள்மா மோகினிக்கு மணாளனை - பார்வதியைப்போல் திருக்கண்களுக்கு எதிரே நின்ற உடல் அழகுவாய்ந்த தெய்வத்தன்மையுள்ள பெருமைபொருந்திய மோகினிக்கு நாயகனை, சூக்கும வெளியினில் பரமநடம் நவிற்று திறல் வேளூர் வைத்தியநாதனைப் போற்றுதும்-பரவெளியில் மேன்மையாகிய நடனத்தைச் செய்கின்ற வெற்றியையுடைய வேளூரில் எழுந்தருளியிருக்கின்ற வைத்தியநாதன் என்னும் பெயரையுடைய சிவபெருமானைப் போற்றுவோம்; (எ - று.)

(வி - ம்) மரகதம் : உவமையாகுபெயர்; இங்கு உமாதேவி. பிநாகி - பிநாகம் என்னும் வில்லையுடைய சிவன். தீக்கனல் - எரித்தலையுடைய நெருப்பு. புடவிமுழு துணச்சமையும் ஓர் காளை - திருமால். காளை : உவமையாகுபெயர். காலில் முள்ளாகிய ஆயுதத்தை யுடைமையால் சேவலைக் காலாயுதம் என்றார், வெற்பவர் தம்மான் - வள்ளிநாயகி- மான் என்றது - மான் வயிற்றிற் றோன்றியதுபற்றி. யானையைப் புணர்காளை என்றது காமச் சுவைபட வந்தது, மறைப்பொருள் - பிரணவம், அமரர் - அமிர்தம் உண்டமையால் இறவாதவர். இவரும் ஒரு கற்பத்தில் இறப்பவர் எனினும் இறவாதவர் என்றது மங்கலவழக்கு. உருமு-இடியேறு. உக - சிதற, உகு: பகுதி. மால் - பெருமை. கடவுள்-தெய்வம். வேதா - பிரமா. துணை - இரண்டு. குறை முடித்து - குறை தவிர்த்து. ஒரு பக்கத்தில் உமாதேவியார் விளங்கச் சிவபெருமான் பொன்மேனியுடன் பொலிதலின் ஒரு புறத்து மரகதம் இமைப்ப ஒளிர் மாமேரு என்றார். கடவுள்மா

*மோகினி - திருமால். திருமால் மோகினி வடிவங் கொண்டது தாருகாவனத்து முனிவர்களின் தவச்செருக்கை ஒழிக்க. செவ்வேள்பூசித்த இடமாதலின் வேளூர் என்று பெயர். (உ)*

தையனுயகியம்மை

வேறு

குழைஅ டர்ந்துவடி கணைது ரந்துசெறி
குமிழ்ம றிந்தவிழி நவ்வியைக் கோட்டோடு
குவடெ றிந்தமுத கலசம் வென்றதட
முலைசு மந்தமலை வல்லியைச் சேற்றேளிர்
குமுதம் விண்டசுவை அமுத முண்டினிய
கொழுநர் கொஞ்சுசிறு கிள்ளையைத் தாட்டுணை
குறுகு தொண்டர்பிழை அறம றந்துபிறர்
குணமி கழ்ந்ததக வில்லியைச் சேட்சேலும்
எழுபெ ரும்புவன முழுதோ ருங்குதவும்
இறைவி யென்றுமறை கையெடுத் தார்க்கவும்
இடைநு டங்குமட நடையி ளங்குமரி
எனஇ ருந்தகன கள்வியைப் பூத்தஎன்
இதய புண்டரிக மலரில் எந்தையோடும்
இனிதமர்ந்தவோரு செல்வியைப் பாற்றேகும்
இருவர் கண்கள்கது வரிய செஞ்சுடரின்
இடம ருங்குடைய தையலைப் போற்றுதும்
முழுது ணர்ந்தும்உணர் வரிய தொன்றையொரு
மொழியின் விண்டசிறு பிள்ளையைச் சூர்ப்பெயர்
முதுப ழம்பகையை அறவெ றிந்தவுணர்
முதல்த டிந்ததனி வில்லியைப் பாட்டளி
முரல விண்டதரு நிழல்தொ ழும்புகுடி
புகவ ழங்குகோடை வள்ளலைப் போற்றடி
முடியு மின்றிவெறு வெளிக டந்துமறை
முடிவி னின்றுநிறை செல்வனைக் காத்தோறும்.

மழலை வண்டுதட மலர்கு டைந்துபுது
மதுவ ருந்திநறு மல்லிகைச் சேக்கையின்
வடிப சுந்தமிழின் இசைப யின்றபெடை
யொடுது யின்றினிய செவ்வழிப் பாட்டினை
வருவி பஞ்சிபயில் தரும தங்கர்தெரு
மரமு ரன்றுநெடு வைகறைப் போய்ச்செழு
மலரி லஞ்சிதோறும் உலவு கந்தபுரி
மருவு கந்தனையெம் ஐயனைக் காக்கவே.

*(சொ - வி.) முழுது உணர்ந்தும் உணர்வு அரியது ஒன்றை ஒருமொழியின் விண்ட சிறு பிள்ளையை - முற்றும் அறிந்தும் அறிதற்கரிதாகிய ஒரு பொருளை ஒரு சொல்லாற் சொல்லிய சிறிய பிள்ளையை, சூர்ப்பெயர் முதுபழம் பகையை அறஎறிந்து அவுணர்முதல் தடிந்த தனிவில்லியை - சூரன் என்னும் பெயரை யுடைய முதுமையாகிய பழம்பகைவனை முடியும்படி கொன்று அசுரருடைய வேரைக் களைந்த ஒப்பற்ற வில்லாளியை, பாட்டு அளிமுரல விண்ட தருநிழல் தொழும்பு குடிபுக - பாடல் களை வண்டுகள் பாட மலர்ந்த தருநிழலில் தொண்டர் குடியேற, வழங்கு கொடைவள்ளலை - வழங்கின கொடையையுடைய வள்ளலை, போற்றுஅடி முடியும்இன்றி வெறு வெளிநடந்து மறைமுடிவில் நின்று நிறைசெல்வனை - யாவரும் வழிபடுதற் குரிய முதலும் இறுதியும் இல்லாமல் வெட்டவெளியைத் தாண்டி மறையின் உச்சியில் நிறைந்து நின்ற செல்வம் உடையவனை, காதொறும் மழலை வண்டு தடம்மலர் குடைந்து புதுமது அருந்தி நறுமல்லிகை சேக்கையில் வடிபசுந் தமிழின் இசைபயின்ற பெடையொடு துயின்று - சோலைதோறும் இளவண்டுகள் தடாக மலர்களைத் தோண்டிப் புதிய தேனையுண்டு நறிய மல்லிகை மலர்ப்பள்ளியில் வடித்த பசுந்தமிழின் இசையைப் பழகின பெடை வண்டுகளோடு தூங்கி, இனிய செவ்வழிப் பாட்டினை வரு விபஞ்சி பயில்தரு மதங்கர் தெருமர முரன்று நெடு வைகறை போய் - இனிதாகிய செவ்வழிப் பண்ணினை வருகின்ற வீணை வாசித்தலைப் பழகின மதங்கரும் மயங்கும்படி பாடி நீண்ட வைகறையில் எழுந்து சென்று, செழுமலர் இலஞ்சி தொறும் உலவு கந்தபுரி மருவு கந்தனை - செழிய மலர்களையுடைய குளந் தோறும் உலாவுகிற கந்தபுரியில் வாழ்கின்ற கந்தவேளை, எம் ஐயனைக் காக்க - எம் இறைவனைக் காக்கும்பொருட்டு, குழை அடர்ந்து வடிகணை துரந்து செறிகுமிழ் மறிந்த விழிநவ்வியை - குழையை நெருங்கி வடித்த அம்பைத் துரத்தி நெருங்கிய*

குமிழும் பூவிற்பாய்ந்து மீள்கின்ற கண்களையுடைய பெண்மானை, கோட்டொடு குவடு எறிந்து அமுதகலசம் வென்ற தடமுலை சுமந்த மலைவல்லியை - யானைக் கொம்புகளுடன் மலைகளைவென்று அமிர்த குடங்களைவென்ற பெரிய முலைகளைத் தாங்கிய மலையரையன் மகளை, சேற்றுஒளிர் குமுதம்விண்ட சுவைஅமுதம் உண்டு இனிய கொழுநர் கொஞ்சு சிறுகிள்ளையை - சேற்றில் விளங்குகின்ற செவ்வல்லி மலர்ந்த சுவையுள்ள தேனையுண்டு இனிதாகிய கணவர் கொஞ்சுகின்ற இளங்கிளியை, தாள்துணை குறுகு தொண்டர் பிழைஅற மறந்து பிறர்குணம் இகழ்ந்த தகவு இல்லியை - திருவடித்துணையை அடைந்த தொண்டர்களுடைய குற்றங்களை முற்றும் மறந்து பிறருடைய குணங்களை அவமதித்த தகுதியில்லாதவளை, சேட்செல்லும் எழுபெரும் புவனம்முழுது ஒருங்கு உதவும் இறைவி என்று மறைஆர்க்கவும் - தூரத்தே செல்லுகின்ற பெரிய உலகங்கள் முற்றும் ஒருங்கே ஈன்ற தலைவி என்று வேதங்கள் வாயெடுத்து வாழ்த்தவும், இடைநுடங்கும் மடநடை இளங்குமரி என இருந்த கன கள்வியை-இடைதுவளாநின்ற மெல்லிய நடையையுடைய இளங்குமரி என்று சொல்லும்படி யிருந்த பெரிய கள்ளியை, பூத்தஎன் இதய புண்டரிக மலரில் எந்தையொடும் இனிது அமர்ந்த ஒரு செல்வியை - மலர்ந்த என்னுடைய மனமாகிய தாமரை மலரில் எந்தையாகிய சிவபெருமானொடும் இனிதாய் அமர்ந்திருக்கின்ற ஒப்பற்ற செல்வமுடையவளை, பால்தொகும் இருவர் கண்கள் கதுவுஅரிய செஞ்சுடரின் இடமருங்கு உடைய தையலைப் போற்றுதும் - இருபுறத்தும் சேர்ந்திருக்கின்ற நான்முகன் திருமால் ஆகிய இருவருடைய கண்களாற் பற்றப்படுதலருமையாகிய செவ்வொளியாகிய சிவபெருமானது இடப்பாகத்தையுடைய தையல்நாயகியை வழிபடுவோம்; (எ - று.)

(வி - ாை.) குழை - காதணி. வடிகணை: வினைத்தொகை நிலைத்தொடர். குமிழ்: முதலாகுபெயர். பின் உவமையாகு பெயராய் மூக்கினையுணர்த்தியது. தகவு - நடுவுநிலைமை. தொண்டர் குற்றங்களை மறந்து பிறர் குணங்களை அவமதித்தலால் தகவில்லி என்றார். 'முழுதுணர்ந்தும் உணர்தற்கரியதொன்று' என்றது 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' என்றாற்போல்வது. தொழும்பு என்பது பண்பாகுபெயராய்த் தேவரையும் அடியாரையும் உணர்த்தியது. திருமொழி - பிரணவம், மறை முதலில் ஓதப்படுவது.

"கந்தபுரிவரு கந்தனை எம்ஐயனைக் காக்க, பாற்றொழும் இருவர் கண்கள் கதுவரிய செஞ்சுடரின் இடமருங்குடைய் தையலைப் போற்றுதும்" என முடிக்க. (௩)

## கற்பகவிநாயகக்கடவுள்

### வேறு

கடாம்உமிழ் கைக்கதக் கிம்புரிக் கோட்டொரு
　　கராசலம் இட்டமெய்க் கஞ்சுகிக் கேற்பவோர்
படாமணி மத்தகத் தந்தியைத் தீர்த்தர்கள்
　　பராவரு கற்பகக் கன்றினைப் போற்றுதும்
வடாதுபொ ருப்பினில் துன்றுபுத் தேட்கெதிர்
　　மனேலயம் உற்றமெய்ப் பண்பினைக் காட்டிய
சடானன னைத்தலைச் சங்கம்வைத் தாற்றிய
　　சடாயுபு ரத்தருட் கந்தனைக் காக்கவே.

(சொ - ள்.) வடாது பொருப்பினில் துன்று புத்தேட்கு எதிர் மனேலயமுற்ற மெய்ப்பண்பினைக் காட்டிய சடானனனை - வடமலையிற் பொருந்திய சிவபெருமானுக்கு எதிரே மனவொருமை அடைதற்கு ஏதுவாகிய உண்மை நிலையை அறிவித்த ஆறுமுகனை, தலைச்சங்கம் வைத்து ஆற்றிய சடாயுபுரத்து அருட் கந்தனைக் காக்க - முதற்சங்கத்தை ஏற்படுத்தி நடத்திய சடாயு புரத்தில் எழுந்தருளியிருக்கின்ற கந்தவேளைக் காக்கும் பொருட்டு, கடாம்உமிழ் கைகதம் கிம்புரிக் கோடுஒரு கராசலம் இட்டமெய்க் கஞ்சுகிக்கு ஏற்ப - மதநீரை உமிழ்கின்ற துதிக்கையினையும் கோபத்தினையும் கிம்புரிப்பூண் அணிந்த கொம்பினையும் உடைய ஒரு கைம்மலையானது கொடுத்த உடற்கவசத்துக்கு ஏற்ப, ஓர் படாம்அணி மத்தகத் தந்தியை - ஒப்பற்ற முகபடாம் அணிந்த மத்தகத்தையுடைய யானையை, தீர்த்தர்கள் பராவுஅரு கற்பகம் கன்றினைப் போற்றுதும் - தூய்மையானவர்கள் வழிபடற்குரிய அருமையாகிய கற்பகக் கன்றினை (கற்பக விநாயகனை) வழிபடுவோம்; (எ - று.)

(வி - ம்) வடாது பொருப்பு - வடக்கிலுள்ள மேருமலை. வடக்குள்ளது வடாது. சடாயு பூசித்த காரணத்தால் சடாயு புரம். சடானனன் - சட் + ஆனனன், ஆறுமுகன். தீர்த்தர்கள் - தேவர்கள். கற்பகக் கன்று இத்தலத்தில் எழுந்தருளிய விநாயகர். கற்பகக் கன்று என்பது கற்பகம் என்ற பெயரையுடைய யானைக் கன்று என விரியும்.

சடாயுபுரத்துக் கந்தனைக் காக்கக் கற்பகக் கன்றினைப் போற்றுதும் என முடிக்க.

(௭)

## பிரமதேவர்

[ஆசிரிய விருத்தம்]

பைங்காய்க் கமுகு செம்பழுக்காய்ப்
பவளம் உதிர்ப்பக் கதிர்ச்செந்நெல்
பனிமுத் துகுக்குஞ் சோணாட்டின்
பரிசு பாடி ஞிமி றிரப்பக்
கோங்கார்த் திறைக்கு நறைக்காந்தள்
குறிஞ்சி மலரோ டணிந்தநறுங்
குஞ்சிப் பெருமாள் வேதபுரிக்
குமரப் பெருமாள் தனைக்காக்க
செங்காற் கருங்கண் பைந்தொடியார்
சிற்றாய்ப் பாடிப் பெருங்குடியில்
தீம்பால் திருடிக் கட்டுண்டு
திரியா வண்ணம் திருத்தாதைக்கு
அங்காப் படங்கப் பால்தயிர்நெய்
அருந்தேன் கடலோ டிருந்துண்ண
அகிலம் படைத்துத் தனக்கேற
அன்னம் படைத்த பெருமாளே.

(சொ - ள்.) *செங்கால் கருங்கண் பைந்தொடியார் சிற்றாய்ப் பாடிப் பெருங்குடியில் தீம்பால் திருடிக் கட்டுண்டு திரியா வண்ணம் - சிவந்த காலையும் கரிய கண்களையும் பசிய வளையலையும் உடைய ஆய மகளிரிடத்துச் சிறிய ஆய்ப்பாடியிலுள்ள பெருங் குடியிலே இனிமையாகிய 'பாலைத் திருடிக் கட்டுப்பட்டுத் திரியாதபடி, திருத்தாதைக்கு அங்காப்பு அடங்க பால் தயிர் நெய் அருந்தேன் கடலோடு இருந்து உண்ண அகிலம் படைத்துத் தனக்குஏற அன்னம் படைத்த பெருமாளே! - தன் திருத்தந்தையார்க்கு வாய்திறத்தல் இல்லையாகப் பால், தயிர், நெய், அரிய தேன் என்பவற்றைக் கடலுடனே இருந்துண்ணும்படி உலகத்தை உண்டாக்கித் தனக்கு ஏறும் பொருட்டு அன்னத்தைப் படைத்துக்கொண்ட பெருமையையுடையவனாகிய பிரமன், பைங்காய்க் கமுகு செம்பழுக்காய்ப் பவளம் உதிர்ப்ப கதிர்செந் நெல் பனிமுத்து உகுக்கும் சோணாட்டின் பரிசு பாடி - பசுங்*

காயையுடைய கமுகமரங்கள் பழுத்த காய்களாகிய பவளங்களை உதிர்க்கச் செந்நெற்கதிர்கள் குளிர்ச்சியாகிய முத்துக்களைச் சிந்துகின்ற சோழநாட்டினது பெருமையை எடுத்துப் பாடி, ஞிமிறு இரப்ப - வண்டுகள் யாசிக்க, கொங்கார்த் திறைக்கு நறைக்காந்தள் குறிஞ்சி மலரோடு அணிந்த குஞ்சிப் பெருமாள் - தேனை நிறைத்து இறைக்கின்ற வாசனையுள்ள காந்தள் மலர்களைக் குறிஞ்சி மலர்களுடனே தரித்துக்கொண்ட முடியையுடைய பெருமானும், வேதபுரியில் வாழ்கின்ற குகப் பெருமானுமாகிய முருகனைக் காக்கக்கடவன்; (எ - று.)

(வி - ம்.) செந்நெற்கதிரில் முத்துண்டாதல் இயல்பாதலின், கதிர்ச்செந்நெல் மணிமுத்துதிர்க்கும் என்றார். பின்வரும் பாடற்படி இருபது இடங்களில் முத்துப் பிறப்பது விளங்கும்.

" தந்தி வராக மருப்பிப்பி பூகம் தனிக்கதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினமின்னார்
கந்தரம் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார்
இந்து உடும்பு கராமுத்தம் ஈனும் இருபதுமே."

கமுகு பவளத்தையும் செந்நெல் முத்தினையும் உதிர்த்தலும் செய்யுமாயின் அந்நாட்டு மாந்தரின் வண்மை (கொடைவளம்) சொல்ல வேண்டாம் என்பதாயிற்று. அதனால் சோணாட்டினர் பரிசுபாடி ஞிமிறிரப்ப என்றார். குறிஞ்சிமலர் - மலையில் உள்ள ஒருவகை மலர். குஞ்சி - சிகை. வேதங்கள் பூசித்த தலமாதலால் வேதபுரி என்று வழங்கும். தீம்பால் என்பதில் தீ சாதியடை. திருத்தாதை-திருமால். தோன்றியழிதலாகிய உலகத்தை அகிலம் (அழிவற்றது) என்றது மங்கலவழக்கு. தந்தைக்குப் பால் முதலிய பருகுவன அளித்துத் தனக்கு உண்பதற்கு மிக அன்னம் படைத்துக் கொண்டான் என மற்றும் ஒரு பொருள் தோன்றுதல் காண்க. அகிலம் படைத்த பெருமாள் குமரப் பெருமாள் தனைக் காக்க என்று முடித்துக்கொள்க. (௩)

## தேவேந்திரன்

### வேறு

காணும் கற்பகக் காவுமு வுலகும்அக்
காவென நிழற்றும்ஒற்றைக்
கவிகையுங் குணதிசைக் காவலும் பிறவும்உள்
காணியுங் காணியாக

வானாறு கோட்டிமய மலைவயிறு வாய்த்ததலை
மகளுக்கும் மணமகற்கும்
மருமகளை உரியதன் திருமக ளெனப்பெற்ற
மாமடிக ளைத்துதிப்பாம்
பானாறு செந்நெற் பசுங்கதிர் கறித்துமென்
பைங்குவளை வாய்குதட்டும்
பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம்
பாலாறு பங்கயச்செந்
தேனாறு டன்கடவுள் வானா றெனப்பெருகு
சித்தாமிர் தஞ்சிவபிரான்
சீர்த்திப்ர தாபநிகர் தினகர புரித்தேவ
தேவனைக் காக்கஎன்றே.

(சொ - ள்.) *பால்நாறு செந்நெற் பசுங்கதிர் கறித்து மென்பசுங்குவளை வாய்குதட்டும் பணைமருப்பு எருமை - பால் பிடித்த செந்நெல்லின் பசிய கதிர்களைக் கடித்து மென்மையாகிய பசிய குவளை மலர்களை வாயினால் மெல்லுகின்ற பருத்த கொம்புகளையுடைய எருமைகள், மடு மடிமடை திறந்த தீம்பால்ஆறு பங்கயச் செந்தேன் ஆறுடன் கடவுள் வான்ஆறு எனப்பெருகு சித்தாமிர்தம் - தமது அடிகளாகிய மடுக்களின் மடை திறந்ததனால் உண்டாகிய இனிய பால் யாறானது தாமரை மலர்களினின்றும் பெருகுகின்ற செந்தேன் ஆறுகளோடு கலந்து தெய்வத் தன்மையுள்ள ஆகாய கங்கைபோலப் போய்ப் பெருகுகிற சித்தாமிர்த தீர்த்தமானது, சிவபிரான் சீர்த்திப் பிரதாபம் நிகர் தினகர புரி தேவதேவனை காக்க என்று - சிவபிரானது சீர்த்திப் பெருமையை நிகர்த்த தினகரபுரியிலுள்ள தேவதேவனாகிய கந்தவேளைக் காக்கவேண்டும் என்று, கான்நாறு கற்பகக்காவும் மூவுலகும் அகாஎன நிழற்றும் ஒற்றைக் கவிகையும் கீழ்த்திசைக் காவலும் பிறவும் உள்ள காணியும் காணிஆக - மணம் கமழ்கின்ற கற்பகச்சோலையும் மூன்றுலகங்களும் அந்தக் கற்பகச்சோலை போல நிழலைச் செய்கின்ற தனியாகிய கொற்றக் குடையும் கீழ்த் திசைக் காவலும் பிறவுமாயுள்ள இடமும் காணியாட்சியாக, வான்நாறு கோடு இமயமலைத் தலைமகட்கும் மணமகற்கும் மருமகளை உரிய தன் திருமகள் எனப்பெற்ற மாமடிகளைத் துதிப்பாம் - ஆகாயத்தை அளாவுகின்ற சிகரங்களையுடைய இமயமலையிற் பிறந்த மூத்த மகளுக்கும் அவள் கணவனுக்கும்*

மருமகளாகிய தெய்வயானையை உரிமையாகிய தன் திருமகளாகப்பெற்ற மாமனாகிய (இந்திரன்) அடிகளைத் துதிசெய்குவோம்; (எ - று.)

(வி - ம்.) இமயமலை வயிறு வாய்த்த தலைமகள், பார்வதி. மணமகன் - சிவபெருமான். தெய்வயானையார் கந்தவேளுக்கு மனைவியாதலும் இந்திரனுக்கு மகளாதலும், பார்வதி பரமேசுரருக்கு மருமகளாதலும், "காஞறு கற்பகக் காவும்" எனத் தொடங்கி, "மாமடிகளைத் துதிப்பாம்" என முடித்த சொற்றொடர்களால் இனிதுணரக் கிடந்தன. கறித்தல் - கடித்தல். பணைமருப்பு: வினைத்தொகைநிலைத்தொடர். இனிப் பணை என்பதை முதனிலைத் தொழிற்பெயராக்கிப் பணைத்தலையுடைய என இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகை எனலுமாம்: மாமடிகள் - இந்திரன், மாம+அடிகள்=மாமடிகள் என அகரம் குறைந்தது; இது தொகுத்தல் விகாரம். தினகரபுரி - தினகரன் (சூரியன்) பூசித்த நகர்.

தினகரபுரித் தேவதேவனைக் காக்க என்றே மாமடிகளைத் துதிப்பாம் என்று முடிக்க. (கூ)

திருமகள்

வேறு

மானிறக் கடவுள்திரு மறுமார்பில் நறவிரி
வனத்துழாய்க் காடுமூடி
மாயிருள் வழங்குதன் திருமாளி கைக்கந்தன்
மணிவிளக் கிட்டுமூட்டாட்
கானிறைக் குங்கமல வீட்டுக்கு நெட்டிதழ்க்
கதவந் திறந்தளித்தும்
காதன்மை காட்டுங் கவுத்துவத் துடன்வந்த
கன்னிகையை அஞ்சலிப்பாம்
மீனிறப் புணரியை விழுங்குங் கடற்றானை
வெள்ளமொடு கள்ளமனமும்
மெய்யுமிரு ளத்திரளும் அவுணக் கருங்கங்குல்
விடியக் கடுங்குரல்விடும்

தீநிறக் குடுமிவெண் சேவலே உயர்த்துவண்
சிறைமயிற் பரிநடாத்துஞ்
சேவகப் பெருமாளை வேதபுரி வரும்இளஞ்
சேயைப் புரக்கவென்றே.

(சொ - ள்.) *மீன்நிறப் புணரியை விழுங்குங் கடல்தானை வெள்ளமொடு* - மீன்மயமாகிய கடலை அடக்குகிற வேறொரு கடல்போன்ற சேனைப்பெருக்கோடு, *கள்ளம் மனமும் மெய்யும் இருளத்திரளும் அவுணர் கரு கங்குல் விடிய* - வஞ்சத்தோடு கூடிய தமது மனமும் உடம்பும் இருண்டிருக்கத் திரண்டிருக்கின்ற இராக்கதராகிய கரிய இரவானது விடியும்படி, *கடுங்குரல் விடும் தீநிறக்குடுமி வெண்சேவலை உயர்த்து வண்சிறை மயிற்பரி நடாத்தும் சேவகப் பெருமானை* - கடுங்குரல் எடுத்துக் கூவுகின்ற நெருப்பு நிறமாகிய உச்சிக் கொண்டையையுடைய வெள்ளைச் சேவலைக் கொடியாக உயர எடுத்து வளவிய சிறைகளையுடைய மயில் ஆகிய குதிரையை வாகனமாகச் செலுத்துகின்ற வீரனாகிய பெருமானை, *வேதபுரிவரும் இளஞ்சேயைப் புரக்க என்று* - வேதபுரியில் எழுந்தருளியிருக்கும் இளங்குமரனைக் காக்க என்று, *மால்நிறக் கடவுள் திருமறு மார்பில் நறவிரி வனத் துழாய்க் காடுமூடி* - மேகநிறத்தையுடைய தெய்வத்தின் (திருமால்) அழகிய மறுஅமைந்த மார்பின்கண் வாசனையோடு மலர்கின்ற அழகாகிய துளவக் காட்டினால் மூடப்பெற்று, *மாஇருள் வழங்குதன் திருமாளிகைக்கு அம்தண் மணிவிளக்கு இட்டுமுள் தாள் கான் நிறைக்கும் கமலம் வீட்டுக்கு* - பேரிருள் அடர்ந்த தனது திருமாளிகைக்கு அழகும் தட்பமும் உள்ள மணிவிளக்கு ஏற்றியும், முள்ளோடுகூடிய நாளத்தையுடையதாய வாசனையைச் செய்கின்ற தாமரையாகிய வீட்டுக்கு, *நெடுஇதழ் கதவம் திறந்து அளித்தும் காதன்மை காட்டும் கவுத்துவத்துடன் வந்த கன்னிகையை அஞ்சலிப்பாம்* - நீண்ட இதழ்களாகிய கதவைத் திறந்து கொடுத்தும் தனது அன்புடைமையைக் காட்டுகின்ற கவுத்துவ மணியுடன் தோன்றிய திருமகளைக் கைகூப்பி வணங்குவோம்(யாம்). (எ - று.)

(வி - ம்.) மால் - மேகம். மால்நிறக் கடவுள்-கொண்டல் வண்ணனாகிய திருமால். மறு - உத்தம இலக்கணமாகிய இது திருமால் மார்பில் இருப்பது; இதனை ஸ்ரீவத்ஸம் என்பர். மணி விளக்கு - இரத்தின தீபம், இரத்தின விளக்கு. இது கௌத்துவ மணியைக் குறித்தது. திருப்பாற்கடல் கடையும்போது தோன்றிய பல பொருள்களுள் கௌத்துவ மணியும் ஒன்று. அதன் பின் இலக்குமி தோன்றினள் என்க. (எ)

கலைமகள்

துறைபட்ட மறையவன் செங்நாப் படிந்துதன்
சுதைநிறஞ் சிதைவுறுமே
தொன்மறை கனிந்தூறும் அண்பல்நீ ரூறலில்
தூத்துகில் நனைப்புறுமே
கறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டெமது
நன்னெஞ் சேனக்குடிபுகும்
ஞானப் பிராட்டியைச் சொற்கடல் தெள்ளமுதை
நாத்தழும் பத்துதிப்பாம்
சிறைபட்ட தண்துறைச் சித்தாமிர் தப்பெருந்
தீர்த்தந் திளைத்தாடிய
செஞ்சுடர்க் கடவுளும் வெண்சுடர்க் கடவுளில்
தெள்ளமுத மயமாகலான்
உறைபட்ட சுதைநிலவோ டிளவெயிலும் அளவளாய்
உண்ணச்ச கோரம்வெஃகும்
ஓங்கெயிற் பரிதிபுரி முருகனைச் சண்முகத்
தொருவனைக் காக்கஎன்றே.

(சொ - ள்.) சிறைபட்ட தண்துறைச் சித்தாமிர்தம் பெரும் தீர்த்தம் திளைத்து ஆடிய - சிறைசெய்யப்பட்ட குளிர்ந்த துறையையுடைய சித்தாமிர்தம் என்னும் பெயரையுடைய பெரிய தடாகத்தில் மூழ்கின, செஞ்சுடர்க் கடவுளும் வெண் சுடர்க் கடவுளில் தெள்ளமுத மயம் ஆகலான்-சூரியனும் சந்தி ரனைப்போல் தெளிவாகிய அமிர்த உருவாதலால், உறைபட்ட சுதை நிலவொடு இளவெயிலும் அளவளாய் சகோரம் உண்ண வெஃகும் ஓங்குஎயில் பரிதிபுரி முருகனை - துளியாகிய அமுதம் போன்ற நிலவோடு இளவெயிலும் கலந்து சகோரப்புட்கள் உண்ண விரும்புகிற உயர்ந்த மதிலையுடைய பரிதிபுரமலையில் எழுந்தருளிய முருகவேளை, சண்முகத்து ஒருவனைக் காக்க என்று - ஆறு திருமுகங்களையுடைய ஒப்பற்றவனைக் காக்க வேண்டுமென்று, துறைபட்ட மறையவன் செங்நாப் படிந்துதன் சுதைநிறம் சிவப்பு உறுமே - பல துறைகள் பொருந்திய மறை பயின்ற பிரமனது சிவந்த நாவிற் படிந்து தனது வெண்நிறம் அழிந்து சிவப்புநிறம் பொருந்தாமலும், தொல்மறை கனிந்து

ஊறும் அண்பல் நீர் ஊறலின் தூதுகில் நனைப்பு உருமே- பழைமையாகிய வேதங்கள் முதிர்ந்து ஊறி வருகிற மேல்வாய்ப் பல்நீர் சுரத்தலால் வெள்ளாடை நனைவை யடையாமலும், நறைபட்ட வெண்தோட்டு நளினம் பொகுட்டு எமது நல் நெஞ்சு என குடிபுகும் ஞானப்பிராட்டியை - மணம் பொருந்திய வெள்ளிதழ்களையுடைய தாமரைப் பொகுட்டில் எமது நன் மனத்திற்போலக் குடிபுகாநின்ற ஞானநாயகியை, சொல் கடல் தெள் அமுதை நா தழும்பத் துதிப்பாம்-கலைக்கடலில் தோன்றிய தெளிவாகிய அமுதத்தை (கலைமகளை) நாவில் தழும்பு ஏறும்படி துதிபுரிவாம்; (எ - று.)

(வி - ம்.) துறை - பலபொருட்டுறைகள். அவை அற முதலாயின. செந்நா - செவ்விய நா. மன்பனீர் என்ற பாடத்திற் குத் தன் கணவனாகிய பிரமனின் பல்நீர் என்றுரைக்க. வெண் தோட்டு நளினம் - வெள்ளிதழ்த் தாமரை. பொகுட்டு - கொட்டை; இது கர்ணிகை என்பர். பிராட்டி - உபகார குண முள்ளவள். இதன் ஆண்பால்; பிரான். திருமகளைப் பாற்கடற் றெள்ளமுது என்றாற்போலக் கலைமகளைச் சொற்றெள்ளமுது என்றார். மிகுதியாகத் துதிப்போம் என்று குறித்தற்கு நாத்தழும் பேறத் துதிப்பாம் என்றார். சூரியன் வழிபட்ட தலமாதலின் பரிதிபுரம் என்ற பெயர் வழங்கும். சகோரம் - நிலாமுகிப்புள்; இது சந்திர கிரணத்தையே உண்டு உயிர்வாழ்வது.

சண்முகத்தொருவனைக் காக்க என்று சொற்கடற் றெள் ளமுதை நாத்தழும்பத் துதிப்பாம் என்று முடித்துக்கொள்க. (அ)

### சத்தமாதர்கள்

[சந்த விருத்தம்]

பயில்தரு முதுமறை நூலைத் தெரித்தவள்
பகைதொகு புரமெரி மூளச் சிரித்தவள்
பனிவரை பகநெடு வேலைப் பணித்தவள்
படுகடல் புகையெழ வார்விற் குனித்தவள்
எயிறுகொ டுழுதெழு பாரைப் பெயர்த்தவள்
எறிதரு குலிசம்வி டாமற் றரித்தவள்
இடுபலி கொளுமோர்க பாலக் கரத்தினள்
எனும்இவர் எழுவர்கள் தாளைப் பழிச்சுதும்

கயல்திரி சரவண வாவிக் கரைக்குரை
கழலொடு பரிபுரம் ஒலிட் டிடக்கட
களிறொடு களிறெதிர் மோதத் திசைத்திசை
கடுநடை யுளதகர் ஏறச் சமர்த்தனை
முயல்தரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு
முழுமதி குறைமதி யாகத் துகிற்கொடி
முகில்தொடு தடமதில் வேதப் பதித்தனி
முதல்வனை அறுமுக வேளைப் புரக்கவே.

(சொ - ள்.) *கயல்திரி சரவண வாவிக் கரை குரைகழலொடு பரிபுரம் ஒலிட்டிடக் கடகளிறொடு களிறு எதிர்மோத - கயல்கள் திரிகின்ற சரவணப்பொய்கைக் கரையில் ஒலிக்கின்ற கழலுடனே சிலம்புகள் ஒலிக்க மதயானையோடு மதயானை எதிர்மோத, திசைதிசை கடுநடைஉள தகர்ஏறு அ சமர்த்தனை - திசைகள்தோறும் வேகமாகிய நடையுள்ள ஆட்டுக்கடாவின்மீது ஏறிய அவ் வல்லமையுள்ளவனை, முயல்தரு கறையொடு தேய்வுற்று இளைத்து ஒரு முழுமதி குறைமதியாக-முயற்கறையுடனே தேய்ந்து மெலிந்து ஒப்பற்ற நிறைநிலா பிறைச் சந்திரன் ஆகும்படி, துகிற்கொடி முகில்தொடு தடமதில் வேதப்பதி தனி முதல்வனை அறுமுகவேளைப் புரக்க - கொடியாடைகள் மேகத்தைத் தீண்டுகின்ற பெரிய மதில்சூழ்ந்த வேதபுரியில் வாழ்கின்ற ஒப்பற்ற முதல்வனை ஆறுமுகங்களையுடைய கந்தனைக் காக்கும் பொருட்டு, பயில்தரு முதுமறை நூலைத் தெரித்தவள் - பழகுதற்குரிய பழைய வேதநூலை உணர்த்தினவள் (அபிராமி), பகைதொகு முப்புரம் எரிமூளச் சிரித்தவள் - பகைகளாகக் கூடின முப்புரங்களில் நெருப்பு மூண்டு எரியும்படி நகைத்தவள் (மாகேஸ்வரி), மணிவரை பகநெடு வேலைப் பணித்தவள் - மணி தவழ்கின்ற கிரவுஞ்சகிரியானது பிளக்கும்படி நெடிய வேற்படையை ஏவினவள் (கௌமாரி), ஒலிகடல் புகைஎழ வளர்வில் குனித்தவள் - ஒலிக்கின்ற கடலில் புகை எழும்படி நெடிய வில்லை வளைத்தவள் (நாராயணி), எயிறுகொடு உழுது எழுபாரை பெயர்த்தவள் - கொம்பினால் தோண்டி ஏழுலகங்களையும் பேர்த்தவள் (வராகி), எறிதரு குலிசம் விடாமல் தரித்தவள் - எறிதற்குரிய வச்சிரத்தை இடையறாது தரித்திருப்பவள் (இந்திராணி), இடுபலி கொளும் ஓர் கபாலக் கரத்தினள்-இடுகின்ற பலி ஏற்கும் ஒப்பற்ற கபாலத்தை ஏந்திய கையையுடையவள் (காளி), எனும் இவர் எழுவர்கள் தாளைப் பழிச்சுதும்-என்று கூறப்படும் எழுவராகிய இவர்கள் பதங்களைத் துதிப்போம்; (எ - று.)*

(வி - ம்.) முயற்கறை - முயற்களங்கம்; இது சந்திரனிடத்துள்ளது. இதனை மான்களங்கம் எனவுங் கூறுப. 'சசி' என்பது சந்திரனுக்குப் பெயர். முயற் களங்கத்தையுடையவன் என்ற காரணத்தால் ஏற்பட்ட பெயர் அது. துகிற்கொடிபட்டுத் தேய்ந்து முழுமதி குறை மதியாகும் என்பது கருத்து. சசம் - முயல். இஃது உவமையாகு பெயராய் அது போன்ற கறையையுணர்த்தியது. பின் இறுதியிலுள்ள அம் கெட்டு இகர விகுதி பெற்று அதனையுடைய சந்திரனுக்காயிற்று. வேதங்கள் பூசித்தமையால் இத்தலம் வேதப்பதி எனப்படும், முதுமறை - பழைமையான வேதம். நெடுவேலைப் பணித்தவள் என்ற குறிப்பால் பனிவரை கிரவுஞ்ச மலையைக் குறித்தது. வேள் என்ற பெயர் மன்மதனைக் குறிப்பதாதலின் அறுமுகவேள் என்று முருகனைக் குறித்தார். அறுமுகவேளைப் புரக்க எழுவர் தாளைப் பழிச்சுதும் என்று முடிக்க. பழிச்சுதும்: தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று, தும் விகுதி காலங் காட்டியது.(க)

முப்பத்துமுக்கோடி தேவர்கள்

வேறு

முறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு
சோர்க்கத் தலத்தோடு சேடசய னத்தையும்
முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர்த
மக்குக் கொடுத்தானை மாதிரமோ ரெட்டையும்
இமைப்பொழு தினிற்பொடி படுத்தருள் கொடுக்கவல
சத்திக் கரத்தானை ஊதியமே னத்தனை
இருப்பினு நடப்பினு நினைப்பவர் இருக்களமர்
சித்தத் திருப்பானை ஆறிருபு யத்தனை
வெறுப்பொடு விருப்பினை அறுத்தவ ருளத்துமலர்
பத்மப் பதத்தானை வேதபுரி யிற்சின
விடைக்கொடி வலத்தினும் மடக்கொடி யிடத்துமுள
முக்கட் டிருத்தாதை யார்பணி குருக்களை
மறைக்கிழ வனைத்தலை புடைத்துல கனைத்தினையும்
ஒக்கப் படைத்தானை மூவிரு முகத்தனை
மருத்துவர் வசுக்கதிர் உருத்திரர் எனப்பொலியு
முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்கவே.

(சொ - ள்.) முறுக்குஉடை நறைசத தள திரு மலர்த் தவிசு சொக்கத் தலத்தோடு சேட சயனத்தையும் முடி தலை அடித்தலை பதித்து எதிர் துதித்தவர் தமக்குக் கொடுத்தானை - முறுக்கு அவிழ்ந்த வாசனையுள்ள நூற்றிதழ்களையுடைய அழகிய தாமரை மலர்ப்பீடத்தையும் மேலுலகத்துடன் அனந்தசயனத்தையும் தமது முடித்தலைகளைத் தன் திருவடியிற் பதித்தவர்களுக்கு அருள் செய்தவனை, மாதிரம்ஓர் எட்டையும் இறைப்பொழுதினில் பொடிபடுத்து அருள்கொடுக்கவல்ல சத்திக் கரத்தானை - எட்டுத் திசைகளையும் சிறிது நேரத்தில் நீறுசெய்து அருள் செய்யவல்ல வேற்கையனை, தனை ஊதியம்என இருப்பினும் நடப்பினும் நினைப்பவர் இருக்க எமர்சித்தத்து இருப்பவனை - தன்னைப் பெரும்பேறாக இருந்தாலும் நடந்தாலும் கருதுவோர் இருக்க எம்போல்வார் மனத்தில் இருப்பவனை, ஆறுஇரு புயத்தனை-பன்னிரு தோளனை, வெறுப்பொடு விருப்பினை அறுத்தவர் உள்ளத்து மலர் பத்மம் பதத்தானை - வெகுளி விழைவுகளை அறுத்தவரது மனத்தின்கண் மலர்கின்ற தாமரை அடிகளையுடையவனை, வேதபுரியில் சினம் விடைக்கொடி வலத்தினும் மடக்கொடி இடத்தும் உள்ள முக்கண் திருத்தாதையார் - வேதபுரியின்கண் கோபத்தையுடைய இடபக்கொடியை வலப்புறத்திலும் மடக்கொடியை இடப்புறத்திலும் அமைத்துள்ள மூன்று கண்களையுடைய திருத்தாதையாராகிய சிவபிரானுர், பணி குருக்களை - வணங்குதற்குரிய ஆசாரியனை, மறைக் கிழவனைத் தலைபுடைத்து உலகு அனைத்தையும் ஒக்கப் படைத்தானை - பிரமனைத் தலையிற் குட்டி உலக முழுதும் ஒக்கப் படைத்தவனை, மூவிரு முகத்தனை - ஆறு திருமுகங்களுடையவனை, மருத்துவர் வசு கதிர் உருத்திரர் எனப் பொலியும் முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்க - மருத்துவர்கள் இருவர், வசுக்கள் எண்மர் கதிர்கள் பன்னிருவர், உருத்திரர்கள் பதிஞெருவர் ஆக முப்பத்து மூவர் என்று சொல்லும்படி விளங்குகின்ற முப்பத்து முக்கோடி தேவர்களும் காத்தருள்க ; (எ - று.)

(வி - ம்.) முடித்தலை அடித்தலை பதித்துஎதிர் தமக்கு என்றது தன் திருவடியைத் துதித்த அடியார்க்கு. இறை-அற்பம், குறை. வெறுப்பொடு விருப்பினை அறுத்தவர்என்றது ஞானியரை. பணிகுருக்களை: வினைத்தொகைநிலைத்தொடர். கிழமை - உரிமை. மறைக்கிழவன் - வேதத்துக்கு உரியவனுன பிரமன். இருவர்-அச்சுவினி மருத்துக்கள். வசுக்கள் எண்மர்: அநலன், அகிலன், பராசகன் முதலியோர். ஆதித்தர் பன்னிருவர்-தாத்துரு, சக்கரன், அரியமான் முதலியோர். உருத்திரர் பதிஞெருவர் ; மாதேவன், அரன், உருத்திரன் முதலியோர். (கo)

## ௨. செங்கீரைப் பருவம்

*[செங்கீரைப்பருவம் ; அஃதாவது செங்கீரை ஆடும் பருவம்; இப்பருவத்தின்கண் நிகழும் செயல், ஒருகாலை மடக்கி ஒருகாலை நீட்டி இருகைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்த்து முகம் அசைய ஆடுதல். இஃது ஐந்தாம் மாதத்தில் நடைபெறும்.]*

*[ஆசிரிய விருத்தம்]*

இருக்கோ லிடும்பரி புரக்கோல மும்நுதலில்
இட்டபொட் டுஞ்சுட்டியும்
எரிமணிப் பட்டமுங் கட்டுபொன் அரைஞாணும்
இளஞாயி றுதயஞ்செயும்
உருக்கோல முஞ்சூழி யக்கொண்டை யும்முச்சி
உச்சியும் வாளிமுத்தும்
ஒள்ளொளி ததும்புங் குதம்பையுங் கண்டுகண்
டோடரிக் கண்களிக்கும்
மருக்கோல நீலக் குழற்றைய லாட்கரு
மருந்தாய் இருந்ததெய்வ
மகக்கோல மேமுதிர் கிழக்கோல மாய்க்குற
மடந்தைமுன் நடந்துமற்றத்
திருக்கோலம் உடனொரு மணக்கோல மானவன்
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே.

*(சொ - ள்.) இருக்கு ஒலிடும் பரிபுரக் கோலமும் நுதலில் இட்டபொட்டும் சுட்டியும் எரிமணிப் பட்டமும் கட்டு பொன் அரைஞாணும் - வேதங்கள் ஒலிக்கின்ற பாதசரத்தின் அழகினையும் நெற்றியில் இட்ட பொட்டினையும் சுட்டியினையும் விளங்குகின்ற நெற்றிப் பட்டத்தினையும் கட்டப்பட்ட பொன் அரைநாணினையும், இளஞாயிறு உதயம்செய்யும் உருகோலமும்-இளஞ்சூரியன் உதிப்பதுபோன்ற வடிவழகினையும், சூழியக்கொண்டை*

யும் உச்சி முச்சியும் வாளிமுத்தும் ஒள்ஒளி ததும்பும் குதம்பை யும் கண்டு கண்டு - சூழியக்கொண்டையினையும் முச்சியினையும் உச்சியினையும் வாளிமுத்தினையும் ஒட்பமாகிய ஒளி துளும்பு கின்ற குதம்பையினையும் பார்த்துப் பார்த்து, ஓடுஅரி கண் களிக் கும் மருகோலம் நீலம்குழல் தையலாட்கு அருமருந்தாய் இருந்த தெய்வமகக்கோலமே - செவ்வரி படர்ந்த கண் களிக்கின்ற வாசனை அழகு நீலநிறம் என்பவற்றை இயற்கையாக உடைய கூந்தலையுடைய உமாதேவிக்கு அரிய மருந்தாயிருந்த தெய்வத் தன்மை பொருந்திய பிள்ளைக்கோலமே, முதிர்கிழக் கோலமாய் குறமடந்தை முன்நடந்து அத்திருக்கோலமுடன் மணக்கோலம் ஆனவன் - முதிர்ந்த கிழக்கோலமாகிக் குறப்பெண்ணுக்கு எதிரே நடந்து அந்தத் திருக்கோலத்தோடு ஒப்பற்ற மணக் கோலமும் கொண்டவனே !, செங்கீரை ஆடிஅருள்-; செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள செங்கீரை ஆடிஅருள்- இறந்து ஒழிகின்ற சிறு தெய்வங்கட்கு மணவாளனாகத் திகழ் பவனே ! செங்கீரை ஆடிஅருள் ; (எ - று.)

(வி - ம்.) இருக்கு - வேதம். ஒலிடும் - ஓலமிடும் என்ற சொல் ஒலிடும் எனத் தொக்கது. இளஞாயிறு - உதயசூரியன். பொட்டு - திலகம். முச்சி - மூவகை மயிர்முடியில் ஒன்று. உச்சி - உச்சிக்கொண்டை. வாளிமுத்து - காதணியின் முத்து. குறமடந்தை - குறச்சிறுமி (வள்ளிநாயகி). மணக்கோலம் - திருமணவடிவம். மணக்கோலம் ஆனவன்: அண்மைவிளி. மண வாளன் செங்கீரை யாடியருள் எனவும் தெய்வங்கள் மணவாளன் எனவும் முடித்துக்கொள்க.

செங்கீரைப் பருவமாவது செங்கீரை ஆடும் பருவம். இதனை இப்பருவத்தில் 'வீரச் சுவையுண்டு' என்ற பாடலில் விளங்கக் காண்க.

(க)

கும்பாதி காரியம் எனத்தமை நிமித்தமாக்
கொண்டஅகி லாண்டங்களின்
குழுவுக்கு மற்றுத்தம் இருவர்குறி யுந்தலைக்
கூடினுந் தான்தனக்கச்
சோம்பாதி அன்மைக் கனைத்துந்தன் மயமெனுஞ்
சுருதிகரி யாவைத்தும்அச்
சுருதிக்கும் எரிசுடர்ப் பருதிக்கும் இரவிகுல
தோன்றற்கும் இளவலுக்கும்

சம்பாதி யோடுநற் சடாயுவுக் கும்பெருந்
தவமுனிவர் எழுவருக்கும்
தண்அளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த
தம்பிரான் திருமேனியிற்
செம்பாதி யுங்கொண்ட தையனு யகிகுமர
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாளா
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) கும்பாதி காரியம் எனத் தமை நிமித்தமாக் கொண்ட அகிலாண்டங்களின் குழுவுக்கு-குடம் முதலிய காரியங்கள் (தமக்குக் குயவனை நிமித்தகாரணமாகக் கொண்டாற்போல) சிவ சத்திகளை நிமித்தகாரணமாகக் கொண்ட அகிலாண்ட கோடிக்கு, தம் இருவர் குறியும் தலைக்கூடினும் தனக்கு அச் சொம் பாதி அன்மைக்கு அனைத்தும் தன் மயம் எனும் சுருதி சுரிஆ வைத்தும் - தம் இருவர் குறிகளும் கலந்திருந்தாலும் தனக்கு (அங்கத்திற்கு) அந்தப் பொருள் பாதியேல் அங்ஙனம் வராமைக்கு எல்லாம் தன்மயம் என்கின்ற வேதங்களைச் சான்ருகக் கொண்டிருந்தும், அச்சுருதிக்கும் எரிசுடர்ப் பரிதிக்கும் இரவிகுலத் தோன்றற்கும் இளவலுக்கும் சம்பாதியோடு நற்சடாயுவுக்கும் பெருந்தவ முனிவர் எழுவருக்கும் - அந்த வேதங்களுக்கும் எரிகின்ற கிரணங்களையுடைய சூரியனுக்கும் சூரிய குலத் தோன்றலாகிய இராமனுக்கும் அவர் தம்பியாகிய இலக்குமணனுக்கும் சம்பாதியுடன் நல்ல சடாயுவுக்கும் பெருந் தவத்தினையுடைய ஏழு முனிவர்கட்கும், தண்அளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த தம்பிரான் திருமேனியில் செம்பாதியும் கொண்ட தையல்நாயகி குமர - குளிர்ந்த அருள்புரிந்த தீராத வினைகளைத் தீர்த்தருளின சிவபெருமானது திருமேனியில் சரி பாதியையும் பகிர்ந்துகொண்ட தையல்நாயகிக்குப் புதல்வனே!, செங்கீரை ஆடி அருள்—; செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள செங்கீரை ஆடிஅருள்-; (எ - று.)

(வி - ம்.) கும்பாதி காரியம் - குட முதலிய காரியங்கள்- குடம் முதலிய என்றது பானை, மிடா முதலியவற்றை. தம்மை என்றது சிவசக்திகளை. அகிலம் - எல்லாம். அண்டம் - உலகு. குறி-அடையாளம். குழு-கூட்டம். குறியாவன ஆண்குறி பெண் குறி. இவற்றை வடநூலார் ஸ்திரிவிச்சை ஸங்கம் என்பர். தலைக் கூடல் ஒருசொல்; சேர்தல். சுருதி-கேட்டறிதற்பாலது. வேதம்

எழுதிப் படித்தபோது செவியிற் கேட்டறிதற்பாலதாகலான் இதற்கு இப்பெயர் வழங்கும். அநூருவின் மக்கள் சம்பாதி சடாயு, இவ்விருவரும் மேனிலையைக் காணவேண்டும் என்னும் எண்ணத்தோடு பறந்து சூரிய மண்டலத்தைக் குறுகுதலும் சடாயுவானவன் சூரியவெப்பம் ஆற்ருது கீழே சாய அதுகண்ட மூத்தவனுன சம்பாதி தன் சிறகுகளால் மூடினமையால், இவன் சிறகுகளும் எரிந்துபோயின. அப்பொழுது அந்தரத்து நிலை பெருது சம்பாதி கடலிலும், சடாயு தண்டகவனத்திலும் விழுந் தனர். பின் சம்பாதி சீதை இலங்கையிலிருக்கும் விபரத்தை அநுமனுதியர்கட்குத் தெரிவித்த நற்கருமத்தால் சிறகுகள் முளைக் கப்பெற்றதும் தன் இருப்பிடமாகிய இமயமலையை அடைந் தனன். தவமுனிவர் எழுவர் - அத்திரி, ஆங்கிரசன், அகத்தியன், புலத்தியன், வசிட்டன், கோதமன், மரீசி என்பவர். கும்பாதி காரியங்கள், மண் தண்ட கலசங்கள் குலாலன் என்பவற்றை முறையே முதற்காரணம் துணைக்காரணம் நிமித்த காரணங்க ளாகக் கொண்டாற்போல, அகிலாண்டங்களின் குழு, ஐம்பூதம், மாயை, சங்கரன் என்பவற்றை முறையே முதற் காரண துணைக் காரண நிமித்தகாரணங்களாகக் கொண்டு விரிந்துள்ளதென்பது கருத்து. செம்பாதி - ஒத்தபங்கு, அநூரு - ஊரு இல்லாத வன். இஃது காலில்லாதவன்ஆன அருணனுக்கு ஒரு பெயர்.

தையனுயகி குமர! தெய்வங்கள் மணவாள செங்கீரை யாடியருள் என்று முடித்துக்கொள்க. (உ)

கைக்கேட்டும் எட்டுக் களிற்றைப் பிடித்தக்
களிற்ருேடு முட்டவிட்டுக்
ககனவட் டத்திஞேடு பருதிவட் டத்தைவனை
திகிரிவட் டத்திலிட்டு
மூக்கட் டிருத்தாதை கோதண்டம் எனவைத்த
வேதண்ட மாதண்டமா
மூதண்ட கூடந்த்ரி கூடத் தோடுஞ்சாடி
மூரிக் கடாசலம் அவன்
மேய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட
மேகபட லத்துமொண்டு
மேல்கட லினைப்பெருங் கீழ்கடல் புகப்பெய்து
விளையாட்டு வீரர்களோடும்

திக்கெட்டும் விளையாடு சேனா பதிக்கடவுள்
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) கைக்கு எட்டும் எட்டுக் களிற்றைப் பிடித்து அக்களிற்றோடு முட்டவிட்டு - கைக்கு எட்டுகின்ற எட்டுத் திசை யானைகளையும் பிடித்து அந்த யானைகளுடனே முட்டவிடுத்து, ககனவட்டத்தினொடு பருதிவட்டத்தை வளைதிகிரி :வட்டத்தில் இட்டு - ஆகாய மண்டலத்தோடு சூரிய மண்டலத்தை உலகை வளைந்திருக்கின்ற சக்கரவாளமலையில் இட்டு, முக்கண் திருத் தாதை கோதண்டம் என வைத்த வேதண்டம் மாதண்டம் ஆ - மூன்றுலகங்களையுடைய திருத்தந்தையார் தமது வில்லாகக் கொண்ட மேருமலையைப் பெரிய தண்டாயுதமாகக் கொண்டு, மூது அண்ட கூடம் திரிகூடத்தோடும் சாடி - வான் முகட்டினை யும் திரிகூடமலையையும் மோதி, மூரி கடாசலம் அவன் மெய்க்கு இட்ட சட்டைக்கு நேரிட்ட மேகபடலத்தை மொண்டு - வலிமையுள்ள யானையானது அவனது திருமேனியில் இட்ட சட்டைக்கு ஒப்பாகிய மேகத்திரளினின்றும் நீரை முகந்து, மேல் கடலினைப் பெருகீழ் கடல்புகப் பெய்து விளையாடு வீரர்க ளொடும் திக்கு எட்டும் விளையாடு சேனாபதிக் கடவுள் - மேற் கடலைப் பெரிதாகிய கீழ்க்கடலிற் புகவிட்டு விளையாடுகின்ற வீரரோடு எட்டுத் திசைகளிலும் விளையாடுகின்ற சேனாபதிக் கடவுளே! செங்கீரை ஆடி அருள்-; செத்துப்.....ஆடி அருள்-; (எ - று.)

(வி - ம்) அட்டதிக்கு யானைகள் ; ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம். இவை கிழக்கு முதலிய எட்டுத் திக்குகளிலும் நிலைபெற்றிருப்பன. கடாசலம் - கட + அசலம், மதமலை; யானை. படலம் - கூட்டம். சேனாபதிக் கடவுள் : அண்மைவிளி.

சேனாபதிக் கடவுள்! செங்கீரை யாடியருள், தெய்வங்கள் மணவாள! செங்கீரை யாடியருள் என்று முடித்துக் கொள்க.(௬)

மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேயமான்
மணிமார்பு வாணிக்குநான்
மறைமுதலி செந்நாத் தடந்தைய லாளோடும்
வயித்தியக் கடவுளார்க்கு

மெய்விரிக் குந்தொண்டர் உள்ளத் தடத்தினேடு
வேதச் சிரங்கடுப்ப
வேதபுரி கந்தபுரி புள்ளூ ரெனப்பொலியும்
வேளூர திசைதிசைதோறும்
கைவகுத் தரமகளிர் குரவையாட் டயர்பெருங்
கயிலைத் தடம்சாரலும்
கனகா சலத்தும்வளர் இமையா சலத்தும்உயர்
கந்தமா தனவெற்பெனத்
தெய்வதப் பிடியோடும் விளையாடு மழகளிறு
செங்கீரை ஆடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான் மணிமார்பு (கடுப்ப) - அஞ்சனக் கண்களையுடைய திருமகளுக்குச் சக்கராயுதமுடையவனுகிய திருமாலின் கௌத்துவமணி அணிந்த மார்பை நிகர்க்கவும், வாணிக்கு நான்மறை முதலி செந்நாத்தடம் (கடுப்ப) - நாமகளுக்குப் பிரமனது சிவந்த நாவினிடத்தை நிகர்ப்பவும், தையலாளொடும் வைத்தியக் கடவுளார்க்கு மெய் விரிக்குந் தொண்டர் உள்ளத் தடத்தினெடு வெதச்சிரம் கடுப்ப - தையல்நாயகியொடு வைத்தியநாதருக்கு வாய்மையாகிய மலர் விரிந்த அடியார்களுடைய உள்ளத்தடத்துடன் வேதமுடியை நிகர்க்கவும், வேதபுரி கந்தபுரி புள்ளூர் எனப் பொலியும் வேளூர - வேதபுரி கந்தபுரி புள்ளூர் என்று சொல்லப்படுகின்ற வேளூரனே, உயர் கந்தமாதனவெற்பு என திசை திசைதொறும் கைவகுத்து - உயர்ந்த கந்தமாதன மலையிற்போல எல்லாத் திக்குகளிலும் கைவகுக்கப்பட்டு, அரமகளிர் குரவையாட்டு அயர் பெரு கயிலைத் தடஞ்சாரலும் - தெய்வமகளிர் குரவையாடலைச் செய்கின்ற பெரிய கைலைமலைச் சாரலிலும், கனக அசலத்தும் வளர் இமைய அசலத்தும் தெய்வதம் பிடியோடு விளையாடு மழகளிறு - மேரு மலையிலும் வளர்கின்ற இமயமலையிலும் தெய்வயானையோடும் விளையாடுகின்ற இளங்களிறே! செங்கீரை ஆடியருள்; (எ - று.)

(வி - ம்) கமலவல்லி - தாமரையில் தங்கியிருக்கும் கொடி போன்றவள்; இலக்குமி. வல்லி : உவமையாகு பெயர். உள்ளத்

*தைத் தடம்என உருவகித்திருப்பதால் மெய்யை மலராகக் கொள் வது சிறந்தது. தடம் - பொய்கை. கைவகுத்தல் - ஒழுங்காக வகுக்கப்படுதல். கை-ஒழுக்கம். குரவை - கைகோத்தாடும் ஒரு விளையாட்டு. குரவைக் கூத்தே கைகோத்தாடல் என்ப. கனகா சலம், இமாசலம்: தீர்க்கசந்தி; கனக+அசலம், இம+அசலம் என்று பிரிக்க. கனகம் - பொன். இமம் - பனி, அசலம் - மலை, சலித்தலில்லாதது - அசைவற்றது, சலம் - சலிப்பது, அசைவது. மழகளிறு: அண்மைவிளி.*

*மழகளிறு செங்கிரையாடியருள், தெய்வங்கள் மணவாள! செங்கீரையாடி யருள் என்று முடித்துக் கொள்க.* (௪)

மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததனி
வில்லியார் இளவலோடும்
விதிமுறை வணங்கச் சடாயுபுரி யில்கருணை
வெள்ளமென வீற்றிருக்கும்
ஆனே றுயர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும்
அருமருந் தாகிநின்ற
ஆதிப் பிரானென்று மும்முதற் கடவுளும்
அடித்தொழும் பாற்றமற்றக்
கூனேறு மதிநுதல் தெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவள்தொண்டைவாய்த்
தேனூறு கிளவிக்கு வாய்ஊறி நின்றவன்
செங்கீரை ஆடியருளே
சேத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே.

**(சொ - ள்.)** *மீன்ஏறு குண்டு அகழி தீவாய் மடுத்த தனி வில்லியார் இளவலோடும் விதிமுறை வணங்க - மீன்கள் மிகுந்த ஆழமாகிய கடலில் நெருப்பையிட்ட திருமால் தம்பியோடும் விதி முறையாக வணங்க, சடாயுபுரியில் கருணை வெள்ளமொடு வீற்றிருக்கும் - புள்ளிருக்கு வேளூரில் அருட்பெருக்கோடு வீற்றிருக்கின்ற, ஆன்ஏறு உயர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும் அரு*

மருந்தாகி நின்ற ஆதிபிரான் என்று - விடையைக் கொடியாக உயர்த்தின தந்தைக்கும் தாய்க்கும் அரிய மருந்தாய் நின்ற முதற் கடவுளே என்று, மும்முதற் கடவுளும் அடித்தொழும்பு ஆற்ற- மூவராகிய முதன்மைக் கடவுளரும் திருவடித் தொண்டு செய்ய, அ கூன்ஏறு மதிநுதல் தெய்வக் குறப்பெண் குறிப்பு அறிந்து - அந்த வளைவு மிகுந்த இளம்பிறை போன்ற நெற்றியையுடைய தெய்வத்தன்மை பொருந்திய வள்ளிநாயகியின் குறிப்புணர்ந்து, அருகு அணைந்து உன் குற்றேவல் செய்யப் பணிக்க எனக் குறை யிரந்து - அவளருகிற் சென்று உன் குற்றேவல் நான் செய்யும்படி ஏவுக என்று குறைகூறி வேண்டி, அவள் தொண்டை வாய்த் தேன் ஊறு கிளவிக்கு வாய்ஊறி நின்றவன் - அவளது கோவைக் கனிபோலும் வாயினின்றும் புறப்படுகின்ற தேன் சுரக்குஞ் சொற் கேட்பதற்கு வாய்ஊறி நின்றவனே!, செங்கீரை ஆடி அருள்-; செத்து........அருள்-; (எ - று.)

(வி - ம்.) மீன்ஏறு என்பதில் ஏறுதல் மிகுதிப் பொருள் தந்து நின்றது. குண்டு - ஆழம். அகழி-அகழப்பட்டது, கடல். இது சகரபுத்திரர்களால் தோண்டப்பட்ட காரணத்தினால் சாகரம் என்றும் அழைக்கப்படும். தொடுகடல் என்பதும் இது பற்றியே. தீவாய்மடுத்த என்பதற்குத் தீக்கடவுளின் வாய்க்கு இரையாக்கின என்றுரைப்பினுமாம். இது சேதுபந்தன காலத்தில் வருணன்மீது வாளிதொடுத்த காலம் நிகழ்ச்சியுற்றது. கோதண்டதீட்சா குருவாதலால் இராமனைத் தனிவில்லியார் என்றார். இளவல் - தம்பியாகிய இலக்குமணன். சடாயு பூசித்த தலமாதலால் சடாயுபுரி என்று பெயர் வழங்கும். ஆன்ஏறு - விடை, இடபம். ஆனேறுயர்த்திட்ட ஐயன் - சிவபெருமான். அம்மை - உமாதேவி. அருமருந்து - அருமையாகிய தேவாமிர்தம். ஆதிப்பிரான்: அண்மைவிளி. முழுமுதற் கடவுள் என்றது அயன், அரி, அரன் ஆகிய முத்தேவர்களை. இவர்கள் முறையே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் சிவபெருமான் ஆணையிற் செய்வர். மற்று - வினைமாற்றின்கண் வந்தது. கூனேறுமதி - எட்டாம்நாட் பிறையை. குற்றேவல் - குறுமை+ஏவல், சிறுதொண்டு. பணிக்க என எனற்பாலது பணிக்கெனத் தொக்கு வந்தது. தேன் மிகுதியாக உண்ணும் மலைவாழ் குறவர் குடியிற் பிறந்தவள் வள்ளி. ஆதலால், அவள் சொல்லும் தேன்போன் றினிக்கும் சொல்லாயிற்று. இனிய தேன் முக்கனி முதலியவற்றை ஒருவர் காணின் அவர் வாயில் நீரூறல் உலகியல்பாதலால், 'தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்' என்றார். நின்றவன்: அண்மைவிளி. நின்றவன்செங் கீரையாடியருள் மணவாள! செங்கீரையாடி யருள் என்று முடித்துக்கொள்க.

(௯)

### வேறு

செம்பொன் அடிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை அரைஞாண் அரைமணி யொடுமொளி
திகழரை வடம்ஆடப்
பைம்பொன் அசும்பிய தொந்தியொ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடப்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காதும் அசைந்தாடக்
கட்டிய சூழியும் உச்சியும் முச்சிக்
கதிர்முத் தொடும்ஆட
அம்பவ ழத்திரு மேனியும் ஆடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை.

*(சொ - ள்.) அடிசெம்பொன் சிறு கிண்கிணியோடு சிலம்பு கலந்துஆட - திருவடியில் செம்பொன்னாற் செய்யப்பட்ட சிறிய கிண்கிணிகளோடு சிலம்புகளும் கூடியாடவும், திருஅரை அரைஞாண் அரைமணியோடும் ஒளிதிகழ் அரைவடம்ஆட - திரு அரையில் அரைநாணும் உடைமணியோடும் ஒளிவிளங்குகின்ற அரைவடங்களும் ஆடவும், பைம்பொன் அசும்பிய தொந்தியொடும் சிறுபண்டி சரிந்துஆட - பசும்பொன்போல் ஒளிவீசுகின்ற தொந்தியுடனே சிறு வயிறும் சரிந்தாடவும், பட்ட நுதற் பொலி பொட்டொடு வட்டச்சுட்டி பதிந்துஆட - பட்டத் தோடுகூடிய நெற்றியில் விளங்குகின்ற பொட்டுடனே வட்ட வடிவமான சுட்டியும் பதிந்துஆடவும், கம்பி விதம்பொதி குண்டலமும் குழைக்காதும் அசைந்துஆட - கம்பிவகைகள் அமைந்த குண்டலமும் குழையோடுகூடிய காதும் அசைந்தாடவும், கட்டிய சூழியும் முச்சியும் கதிர்முத்தொடு ஆட - கட்டப் பட்ட சூழியும் உச்சியும் ஒளியுள்ள முத்துக்களோடும் ஆடவும், அம்பவளத் திருமேனியும் ஆடிட - அழகிய பவளம்போன்ற திரு*

*மேனி ஆடவும், செங்கீரை ஆடிஅருள்-, ஆதிவைத்தியநாத புரிகுகன் செங்கீரை ஆடிஅருள் - முதன்மையாகிய வைத்திய நாதபுரியில் எழுந்தருளியுள்ள குகனே!, செங்கீரை ஆடியருள்க; (எ - று.)*

*(வி - ம்.) செம்பொன் அடி - சிவந்த பொன் போன்ற அடியில் எனவும் பொருள் கொள்ளலாம்; செம்பொனடிச்சிறு கிண் கிணியோடு சிலம்பு கலந்தாட எனத் தொடங்கிக் கட்டிய சூழியும் உச்சியுமுச்சிக் கதிர்முத்தொடும்ஆட என முடித்தலால், இச்செய்யுள் பன்னிருவர்கள் பாதாதிகேச நுகர்ச்சி என்றறிக. பாதாதி கேசமாகிய உறுப்புக்கள் யாவும் ஆட என முற்கூறிப் பின், திருமேனியும் ஆட என்றமையின் திருமேனியும் என்ற உம்மை இறந்தது தழீஇயது. வைத்தியநாதன் என்ற சிறப்புத் திருப்பெயர்பெற்ற சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலமாதலின் வைத்தியநாதபுரி என்று பெயர் வழங்கும். குகன் - முருகன், அண்மைவிளி. வைத்தியநாத புரிக்குகன் செங்கீரை யாடியருள் என்று முடித்துக்கொள்க. (சு)*

குழையோடு குழையெதிர் மோதிக் காதணி
குண்டலம் வெயில்வீசக்
குமுத இதழ்க்கனி வாயமு தூறிய
குறுநகை நிலவூர
முழுவயி ரப்புய வலயமும் முன்கை
முதாரியும் ஒளிகால
முத்தம் அரும்பி யெனக்குறு வேர்வு
முகத்தி லரும்பியிடப்
புழுதி அளைந்த பசுந்திரு மேனிப்
பொங்கொளி பொங்கியெழப்
புண்டரி கங்கண் மலர்ந்த விழிக்கடை
பொழிஅருள் கரைபுரள
அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை.

(சொ - ள்.) குழையொடு குழைஎதிர் மோதிக் காதணி குண்டலம் வெயில்வீச - குழையொடு குழைஎதிரே தாக்கிக் காதில் அணிந்த குண்டலங்களும் ஒளிவீச, குமுதஇதழ்க் கனி வாய் அமுது ஊறிய குறுநகை நிலவூர - செவ்வல்லி போன்ற இதழோடுகூடிய கனிவாயினிடத்து அமுதம் சுரந்த சிறுநகையாகிய நிலா விரிய, முழுவயிரப் புயவலயமும் முன்கை முதாரியும் ஒளிகால - முழுவயிரத்தாற் செய்யப்பட்ட வாகுவலயமும் முன்கையில் அணிந்த முதாரியும் ஒளியை உமிழ, முத்தம் அரும்பி எனக் குறு வேர்வு முகத்தில் அரும்பியிட - முத்துக்கள் அரும்பினாற்போலச் சிறுவேர்வை முகத்தில் அரும்ப, புழுதி அளைந்த பசுந்திருமேனிப் பொங்குஒளி பொங்கியிட - புழுதி படிந்த பசிய திருமேனியில் பேரொளியானது விளங்கி எழ, புண்டரிகங்கள் மலர்ந்த விழிக்கடை பொழிஅருள் கரைபுரள - தாமரை மலர்கள்போல மலர்ந்த கடைக்கண்கள் பொழிந்த அருள் வெள்ளமானது கரைபுரண்டோட, அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி ஆடுக செங்கீரை - அழகு பழுத்து முதிர்ந்த இளங்கனியே செங்கீரை ஆடுக, ஆதிவைத்தியநாத புரிக்குகன் ஆடுக செங்கீரை -; (எ - று.)

(வி - ம்.) முதாரி - முன்கையில் அணிதற்குரியதோர் அணி வகை. கரைபுரள என்றதனால் அருள் என்பதற்கு அருள் வெள்ளம் என்றுரைக்கப்பட்டது. கனி என்பது உவமையாகு பெயராய்க் குகனை யுணர்த்தியது. குழை என்பது காதணிகளில் ஒன்று. கனி, குகன் என்பன அண்மை விளியாதலின் இயல்பாயின.

அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி செங்கீரையாடியருள் வைத்தியநாத புரிக்குகன் செங்கீரையாடியருள் என்று முடித்துக் கொள்க. (எ)

விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய
மெல்இதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்தழு தலறிஉன்
மென்குரல் கம்மாமே
கரைவுறும் அஞ்சன நுண்துளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புன லருவி படிந்துடல்
கருவடி வுண்ணாமே

உருவ மணிச்சிறு தோட்டில் உதைந்துநின்
ஒண்பதம் நோவாமே
ஒருதாள் உந்தி எழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்
தருள்பொழி திருமுகம் அசைய அசைந்தினி
தாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை.

(சொ - ள்.) *விரல்சுவை உண்டு கனிந்து அமுது ஊறிய மெல்இதழ் புலராமே - விரல்கள் சுவைக்கப்பட்டுப் பழுத்து அமுதம் சுரந்த மெல்லிய உதடுகள் உலர்ந்துவிடாமலும், விம்மி பொருமி விழுந்து அழுது அலறி உன் மென்குரல் கம்மாமே - விம்மியும் பொருமியும் கீழேவிழுந்து அலறியும் உனது மென்மையான குரல் கம்மாமலும், கரைவுறும் அஞ்சன நுண்துளி சிந்திக் கண்மலர் சிவவாமே - கரைகின்ற மையின் நுண்ணிய துளிகள் சிந்திக் கண்களாகிய தாமரை மலர்கள் சிவக்காமலும், கலுழ்கலுழிப் புனல்அருவி படிந்து உடல் கருவடிவு உண்ணுமே - அழுகின்ற கலங்கல் நீராகிய அருவியில் தோய்ந்து திருமேனி கருவுருக் காட்டாமலும், உருவ மணிச்சிறு தொட்டில் உதைந்து நின் ஒண்பதம் நோவாமே - நிறமுள்ள மணிகள்பதித்த சிறு தொட்டிலை உதைத்து உனது அழகிய திருஅடிகள் நோவாமலும், ஒருதாள் உந்தி எழுந்து இருகையும் ஒருங்கு பதித்து நிமிர்ந்து - ஒருதாளை ஊன்றி எழுந்து இரண்டு கைகளையும் ஒருங்கே நிலத்தே பதித்துத் தலைநிமிர்ந்து, அருள்பொழி திருமுகம் அசைய அசைந்து இனிது ஆடுக செங்கீரை - கருணை சொரிகின்ற திருமுகங்கள் ஆறும் அசைய அசைந்து செங்கீரை ஆடியருள்க. ஆதி வயித்திய நாதபுரிக் குகன்ஆடுக செங்கீரை - முதன்மையான வைத்தியநாதபுரம் என்ற நகரில் எழுந்தருளியிருக்கின்ற குகப்பெருமானே செங்கீரை ஆடியருள்க ; (எ - று.)*

(வி - ம்.) *இதழ் - உதடு. கம்மல் - குரல் அடைத்தல். அழும்போது சிந்திய அஞ்சனத்தைக் கரைத்துக்கொண்டு வருகிற கண்ணீர் ஆதலால் கருவடிவுண்ணும் என்பது பெறப்பட்டது. கருவடி வுண்ணுமே என்றதனுல் குமரவேள் செந்நிறத்தன் என்பது பெறப்பட்டது. "ஒருதாள் உந்தி எழுந்திருகையும் ஒருங்கு பதித்து நிமிர்ந்து அருள்பொழி திருமுகம் அசைய அசைந்து இனிது ஆடுக செங்கீரை" என்ற இவ்வடிகள் செங்கீரை யாடலின் முறையைத் தெரிவிப்பனவாம்.*

*புலராமே என்பது போன்றவை எதிர்மறை வினையெச்சங்கள். வைத்தியநாதபுரிக்குகன் ஆடுக செங்கீரை என்று முடிக்க.*

வேறு

கும்பம தக்களி யானைஇ ரண்டே ஒன்றேமைக்
 கொண்டல்வி ழிக்கயன்மீனும்இ ரண்டே கொண்டேகிச்
சம்பர னைப்பொரு சேவகன் வந்தான் வந்தான்முற்
 சண்டைகோ ளற்கென நேர்வரு பெண்பால் அன்பாயே
அம்பவ ளக்கோடி யேவளர் கொம்பே யென்றேநீ
 அன்றுபு னத்துயிர் சோர்வது கண்டே முன்போதுங்
கம்பம தத்தர்ச கோதர செங்கோ செங்கீரை
 கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை.

*(சொ - ள்) கும்பமதக் களியானை இரண்டே - கும்பம் போன்ற மத்தகத்தையுடைய மதம்மிக்க யானை இரண்டும், மைக்கொண்டல் ஒன்று - கரிய மேகம் ஒன்றும், விழிகள் மீனும் இரண்டே - விழித்தலையுடைய கயல்மீன்களிரண்டும், கொண்டு ஏகி சம்பரனை பொருசேவகன் - கொண்டுவந்து சம்பரனைப் பொருது வென்ற வீரன் ஆனவன், முன்சண்டை கொளற்கு வந்தான் வந்தான்என - எதிரே நின்று போர் செய்யவந்தான் வந்தானென்று சொல்ல, நேர்வரு பெண்பால் அன்பால் - எதிரே வந்த பெண்ணினிடத்தில் அன்புகொண்டு, அம்பவளக் கொடியே வளர்கொம்பே என்றே-அழகாகிய பவளக்கொடியே வளர்கின்ற பூங்கொம்பே என்று சொல்லிக்கொண்டே, அன்று புனத்து நீ உயிர்சோர்வது கண்டு - அந்நாளில் தினைப்புனத்தில் நீ உயிர் தளர்வது கண்டு, முன்போதும் கம்பமதத்தர் சகோதர - உனக்கு எதிரே வந்த கட்டுத்தறியில் கட்டப்பெறுகின்ற மதயானை வடிவினராகிய விநாயகருக்கு உடன்பிறந்தவனே!, செங்கோ - செங்கீரை (செங்கீரையாடி யருள்க), கந்தபுரிக் கருணாநிதி- கந்தபுரி என்னும் வைத்தீஸ்வரன் கோவிலில் எழுந்தருளிய அருட்செல்வமே, செங்கோ செங்கீரை-; (எ - று.)*

*(வி - ம்) கும்பமதக் களியானை இரண்டென்றது இருதனத்தை. மைக்கொண்டல் ஒன்றேஎன்றது-கருநிறம் பொருந்திய மேகம்போன்ற கூந்தலை. விழிக்கயல் மீனும் இரண்டே என்றது கண்களை; கண்கள் கயல்மீன் போறலின். சம்பரனைப் பொரு சேவகன் என்றது மன்மதனை. மன்மதன் சம்பரன் என்ற அசுரனை வென்றதால் சம்பராரி என்ற பெயரும் உடையவன். வள்ளி*

*நாயகி தங்கருத்துக்கு இணங்காமையால் வாட்டமுறுவ தொழித்தற்கு மூத்த நாயனார் யானையுருக்கொடு வந்தாராதலால், "நீ அன்று புனத்துயிர் சோர்வது கண்டே முன்போதும் கம்பமதத்தர்சகோதர !" என்றார். கருணைநிதி - அருட்செல்வம், அண்மைவிளி. கொண்டே அச்சம்பரன் என்றிருப்பின் பொருந்தும். (கூ)*

திங்கள்நு தற்றிரு மாதோடு நின்றே மன்றாடும்

செங்கண்வி டைக்கொடி யோனருள் கன்றேஒன்றேயாய்

எங்களு ளத்தமு தூறுக ரும்பே அன்பாளர்க்

கின்பம ளிக்குமெய்ஞ் ஞானம ருந்தே எந்தாயின்

கொங்கலர் மைக்குழல் வாழ்பொறி வண்டே வண்டூதும்

கொந்தள கக்குற மான்வளர் குன்றே என்றோதும்

கங்கைம கட்கொரு கான்முளை செங்கோ செங்கீரை

கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை.

(சொ - ள்.) *திங்கள் நுதல் திருமாதோடு நின்று - பிறை போன்ற நெற்றியையுடைய சிறந்த உமையோடு நின்று, மன்றாடும் செங்கண் விடைக் கொடியோன் அருள்கன்றே - தில்லையம்பலத்தில் ஆடுகின்ற சிவந்த கண்களையுடைய இடபத்தைக் கொடியாய் உயர்த்தவனாகிய சிவபெருமான் பெற்றருளிய கன்றே, ஒன்றே ஆய எங்கள் உள்ளத்து அமுது ஊறும் கரும்பே - ஒரு பொருளேயாகி எங்கள் மனத்திலே அமுதம் சுரக்குங் கரும்பே !, அன்பாளர்க்கு இன்பம் அளிக்கும் மெய்ஞ்ஞான மருந்தே - அன்புடையவர்க்கு இன்பத்தை உதவுகின்ற உண்மையான அறிவமுதமே!, எம் தாயின் கொங்குஅலர் மைக்குழல் வாழ்பொறி வண்டே - எம் தாயாகிய உமாதேவியின் கரிய கூந்தலில் வாழ்கின்ற புள்ளிகளையுடைய வண்டே !, வண்டு ஊதும் கொந்தளகக் குறமான் வளர் குன்றே - பூங்கொத்துக்கள் அணிந்த அளகபாரத்தையுடைய குறமான் வளர்ந்தருளிய குன்றமே !, என்று ஓதும் கங்கை மகட்கு ஒருகான்முளை - என்று அழைக்கின்ற கங்காதேவிக்கு ஒரு புதல்வனே !, செங்கோ செங்கீரை-, கந்தபுரிக் கருணாநிதி செங்கோ செங்கீரை-;* (எ - று.)

(வி - ம்.) *உமையவள் காண மன்றில் நின்று ஆடியதால் "மாதொடு நின்று மன்றாடும்" என்றார். அன்றியும் சிவமும் சத்தியும் ஒன்று என்று அங்ஙனம் கூறினர் எனவுங் கொள்ளலாம். செங்கண் விடைக்கொடியோன் என்பதை ஒருபெயராகக் கொள்க. கான்முளை : அண்மைவிளி.* (கo)

## ௯. தாலப் பருவம்

*[தாலப்பருவம் - தாலாட்டைக் கவனிக்கும் பருவம், தாலாட்டு - நாவசைப்புப் பாடல். தாலாட்டையேல் தாலாட்டையேல் என்னும் அடுக்கு, ஓ உடன்கூடி தாலேலோ என இணைந்தும் தாலோ என மரூஉ ஆகியும் வந்தது.]*

பில்கும் பசுந்தேன் அசும்பிருந்த
　　பின்தாழ் அளகத் தரமகளிர்
பேதைக் குறும்பு விளையாடும்
　　பேரா யத்துச் சிறுமருங்குற்
கோல்குங் கொடிபோய் நுடங்கியிட
　　ஓங்கும் பளிக்கு நிலாமுற்றத்
துயர்சூ ளிகையின் மரகதத்தின்
　　ஒளிகால் வீசத் தெளிவிசும்பிற்
பல்குஞ் சுரபி தரங்கநெடும்
　　பாகீ ரதியின் கரைகிளைத்த
பசும்புல் லெனச்செக் நாவளைக்கும்
　　பைம்பொன் தலங்கள் பலகோடி
மல்குஞ் செல்வக் கந்தபுரி
　　வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
　　மணியே தாலோ தாலேலோ.

(சொ - ள்.) *பில்கும் பசுந்தேன் அசும்பு இருந்த பின்தாழ் அளகத்து அரமகளிர் - சிந்துகின்ற பசிய தேன் கசிந்துகொண்டிருக்கின்ற பின்னே தொங்குகின்ற அளகத்தையுடைய தெய்வப் பெண்கள், பேதைக் குறும்பு விளையாடும் பேர் ஆயத்துச் சிறு மருங்குற்கு - அறியாமையானே குறும்பாக விளையாடுகின்ற பெரிய மகளிர் கூட்டத்தின் சிறிய இடைக்கு, ஒல்கும் கொடிபோய் நுடங்கியிட ஓங்கும் பளிக்கு நிலாமுற்றத்து - தோற்கின்ற பூங்கொடிகள் சென்று அசையா நிற்றலானும், உயர்ந்த பளிங்கினாற் செய்யப்பட்ட நிலாமுற்றத்தில், உயர்சூளிகையின் மரகதத்தின் ஒளிகால் வீச - உயர்ந்த சிகரத்தில் மரகதத்தின் ஒளி வீசுதலானும்,*

தெளிவிசும்பில் பல்கும் சுரபி தரங்கநெடும் பாகீரதியின் கரை கிளைத்த - தெளிந்த விண்ணுலகத்தில் பரவிய தெய்வப் பசுக்கள் அலைவீசுகின்ற நெடிய கங்கையினது கரையில் செழித்திருக் கின்ற, பசுபுல் எனச் செந்நா வளைக்கும் - பசிய புல் என்று நினைத்துச் சிவந்த நாவினால் வளைக்கின்ற, பைம்பொன் தலங்கள் பலகோடி - பசும் பொன்னாற் செய்த மாடங்கள் பல கோடி, மல்கும் செல்வக் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ- நிறைந்த செல்வப் பெருக்கமைந்த கந்தபுரி வாழ்வோனே தாலோ தாலேலோ, மலையாள் வயிறுவாய்த்த முழுமணியே தாலோ தாலேலோ - மலைமகளாகிய பார்வதி வயிற்றிற் பிறந்த சிறந்த இரத்தினமே தாலோ, தாலேலோ; (எ - று.)

(வி - ம்.) அசும்புதல் - கசிதல். பின்தாழ் - பின்னல் ஆகத் தாழ்ந்தமை என்றும் பொருள்கொள்ளலாம். முழு மணி - தோளாமணி. மேல்மாடத்துப் பசுங்கொடிகளின் நுடக் கத்துச் சாயலும் மரகதத்தின் சாயலும் பொன் உலகத்திற் சென்றுதோன்ற அவற்றை அங்குள்ள காமதேனு பசும்புல் எனக் கருதிச் செந்நா வளைக்கும் என்பது கருத்து. இதனால் அத் திருப்பதியின் செல்வப்பெருக்குத் தோன்றிற்று. வாழ்வு: தொழி லாகு பெயர், செல்வம் என்று கொள்ளின் கருவியாகு பெயராம். வாழ்வே மணியே தாலேலோ என்று முடிக்க. பின் - பின்னல்: முதனிலைத் தொழிற்பெயர் ஆகக் கொண்டு சடை எனவும் பொருள் கொள்ளலாம். (க)

தொடுக்குந் தொடைவெண் துகிற்கொடிகள்
தொடுநீர்ப் பரவை முகம்புழுங்கத்
தோன்றும் பரிதி மணித்திண்தேர்
தூண்டுங் கலின வாம்பரியை
முடுக்குஞ் சுடர்ப்பொன் தலத்திழைத்த
முழுநீ லத்தி னெழுகோளியின்
முழுகுங் கடவுள் மால்யானை
முகிலில் தோன்ற அகலிடநின்
றடுக்குங் களிறென் றரமகளிர்
ஐயுற் றிடத்தன் வெளிறுமுடம்
பளறு படிந்த தெனக்கங்கை
யாற்றுப் பசும்பொன் அசும்புபுனல்

மடுக்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ.

(சொ - ள்.) *தொடுக்கும் தொடைவெண் துகிற்கொடிகள் தொடுநீர்ப் பரவை முகம் புழுங்க - தொடுக்கப்பட்ட வரிசையாகிய வெண்கொடிச் சீலைகள் தோண்டப்பட்ட நீரினையுடைய கடலினது முகம் வெதும்ப, தோன்றும் பரிதி மணித்திண்தேர் தூண்டும் கலின வாம்பரியை-தோன்றுகின்ற சூரியனது அழகிய வலிய தேரைச் செலுத்துகின்ற கடிவாளம் பூட்டின தாவிச் செல்கின்ற குதிரைகளை, முடுக்குஞ் சுடர்ப் பொற்றலத்து இழைத்த முழு நீலத்தின் ஒழுகு ஒளியின் மூழ்கும் - தாக்கி விரைவுபடுத்தற்கு இடமாகிய ஒளியையுடைய பொன் மாளிகையில் இழைக்கப்பட்டிருக்கிற முழுநீல இரத்தினத்தின் ததும்புகின்ற ஒளியில் மூழ்குகின்ற, கடவுள் மால்யானை முகிலின் தோன்ற - தெய்வத்தன்மையுள்ள பெரிய யானையானது மேகம் போலத் தோன்ற, அகலிடம் நின்று அடுக்கும் களிறு என்று - மண்ணுலகத்தினின்றும் வந்த யானை என்று, அரமகளிர் ஐயுற்றிட - தெய்வப் பெண்கள் ஐயமடைய (அதுகண்டு அவ்யானை) தன் வெளிறும் உடம்பு - தன் வெளுத்த உடம்பானது, அளறு படிந்தது என கங்கையாற்றுப் பசும்பொன் அசும்புபுனல் மடுக்கும் - சேறு படிந்திருக்கின்றது என்று நினைத்து கங்கையாற்றின் பசும்பொன் போலத் ததும்புகின்ற நீரில் குளிக்கின்ற, செல்வக் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ-; மலையாள் வயிறு வாய்த்த முழுமணியே தாலோ தாலேலோ-; (எ - று,)*

(வி - ம்.) *கடவுள் மால்யானை - கடவுட் டன்மையுற்ற பெரிய யானை, ஐராவதம். இஃது இந்திரனுக்குரிய பட்ட யானை; நான்கு கொம்புகளை யுடையது. மூகம் - இடம். மணி-மணிகள் கட்டின. வாவும் என்பது வாம் என இடைதொக்கு வந்தது. தன் என்றது ஐராவதமாகிய தனது என்க. அளறு-கருஞ் சேறு. இச் செய்யுளும் மேலைச் செய்யுள்போல் செல்வப் பெருக்கைக் குறிப்பது.* (உ)

தீற்றுஞ் சுதைவெண் ணிலவெறிப்பத்
திரள்மா மணிகள் வெயில்விரிக்குஞ்
செம்பொன் தலத்துப் பேரமர்க்கட்
சிறியார் நறிய அகிற்புகையிட்

டாற்றுங் குழற்காட் டினைப்புயலென்
றுடு மயில்கண் டம்பவளத்
தரும்பு நகையைச் சகோரப்புள்
அருந்த விரிந்த முழுநகைவிண்
டூற்று நிலவுக் கிந்துசிலை
யொளிர்மா ளிகையுஞ் சூளிகையும்
உருகிப் பெருகுங் கலுழிவெள்ளம்
உவரோ டுவரிக் கடற்புலவு
மாற்றுங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ.

(செ - ள்.) *திற்றும் சுதைவெள் நிலவு எறிப்பத் திரள் மாமணிகள் வெயில் விரிக்கும் - பூசப்பட்ட சுண்ணச் சாந்தானது வெள் நிலா வீசக் கூட்டமாகிய பெரிய மாணிக்கங்கள் ஒளியைப் பரப்புகின்ற, செம்பொன் தலத்துப் பேர் அமர்க்கண் சிறியார் நறிய அகிற்புகை இட்டு - செம்பொன்னாற் செய்யப்பட்ட மேன் மாடத்தில் பெரிய போர் செய்கின்ற கண்களையுடைய சிறுமியர் நறுமணமுள்ள அகிற் புகையை ஊட்டி, ஆற்றும் குழற்காட் டினைப் புயல் என்று ஆடும் மயில் கண்டு அம்பவளத்து அரும்பு நகையார் - புலர்த்துகின்ற கூந்தற் காட்டை மேகம் என்று (எண்ணி) ஆடுகின்ற மயில்களைப் பார்த்து அழகிய பவளம் போலும் வாயிடத்துத் தோன்றுகின்ற சிறு நகையை, சகோரப் புள் அருந்த விரிந்த முழுநகை விண்டு - சகோரப் பறவை உண்ணப் பரந்த முழு நகையானது விண்டு, ஊற்றும் நிலவுக்கு இந்து சிலை ஒளிர் மாளிகையும் சூளிகையும் - பரந்து ஊற்றுகின்ற நிலாவுக்குச் சந்திரக்காந்தக் கல்லைப் பதித்த ஒளி விளங்குகின்ற மாடங்களினின்றும் மேல்மாடங்களினின்றும், உருகிப் பெருகும் கலுழி வெள்ளம் உவரோடு உவரிக் கடற்புலவு மாற்றுங் கடவுட் கந்தபுரி வாழ்வே-உருகிப் பெருக்கெடுக்கின்ற கலங்கல் வெள்ளமானது உவர்ப்புடைய கடலினது உவர்ப்போடு புலால் நாற்றத்தையும் ஒழிக்கின்ற தெய்வத்தன்மையுள்ள கந்தபுரிச் செல்வமே! தாலோ தாலேலோ-; மலையாள் வயிறுவாய்த்த முழு மணியே தாலோ தாலேலோ-; (எ - று.)*

(வி - ம்) அமர்க் கண் - அமர்த்தகண், இது பெயரடியாகப் பிறந்த வினை, ஆகப் "பண்டறியேன் கூற்றென்பதனை இனி யறிந்தேன், பெண்டகையால் பேரமர்க் கட்டு" என்ற திருக் குறட்குப் பரிமேலழகர் உரைத்த உரையால் அறிக. இட்டு - ஊட்டி. மயிர்ச்செறிவு தோன்றக் குழற்காடு என்றார். "திண் ணிய நெஞ்சப்பறவை சிக்கக் குழற்காட்டிற் கண்ணி வைப்போர் மாயம் கடக்கும்நாள் எந்நாளோ" என்ற மேலோர் செய்யுளும் காண்க. மேகத்தைக் கண்டாடும் மயில், குழற்காட்டை மேகம் என்று கொண்டு ஆடிய தென்க. (கூ)

கிளைக்குஞ் சகரர் தோட்டபெருங்
கிடங்கென் றிடங்கர் மாஇயங்கும்
கீழ்நீ ரழுவக் குண்டகழிக்
கெழுமு புனல்தெண் டிரைமேய்ந்து
திளைக்குங் கமஞ்சூல் நெடும்புயலைச்
சிறுகட் பெருங்கைப் பகடென்றோர்
செங்கட் களிறு பிளிறநிமிர்
திகிரி கிரியென் றிவர்ந்துடலம்
இளைக்கும் படிவிண் தொடநிவந்த
எழிற்பொற் புரிசை விண்டுபதத்
தேறும் எணி பொன்தருவுக்
கிடுவே லியுமா யேழுலகும்
வளைக்குங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ.

(சொ - ள்.) கிளைக்கும் சகரர் தொட்ட பெருங்கிடங்கு என்று இடங்கர்மா இயங்கும் - நெருக்கமான சகரபுத்திரர் தோண்டின பெரிய கடல் என்று எண்ணி முதலைகள் ஆகிய விலங்குகள் சஞ்சரிக்கின்ற, கீழ்நீர் அழுவம் குண்டு அகழி கெழுமு புனல் தெண்திரை மேய்ந்து - கீழ்நீரையுடைய பள்ள மாகிய ஆழ்ந்த அகழியில் நிறைந்த நீரின் தெளிவாகிய அலைகளை மேய்ந்து, திளைக்கும் கமஞ்சூல் நெடும்புயலை சிறுகண் பெருங்கை பகடென்று - நெருங்கின நிறைவாகிய சூலினையுடைய பெரிய

மேகத்தைச் சிறிய கண்களையும் பெரிய கையினையும் உடைய யானை என்றெண்ணி, ஓர் செங்கண் களிறு பிளிறுமிமிர் திகிரிகிரி என்று இவர்ந்து-ஒப்பற்ற செங்கண் யானைகள் முழங்க உயர்ந்த சக்கரவாளமலை என்று கருதி ஏறி, உடலம் இளைக்கும்படி விண் தொட நிவந்த எழில்பொன் புரிசை - உடம்பு மெலியும்படி ஆகாயத்தைத் தீண்டும்படி உயர்ந்த அழகான பொன்மதிலானது, விண்டு பதத்து ஏறும்ஏணி பொன் தருவுக்கு இடுவேலியும் ஆய்-ஆகாயமாகிய இடத்திற்கு ஏறத்தகுந்த ஏணியும் அழகிய கற்பகத் தருவுக்கு இட்ட வேலியும் ஆகி, ஏழ்உலகும் வளைக்கும் கடவுள் கந்தபுரி வாழ்வே - ஏழுலகங்களையும் வளைக்கின்ற தெய்வத்தன்மை அமைந்த கந்தபுரிச் செல்வமே!, தாலோ தாலேலோ-. மலைமகள் வயிறு வாய்த்த முழுமணியே தாலோ தாலேலோ-; (எ - று.)

(வி - ம்.) இடங்கர்மா: இருபெயரொட்டுப் பண்புத் தொகை. கீழ்நீர் - ஊற்றுநீர். கமஞ்சூல் - முதிர்ந்த சூல். சிறுகண் பெருங்கை: முரண்தொடை. விண்டுபதம் - ஆகாயம். அகழியைக் கடலென்று கருதி நீருண்ணு மேகங்களை ஆங்கு நின்ற யானை தன்னினமென்று எண்ணிப் பிளிற, அவ்வொலி கேட்ட அம்மேகங்கள் அடுத்துள்ள அம்மதிலைச் சக்கரவாளகிரி என்று நினைத்து விரைவில் ஏறும். அம்மதில் வானத்திலேற வைத்த ஏணியும் கற்பகத்தருக்களுக்கு வேலியும்போலத் தோன்றும் சிறப்புடையது கந்தபுரி எனக் காண்க. (௬).

சோலைப் புறமுப் புடைக்கனிகள்
தூக்கு ம்டத்தெங் கிமையவர்தந்
தோன்றல் திருவோ லக்கத்துத்
தோகை மயிலின் நடங்குயிற்றும்
ஏலக் கருங்கோந் தளஅளகத்
திளமா தருக்கு முதிர்வேனில்
இளைப்பாற் றுதற்குத் தாற்றேடுஞ்சேவ்
விளநீர் கோடுப்ப ஈற்றுளைந்த
காலப் புயலின் முகந்துடைக்குங்
கமுகு பழுக்காய்ப் பவளமுடன்
கதிர்முத் திட்டுச் செழும்பாளைக்
கற்றைக் கவரி புடையிரட்டும்

மாலைப் பழனப் பரிதிபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே யதாலோ தாலேலோ.

(சொ - ள்.) சோலைப்புறம் முப்புடைக் கனிகள் தூங்கு முடத்தெங்கு இமையவர்தம் தோன்றல் திருஓலக்கத்துத் தோகை மயிலின் நடம்குயிற்று - சோலைகளில் தேங்காய்களைத் தாங்கிய வளைவாகிய தென்னை மரங்கள் தேவமன்னனது திருவோலக்கத்தில் கலாபத்தையுடைய மயில்போல நடனம் செய்கிற, ஏலக் கருங்கொந்தளம் அளகத்துள்ள மாதருக்கு முதிர்வேனில் இளைப் பாற்றுதற்கு-மயிர்ச்சாந்து அணிந்த கரிய சுழற்சியாகிய கூந்தலையுடைய இளம் பெண்களுக்கு முதிர்வேனிற் பருவத்தின் மெலிவைத் தீர்ப்பதற்கு, தாற்றொடும் செவ்விளநீர் கொடுப்ப-தாறுகளோடும் செவ்விளநீர்களைக் கொடுக்க, ஈற்றுளைந்த காலப் புயலின் முகம் துடைக்கும் கமுகு - இறுதிக் காலத்தில் வருந்தின கார்கால மேகத்தின் முகத்தைத் துடைக்கிற கமுகு மரங்கள், பழுக்காய்ப் பவளமுடன் கதிர் முத்திட்டுச் செழும்பாளைக் கற்றைக் கவரி புடையிரட்டும்-பழுத்த காயாகிய பவளத்தோடு, ஒளியுள்ள முத்துக்களை விரித்துச் செழித்த பாளைகளாகிய கற்றைச் சாமரங்களைப் பக்கத்தில் அசையா நிற்கிற, மாலைப் பழனப் பரிதிபுரி வாழ்வே - வரிசையாக வயல்கள் சூழ்ந்த பரிதி புரி வாழ்வே, தாலோ தாலேலோ -, மலையாள் வயிறு வாய்த்த முழுமணியே தாலோ தாலேலோ -; (எ - று.)

(வி - ம்.) முப்புடை - முப்புடைப்பு. புடைப்பினை மொத்தி என்பர். திருவோலக்கம். பெருஞ்சவை - பேரவை. மயிலின் - இன் : ஐந்தாவது ஒப்புப்பொருளது. தாறு - குலை. கமுகம் பழங்கள் பவளம்போலச் சிவந்திருத்தலும் அதன்பாளை முத்துப்போல விரிந்து வெண்மையாயிருத்தலும் உண்மையான் "கமுகு பழுக்காய்ப் பவளமுடன் கதிர் முத்திட்டு" என்றார். ஆலைப்பழனம் எனின் கரும்பு வயல் ஆம். (௫)

வேறு

மாலி மயத்து மடப்பிடி பெற்று
வளர்த்த இளங்களிறே
மழவிடை யேதிரு மாமடி கட்டேன
வைத்த கவுத்துவமே

மூல மெனக்குல நான்மறை யோலிடு
முழுமுத லேமூவா
முக்கட் கனிகனி யுஞ்சுவை யேதனி
முத்திக் கொருவித்தே
காலை யிளங்கதி ருக்கெதிர் முதிருங்
கதிர்சேம் பவளமுடன்
கதிர்முத் திட்டுவ ணங்கக் கன்னல்கோல்
கமுகுகோ லெனவளரும்
சாலி வயல்தமிழ் வேளூ ரடிகேள்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ.

(**சொ - ள்**) *மால் இமயத்து மடப்பிடி பெற்று வளர்த்த இளங்களிறே - பெரிய இமயமலையிற் பிறந்த இளம் பிடியானது ஈன்று வளர்த்த யானைக் கன்றே, மறுவிடையே திருமாமடிகட்கென வைத்த கவுத்துவமே - இளமை பொருந்திய இடபமே, திருமாமனுகிய அடிகட்கென்று வைத்த கவுத்துவமணியே, மூலமெனக் குலநால் மறைஒலிடும் முழுமுதலே - எல்லாப் பொருள்களுக்கும் மூலகாரணனென்று மேலான நான்கு வேதங்களும் முறையிடுதற்குரிய முழுமுதற் பொருளே, மூவா முக்கட் கனி கனியும் சுவையே தனிமுத்திக் கொருவித்தே - அழியாத முக்கண்ணையுடைய கனியினிடத்துப் பழுத்த சுவையே ஒப்பற்ற வீட்டுக்கு ஒரு காரணனே, காலையிளங் கதிருக்கெதிர் முதிரும் கதிர் செம்பவளமுடன் - காலையில் தோன்றுகிற இளஞ்சூரியனுக்கு எதிராக முதிர்கின்ற நெற்கதிர்கள் ஆகிய செம்பவளங்களோடு, கதிர் முத்திட்டு வணங்கக் கன்னல்கொல் கமுகுகொல் என வளரும் - ஒளியுள்ள தனது முத்துக்களையும் இட்டு வணங்க கரும்போ, கமுகோ என்று (கண்டோர்) சொல்லும்படி வளராநின்ற, சாலிவயல் தமிழ் வேளூர் அடிகேள் - செந்நெல் வயல் சூழ்ந்த தமிழ் வளருகின்ற வேளூரடிகளே, தாலோ தாலேலோ-, சங்கத்தமிழின் தலைமைப் புலவா - தமிழ்ச் சங்கத்தின் தலைமைப் புலவனே, தாலோ தாலேலோ -; (எ - று.)*

(**வி - ம்.**) *மால் இமயம் - பெரிய இமயம் ; மேகம் பொருந்திய இமயமலை, இமயத்து மடப்பிடி என்றது உமாதேவியை,*

பிடி : உவமையாகுபெயர். மாமடிகள் - திருமால். ஓலிடும் - ஓலம் இடும் என்பது தொக்குவந்தது. (சு)

கருமுகி லுக்கரி தாம்அடி வாரம்
கண்டிரு பறவைகள் தம்
கண்களி பொங்கவோர் பறவை முடித்தலை
காணா துட்குவரப்
பொருபுன லருவித் தலையின் மிசைத்தவழ்
புதுமதி நிலவொழுகப்
புள்ளூரிற்பொலி வெள்ளி மலைக்கண்
பொன்மலை யைக்குவவுக்
குருமணி வயிரப் புயமெனும் எட்டுக்
குவடுஞ் சுவடுபடக்
குத்திப் பொருமிரு கோடு படைத்ததோர்
கூந்தற் பிடிபெற்றுத்
தருமொரு தோந்தித் தந்திக் கிளையாய்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ.

(சொ - ள்.) கருமுகிலுக்கு அரிது ஆம் அடிவாரம் கண்டு இரு பறவைகள் தம் கண்களி பொங்க - கரிய மேகத்துக்கும் காண்பதற்கு அரிதாகிய அடிவாரத்தை இரண்டு பறவைகள் பார்த்துத் தம் கண்கள் களிப்புமிக, ஓர் பறவை முடிதலை காணாது உட்குவர - ஒரு பறவையானது முடித்தலையைக் காணமாட்டாமல் நாணிவர, பொருபுனல் அருவித் தலையின்மிசை தவழ் புதுமதி நிலவு ஒழுக - அலைமோதுகின்ற கங்கைநீரருவியையுடைய உச்சிமீது தவழ்கின்ற புதுமதியின் நிலவெறிக்க, புள்ளூரில் பொலி வெள்ளி மலைக்கண் பொன்மலையை - புள்ளூரில் விளங்குகின்ற வெள்ளி மலையிடத்துள்ள பொன்வரையை, குவவு குருமணி வயிரம் புயம்எனும் எட்டுக் குவடும் சுவடுபட - திரட்சியாகிய நிறமுள்ள அழகிய வயிரத்தை நிகர்த்த தோள்கள் என்னும் எட்டுக்குவடும் தழும்புபட, குத்திப் பொரும் இருகோடு படைத்தது ஓர் கூந்தற் பிடி பெற்றுத்தரும் - குத்திப் போர்செய்தற்குரிய இரண்டு கொம்பு படைத்ததாகிய ஒப்பற்ற கூந்தலையுடைய பெண்யானை

ஒன்று ஈன்றளித்த, ஒரு தொந்தி தந்திக்கு இளையாய் - ஒப்பற்ற தொந்தியையுடைய யானைமுகனுக்கு இளையவனே!, தாலோ தாலேலோ, சங்கத் தமிழின் தலைமைப் புலவா - (மதுரையிற் கூடிய) சங்கத்தின் வளர்ந்த தமிழின் தலைமைப் புலவனே! தாலோ தாலேலோ - ; (எ - று.)

(வி - ம்,) கருமுகில் - திருமால். இருபுட்கள் - சம்பாதி, சடாயு. ஓர் பறவை - பிரமன். திருமாலும் காண்பதற்கரிய அடிகளைச் சம்பாதியும் சடாயுவும் காணவும் பிரமன் முடியைக் காணாதிருப்பவும் தலையில் மதிநிலவு ஒழுகும்படி புள்ளூரில் வெள்ளிமலைக்கண் வீற்றிருந்த பொன்மலை என்றது சிவபெருமானை யுணர்த்தியது, கூந்தற்பிடி - உமாதேவி. எட்டுக் குவடும் சுவடுபடக் குத்திப்பொரும் இருகோடு படைத்ததோர் கூந்தற் பிடி என்றதனால் இறைவியின் ஆற்றலும் தொனிக்கின்ற துணர்க. தந்தி - யானை, தந்தத்தையுடையது. (எ)

உண்ணெகிழ் தொண்ட ருளத்திருள் சிந்திட
ஒளிவிடு முழுமணியே
உயர்மறை நூற்கலை முடிவின் முடிந்திடும்
ஒழுகொளி மரகதமே
விண்ணொடு மண்ணை விழுங்கி அருட்கதிர்
விரியும் இளஞ்சுடரே
மெய்ப்புலன் மேய்ந்து சமைந்ததோர் வீட்டை
விளக்கும் விளக்கொளியே
புண்ணிய நாறுமோர் பெண்கனி கனியும்
புனித நறுங்கனியே
புள்ளூ ரெனவெம துள்ளத் தடநிறை
புத்தமு தக்கடலே
தண்ணொளி பொங்கிய கருணா நிதியே
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ.

(சொ - ள்.) உள்நெகிழ் தொண்டர் உளத்து இருள் சிந்திட ஒளிவிடு முழுமணியே! - மனம் உருகுகின்ற அடியாரது உள்ளத்திலுள்ள அறியாமையாகிய இருள் ஒழிய ஒளிவிடுகின்ற

முழு மாணிக்கமே !, உயர்மறை நூல்களை முடிவின் முடிந்திடும் ஒழுகு ஒளி மரகதமே! - உயர்ந்த மறையும் நூலும் கலையும் ஆகிய இவற்றின் இறுதியில் முடியப்பெற்ற ஒழுகாநின்ற ஒளியையுடைய மரகதமே !, விண்ஒடு மண்ணை விழுங்கி அருட் கதிர் விரியும் இளஞ்சுடரே ! - விண்ணுடனே மண்ணையும் உட் கொண்டு அருளாகிய கிரணங்கள் விரிக்கின்ற இள ஞாயிறே !, மெய்ப்புலன் மேய்ந்து சமைந்தது ஓர் வீட்டை விளக்கும் விளக்கு ஒளியே ! - உண்மையாகிய அறிவினால் மேயப்பெற்று அமைந்ததாகிய ஒப்பற்ற மன வீட்டினை விளங்கச் செய்கின்ற விளக்கின் ஒளியே !. புண்ணியம் நாறும்ஓர் பெண்கனி கனியும் புனித நறும்கனியே ! - புண்ணியம் பரிமளிக்கின்ற ஒரு பெண் கனி மனங்கனிந்து தந்த தூய்மையான நல்ல பழமே !, புள்ளூர் என எமது உள்ளத்திடம் நிறை புத்தமுதக் கடலே ! - புள்ளூரிற் போல எமது மனமாகிய இடத்தில் நிறைந்த புதிய அமுதக் கடலே !, தண்ஒளி பொங்கிய கருணைநிதியே தாலோ தாலேலோ- தட்பம் ஆகிய ஒளிமிகுந்த அருட்செல்வமே தாலோ தாலேலோ, சங்கத் தமிழின் தலைமைப் புலவா தாலோ தாலேலோ !; (எ - று.)

(வி - ம்.) முடிவில் என்பதனை மறைநூல் என்பவற்றின் இறுதியில் அமைத்து வேதத்தின் முடிவிலும் ஆகமாதிகளாகிய நூல்களின் முடிவிலும் அறுபத்து நான்கு கலைகளின் முடிவிலும் எனப் பொருள் விரிக்க. 'மெய்ப்புலன் மேய்ந்து சமைந்ததோர் வீட்டை' என்பதற்கு உண்மை யறிவாற் புலன்களை வென் றமைந்த உளமாகிய ஒப்பற்ற வீட்டை என்றுரைத்தலும் ஆம். புண்ணியம் நாறுமோர் பெண்கனி என்றது உமையை. புது அமுதம் என்பது புத்தமுதம் என விரிந்தது. (அ)

### வேறு

தோலாத முத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வேர் அறத்தொடு வேலா நூலா நூலோதும்
சீலாம லைக்கோடி பாலா கீலா மேலாகும்
தேவாதி பற்கோரு தேவா ஓவா தேகூவும்
காலாயு தக்கோடி வீறு ஏறு வேறேறும்
காபாலி பெற்றகு மாரா வீரா பேராளா
சேலார்வ யற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனாப திப்பெரு மாளே தாலோ தாலேலோ.

(பொ - ள்.) தோலாத முத்தமிழ் நாவா-தோல்வியடையாத மூன்றுவகையான தமிழ் பயின்ற நாவை யுடையவனே !, மூவா மாஆம் அச் சூர்வேர் அறத்தொடு வேலா - கெடாத மாமர உருவாய் வந்த அந்தச் சூரபன்மனது மூலம் அற்றுப் போகும்படி தொட்ட வேற்படையை யுடையவனே !, நூலா நூல் ஓதும் சீலா ! - நூற்கப்படாத மறை நூல்களிற் கூறப்பட்ட ஒழுக்கத்தையுடையவனே !, மலைக்கொடி பாலா இலா-மலைமகளுக்குப் பாலகனே ஒளியுருவனே !, மேலாகும் தேவாதிபற்கு ஒரு தேவா-மேன்மையாகிய தேவ அதிபனுக்கு ஒப்பற்ற தேவனே, ஓவாதே கூவும் கால்ஆயுதக் கொடி வீறு - இடைவிடாமற் கூவுகின்ற சேவற்கொடியையுடைய மேன்மையுள்ளவனே !, ஏறு ஏறுஏறும் காபாலி பெற்ற குமாரா ! - ஒருவரும் ஏறுத ஏற்றின்மேல் ஏறுகின்ற சிவபெருமான் பெற்ற குமாரனே !, வீரா பேர்ஆளா - வீரனே பிரபலனே !, சேல்ஆர் வயல்குரு கூரா ! - சேல்மீன்கள் நிறைந்த வயல்சூழ்ந்த புள்ளூரனே !, தாலோ தாலேலோ, சேனாபதிப் பெருமாளே தாலோ தாலேலோ - சேனாபதியாகிய பெருமானே தாலோ, தாலேலோ - ; (எ - று.)

(வி - ம்.) முத்தமிழ் நாவன் - அகத்தியற்கு முத்தமிழ் அறிவுறுத்த நாவினை யுடையவன். நூலா நூல் - ஒருவரால் நூற்கப்படாத நூல். இஃது ஒருவரால் இயற்றப்படாத வேதத்தை யுணர்த்திற்று. இதனை எழுதப்படாத காரணத்தால் எழுதாக் கிளவி என்பர். இலம் - ஒளி. ஏறுஏறு என்றது ஊர்தியாக மக்களாற் கொள்ளப்படாதது. கரிபரிகளைப்போல இயற்கையான வாகனமன்று விடை என்பதை யுணர்த்தியது. அன்றியும் திருமாலை விடையாகக் கொண்டதனால் அங்ஙனம் கூறினர் எனக் கொள்ளினும் அமையும். கபாலகரனாதலால் சிவனைக் காபாலி என்றார். பெருமான் - பெருமையுடையவன். இது பெருமாள் என மரீஇயது. (கூ)

ஊனாயு யிர்க்குயிர் ஆனாய் தாலோ தாலேலோ
    ஓதாது ணர்த்திடு போதா தாலோ தாலேலோ
ஆனாஅ ருட்கனு பானா தாலோ தாலேலோ
    ஆயாத சொற்சொலு பாயா தாலோ தாலேலோ
நானாயெ னக்கரி தானாய் தாலோ தாலேலோ
    நாதாதி கட்கனு பூதா தாலோ தாலேலோ
தேனார்பொ ழிற்குரு கூரா தாலோ தாலேலோ
    சேனாப திப்பெரு மாளே தாலோ தாலேலோ.

(சொ - ள்.) ஊன்ஆய் உயிர்க்கு உயிர் ஆனாய் தாலோ தாலேலோ-உடம்புகளாகி அவற்றுள் இருக்கின்ற உயிர்களுக்கு உயிராயும் இருப்பவனே தாலோ தாலேலோ, ஓதாது உணர்ந்திடு போதா - ஓதாது உணர்ந்த அறிவனே!, தாலோ-; ஆறு அருட்கு அனுபானு! - நீங்காத கருணைக்குத் துணையா யிருப்பவனே! தாலோ-, ஆயாத சொல் சொல் உபாயா! - ஆராயப்படாத சொற்களைச் சொன்ன தந்திரனே!, தாலோ-, நான் ஆய் எனக்கு அரிது ஆனாய் - நானாகி எனக்கும் காண்பதற்கு அரிதானவனே!, தாலோ-, நாதாதிகட்கு அநுபூதா - நாதம் முதலானவைகட்கு அநுபூதனே, தாலோ-, தேன்ஆர் பொழிற் குருகு ஊரா - தேன் நிறைந்த சோலைகள் சூழ்ந்த புள்ளூரனே! தாலோ தாலேலோ-; சேனாபதிப் பெருமானே தாலோ தாலேலோ - ; (எ - று.)

(வி - ம்.) ஊன் - தசை; இது கருவியாகு பெயராய் உடம்பினை யுணர்த்திற்று. உயிர்க்குயிர் - அந்தராத்துமா. போதம் - ஞானம். ஆயாத சொல் - பிரணவம். நாதாதிகள் - நாதம் முதலாகிய தத்துவங்கள் 36. அநுபூதம் - பிரமாணங்களைக்கொண்டு அறியத்தக்கது. தேன் - தேன், வண்டு எனவும் பொருள் கொள்ளலாம்.

(௧௦)

## ௬. சப்பாணிப் பருவம்

*[இஃது இரு கைகளையும் ஒருங்கு சேர்த்துக் கொட்டும் பருவம்.]*

முடங்குந் திரைப்பரவை வயிறுளைந் தீன்றநறு
முளரிப் பிராட்டி வைத்து
முத்தாடு பச்சைப் பசுங்கிள்ளை யெனமழலை
முதிருமென் குதலைகற்பத்
தொடங்குங் குறப்பாவை கற்றைக் குழற்ககில்
தூமமோடு தாமம்இட்டுச்
சுடிகை நுதல் வெயர்வுந் துடைத்தொழுகு கத்தூரி
தூரியங் கொண்டுதீட்டிக்
குடங்கைக் கடங்கா நெடுங்கட் கடைக்கழகு
கூரஅஞ் சனமெழுதிமென்
கொங்கைத் தடத்துப் பசுங்களபம் அப்பியவள்
குற்றேவல் முற்றுமாற்றித்
தடங்குங் குமப்புயங் கொட்டிநட மிட்டவன்
சப்பாணி கொட்டியருளே
தையல்நா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே.

(சொ - ள்.) முடங்கும் திரைப்பரவை வயிறு உளைந்து ஈன்ற நறுமுளரிப் பிராட்டி - வளைகின்ற அலைகளையுடைய திருப்பாற் கடலானது வயிறு நொந்துபெற்ற நறிய தாமரைத் தவிசுடைய திருமகள், வைத்து முத்துஆடு பச்சைப் பசுங்கிள்ளை என மழலை முதிரும் மென்குதலை கற்ப - தன் முன்கையில் வைத்துக்கொண்டு முத்தமிட்டு விளையாடுகின்ற பச்சைப் பசுங் கிள்ளைபோல மழலை முதிர்கின்ற மெல்லிய குதலைமொழியைக் கற்க, தொடங்கும் குறப்பாவை கற்றைக் குழற்கு அகில் தூமம் ஒடு தாமம் இட்டு - தொடங்குகின்ற குறப்பெண்ணாகிய வள்ளி நாயகியின் கற்றையாகிய கூந்தலுக்கு அகிற்புகையுடன் பூமாலைகளைச் சூட்டி, சுடிகை நுதல் வியர்வும் துடைத்து ஒழுகு கத்தூரி தூரியம் கொண்டு தீட்டி - சுட்டியணிந்த நெற்றியிலுள்ள வியர்

வையையும் துடைத்து நெகிழ்ந்த கத்தூரிப் பொட்டை எழுது கோலால் எழுதி, குடங்கைக்கு அடங்கா நெடுங்கண் கடைக்கு அழகுகூர அஞ்சனம் எழுதி - உள்ளங்கைக்கு அடங்காத நெடிய கடைக்கண்ணுக்கு அழகுமிக மை தீட்டி; மெல்கொங்கைத் தடத்தும் பசுகளபம் அப்பி - மென்மையாகிய முலையிடத்துப் பசுமையாகிய களபச் சந்தனம் பூசி, அவள் குற்றேவல் முற்றும் ஆற்றி - அவளுடைய சிறிய பணிகளை முழுதும் செய்து, தடம் குங்குமப் புயம் கொட்டி நடம் இட்டவன் சப்பாணி கொட்டி அருளே - அகன்ற குங்குமம் பூசிய தோள்களைத் தட்டிக்கொண்டு நடனம் செய்தவனே! இரண்டு கைகளையும் சேர்த்து ஓசைஎழக் கொட்டுக, தையல் நாயகி மருவு தெய்வநாயகன் மதலை சப்பாணி கொட்டி அருளே - தையல்நாயகியார் சேர்ந்த தெய்வநாயகன் புதல்வனே! சப்பாணி கொட்டியருளே!

(வி - ம்.) பரவை - ஈண்டு, திருப்பாற்கடல்; இலக்குமி தோன்றியதாதலின். குடங்கை - உள்ளங்கை. "குடங்கைக் கடங்கா நெடுங்கண்", என நெடுமையொன்றே கூறினாரேனும் ஏனைய அகற்சி முதலியவும் கொள்க. கூர் - மிகு. குறப்பாவை யைக் கைபுனைவால் தனக்கு உளதாகிய உட்கரைப்புப் புறம் போதரல் தோன்றத் "தடங்குங்குமப் புயங்கொட்டி நடமிட்ட வன்" என்றார். நடமிட்டவன், மதலை என்பன அண்மை விளிகள். குறப்பாவை, திருமகள் புதல்வியாதலால் அவள் "வைத்து முத்தாடு பச்சைப் பசுங்கிள்ளையென" என்றார். (௧)

மழைக்கோந் தளக்கலப மயிலிளஞ் சாயல்நெடு
மதரரிக் கெண்டையுண்கண்
மான்கன்றை அமருலகு வாழப் பிறந்திடு
மடப்பிடியை வானவில்லைக்
குழைக்குந் தடக்கைத் திருத்தாதை நீரொடு
கொடுப்பக் குடங்கையேற்றுக்
கொழுமலர் மணங்கமழ் மணப்பந்தர் நிற்பவக்
கொம்புமின் கொடியின்ஒல்கி
இழைக்கும் பசும்பொன் தசும்பென வசும்புபொன்
இளமுலை முகங்கோட்டிநின்
றெய்யாமை நோக்கும் படைக்கட் கடைக்கணேக்
கின்னமுத மூற்றவின்பம்

தழைக்கும் பெருங்காதல் வெள்ளந் திளைத்தவன்
சப்பாணி கொட்டியருளே
தையல்நா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே.

(சொ - ள்.) *மழைக் கொந்தளக் கலபமயில் இளம்சாயல் நெடுமதர் அரிக்கெண்டை உண்கண் - கருமுகில் போன்ற கூந்தலையும் தோகையையுடைய மயிலினது இளஞ்சாயலையும் நெடிய மதர்த்த செவ்வரி பரந்த கெண்டைமீன் போன்ற மையுண்ட கண்களையும் உடைய, மான்கன்றை அமர்உலகு வாழப் பிறந்திடு மடப்பிடியை - மான்கன்றினைத் தெய்வலோக மானது வாழ்வடையத் தோன்றிய இளம்பிடியை, வானவில்லைக் குழைக்கும் திருத்தாதை நீரொடு கொடுப்பக் குடங்கை ஏற்று - ஆகாய வில்லை வளைக்கிற பெரிய கையினையுடைய பெரிய திருத் தந்தையானவர் தாரை நீரொடு கொடுக்கக் குடங்கையால் ஏற்றுக்கொண்டு, கொழுமலர் மணம்கமழ் மணப்பந்தர் நிற்ப - செழிய மலர்களின் மணம் வீசுகின்ற திருமணப் பந்தரில் நிற்க, அக்கொம்பு மின்கொடியின் ஒல்கி - அந்தப் பூங்கொம்பு போல் பவள் மின்னற் கொடிபோல் அமைந்து, இழைக்கும் பசும்பொன் தசும்புஎன அசும்புபொன் இளமுலை முகம்கோட்டி நின்று - செய்யப்பட்ட பசும்பொற் குடம்போலப் பரவின தேமலையுடைய இளமுலைகாறும் முகம் வளைத்துநின்று, எய்யாமை நோக்கும் படைக்கண் கடைக்கண் நோக்கு இன்அமுதம் ஊற்ற - அறி யாமல் நோக்குகின்ற வேற்படை போன்ற கண்கள் கடைக்கண் நோக்காகிய இனிய அமுதத்தை வார்க்க, இன்பம் தழைக்கும் பெருங்காதல் வெள்ளம் திளைத்தவன் - இன்பம் மிகுதற்கு இட மாகிய பேராசையாகிய கடலில் மூழ்கினவனே!, சப்பாணி கொட்டி அருளே - ; தையல்நாயகி மருவு தெய்வநாயகன் மதலை ! சப்பாணி கொட்டி அருளே ; (எ - று.)*

(வி - ம்.) *மான்கன்றை மடப்பிடியை என்றது தெய்வ யானையை. வானவில்லைக் குழைக்குந் தடக்கைத் திருத் தாதை என்றது இந்திரனை. எய்த்தல் - அறிதல். திளைத்த வன் : அண்மைவிளி. திளைத்தல் - அனுபவித்தல்.* (உ)

உண்ணிலா உவகைத் தடங்கடல் படிந்திட்ட
உம்பருஞ் செங்களம்பட்
டொண்பருதி யுடல்கிழித் தோடுங் கடற்றுனை
ஒளிறுவா ளவுணர்குழுவும்

தெண்ணிலா மதிநுதல் தெய்வப் பிணாக்கள்வாய்த்
தேனமுது மமுதவாரித்
தெள்ளமுதும் உடனிருந் துண்ணப் பணித்திட்ட
செங்கைவேல் பைம்புனத்துப்
பண்ணுலா மழலைப் பசுங்கிளவி யெயினர்பொற்
பாவைவிழி வேலொடொப்புப்
பார்க்குந் தொறுந்தலை கவிழ்த்துநின் றவள்திருப்
பவளத்து முத்தரும்பும்
தண்ணிலா வுக்கொண் சகோரமென நின்றவன்
சப்பாணி கொட்டியருளே
தையல்நா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே.

(சொ - ள்.) *உள்நிலா உவகைத் தடங்கடல் படிந்திட்ட உம்பரும் - உள்ளத்தில் நிலைபெற்ற களிப்பாகிய பெருங்கடலில் மூழ்கின தேவர்களும், செங்களம்பட்டு ஒண்பருதி உடல்கிழித்து ஓடும் கடற்றானை ஒளிறுவாள் அவுணர் குழுவும் - போர்க்களத்தில் இறந்து ஒட்பமாகிய சூரிய மண்டலத்தைக் கிழித்து விரைந்து வீரசுவர்க்கம் புகுந்த கடல்போலும் படையையும் ஒளி செய்கின்ற வாட்படையையும் உடைய அவுணர் கூட்டமும், தெள்நிலா மதிநுதல் தெய்வப் பிணாக்கள் வாய்தேன் அமுதும் அமுதவாரித் தெள்அமுதும் உடனிருந்து உண்ணப் பணித்திட்ட செங்கைவேல் - தெளிவாகிய நிலவையுடைய பிறை போன்ற நெற்றியையுடைய தெய்வப் பெண்களது வாயில் உண்டாகிய தேன்போலும் அமுதத்தையும் பாற்கடலிற் பிறந்த தெளிவாகிய அமுதத்தையும் கூடியிருந்து உண்ணும்படி கட்டளையிட்ட செங்கை வேலானது, பைம்புனத்துப் பண்உலா மழலைப் பசுங்கிளவி எயினர் பொற்பாவை விழி வேலொடு ஒப்புப் பார்க்குந் தொறும் - பசிய தினைப்புனத்தில் பண்கள் உலவுகின்ற மழலையாகிய பசிய சொற்களையுடைய குறவரது பொற்பாவை போல்வாளாகிய வள்ளிநாயகியின் கண்ணாகிய வேலோடு ஒத்திருப்பதை (முருகக்கடவுள்) நோக்குந்தொறும், தலைகவிழ்த்து நின்றவள் திருப்பவளத்து முத்து அரும்பும் நிலாவுக்கு - தலைகுனிந்து நின்ற அவளது திருப்பவளத்திலுள்ள முத்துக்களில் உண்டாகிய குளிர்ச்சியாகிய சந்திரிகைக்கு, ஒள்சகோரம் என நின்றவன் - ஒளிபொருந்திய சகோரப் பறவைபோல நின்றவனே! சப்பாணி கொட்டியருளே :- (எ - று.)*

(வி - ம்.) உள், உம்பர் என்பன இடவாகு பெயர்கள். மாண்டவரது உதிரத்தால் சிவந்து காட்டலாற் போர்க்களம் செங்களம் எனப்பட்டது. போரிற் புறங்கொடாது இறந்தவர் சூரிய மண்டலம் புகுந்து வீரசுவர்க்கம் எய்தித் தெய்வப் பெண்களை அனுபவித்தல் இயல்பாதலால், "செங்களம் பட்டுஒண் பருதி......செங்கை வேல்'' என்றார். அவுணர் இடையறுது தற்கிழமைப் பொருள்போல் வாளை உடையராதல்பற்றி அவரை 'வாளவுணர்' என்றார். திருப்பவளம் - சிறந்த வாய் (அதரம்). முத்து-உவமையாகு பெயராய்ப் பல்லை உணர்த்திற்று. தண்நிலா என்றது புன்சிரிப்பை. (௩)

மடநடைத் தெய்வக் குறப்பாவை திருவுருவின்
மயிலிளஞ் சாயலுநிலா
மணிவடம் அறப்புடைத் திறுமாந்த கனதன
வனப்புங் குறித்துநோக்கி
இடுகிடைப் பாவிக் கினிப்பிழைப் பில்லைகொல்
எனத்திரு உளங்குழைந்தாங்
கேந்திளங் கொங்கையை இணைப்புயத் தேந்திநின்
றெல்லா உறுப்புநிற்கக்
கூடமூலைக் கேயிவள் குடிப்பிறப் புக்கியை
குணங்கிடைத் ததுகொலென்றக்
கோதைநெடு நாணெய்த அவயவங் கட்குள
குறைகுணந் தனிதெரிக்கும்
தடமலர்க் கைத்தலஞ் சேந்தொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தையல்நா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே.

(சொ - ள்.) மடநடைத் தெய்வக் குறப்பாவை திருவுருவின் மயில் இளஞ்சாயலும் - இளநடையையுடைய தெய்வத்தன்மை அமைந்த குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியின் திருவுருவிலுள்ள இளமையாகிய மயிற்சாயலையும், நிலாமணிவடம் அறப்புடைத்து இறுமாந்த கனதன வனப்பும் குறித்து நோக்கி - முத்துவடங்கள் அற்று விழும்படி புடைகொண்டு நிமிர்ந்த பருத்த தனங்களின் அழகையும் உற்று நோக்கி, இடுகுஇடைப் பாவிக்கு இனி

பிழைப்பு இல்லைகொல் எனத் திருவுளம் குழைந்து - இறுகிய இடையாகிய பாவிக்கு இனிப் பிழைத்தல் இல்லை என்று திருவுளம் நெகிழ்ந்து, ஏந்து இளம் கொங்கையை இணைப்புயத்து ஏந்தி நின்று எல்லா உறுப்பு நிற்க - படாத இளங் கொங்கைகளை இரு தோள்களாலும் தாங்கிநின்று எல்லா உறுப்புக்களும் நிற்க, குடமுலைக்கே இவள் குடிப்பிறப்புக்கு இயை குணம் கிடைத்ததுகொல் என்று - குடம்போலும் கொங்கைகளுக்கே இவளது குடிப்பிறப்புக்கு ஏற்ற குணம் கிடைத்தது என்று, அ கோதை நெடுநாண் எய்த அவயவங்கட்குள் குணகுணம் தனிதெரிக்கும் - அந்த வள்ளிநாயகி பெருநாண் அடையும்படி ஒவ்வோர் உறுப்புக்களுக்குள்ள நன்மை தீமைகளைத் தனித்தனி தெரிவிக்கிற, தடமலர்க் கைத்தலம் சேந்து ஒளிதுளும்ப ஒரு சப்பாணி கொட்டி அருளே - அகன்ற தாமரை மலர்போலும் கைத்தலங்களிரண்டும் சிவந்து ஒளிததும்பும்படி ஒரு சப்பாணி கொட்டி அருளே; (எ - று.)

(வி - ம்.) இடுகுதல் - சிறுகுதல். சொல் : அசை. குடிப் பிறப்பு - குறக்குடிப் பிறப்பு. குடிப்பிறப்புக்கு இயை குணம் கொலை. குடமுலைக்கு இடையைக் கோறல்தொழில் உண்மையின், 'குடமுலைக்கே இவள் குடிப்பிறப்புக்கு இயைகுணம் கிடைத்தது' என்றார். குணகுணம் - நற்குணம் தீக்குணம். சேந்து - செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த வினையெச்சம். இது துளும்ப என்னும் வினையையும், அது . கொட்டியருள் என்னும் வினையையும் கொண்டன. (௮)

விண்ணெண் கடற்புவன முடவுப் படத்தேந்து
வேந்துபோலி பாந்தள்வைப்பும்
விரிநீர் வரைப்புமேழில் விஞ்சையர் இருப்புமுகை
விண்டுநறை விரிமுண்டகக்
கண்ணன் திருப்பதமு நான்முகக் கடவுள்பூங்
கஞ்சமுங் குலிசப்பிரான்
கற்பகக் காவுநின் தொண்டர்கள் தொழும்புக்கோர்
காணியா வைத்துமற்றத்
திண்ணென் தடக்கைவெஞ் சிலைவேடர் குடிகொண்ட
சீறூரும் ஊரூர்தோறும்
செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாம்
சீதனக் காணிபெற்றத்

தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன்
சப்பாணி கொட்டியருளே
தையல்நா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே.

(சொ - ள்.) விண்எண் கடற்புவனம் முடவுப்படத்து ஏந்து வேந்துபொலி பாந்தள் வைப்பும் - விண் உலகத்தாரும் மதித்தற்குரிய கடல்சூழ்ந்த உலகம் முழுதும் வளைவாகிய தன் படங்களால் தாங்குகின்ற பாம்பரசனாகிய ஆதிசேடன் விளங்கு கின்ற நாகருலகமும், விரிநீர் வரைப்பும் எழில் விஞ்சையர் இருப்பும் - கடல்சூழ்ந்த இவ்வுலகமும் அழகான வித்தியாதர ருலகமும், முகைவிண்டு நறைவிரி முண்டகக் கண்ணன் திருப் பதமும் நான்முகக்கடவுள் பூங்கஞ்சமும் - மொட்டு விரிந்து மணம் கமழ்கின்ற தாமரைக் கண்ணனாகிய திருமாலின் திருப் பதமும் (அழகிய பதவியும்) பிரமதேவனது அழகிய தாமரை மலர்த்தவிசும், குலிசப்பிரான் கற்பகக்காவும் - வயிரவாளை யுடைய தேவேந்திரனது கற்பகச்சோலையும், நின்தொண்டர்கள் தொழும்புக்கு ஓர் காணியா வைத்து - உன் அடியாரது அடிமைத் திறத்துக்கு ஒரு காணியாட்சியாக வைத்துவிட்டு, அ திண்என் தடக்கை வெஞ்சிலை வேடர் குடிகொண்ட சீறூரும் - அந்தத் திண் என்ற பெரிய கையில் செவ்விய வில்லையுடைய வேடர் குடி கொண்டிருக்கிற சிறு ஊர்களும், ஊர் ஊர்தொறும் - ஊர் ஊர் தொறுமுள்ள, செந்தினைப் புனம்மூடு தண்சாரல் பிறவும்ஆம் சீதனக் காணிபெற்று - செந்தினைப்புனம் நிறைந்த தண்ணிய சாரல்களும் பிறவும் ஆகிய சீதனக் காணிகளைப்பெற்று, அதண் என் குறிஞ்சித்தலம் தலைஅளிப்பவன் - அந்தத் தண்என்ற குறிஞ்சி நிலத்தைக் காப்பவனே ! சப்பாணி கொட்டி அருளே-; தையல்நாயகி மருவு தெய்வநாயகன் மதலை ! சப்பாணி கொட்டி அருளே-; (எ - று.)

(வி - ம்.) விண் : இடவாகுபெயர் ; இதில் உயர்வு சிறப் பும்மை தொக்கது. பாந்தள் - பாம்பு. வைப்பு - உலகம். விண், பாந்தள் வைப்பு என்பவை கூறி ஒழிந்தமையின், விரிநீர் வைப்பு இந்த உலகத்தை உணர்த்திற்று. கடலினும் விரிந்த நீரின்மை யின் அதனை விரிநீர் என்றார். முண்டகக்கண்ணன் என்பதற்குச் செந்தாமரை போலும் கண்களையுடையவன் என்பது பொரு ளாயினும் ஈண்டுத் திருமாலுக்கு ஓர் இடுகுறிப்பெயர் போன்று நின்றது. “ தாம்வீழ்வார் மென்தோட் டுயிலின் இனிதுகொல், தாமரைக் கண்ணான் உலகு ” என்ற திருக்குறளினும் தாமரைக் கண்ணான் என்றது திருமாலுக்கு ஒரு பெயராய் நிற்றல் காண்க

விண்ணுலகு முதலிய எல்லாவற்றையும் தொண்டர்க்குக் காணியாப் போக்கி, வேடர் சிற்றூர் முதலியவற்றைச் சீதனக் காணிகளாய்ப் பெற்றுக் குறிஞ்சி நிலம் புரப்பவனே! சப்பாணி கொட்டியருள் என முடிக்க. (௩)

வேறு

கடலைச் சுவற வடித்தும் இடித்துக்
கனவரை துகள்கண்டும்
கடிதில் திரிய வகுப்பதை யொப்பக்
காரவு ணக்கடலின்
உடலிற் பெருகிய குருதிக் கடல்பிண
ஓங்கலோ டோங்கவமைத்
தொட்டிய ஒட்டல ரிற்பிற கிட்டவர்
ஒழியப் பிறரையெலாம்
தடவுத் தாழியின் மத்தெறி தயிரின்
தத்துதி ரப்புனலில்
தசைகுடர் நிணமொடு மூளை குழம்பச்
சமர்விளை யாடல்செயும்
குடுமிச் சுடர்வடி வேலைத் தொட்டவ
கொட்டுக சப்பாணி
கோழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி.

(சொ - ள்.) கடலைச் சுவற அடித்தும் இடித்தும் கன வரை துகள்கண்டும் - கடலை வற்றவைத்தும் பெரிய மலையை இடித்துப் பொடியாக்கியும், கடிதின் திரியவகுப்பதை ஒப்பக் கார் அவுணக்கடலில் உடலிற் பெருகிய குருதிக்கடல் பிணஓங்க லொடு ஓங்க அமைத்து-விரைவாக வேறுபட வகுப்பதை நிகர்க் கக் கரிய அவுணக் கடலினது உடம்பினின்றும் பெருகிய உதிரக் கடலானது பிணமலைகளோடு உயர்ந்து தோன்ற அமையச் செய்து, ஒட்டிய ஒட்டலரிற் பிறகு இட்டவர் ஒழியப் பிறரை எலாம் - சேர்ந்த பகைவரில் பின்னிட்டவர் ஒழியப் பிறர் எல்லா ரையும், தடவுத்தாழியில் மத்துஎறி தயிரில் தத்து உதிரப் புனலில் - பெரிய தாழியில் மத்தினால் கடையப்பட்ட தயிர்

போல் தாவுகிற உதிரப்புனலில், தசைகுடர் கிணம்ஒடு மூளை குழம்பச் சமர்விளை யாடல்செயும் - மாமிசம் குடல் கிணத்தொடு மூளையும் சேர்ந்து சேருகப் போர் விளையாடல்களைச் செய்கிற குடுமிசுடர் வடிவேல் - நுனி பொருந்திய ஒளிவீசுகின்ற வடிவேற் படையை, தொட்டவ! கொட்டுக சப்பாணி - தொட்டவனே! சப்பாணி கொட்டுவாயாக, கொழிதமிழ் வேதபுரிக் குமரேசன் கொட்டுக சப்பாணி - வடித்த தமிழ் வழங்குகின்ற வேதபுரியில் வாழ்கின்ற குமரக்கடவுளே சப்பாணி கொட்டி யருளே; (எ - று.)

(வி - ம்.) கடலைச்சுவற வடித்து என்றது கடல் சுவறும் படி உக்கிர குமாரபாண்டியனுர் வேல்விடுத்த செய்தியைக் குறித்தது. கனவரை - கிரவுஞ்ச மலை. இக்கடலுக்கும் மலைக்கும் பதிலாக அவுணர் உதிரக் கடலையும் பிணமலையையும் வகுத்தனன் என்பதுபோதர, "கடலைச் சுவற வடித்தும்...பிணஓங்கலோடோங்க அமைத்து' என்றார். பிறகிட்டவர் - வெந்கிட்டவர், முதுகு காட்டினவர். குமரேசன் : அண்மைவிளி; குமர+ஈசன்-குணசந்தி. (௬)

சமரிற் பட்டவர் வெட்டிய பூதத்
தலைவர்கள் நிற்பமுதல்
தாமரை நாயகன் வயிறு கிழித்துத்
தந்தொழில் தலைநின்றுங்
கமரிற் சூரிய மடக்கொடி யாரை
அலைத்தனர் பற்றியெயிற்
றவுண ரேனத்தமை யுணரார் கணவர்கள்
ஆர்ப்பில் வெடித்தபெருங்
கமரிற் குருதி பிலத்தை நிரப்பிடு
களமெதிர் கண்டினியக்
காரவு ணக்கடல் சூரொடு மாளக்
கடிதில் தடிதியடற்
குமரக் கடவு ளெனப்பணி வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி.

(சொ - ள்.) சமரிற்பட்டவர் வெட்டிய பூதத்தலைவர்கள் நிற்ப முதல் தாமரைநாயகன் - போரில் இறந்துபட்ட அவுணர்கள் (தங்களை) வெட்டிய பூதத்தலைவர்கள், போர்க்களத்தில் நிற்க முதல்வனாகிய சூரியனது, வயிறு கிழித்துத் தம்தொழில் தலைநின்று ஆங்கு - நடுஇடத்தைக் கிழித்துக்கொண்டு (வீர சொர்க்கம் அடைந்து) அவுணராகிய தங்கட்கு உரிய கொடுந் தொழிலை மேற்கொண்டதுபோல, அமரிற்கு உரிய மடக்கொடியாரை அலைத்தனர் பற்றி - போர்க்களத்தில் இறந்துபட்டோர் யாவரேனும் அவர் அடைதற்குரிய இளங்கொடி போல்வாராகிய அரம்பையரை வருத்திப் பற்றி, எயிற்று அவுணர் எனத் தமை உணரார் கணவர்கள் ஆர்ப்பில் - பெரும் பற்களையுடைய அவுணர் (வீர சொர்க்கம் புகுந்த அவுணர்) தங்களை அவுணர்கள் என்று அறியாதவர்களாகிய கொழுநர்கள் பேரொலியால், வெடித்த பெருங்கமரில் குருதி பிலத்தை நிரப்பிடு களம்எதிர் கண்டு - வெடித்த பெரிய வெடிப்பின் வழியே சென்ற உதிரமானது பாதலத்தை நிறைக்கின்ற போர்க்களத்தை எதிரிற் கண்டு, இனி அந்தக் கரிய அவுணக்கடல் சூரொடு மாளக் கடிதின் தடிதி - இனி அந்தக் கரிய அவுணக் கடலானது சூரனுடன் மாண்டொழியும்படி விரைவாக வெட்டக் கடவை, அடல் குமரக்கடவுள் எனப்பணி வேலவ - வெற்றியையுடைய குமரக் கடவுளே என்று சொல்லி வணங்குதற்குரிய வேலோனே!, கொட்டுக சப்பாணி-, கொழிதமிழ் வேதபுரிக் குமரேசன் கொட்டுக சப்பாணி-; (எ - று.)

(வி - ம்.) சமர் - போர். இது சமரம் என்ற வடசொல் ஈறுகெட்டு வந்தது. பிரிந்த கணவர் வருகை கண்ட கற்புடை மகளிர் முகம் மலர்தல்போல, நென்னல் இரவிற் பிரிந்துபோன சூரியன் வருகை கண்டு மலர்தலால், சூரியனைத் தாமரை நாயகன் என்றார். கமர் - நிலவெடிப்பு- தடிதல் - வெட்டல். 'அச்சு மாறின் அறிவே மாறும்' என்பது வழக்காதலின், அவுணர்களும் வீர சொர்க்கம் அடைந்த பிறகு தாம் அவுணராதலை மறந்து தேவர்கட்கு ஆக்கம் வேண்டினர் என்பதை விளக்க, காரவுணக் கடல் சூரொடுமாளக் கடிதில் தடிதிஅடற் குமரக்கடவுள் என்றார். அவுணக்கடல் - அசுரராகிய சேனை! கடல் என்பது உவமையாகு பெயர். (எ)

அற்ற உடற்குறை இற்ற முடித்தலை
அங்கைத் தலம்வைத்திட்
டாடு பறந்தலை யோடுதி ரப்புனல்
ஆறு கடத்துகெனும்



சிற்றல கைக்கோரு பேரல கைப்பெண்
தேரழி யக்கழியும்
திகிரிப் பரிசில் விடப்படு சுழியில்
தெருமரல் மட்பகைஞன்
பற்றிய திரிகை திரித்து விடத்திரி
பரிசென வுஞ்சுழலும்
பம்பர மெனவும் வரும்படி அவுணர்
படக்கள வேள்விசெயாக்
கொற்ற மகட்புண ருஞ்சுடர் வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி.

(சொ - ள்.) *அற்ற உடற்குறை இற்ற முடித்தலை அங்கைத் தலம் வைத்திட்டு - அறுபட்ட உடற்குறைகள் வெட்டுண்டு வீழ்ந்த முடித்தலைகளை உள்ளங்கையில் வைத்துக்கொண்டு, ஆடு பறந்தலை ஓடு உதிரப்புனல் ஆறு கடத்துக என்றும் சிறு அலகைக்கு - கூத்தாடுகின்ற போர்க்களத்தில் பெருகியோடுகின்ற குருதிநீர் ஆற்றைக் கடத்திவிடுக என்று வேண்டுகின்ற சிறிய பேய்க்கு, ஒருபேர் அலகைப் பெண் தேர் அழியக் கழியும் திகிரி பரிசில் - ஒரு பெரிய பெண் பேயானது தேர் அழிந்துபோக அதனின்றும் கழன்றுவிழுந்த சக்கரமாகிய தோணியை, படுசுழியில் விடத் தெருமரல் - பொருந்திய சுழியிற் செலுத்த (அத்தோணி) சுழலுதல், மண்பகைஞன் தான்பற்றிய திரிகை திரித்து விட திரிபரிசு எனவும் - குயவன் தான்பற்றிய திரிகையைச் சுழற்றியிடச் சுழலுகின்ற தன்மை எனவும்; சுழலும் பம்பரம் எனவும் வரும்படி - சுற்றுகின்ற பம்பரம் என்று சொல்லும்படியும் வர, அவுணர் படைக்கள வேள்வி செயா கொற்றமகள் புணரும் சுடர்வேலவ! - அவுணர்கள் இறந்துபடக் களவேள்வி செய்து கொற்றமகளைப் புணர்ந்த ஒளிர்கின்ற வேற்படையை உடையவனே!, கொட்டுக சப்பாணி-; கொழிதமிழ் வேதபுரிக் குமரேசன் கொட்டுக சப்பாணி-; (எ - று.)*

(வி - ம்.) உடற்குறை - தலையற்ற உடல், கவந்தம் முடித்தலை - முடியணிந்த தலை. கடத்துக எனும் என்பது கடத்துகெனும் எனத்தொக்கது. தெருமரல் - சுழலல். பகுதி; தெருமா.

கொற்ற மகள் - துர்க்கை. பரிசில்-வட்ட வடிவாகப் பிரம்பினால் அமைக்கப்பட்ட தோணி, காவிரியாற்றிற் காணப்படுவது. புறத்தலை தோலால் மூடப்பட்டிருப்பது. (அ)

## வேறு

வளரிள வனமுலை மலைமக
ளுக்கோர்த வப்பேறே
மறிதிரை பொரநிமிர் கருணைகொ
ழித்தபெ ருக்காறே
அளியுமி னமுதெழு வெளியினில்
வைத்தசு வைத்தேனே
அறமுது தவமொடு வளரவ
ளர்த்திடு நற்றாயே
களிமயில் கடவிவி ணடையமு
டுக்கிய புத்தேளே
கலைமறை யெனுமுரல் வரியளி
மொய்த்தம லர்க்காவே
தெளிதமிழ் பழகிய மதவலி
கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல்
கொட்டுக சப்பாணி.

(சொ - ள்.) வளர்இள வனமுலை மலைமகளுக்கு ஓர் தவப் பேறே - வளர்கின்ற இளமையாகிய அழகிய முலையையுடைய மலையரையன் பெண்ணுக்கு (பார்வதிக்கு) ஒப்பற்ற தவப் பயனே!, மறிதிரை பொரநிமிர் கருணைகொழித்த பெருக்கு ஆறே - மடங்குகின்ற அலைகள்மோத உயர்ந்த கருணையாகிய நீர் எறிகின்ற வெள்ளப்பெருக்கையுடைய நதியே!, அளியும் இன் அமுது எழுவெளியினில் வைத்த சுவைத்தேனே!-கனிந்த இனிய அமுதமானது தோன்றின வெளியிடத்தில் வைக்கப்பட்ட சுவையையுடைய தேனே!, அறமுது தவமொடு வளர வளர்த்திடு நற்றாயே! - அறநெறியானது பெரிய தவத்தோடு வளரும் படி வளர்க்கின்ற நல்ல தாயே!, களிமயில் கடவிவிண் அடைய முடுக்கிய புத்தேளே! - களிப்பையுடைய மயிலைச் செலுத்தி

*விண்உலகம் முழுதும் முடுக்கின தெய்வமே!, கலைமறை எனும் மூரல்வரி அணிமொய்த்த மலர்க்காவே! - நூல்கள் வேதங்கள் என்ற வரிவண்டுகள் நெருங்கின பூஞ்சோலையே!, தெளிதமிழ் பழகிய மதவலி கொட்டுக சப்பாணி - தெளிந்த தமிழ் பயின்ற மதவலியே! கொட்டுக சப்பாணி, தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி - பரிதிபுரியில் எழுந்தருளியுள்ள ஒப்பற்ற முதல்வனே! கொட்டுக சப்பாணி-; (எ - று.)*

**(வி - ம்.)** *மலைமகள் - பார்வதி. முடுக்குதல் - வேகமாகச் செலுத்துதல். மதவலி : அண்மைவிளி. இச்சொல்லைத் திருமுருகாற்றுப்படையில் பழமுதிர்சோலைப் படைவீட்டுச் செய்யுளில் 'மொய்ம்பின் மதவலி' என நக்கீரனாரும் கூறியுள்ளார்.* (சு)

கனியோடு சுவையமு தொழுகிய
சொற்பயில் தத்தாய்வேள்
கணையோடு பிணையென வுலவு
கடைக்கண் மடப்பாவாய்
நனைமலர் போதுளிய எழிலித
ழைத்தகு ழற்கோதாய்
நளிர்புன மிசைவளர் கலபம்வி
ரித்தம யிற்பேடே
எனவொரு குறமக ளடிமுடி
வைத்தனை முத்தேவாம்
இறைவரு முறைமுறை பணியவி
ருக்குமு தற்றேவே
சினவிடை யவரருள் மழவிடை
கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல்
கொட்டுக சப்பாணி.

**(செ - ள்.)** *கனியொடு சுவைஅமுது ஒழுகிய சொல்பயில் தத்தாய்! - கனிகளோடு சுவையையுடைய அமுதம் ஒழுக மொழிகள் பயில்கின்ற கிளியே!, வேள்கணையொடு பிணைஎன உலவு கடைக்கண் மடப்பாவாய்! - மன்மத பாணத்தோடு பெண்மான்போல் உலாவுகின்ற கடைக்கண்களையுடைய மடப்*

பார்வையே! கணைமலர் பொதுளிய எழிலி தழைத்த குழல் கோதாய் - குளிர்ந்த மலர்கள் நெருங்கின மேகம்போற் செழித்த கூந்தலையுடைய கோதையே!, நளிர்புன மிசைவளர் கலபம் விரித்த மயிற்பேடே - குளிர்ந்த புனத்தில் வளர்ந்த கலாபத்தை விரித்த பெண்மயிலே!, எனஒரு குறமகள் அடிமுடி வைத்தனை முத்தேவுஆம் இறைவரும் - என்று சொல்லி ஒரு குறப்பெண் ணின் அடியை உன் திருமுடியில் வைத்துக்கொண்டு மும்மைத் தேவர்களாகிய இறைவரும், முறை முறை பணிய இருக்கும் முதல்தேவே - முறை முறையாக வணங்கத்தக்கபடி எழுந் தருளியிருக்கின்ற முதன்மையாகிய தெய்வமே!, சினம்விடையவர் அருள் மழவிடை - கோபத்தையுடைய விடையை உடையவ ராகிய சிவபெருமான் பெற்றருளிய இளங்காளையே!, கொட்டுக சப்பாணி-; தினகர புரிவரு தனிமுதல்! கொட்டுக சப்பாணி-; (எ - று.)

(வி - ம்.) தத்தை - கிளி, திரிசொல். ஆயுருபேற்றுத் தத்தாய் என விளிக்கப்பட்டது. வேள்கணை என்றாராயினும் கண்ணுக்கு உவமையாகப் புணர்க்கப்படலால் தாமரை நீலம் என்பவற்றைக் கொள்க. கலாபம் கலபம் எனக் குறுகி நின்றது. குறமகள்: வள்ளிநாயகி. முத்தேவாம் இறைவர் என்றது அயன், அரி, அரன் என்ற மும்மூர்த்திகளை. (௪௦)

## ௫. முத்தப் பருவம்

*[குழந்தையை முத்தம் தருமாறு தாய்தந்தை முதலியோர் வேண்டும் பருவம்.]*

குருகு நாறு செந்தளிர்க்கைக்
கோடிநுண் நுசுப்பிற் கோட்டிமயக்
குலப்பூங் கொம்பு நறவூழ்த்த
கொழுந்தா மரையோ டவிழ்ந்த துழாய்ச்
சருகு நாறு முடைத்தலையின்
தாம நாறு திரள்திண்தோள்
தாதை யாருங் கண்டுகண்டு
தடங்கண் களிப்பக் குரவுவிரிந்
தருகு நாறு திருமேனி
அந்தீங் குதலை மழலைகனிந்
தமுதம் ஊறு பசுந்தேறல்
அசும்பு நாறத் தெய்வமணை
முருகு நாறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே.

(சொ - ள்.) *குருகு நாறும் செந்தளிர்க்கைக் கொடிநுண் நுசுப்பிற் கோட்டு இமயக் குலப்பூங்கொம்பு* - வளையல் ஒளிர்கின்ற செந்தளிர்போலும் கையினையும் கொடிபோலும் நுண்ணிய இடையினையும் உடைய சிகரங்களையுடைய இமயமலையிற் பிறந்த உயர்வாகிய பூங்கொடியும், *நறவு ஊழ்த்த கொழுந் தாமரையோடு அவிழ்ந்த துழாய்ச் சருகுநாறும் முடைத்தலையின் தாமம் நாறும் திரள் திண்தோள் தாதையாரும்* - தேனைச் சிந்துகின்ற செழுந் தாமரை மலரொடு விரிந்த துளசிச்சருகு மணக்கின்ற முடைத் தலைமாலைகள் நாறுகின்ற திரண்ட திண்ணிய தோள்களையுடைய தந்தையாரும், *கண்டு கண்டு தடங்கண் களிப்ப* - பார்த்துப் பார்த்துப் பெருங்கண்கள் களிக்கும்படி, *குரவுவிரிந்து அருகுநாறு மேனி* - குராமலர் விரிந்து பரிமளிக்கின்ற

*திருமேனியில், அம்தீம் குதலை மழலை கனிந்து அமுதம் ஊறு பசுந்தேறல் அசும்பு நாறத் தெய்வமண முருகு நாறும் - அழகிய இனிய குதலை மழலைகள் முதிர்ந்து அமுதம்போலச் சுரக்கின்ற பசிய தேனானது துளிர்க்கத் தெய்வமணத்தையுடைய தேன் பரிமளிக்கின்ற, செங்கனிவாய் முத்தந் தருக - செங்கனிபோன்ற வாயின் முத்தம் தந்தருள்வாயாக, மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி முருகா - மூவகைத் தமிழ்ச்சுவை தெளிந்த கந்தபுரி முருகனே!, முத்தம் தருக-, (எ - று.)*

*(வி - ம்.) குருகுநாறு........பூங்கொம்பு என்றது உமா தேவியை. நறவூழ்த்த.....தாதையார் என்றது சிவபெருமானை. நாறும் - தோன்றும், மணக்கும். தெய்வ மண முருகு என்றது வாய்நீரை. மும்மைத் தமிழ் - முத்தமிழ்; இயல், இசை, நாடகம் என்ற மூன்றுவகைப்பட்ட தமிழ். சிவபெருமான், பிரம விட்டுணுக்களின் தலைகளை மாலையாகக் கோத்து அணிபவராதலால் 'தாமரையோ டவிழ்ந்த துழாய்ச்சருகு நாறு முடைத்தலையில் தாமநாறு திரள் திண்டோள்' என்றார்.* *(க)*

நறவு விரிந்த விரைத்தோட்டு
நளினத் தொட்டில் தடமுலைப்பால்
நல்கி வளர்த்த கைத்தாயர்
நகைவாள் முகத்தும் மார்பகத்தும்
குறுமெல் நடைய சிறுபசுங்கால்
குருதி ததும்ப உதைந்துசில
குறும்பு செயத்தாள் நோமெனமென்
கோல்கொண் டோச்சப் பெரும்புவனம்
நிறுவு மொருநின் பெருந்தன்மை
நினைந்தாய் போலக் கனிந்தமுது
நெக்குப் பசுந்தேன் அசும்பூற
நெடுவெண் ணிலவு விரிந்தகுறு
முறுவல் அரும்புஞ் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே.

(சொ - ள்.) நறவு விரிந்த விரைத்தோட்டு நளினத் தொட்டில் தடமுலைப் பால்நல்கி வளர்த்த கைத்தாயர் நகைவாள் முகத்தும் மார்பு அகத்தும் - தேன்விரிந்த மணமுள்ள இதழ்களையுடைய தாமரைத் தொட்டிலில் பெரிய முலைப்பாலை ஊட்டி வளர்த்த கைத்தாயரின் நகைஒளிகள் உள்ள முகத்திலும் மார்பகத்திலும், குறுமெல் நடைய சிறுபசுங்கால் குருதி ததும்ப உதைந்துசில குறும்புசெய தாள் நோம்என மென்கோல் கொண்டு ஓச்ச - குறிய மெல்லிய நடையினையுடைய சிறிய பசிய காலில் உதிரம் ததும்ப உதைந்து சில குறும்புகளைச் செய்யத் திருவடிநோம் என்று மெல்லிய கோலினால் அடிக்க, பெரும் புவனம் நிறுவும் ஒருநின் பெருந்தன்மை நினைந்தாய் போலக் கனிந்து அமுது நெக்குப் பசுந்தேன் அசும்புஊற-பெரிய உலகங்களை யெல்லாம் நிலைபெறுத்துகின்ற ஒப்பற்ற நின் பெருந்தன்மையைக் கருதினாய்போலப் பழுத்து அமுது நெகிழ்ந்த பசுந்தேனது துளி சுரக்க, நெடுவெண் நிலவு விரிந்த குறுமுறுவல் அரும்பும் - பெரிய வெண்ணிலா விரிந்த புன்னகை அரும்புகின்ற செங்கனிவாய் முத்தம் தருகவே-; மும்மை.........தருகவே-; (எ - று.)

(வி - ம்.) கைத்தாயர் என்றது கார்த்திகை நாளாகிய அறுமீனை. இதனைத் 'கிர்த்திகைக் கங்கை தன்னில் திகழ்சர வணத்தில்வந்த, மூர்த்திகைக்குழவி யேபோல் முதற்புரி ஆடல்நோக்கி, யார்த்திகை யுறுத உள்ளத் தரிமுதல் அமரர்யாரும், கார்த்திகைத் தெரிவைமாரை விளித்திவை கழற லுற்றார்' என்றும், 'சாற்றருஞ் சரவ ணத்தில் சண்முகத் தொருவ னாகி வீற்றிருந் தருளுகின்ற விமலன்ஓர் குழவி போலத் தோற்றினன் அவனுக் குங்கள் துணைமுலை அமுதம் ஊட்டிப் போற்றுதிர் நாளும் என்ன நன்றெனப் புகன்று வந்தார்' என்றும் வருதல் காண்க. (௨)

பொழியுங் கருணைப் பெருவெள்ளப்
புணரி பெருகி அலையெறியப்
பொங்கி யெழுந்த பெருங்காதற்
புளகம் போர்ப்பப் போதுசெயும்
விழியும் மனமுங் குளிர் தூங்க
விரிநீர்ச் சடிலத் தொருவன்இரு
வீணைக் குதவுந் திருச்செவிகள்
விருந்தாட் டயர விரைகொழித்து

வழியுங் கொழுந்தேன் பிழிந்திட்டு
மதுர அமுது குழைத்தூற்றும்
மழலை ததும்பப் பழமறையை
வடித்துத் தெளித்த வார்த்தையொன்று
மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே.

(சொ - ள்.) *பொழியும் கருணைப் பெருவெள்ளப் புணரி பெருகி அலை எறிய-சொரிகின்ற அருளாகிய வெள்ளப் பெருக்கை யுடைய கடல் பெருகி அலைவீச, பொங்கி எழுந்த பெருங்காதல் புளகம் போர்ப்ப - பொங்கி மேலெழுந்த பெருங் காதலாகிய புளகம் மூட, போதுசெய்யும் விழியும் மனமும் குளிர்தூங்க - தாமரை மலர்போன்ற கண்ணும் மனமும் குளிர்ச்சியடைய, விரிநீர் சடிலத்து ஒருவன் இரு வீணைக்கு உதவும் திருச்செவிகள் விருந்து ஆட்டுஅயர - விரிந்த நீரைத் தரித்த சடையையுடைய ஒப்பற்றவனாகிய சிவபெருமானது இரண்டு வீணைக்கு இடமாகக், கொடுத்திருக்கின்ற அழகிய செவிகள் விருந்தாடலைச் செய்ய, விரைகொழித்து வழியும் கொழுதேன் பிழிந்திட்டு - மணம் பொருந்தி வழிகின்ற செழுமையான தேனைப் பிழிந்து, மதுர அமுது குழைத்து ஊற்றும் - இனிய அமுதத்தைக் குழைத்து வார்க்கிற, மழலைததும்பப் பழமறையை வடித்துத் தெளித்த வார்த்தை ஒன்று மொழியும் - மழலைமொழிகள் ததும்பா நிற்கப் பழமையாகிய வேதங்களை வடித்துத் தெளிவிக்கப்பட்ட ஒரு சொல்லைச் சொல்லிய, பவளம் செங்கனி வாய் முத்தம் தருகவே - பவளம்போற் சிவந்த கனிபோன்ற வாயின் முத்தம் கொடுக்க, மும்மைத் தமிழ்.....தருக; (எ - று.)*

(வி - ம்.) *புளகம் - மயிர்க்கூச்செறிதல், மயிர் சிலிர்த்து நிற்றல். 'பழமறையை வடித்துத் தெளித்த வார்த்தை ஒன்று' என்றது பிரணவார்த்தத்தை. இதனை, "உழல்மதில் சுட்ட தழல்நகைப் பெருமான் வணங்கினின் றேத்தக் குருமொழி வைத்தோய்" என்னும் கல்லாடச் செய்யுள் வலியுறுத்தும். இரு வீணைக்குதவும் திருச்செவிகள் - தும்புரு நாரதர்களுடைய இரண்டு வீணைகளுக்குச் சாய்க்கிற திருச்செவிகள். இதனை இந் நூலாசிரியர், "பகரும் இசை திசைபரவ இருவர்கள் பயிலுமியல்தெரி வெள்வளைத் தோட்டினர்" என்று அம்மை பிள்ளைத் தமிழிற் கூறியிருத்தல் காண்க.* (௩)

கலைப்பால் நிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலங்
கனியக் கனிய அமுதூறும்
கடவுள் மறையும் முதற்சங்கத்
தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்தேன் நறையும் வடித்தெடுத்த
சாரங் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழும் நாறத் தடங்கரைகோல்
அலைப்பாய் புனல்தெண் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறையீன்றும்
அழகு முதிர முதிராஎன்
அம்மை யமுது சூற்கொண்ட
முலைப்பால் நாறுஞ் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே.

(சொ - ள்.) *கலைப்பால் நிறைந்த முதுக்குறைவிற் கல்விச் செல்வர் கேள்விநலம் கனியக் கனிய அமுதுஊறும் கடவுள் மறையும் - நூற்பகுதிகள் நிரம்பிப் பேரறிவினையுடைய கல்வியாகிய செல்வம் உடையவர்கள் கேள்விநலம் முதிரமுதிர அமுதம் போலச் சுரக்கிற தெய்வத்தன்மை பொருந்திய வேதங்களும், முதற்சங்கத் தலைப்பாவலர் தீஞ்சுவைக் கனியும் தண்தேன் நறையும் வடித்து எடுத்த சாரம் கனிந்தூற்று இருந்த பசுந் தமிழும் நாற - முதற் சங்கத்திருந்த முதற் பாவலர் இன்சுவைக் கனியும் இனிய தேன்சுவையும் வடிகட்டி எடுத்தசாரம் பழுத்துச் சுரந்திருந்த பைந்தமிழும் பரிமளிக்க, தடம்கரைகொல் அலைப் பாய் புனல் தெண்கடல் வைப்பும் அகிலாண்டமும் பன்முறை ஈன்று - பெருங்கரையை அழிக்கிற அலையுருவாய்த் தாவுகிற நீரையுடைய தெளிந்த கடல்சூழ்ந்த நிலவுலகையும், மற்றும் உள்ள எல்லா அண்டங்களையும் பலமுறை பெற்றும், அழகு முதிர முதிரா என்அம்மை அமுது சூற்கொண்ட - அழகானது மிகாநிற்க தான் முதிராத என் தாயினது அமுதமே சூல் கொண்டாற் போன்ற, முலைப்பால் நாறும் - முலைப்பால் மணக்கின்ற, செங்கனிவாய்......முத்தந் தருகவே-;* (எ - று.)

(வி - ம்.) ஊற்றிருத்தல் - சுரத்தல். கொல்லல் - அழித்தல். ''அழகுமுதிர முதிராஎன் அம்மை'' என்றது உமாதேவியை. சூல்கொண்ட முலைப்பால் என்பதைப் பால் சூல்கொண்ட முலை என மாற்றிக்கொள்க. தெய்வத்தன்மை அமைந்த வேதம் முதலியவை மணக்கின்ற உன் கனிவாயில் உமாதேவியின் முலைப் பால் மணக்க ஒரு முத்தம் தந்தருள்க என்பது கருத்து. (ச)

புயலுண் டிருண்ட கொந்தளமும்
பொன்னங் குழையும் இன்னகையும்
புளகம் பொதிந்த இளமுலையும்
புருவச் சிலையும் போர்த்தடங்கண்
கயலும் கலப மயிலியலும்
கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின்
காமர் நலனும் பன்னிரண்டு
கண்ணான் முகந்துண் டின்னமுதின்
இயலுஞ் சுவைநல் அவியோடுநீத்
தேக்கற் றிருந்தத் தாக்கணங்கின்
இழுமென் குதலை கனிந்தூறும்
இதழ்த்தேன் சுவைகண் டேமாப்பான்
முயலுங் குமுதக் கனிவாயால்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே.

(சொ - ள்.) புயல்உண்டு இருண்ட கொந்தளமும் பொன் அம் குழையும் இன்னகையும் - மேகத்தைப்போல் இருண்டிருக்கின்ற கூந்தலையும் பொன்னான் இயன்ற குழையையும் இனிய நகையையும், புளகம் பொதிந்த இளமுலையும் புருவச்சிலையும் போர்த்தடங்கண் கயலும் - புளகம் போர்த்த இளமையாகிய முலைகளையும் புருவமாகிய வில்லையும் போர்த்தொழிலையுடைய பெருங்கண்ணாகிய கயலையும், கலபமயில் இயலும் - கலாபத்தையுடைய மயிலின் சாயலையும், கன்னிப் புனத்துஓர் பெண் அமுதின் காமர் நலனும் - கன்னிப் புனத்திலுள்ள ஒப்பற்ற பெண் அமுதின் அழகிய நலத்தினையும், பன்னிரண்டு கண்ணால் முகந்து உண்டு இன்அமுதின் சுவைநல் அவியோடு நீத்து

*ஏக்கற்றிருந்து - பன்னிரு கண்களாலும் அள்ளியுண்டு இனிய அமுதத்திலுள்ள சுவையையும் நல்ல அவியின் சுவையோடு நீக்கி விட்டு ஏங்கியிருந்து, அ தாக் கணக்கின் இழுமென்குதலை-அந்தத் தெய்வப் பெண்ணினது இனிமையாகிய மெல்லிய குதலைச் சொற்கள்; கனிந்து ஊறும் இதழ்த்தேன் சுவை கண்டு ஏமாப் பான் முயலும் குமுதக் கனிவாயால் முத்தம் தருக முத்தமே-முதிர்தலால் உண்டாகின்ற அதரவமுதத்தின் சுவையைக் கண்டு களிப்பதற்கு முயன்ற செவ்வல்லி மலர்போன்ற கனிவாயால் முத்தம் தருகவே-; (எ - று,)*

*(வி - ம்.) புயலுண்டு என்பதில் உண்ணல் உவமையுருபின் பொருட்டு. அன்றிப் புயலை விழுங்கி எனினுமாம். கலாபம் - கலபம், தோகை. அவி - அவியுணவு. தாக்கணங்கு - வள்ளி நாயகி, வருத்துகின்ற அழகுடையவள். ஏமாப்பு - களிப்பு. (ரு)*

வேறு

கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட
கோடியிடைக் கடைசியர்குழாம்
குரவையிடு துழனியிற் கொண்டல்திரை யத்தாவு
குழவுப் பகட்டுவாளை
சேடுபடு புத்தேள் நிலத்துப் புனிற்றிளஞ்
சேதா வயிற்றுமுட்டச்
சேங்கன் றெனத்தடவு மடிமடை திறந்தூற்று
தீம்பால் சினைக்கற்பகத்
தேடுபடு தடமலர்த் தேனருவி யோடுசோரிந்
தேரியோடு கால்நிரம்ப
இழுதுபடு கழனியுந் தெய்வமண நாறவென்
றின்சுவை முதிர்ந்துவிளையும்
காடுபடு செந்நெல்பைங் கன்னல்நிகர் புள்ளூர
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தமருளே.

*(சொ - ள்.) கோடுபடு கொங்கைக்கு இளைத்திட்ட கொடி இடைக் கடைசியர் குழாம்-யானைக்கொம்பு போன்ற தனமலையின்*

பாரத்தால் மெலிந்த கொடிபோலும் இடையினையுடைய கடைசியர் கூட்டம், குரவையிடு துழனியில் கொண்டல் திரையத்தாவு குழவு பகட்டுவாளை - குரவைப் பாட்டுப் பாடுகின்ற சத்தத்தினால் மேகங்கள் ஓரிடத்துச்சேரக் குதிக்கின்ற இளமை பொருந்திய பெரிய வாளைமீன்கள், சேடுபடு புத்தேள் நிலத்துப்புனிற்று இளம் சேதா வயிற்றுமுட்ட - பெருமை பொருந்திய தெய்வவுலகத்திலுள்ள ஈன்றணிமையையுடைய இளஞ்சேதாவின் மடியில் முட்டுதலும் - சேங்கன்று எனத் தடவுமடி மடை திறந்துஊற்று தீம்பால்-தனது சேங்கன்று என்றெண்ணிப் பெரிய மடியாகிய மடைதிறந்து ஒழுக்குகின்ற இனிய பாலானது, சினைக்கற்பகத்து ஏடுபடு தடமலர்த் தேன்அருவி சொரிந்தேரியொடுகால் நிரம்ப - கிளைகளையுடைய கற்பகத் தருவிலுள்ள இதழ்களோடு கூடிய பெரிய மலரிலுள்ள தேனனது அருவியாற்றோடு பொழியப்பட்டு ஏரிகளுடன் கால்களும் நிறைய, இழுதுபடு கழனியும் தெய்வமணம் நாறஏன்று - சேறுபட்ட வயல்களும் தெய்வமணம் கமழ ஏற்று, இன்சுவை முதிர்ந்து விளையும் காடுபடு செந்நெல் பைங்கன்னல் நிகர் - இனிய சுவை மிகுந்து விளையும் மிகுதியாகிய செந்நெற்றாள்கள் பசிய கரும்பை நிகர்க்கின்ற, புள்ளூர ! கனிவாயில் முத்தம் அருள்-புள்ளூரனே ! கனிவாயின் முத்தம்அருள், கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன் - கங்காதேவிக்கும் திருமாலின் தங்கையாகிய உமா தேவிக்கும் ஒப்பற்ற புதல்வனே !, கனிவாயின் முத்தம் அருள்-; (எ - று.)

(வி-ம்.) கோடு என்பது கொங்கைக் குவமையாக வந்ததால் யானைக்கொம்பு என்று உரை உரைக்கலாயிற்று. துழனியின் - இன்: ஐந்தாவதன் கருவிப்பொருட்டு. பகட்டு யானை – ஆண் யானை எனினுமாம். சேதா - செந்நிறப் பசு: அழகிய பசு. காடு படுதல் - மிகுதல், மகன் : அண்மைவிளி. (சு)

துளிதூங்கு மழைமுகிற் படலங் கிழிக்கும்
துகிற்கொடிகள் சோலைசெய்யத்
தோரண முகப்பில் தவழ்ந்தேறு கலைமதித்
தோற்றத்தை அறுகான்மடுத்
தளிதூங்கு தேனிறல் இதுதம்மின் வம்மினென்
றழிநறு ஆர்ந்துநிற்கும்
அந்நலார் கைகூப்ப ஆடவர் பிழிந்தூற்றும்
அளவிலப ராதமிதெனு

ஒளிதூங்கு முகமதிக் கோப்பென்கி லேன்விடுதிர்
உயிரொன்று மெனவிடலுமவ்
உடுபதிக் கடவுள்நற வுண்டமற் றவரினும்
உய்ந்தோம் ஒழிந்தோம் எனக்
களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தமருளே.

(சொ - ள்.) *துளிதூங்கு மழைமுகிற் படலம் கிழிக்குந் துகிற்கொடிகள் சோலைசெய்ய* - துளித்தலைப் பொருந்திய குளிர்ச்சியையுடைய மேகக்கூட்டத்தைக் கிழிக்கிற கொடி ஆடைகள் சோலையைப்போல் நிழலைச்செய்ய, *தோரண முகப்பில் தவழ்ந்து ஏறுகலை மதித்தோற்றத்தை* - தோரணம் கட்டின முகப்பில் தவழ்ந்து ஏறுகின்ற கலைகள் நிறைந்த சந்திரனை, *அறுகால் மடுத்து அளிதூங்கு தேன்இருல் இது தம்மின் வம்மின் என்று* - ஆறு கால்களையும் பதித்து, தேனீக்கள் உறங்குகின்ற தேன்கூடாகிய இதனை எடுத்துத் தாருங்கள் வாருங்கள் என்று சொல்லி, *அழிநறு ஆர்ந்து நிற்கும் அந்நலார் கைகூப்ப* - அறிவு அழிதற்கு ஏதுவாகிய கள்ளைக் குடித்து நிற்கின்ற மாதர்கள் கையைக் குவித்து வணங்க, *ஆடவர் பிழிந்து ஊற்றும் அளவில்* - ஆடவர்கள் (சந்திரனாகிய தேனடையை) பிழிந்து வார்க்கும் பொழுது, *இது அபராதம் எனா ஒளிதூங்கும் முகமதிக்கு ஒப்பு என்கிலேன்* - இது குற்றம் என்று ஒளிதங்கிய மாதர்களது முகமாகிய சந்திரனுக்கு யான் நிகர்என்று சொல்லேன், *உயிர் ஒன்றும் விடுதிர் என விடலும்*-உயிர் ஒன்றை மாத்திரம் விடுங்கள் என்று சந்திரன் வேண்ட அவ்வாறே (அவ்வாடவர்கள்) விட்டவுடன், *உடு பதிக்கடவுள் நறவுண்ட அவரினும் உய்ந்தோம் ஒழிந்தோம் எனாக் களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக* - அந்தச் சந்திரன் கள்ளுண்ட அவரிடத்தினின்றும் பிழைத்தோம் ஒழிந்தோம் என்று களிப்புக் கொள்ளுதற்குரிய மாடங்கள் மிகுந்த கந்தபுரியில் எழுந்தருளியுள்ள முருகா!, *கனிவாயில் முத்தம் அருள்*-; *கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன் கனிவாயில் முத்தம் அருள்*-; (எ - று.)

(வி - ம்.) ஆர்ந்து - குடித்து, பருகுதல். உடுபதி - விண்மீன்களின் தலைவன், சந்திரன். உய்ந்தோம் : முற்றெச்சம். அபராதம் - குற்றம். எனா : செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். மற்றவர் என்பதில் மற்று: அசை, (எ)

பூமரு வுயிர்க்குங் கருங்கோங் தளத்துவிரி
பூந்துகட் படலமுமணம்
பொங்கிய நறும்புகைப் படலமுங் காலமழை
பொழிமுகிற் படலஞ்செயத்
தாமரை முகச்சோதி யெழவெழுஞ் சிறுமுறுவல்
தண்ணிலவு செயவெயில்செயத்
தழல்மணிக் கலன்அகல் நிதம்பமோடு வெம்முலை
தடங்கடலு மலையுஞ்செயத்
'தேமரு குழற்கோதை மயிலனீர் கோசிகச்
செம்மலென வேறு புவனம்
செயவும்வல் லீரென மணந்திடை தணந்தவர்சோல்
செஞ்சோற் பசுங்கிளிசோலக்
காமரு மணங்குழைய மாதர்பயில் வேளூர
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தமருளே.

(சொ - ள்.) பூமரு விரிக்குங் கருங் கொந்தளத்துவிரி பூந்துகட் படலமும் மணம் பொங்கிய நறும்புகைப் படலமும் - மலர்கள் மணத்தை வீசுகிற கருங்கூந்தலில் விரிந்த மலர்த்துகட் கூட்டமும் மணமிகுந்த நறிய புகைக் கூட்டமும், காலமழை பொழிமுகிற் படலம் செயத் தாமரை முகச்சோதி எழஎழும் சிறுமுறுவல் தண்நிலவு செய - பருவமழை பொழிகிற மேகத் தொகுதியை நிகர்க்கத் தாமரை மலர்போலும் முகஒளி எழுத லும் தோற்றுகின்ற புன்சிரிப்பானது குளிர்ந்த நிலவைத் தோற்றுவிக்க, தழல்மணிக் கலன்அகல் நிதம்பமொடு வெம்முலை தடங்கடலும் மலையும் செய - நெருப்புப்போலும் மணிக்கலன் கள் வெயிலை யுண்டாக்க அகல் நிதம்பத்துடன் விருப்பத்துக்கு ஏதுவாகிய கொங்கைகள் முறையே பெரிய கடலையும் மலையை யும் போன்றிருக்க, தேமரு குழல்கோதை மயில்அன்னீர் - மணம் பொருந்திய ஐம்பாலின் கூந்தலையுடைய மயிலை நிகர்ப்பவரே!, கோசிகன் செம்மல்என வேறு புவனம் செய்யவும் வல்லீர்என- விசுவாமித்திரன்போல வேறாகிய உலகங்களையும் உண்டாக்க வும் வல்லீரென்று, மணந்து இடை தணந்தவர்சொல் செஞ்

சொல் பசுங்கிளி சொல்ல - கூடி இடையே பிரிந்தவர்கள் சொல்கின்ற செவ்விய சொற்களைப் பைங்கிளிகள் சொல்ல, காமர் மனம் குழையும் மாதர்பயில் வேளூர! - அழகிய மனம் உருகாநின்ற மாதர்கள் சஞ்சரிக்கின்ற வேளூரனே!, கனிவாயின் முத்தம் அருள்-; கங்கைக்கு......முத்தம் அருள்-; (எ - று.)

(வி - ம்.) கொந்தளத்து விரி என்றதனால் முடித்தபோது போதாயிருந்ததென்பது விளங்கிற்று. காலமழை - பெய்ய வேண்டும் பருவத்துப் பெய்கின்ற மழை. தழல் என்னும் அடையால் மணி மாணிக்க முதலிய செம்மணிகளை யுணர்த்தியது. "நிதம்பமொடு வெம்முலை தடங்கடலு மலையும்செய" என்றது முறைநிரனிறை. கௌசிகச் செல்வன்-கோசிக முனிவர் மகன் கௌசிகன். காமரு என்பதில் உகரம் சாரியை. வேளூர் என்பது புள்ளிருக்கு வேளூரை. சடாயுவும் வேதமும் மன்மதனும் பூசித்த தலமாதலின் இப்பெயர் கொண்டது. (அ)

## வேறு

மதியும் நதியும் அரவும் விரவு
மவுலி யொருவன் முக்கணும்
வனச முகமும் அகமு மலர
மழலை யொழுகு சொற்சொலும்
புதல்வ இமய முதல்வி யருள்செய்
புனித அமரர் கோற்றவன்
புதல்வ தழுவு கொழுந குறவர்
சிறுமி குடிகொள் பொற்புய
கதிரு மதியும் ஒளிர ஒளிரும்
ஒளிய அளிய கற்பகக்
கனியின் இனிய உருவ பருவ
மழையின் உதவு கைத்தல
முதிரும் அறிவில் அறிஞர் உணரும்
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே.

(சொ - ள்.) மதியும் நதியும் அரவும் விரவும் மவுலி ஒருவன் முக்கணும் வனச முகமும் அகமும் மலர - சந்திர மண்டலமும் ஆகாய கங்கையும் பாம்பும் கலந்திருக்கப்பெற்ற திருமுடியையுடைய ஒப்பற்றவனாகிய சிவபெருமானது மூன்று கண்களும் தாமரை மலர்போன்ற முகமும் திருவுள்ளமும் மலரும்படி, மழலை ஒழுகு சொற்சொலும் புதல்வ இமய முதல்வி அருள்செய் புனித - மழலைத்தன்மை ஒழுகாநின்ற சொற்களைச் சொல்கிற புதல்வனே ! இமயமலையில் அவதரித்த தலைவியாகிய உமாதேவி ஈன்றருளிய பரிசுத்தனே !, அமரர் கொற்றவன் மகள் தழுவு கொழுந - தேவேந்திரனின் புதல்வியான தெய்வயானையானவள் அணைகின்ற கணவனே !, குறவர் சிறுமி குடிகொள் பொற்புய - குறப்பெண்ணாகிய வள்ளிநாயகி குடிகொண்டிருக்கின்ற அழகிய தோள்களையுடையவனே !, கதிரும் மதியும் ஒளிர ஒளிரும் ஒளிய - சூரியனும் சந்திரனும் ஒளிசெய்ய விளங்குகின்ற ஒளியையுடையவனே !, அளிய கற்பகக் கனியின் இனிய உருவ - கனிந்த கற்பகக் கனியினும் இனிதாகிய திருஉருவம் உடையவனே !, பருவ மழையின் உதவு கைத்தல ! - பருவ மழைபோற் கொடுக்கின்ற கைத்தலத்தையுடையவனே !, முதிரும் அறிவின் அறிஞர் உணரும் முதல்வ ! - பேரறிவையுடைய அறிஞர் அறிதற்குரியனே !, தருக முத்தம் - முத்தம் தருகவே, முனிவர் பரவு பரிதி புரியின் முருக முத்தம் தருக - முனிவர்கள் வழிபடுதற்கு இடமாகிய பரிதிபுரியில் எழுந்தருளியுள்ள முருகனே முத்தம் தருக-; (எ - று.)

(வி - ம்.) குடிகொள் - எஞ்ஞான்றும் இடையறாது தழுவிக்கொண்டிருக்கும். சூரிய சந்திரர்கட்கு அந்தரியாமியாயிருந்து அவரை விளக்குவிப்போனாதலால், 'கதிரும்மதியும் ஒளிர ஒளிரும் ஒளிய' என்றார். ஒளிய என்பதற்கு ஒள்ளியனே என்று உரைப்பினும் ஆம். பருவ மழையின் என்பதில் இன் ஐந்தாவதன் ஒப்புப்பொருளது. முனிவர் - உலகப் பொருள்களில் வெறுப்புடையவர். முனிவு + அர் = முனிவர். கற்பகக்கனியின் இனிய உருவ என்பதற்குக் கற்பகக்கனியினும் இனிமையானவனே ! அழகிய உருவம் வாய்ந்தவனே எனினும் பொருந்தும். அளிய என்பது கனிந்த என்னும் பொருளைத் தந்தது. (௧)

வடிவின் அழகும் எழுத அரிய
புயமும் நறிய செச்சையும்
மருமம் விரவு சூரவும் அரையின்
மணியும் மணிகொள் கச்சையும்

கடவு மயிலும் அயிலு மொழுகு
கருணை வதன பத்மமும்
கமல விழியும் விழியு மனமும்
எழுதி யெழுதி நித்தலும்
அடிக ளெனவு னடிகள் பணியு
மடியர் அலது மற்றும்வே
றமரர் குழுவும் அகில மறையும்
அரியு மயனு முற்றுநின்
முடியு மடியு முணர அரிய
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பரிதி புரியின்
முருக தருக முத்தமே.

(சொ - ள்.) வடிவின் அழகும் எழுதஅரிய புயமும் நறிய செச்சையும் - உன் வடிவழகும் எழுதுதற்கரிதாகிய தோள்களும் நறுவிய செச்சை மலர்மாலையும், மருமம் விரவும் குரவும் அரையில் மணியும் மணிகொள் கச்சையும் - திருமார்பிற் பொருந்திய குரவ மலர்மாலையும் திருவரையிற் கட்டப்பட்ட மணியும் அழகைக்கொண்ட கச்சையும், கடவுமயிலும் அயிலும் ஒழுகு கருணை வதன பத்மமும் கமலவிழியும் விழியும் மனமும் எழுதி எழுதி நித்தலும் - உன்னாற் செலுத்தப்படுகின்ற மயிலும் வேலும் ஒழுகாநின்ற அருளையுடைய முகத்தாமரையும் தாமரை மலர்போலும் கண்களும் அடியார்கள் தமது கண்ணிலும் மனத்திலும் பலகால் எழுதி நாள்தோறும், அடிகள்என உன்அடிகள் பணியும் அடியர் அல்லது - சுவாமிகளே என்று உன் திருவடிகளை வழிபடுகின்ற அடியார்களேயன்றி, மற்றும் வேறு அமரர் குழுவும் அகில மறையும் அயனும் அரனும் - மற்றுமுள்ள வேறாகிய தேவர் கூட்டமும் எல்லா வேதங்களும் திருமாலும் பிரமனும், முற்றும் நின்முடியும் அடியும் உணர அரிய முதல்வ தருக முத்தமே! - முழுதும் உனது தலையையும் காலையும் அறிதற்கரிய முதல்வனே! முத்தம் தருக; முனிவர்......தருக-; (எ - று.)

(வி - ம்.) கடவும் - செலுத்தும், கடவு: பகுதி. முதல்வ: அண்மைவிளி. அரிய, உணர: குறிப்புப் பெயரெச்சங்கள். குர என்பது குரவு என்று உகரமேற்று வந்தது; நிலா - நிலவு என்பதுபோல். வதனபத்மம் முகமாகிய தாமரை மலர் என்று பண்புத்தொகை யுவமமாயிற்று. 'அரியும் அயனும் முற்றுநின்

முடியும் அடியும் உணர அரிய முதல்வ' என்ற தொடரில் எதிர் நிரனிறையணி காண்க. அரி அடியையும் அயன் முடியையும் காணமுடியாதவர் ஆயினர் என்பது குறிப்பு. பருதிபுரி - தினகர நகர், சூரியபுரி. செச்சை குரவு என்பன முதலாகு பெயர்களாய் அவற்றின் மலர்களை யுணர்த்தி அம்மலர்கள் கருவியாகு பெயர் களாய் அவற்றான் இயன்ற மாலைகளை யுணர்த்தினமையால் இரு மடியாகு பெயர்கள். மணிகொள் கச்சையும் எனப் பிரித்து மாணிக்கத்தைக் கொண்டிருக்கின்ற பாம்புக்கச்சை எனினுமாம். பதுமவதனம் என்னது வதனபதுமம் என்றதனால் பதுமத்தின் தோல்வி பெறப்பட்டது. விழியுமனமும் எழுதி என்றது இடை யறாது சேவித்தலையும் சிந்தித்தலையும் குறித்தது. அடிகள் இரண்டனுள் முன்னையது அண்மைவிளி. (௧௦)

## ௬. வருகைப் பருவம்

*[வருகைப் பருவம் என்பது, நடக்கும் பருவக் குழந்தையைத் தம்பால் நடந்து வருமாறு தாய் தந்தை முதலியோர் வேண்டுதல்.]*

செம்பொற் கருங்கழல் அரிக்குரற் கிண்கிணி
சிலம்பொடு கலின்கலினெனத்
திருவரையில் அரைமணி கிணின்கிணின்எனப்பொலந்
திண்தோளின் வளைகலிப்ப
அம்பொற் பகட்டுமார் பிற்சன்ன வீரமும்
ஆரமும் திருவில்வீச
அணிமகர குண்டலம் பரிதிமண் டலமென்ன
அலர்கதிர்க் கற்றைசுற்றப்
பைம்பொற் சுடர்ச்சுட்டி கட்டுசூ ழியமுடன்
பட்டமொளி விட்டெறிப்பப்
பங்கய மலர்ந்ததிரு முகமண் டலந்தோறும்
பனிமுறுவல் நிலவரும்பக்
கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே.

(சொ - ள்.) *செம்பொற் கருங்கழல் அரிக்குரற் கிண் கிணி சிலம்புடன் கலின்கலின்என-செம்பொன்னாற் செய்யப்பட்ட பெரிய கழலிற்பெய்த பருக்கைக் கற்களாகிய (சத்தத்தையுடைய) ஒலியையுடைய கிண்கிணிகள் சிலம்புகளுடன் கலின்கலின் என்று ஒலிக்க, திரு-அரையில் அரைமணி கிணின்கிணின் எனப் பொலம் திண்தோளின் வளைகலிப்ப - திருவரையில் உடைமணி கிணின் கிணின் என்று ஒலிக்க, உறுதியான தோள்களில் வாகு வலயங்கள் ஒலிக்க, அம்பொன் பகட்டு மார்பில் சன்னவீரமும் ஆரமும் திருவில்வீச-அழகிய பொன் நிறமுள்ள அகன்ற மார்பில் அணிந்துள்ள சன்னவீரமும் ஆரமும் அழகிய ஒளியைவீச, அணி மகர குண்டலம்பரிதிமண்டலம் என்ன அலர்கதிர் கற்றைசுற்ற-*

அணியப்பட்ட மகரகுண்டலங்கள் சூரிய மண்டலம்போலப் பரந்த ஒளிப்பிழம்பு வீச, பைம்பொன் சுடர்ச்சுட்டி கட்டு சூழியம் உடன்பட்டம் ஒளிவிட்டு எறிப்ப - பசும்பொன்னால் இயன்ற ஒளியையுடைய சுட்டியும் கட்டப்பட்ட சூழியத்தோடு நெற்றிப் பட்டமும் ஒளிவிட்டு வீச, பங்கயம் மலர்ந்த திருமுக மண்டலம்தொறும் பனிமுறுவல் நிலவுஅரும்ப - தாமரை மலர் போல மலர்ந்த திருமுக மண்டலந்தோறும் குளிர்முறுவலாகிய நிலவுண்டாக, கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக் குமார நாயகன் வருகவே - குடம்போன்ற சாயாத முலைகளையுடைய மலைமகளின் செல்வக் குமாரனாகிய இறைவன் வருக, குரவு கமழ் தரு கந்தபுரியில் அருள் குடிகொண்ட குமரகுருபரன் வருகவே - குராமலர் மணக்கின்ற கந்தபுரியில் அருள் உருவாகக் குடிகொண் டிருந்தாற் போன்ற குமாரக் கடவுளே மேலான ஆசாரியனே வருக; (எ - று.)

(வி - ம்;) செம்பொற் கருங்கழல்: முரண்தொடை. திரு வரையில் அரைமணியை உடைமணிஎன்பர். "உடைமணிகட்டிச் சிறுதேர் உருட்டி உலாத்தருமின் கொடைமணியைத் தந்த பின்னர்" என்றார் மணிவாசகரும். சன்னவீரம் - வெற்றி மாலை. மகர குண்டலம் - மகரமீன் வடிவிற் செய்யப்பட்டதொரு சிறப் பான குண்டலம். மலைப்புதல்வி - பார்வதி. நிலவு - சந்திரிகை. குரவு கமழ்தரு கந்தபுரியாதலால் குமரகுருபரற்கு விருப்புறு திருப்பதியாயிற்றென்க. குராமலர் முருகனுக்குரியது. கலிப்ப, வீச, சுற்ற, எறிப்ப, அரும்ப வருக என முடிக்க. (க)

மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்துகில்
மடித்தலம் நனைப்ப அம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி எம்பிரான்
மார்பினிற் குரவையாடி
முழவுமுதிர் துடியினிற் சிறுபறை முழக்கியனல்
மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை நெளியரவின் வாய்மடுத் திளமானின்
முதுபசிக் கறுகருத்தி
முவிழவுதிர் செம்மேனி வெண்நீறு தூளெழ
மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் திருவிழிகள் சேப்பமுழு
வெள்ளநீர்த் துளையம்ஆடிக்

குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு
குறும்புசெய் தவன் வருகவே
குரவுகமழ் தருகந்த புரியில்அருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே.

(செ - ள்.) மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண் துகில் மடித்தலம் நனைப்ப - இளமைமிகுந்த கனிவாயினின்றும் வடிகிற பசிய தேனானது வெள்ளாடை அணிந்த மடியிடத்தை நனைக்க, அம்மை மணிவயிறு குளிரத் தவழ்ந்துஏறி எம்பிரான் மார்பினில் குரவைஆடி - இறைவியின் அழகாகிய வயிறு குளிர்ச்சியடையத் தாவி ஏறி இறைவனது மார்பினிடத்தே குரவைக் கூத்து ஆடி, முழவுமுதிர் துடியினின் சிறுபறை முழக்கி - முழவொலியினும் மிகுந்த துடியினிடத்தே சிறுபறை முழக்கஞ் செய்து, அனல் மோலிநீர் பெய்து அவித்து - நெருப் பைச் சடைநீரைச் சொரிந்து அணைத்து, முளைமதியை அரவின் வாய் மடுத்து - பிறையை நெளிகின்ற பாம்பின் வாயில் இட்டு, இளமானின் முதுபசிக்கு அறுகுஅருத்தி - மான்கன்றின் பெரும் பசிக்கு அறுகம் புல்லை உண்பித்து, விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூள்எழ மிகப்புழுதி யாட்டு அயர்ந்து - அழகு மிகுந்த செம்மேனியில் மிதித்துத் திருவெண்ணீற்றுத்துகள் எழும் படி மிகுதியாகப் புழுதியாடல் செய்து, விரிசடைக் காட்டில் நின் திருவிழிகள் சேப்ப முழு வெள்ளநீர் துளையம்ஆடி - விரிந்த சடைக்காட்டில் உன் திருக்கண்கள் சிவக்க முழுப்பெருக்கு நீரில் மூழ்கி, குழவுமுதிர் செவ்வி பெருங்களி வரச்சிறு குறும்பு செய்தவன் - இளமை முதிர்கின்ற காலத்தில் பெரு மகிழ்ச்சி யுண்டாகச் சிறு குறும்புகள் செய்தவனே !, வருக-, குரவு............வருக-; (எ - று.)

(வி-ம்.) மோலி - சடை. நீர் - கங்கை. குறும்பு செய்தவன், குமரகுருபரன் : அண்மைவிளிகள். ஏறி ஆடி முழக்க அவித்து, மடுத்து, அருத்தி, அயர்ந்து, ஆடிக் குறும்பு செய்தவன் என முடிக்க. துடி - உடுக்கை என்னும் ஒருவகைப் பறை. துடியும், அனலும், மான் கன்றும் இறைவன் கரத்தில் இருப்பன. கங்கை நீரும், பாம்பும், பிறையும், அறுகம் புல்லும்சடையில் இருப்பன.

இருளற இமைக்குநின் திருவுருவின் அலர்சோதி
இளஞாயி றெனமுளைகையவிழ்ந்
தேவிரி தாமரைக் காடுமுகிழ் நகைநில
வெறிப்ப அலர் குமுதவனமும்

கரைபுரள அலைமோது கடலைக் கலக்குமழ
　　களிறென உழக்கியொருநின்
கண்மலர்கள் செம்மலர்க ளாகமோ கப்பெருங்
　　கலவியங் கடலின்மூழ்கும்
வெருளின்மட நோக்கின்நீரரமகளிர் உடனாடும்
　　விளையாட் டெனத்திரைபொரும்
வெள்ளநீர்ச் சரவணப் பொய்கையந் துறையினீள்
　　வீரர்கள் எனுங்கோளரிக்
குருளைக ளோடும்புனல் குடைந்துவிளை யாடிய
　　குமாரநா யகன் வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
　　குமரகுரு பரன்வருகவே.

*(சொ - ள்.) இருள்அற இமைக்கும்நின் திருஉருவின் அலர் சோதி இளஞாயிறு என - இருள் ஒழியும்படி ஒளிர்கின்ற உன் திருவடிவின் பரந்த ஒளியை இளஞ்சூரியன் என்றெண்ணி, முகைஅவிழ்ந்து ஏடுவிரி தாமரைக் காடும் - மொட்டு விரிந்து இதழ்கள் அலர்ந்த தாமரை மலர்க்காட்டினையும், முகிழ் நகை நிலவு எறிப்ப அலர்குமுத வனமும் - குறுநகையாகிய நிலா வீசுதலால், மலர்ந்த நீலமலர்க்காட்டினையும், கரைபுரள அலைமோது கடலைக் கலக்கும் மழகளிறு என உழக்கி - கரை புரளும்படி அலைமோதுகின்ற சமுத்திரத்தைக் கலக்குகின்ற இளங்களிறுபோலக் கலக்கி, ஒருநின் கண்மலர்கள் செம் மலர்கள் ஆக மோகப் பெருங் கலவிஅம் கடலில் மூழ்கும் - ஒப்பற்ற உன் கண்மலர்களானவை சிவந்த மலர்களாகும்படி மோகமாகிய பெரிய கலவிக்கடலில் மூழ்காநின்ற, வெருளின்மட நோக்கின்நீர் அரமகளிர் உடன்ஆடும் விளையாட்டுஎன-வெருட்சி யோடுகூடிய மடநோக்கினையுடைய நீர்அர மகளிரோடு ஆடு கின்ற விளையாட்டுப்போல, திரைபொரும் வெள்ளநீர்ச் சரவணப் பொய்கைஅம் துறையில் - அலைமோதுகின்ற நீர்ப்பெருக்குடைய சரவணம் என்ற தடாகத்தின் அழகிய துறையில், நீள்வீரர்கள் எனும் கோள்அரிக் குருளைகளோடும் புனல் குடைந்து விளையாடிய குமாரநாயகன் வருக-(வீரவாகுதேவர் முதலிய ஒன்பது) பெரிய வீரர்கள் என்கின்ற கொல்லவல்ல சிங்கக் குட்டிக ளோடும் நீர்குடைந்து விளையாடின குமாரநாயகன் வருகவே, குரவுகமழ்...வருகவே-; (எ - று.)*

(வி - ம்.) இமைத்தல் - ஒளிசெய்தல். குமுதம் - அல்லி. செம் மலர்களாக என்றது செவக்க என்றபடி. கலவி - புணர்ச்சி. குருளை - குட்டி. இது மரபு. "சிங்கக் குருளைக்கிடு தீஞ்சுவையூனை" என்றார் கம்பரும். கலவிக் கடலில் நீர் அரமகளிரோ டாடியது போல ஆடிய குமாரநாயகன் வருக என முடிக்க. (ஙு)

கட்டுண்ட படர்சடைக் காட்டெம் பிரான்வைத்த
கலைமதியோ டையநீஅக்
கவுரிதிரு முடியில்நித் திலமிட் டிழைத்திட்ட
கதிரிளம் பிறையிணைப்பத்
தெட்டுண்ட போல்முழுத் திங்களென் றேக்கறும்
செழுமணிச் சூட்டுமோட்டுச்
செம்பாம்பு பைவிரித் தாடுதலும் ஓடிநின்
சிறுநறுங் குஞ்சிக்கிடும்
மட்டுண்ட பைங்குலைக் காந்தளென் றிணையவம்
மாசுணம் வெருண்டோடலும்
மணிமுடியின் நகுதலையை மற்றெமை நகைத்தியான்
மலரவன் றலைநீமுனம்
குட்டுண்ட தறியாய்கொல் எனஇத ழதுக்கும்
குமாரநா யகன் வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே.

(சொ - ள்.) கட்டுண்ட படர்சடைக் காட்டு எம்பிரான் வைத்த கலைமதியொடு ஐயநீ அக்கவுரி திருமுடியில் நித்திலம் இட்டு இழைத்திட்ட கதிர் இளம்பிறை இணைப்ப - கட்டுப்பட்ட பரந்த சடைக்காட்டில் எம்பெருமான் வைத்த மதிக்கலையுடன் ஐயனே! நீ அந்த உமாதேவியின் திருமுடிக்கண் முத்துக்களால் செய்யப்பட்ட ஒளியையுடைய இளம்பிறையைப் பொருத்த, தெட்டுண்டபோல் முழுத்திங்கள் என்று ஏக்கறும் செழுமணிச் சூட்டுமோடு செம்பாம்பு பைவிரித்து ஆடுதலும் - தெளிந்தது போல நிறைநிலா என்று நினைத்து ஏங்குகின்ற மாணிக்கத்தோடு கூடிய உச்சியையும் பெருமையையும் உடைய செம்பாம்பானது படம் விரித்தாடுதலும், ஓடிநின் சிறுநறுங் குஞ்சிக்கு இடும்

மட்டுண்ட பைங்குலைக் காந்தள் என்று அணைய - (நீ அதனைக் கண்டு) ஓடி உனது சிறிய நறிய குஞ்சியில் முடித்தற்கு உரிய தேனோடு கூடிய பசிய குலைகளையுடைய காந்தள் மலர் என்று நெருங்க, அ மாசுணம் வெருண்டு ஓடலும் - அந்தப் பாம்பு அஞ்சி ஓடியவுடன், மணிமுடியில் நகுதலையை மற்று எமை நகைத்தியால் மலரவன் தலைநீ முனம் குட்டுஉண்டது அறியாய் கொல் - அழகாகிய சடையில் சிரித்துக்கொண்டிருக்கிற தலையை நீ கண்டு எம்மை நோக்கிச் சிரிக்கின்றனை யாதலால் பிரமன் தலையே! நீ முற்காலத்தில் குட்டுப்பட்டதை அறிந்திலைபோலும், என இதழ் அதுக்கும் குமார நாயகன் வருக-என்று உதட்டை அதுக்கிச் சினந்து நோக்கும் குமாரநாயகன் வருகவே, குரவு கமழ்......வருக-; (எ - று.)

(வி - ம்.) அறுகு, ஆத்தி, பாம்பு இவை அடங்குதற்குரிய பரப்பினையுடைத்தாதலால் படர்சடை என்று கூறினர். 'வெள் ளந்தாழ் விரிசடையாய்' என்றார் மணிவாசகரும். மலரவன்தலை : அண்மைவிளி. குட்டுண்டது : செயப்பாட்டுவினை. (ச)

அங்கைத் தலத்தம்மை செங்கண் புதைத்தற்
கடங்காமை யாலெம்பிரான்
அலர்விழிகள் பொத்தலும் இருட்படல மூடவுள்
அஞ்சிநின் றேங்கஏங்கிச்
செங்கைத் தலங்கோண் டெடுத்தணைப் பாட்கும்
திருத்தாதை யார்க்கும்முத்தம்
திருமுகமோ ராறும் கொடுப்பக் கதுப்பில்
தெறித்துமுத் தந்தருகெனும்
கங்கைக்கு நல்கா தெழுந்தலறி யோடலும்
கண்ணீர் துடைத்தெடுத்துக்
கால்மலரு நீவித்தன் மார்புற அணைக்குமக்
கவுமாரி அருள்மாரியில்
கோங்கைக் குடங்கோட்டு பாலருவி யாடும்
குமாரநா யகன் வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே.

(சொ - ள்.) அங்கைத் தலத்து அம்மை செங்கண் புதைத்தற்கு அடங்காமையால் எம்பிரான்-அங்கைத்தலத்தால் இறைவியின் சிவந்த கண்கள் மூடுதற்கு அடங்காமையினால் எம் இறைவனது, அலர்விழிகள் பொத்தலும் இருட் படலம் மூட - பரந்த கண்களைப் பொத்துதலும் இருட் கூட்டம் மூடிக்கொள்ள, உள் அஞ்சி நின்று ஏங்கி செங்கைத்தலம்கொண்டு எடுத்து அணைப்பாட்கும் - மனம் அஞ்சி இரங்கிச் செங்கைத் தலத்தால் எடுத்து அணைத்துக் கொள்பவளாகிய உமாதேவிக்கும், திருத் தாதையார்க்கும் திருமுகம் ஓர் ஆறும் முத்தம் கொடுப்ப - திருத் தந்தையாகிய சிவபிரானுக்கும் ஆறு திருமகங்களும் முத்தம்கொடா நிற்க, கதுப்பில் தெறித்து முத்தம் தருக எனும் கங்கைக்கு - கன்னத்தில் அறைந்து முத்தம் தருக என்கின்ற கங்கைக்கு, நல்காது எழுந்து அலறி ஓடலும் - கொடாமல் எழுந்து அலறிக்கொண்டோடலும், கண்ணீர் துடைத்து எடுத்து கால்மலரும் நீவி - கண்ணீரையும் துடைத்துப் போக்கித் திருவடி மலரையும் தடவி, தன் மார்புஉற அணைக்கும் அ கவுமாரி - தன் மார்பிற் பொருந்த அணைக்கின்ற அந்த உமாதேவியாரின், அருள்மாரியின் கொங்கைக் குடம் கொட்டு பால் அருவி ஆடும் குமார நாயகன் வருக - அருள்மழைபோல அவளுடைய கொங்கைக் குடங்கள் கொட்டுகின்ற பால் அருவியில் விளையாடுகின்ற குமாரநாயன் வருக, குரவுகமழ்.........வருக-: (எ - று.)

(வி - ம்.) அம்மை விழிகள் 'பேசத் திருவார்த்தையிற் பெரு நீளம் பெருங் கண்களே' என்றபடி மிகப் பெரியவாதலால் அங்கைத்தலத்து அம்மை செங்கண் புதைத்தற்கு அடங்காமையால் என்றார். கால்மலர் என்றமையால் மலரினும் சிறந்தது கால் என்பதாயிற்று. நீவல் - துடைத்தல். கால்மலர் உருவகம். அருள்மாரி என்பதும் அது. (௫)

வேறு

பைந்தண் கமல வட்டஅணைப்
பாவை அனையார் பூவிரியும்
பசுமென் குழற்கூட் டகிற்புகையின்
படல மூட முடைநறவின்
கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க்
கடைசி மகளிர் செந்நெலைப்பைங்
கன்னல் எனவும் கன்னலைப்பூங்
கமுகம் எனவும் கடைக்கூடாத்

தந்தம் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறும்
சமயத் தவர்போல் தலைமயங்கும்
அந்தண் பழனக் கந்தபுரிக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே.

(சொ - ள்.) பைந்தண் கமல வட்டவணைப் பாவை அனையார் பூவிரியும் பசுமென் குழற்கு ஊட்டு அகிற்புகையின் படலம் மூட - பசுமையும் குளிர்ச்சியும் உள்ள தாமரை மலராகிய வட்டவணையிலுள்ள சித்திரம்போலும் திருமகளை நிகர்த்த மாதர், பூக்கள் மலர்கின்ற பசிய மெல்லிய கூந்தலுக்குக் காட்டுகின்ற அகிற்புகையின் கூட்டம் மூடாநிற்க, முடைநறவின் கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க் கடைசி மகளிர் - ஒருவகை நாற்றம் பொருந்திய கள்ளின் மணம் வீசும் செய்ய பவளம் போன்ற வாயையுடைய மருதநிலப் பெண்கள், செந்நெலைப் பைங்கன்னல் எனவும் கன்னலைப் பூங்கமுகம் எனவும் - செந்நெற் பயிரைப் பசிய கரும்பு என்றும் கரும்பைப் பொலிவாகிய கமுகமரம் எனவும், கடைக்கூடா தந்தம் கருத்துக்கு அமைந்தபடி சாற்றிச் சாற்றி - முடிவு தெரியாமல் தந்தம் மனத்தில் தோன்றினவண்ணம் சொல்லிச் சொல்லி, முழுமாயச் சலதி மூழ்கி - முழுமாயக் கடலில் மூழ்கி, தடுமாறும் சமயத்தவர்போல் தலைமயங்கும் அம்தண் பழனம் கந்தபுரிக்கு அரசே வருக வருக - தடுமாறுகின்ற சமயவாதிகள்போல் தடுமாறுகின்ற அழகிய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த கந்தபுரிக்கு அரசனே வருக வருக, அருள் ஆனந்தக் கடற் பிறந்த அமுதே வருக வருக - அருளோடு கூடிய ஆனந்தக்கடலில் தோன்றிய அமுதமே வருக வருக-; (எ - று.)

(வி - ம்.) பைந்தண் கமல வட்டவணை என்னும் அடையால், பாவை, என்பது திருமகளை யுணர்த்திற்று. கந்தம்-சுகந்தம் துர்க்கந்தம் இரண்டையும் குறிப்பதாயினும் ஈண்டுத் துர்க்கந்தமே கொள்க. கடைசிமகளிர் கள்ளுண்ட பெருங் களிப்பானும் புகைப் படலம் மூடலானும் செந்நெல்லைக் கன்னல் எனவும் கன்னலைக் கமுகமெனவும் தலைமயங்குவாராயினர் என்க. கடைக் கூடா தந்தங் கருத்துக்கு அமைந்தபடி சாற்றிச் சாற்றி முழுமாயச் சலதி மூழ்கித் தடுமாறுஞ் சமயத்தவர் போல முடைநறவின் கந்தம்

பொதிந்த செந்துவர்வாய்க் கடைசி மகளிர் தலைமயங்கும் அந்தண் பழனக் கந்தபுரிக் கரசே! வருக என முடித்துக் கொள்க. "சமயவாதிகள் தத்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைந் தனர்" என்றற் றொடக்கத்து ஆன்றோர் திருவாக்குக்களானும் சமயத்தவர் இழித்துக் கூறப்பட்டிருத்தல் காண்க. அருளா னந்தக் கடல் என்றது சிவபெருமானை. "ஆனந்தமாய் ஆடு சிற்றம்பலம்" என்றார் மாணிக்கவாசகப் பெருமானாரும். (சு)

வள்ளைக் குழையில் தாவடி போம்
மடமா ஞேக்கிற் கடைசியர்கண்
மாலைக் குழல்வண் டோலமிட
மடுவில் வெடிபோம் வரிவாளை
பள்ளத் திருள்தூங் கழுவநீர்ப்
பரப்பென் றகல்வான் மிசைத்தாவப்
பாகீ ரதித்தீம் புனல்கிடைத்த
பரிசு வீட்டின் பயன்துய்க்கும்
உள்ளக் கருத்தாற் பிறிதோன்றை
உண்மைப் பொருளேன் றுள்ளவுந்தம்
உணர்வில் தெய்வங் கடைக்கூட்ட
உறுதி கிடைத்த படிபோலும்
அள்ளற் பழனப் புள்ளுருக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே.

(சொ - ள்.) வள்ளைக் குழையில் தாவடிபோம் மடமான் நோக்கிற் கடைசியர்கண் மாலைக் குழல்வண்டு ஓலம் இட- வள்ளைத்தண்டு போன்ற காதில் அணிந்த குழைமீது போர் செய்யப்போகின்ற மடமான் நோக்கத்தையுடைய மருதநில மாதர்களுடைய பூமாலை மலர்ந்த கூந்தலில் மொய்த்த வண்டுகள் ஒலிக்க, (அவ்வொலி கேட்டு) மடுவில் வெடிபோம் வரிவாளை பள்ளத்து இருள் தூங்கு அழுவம் என்று - பொய்கையிலிருந்து தாவிச்சென்ற கீற்றுக்களையுடைய வாளைமீன்கள் இருள்நிறைந்த பள்ளமாகிய கடல் நீர்ப்பரப்பென்று நினைத்து, அகல்வான்மிசை தாவப் பாகீரதி தீம்புனல் கிடைத்த பரிசு - அகன்ற ஆகாயத்தின்

மேற் குதிக்க ஆகாயகங்கையின் இனியநீர் கிடைத்த தன்மை யானது, வீட்டின் பயன் துய்க்கும் உள்ளக்கருத்தால் பிறிது ஒன்றை உண்மைப் பொருள் என்று உள்ளவும்-வீட்டின் பயனைத் துய்க்க வேண்டுமென்ற உள்ளக் கருத்தால் வேறொன்றை மெய்ப் பொருள் என்று நினைக்கவும், தம் உணர்வில் தெய்வம் கடைக் கூட்ட உறுதிப் பொருளானது கிடைத்தபடி போலும் - தமது அறிவிலுள்ள தெய்வமானது முற்றுவிக்க உறுதிப்பொருளா னது கிடைத்த தன்மையை நிகர்க்கின்ற, அள்ளற் பழனப் புள் ளூருக்கு அரசே வருக வருக - சேற்றையுடைய வயல்கள் சூழ்ந்த புள்ளூருக்கு அரசனே வருக வருக, அருளானந்தக் கடற்பிறந்த அமுதே வருக வருக-; (எ - று.)

(வி - ம்) வள்ளை : உவமையாகு பெயர். குழை - காதணி. தாவடி - போர். கள் மாலைக்கு உழல் எனப் பிரித்துத் தேனின் பொருட்டுப் பூமாலையில் உழல்கின்ற என்றுரைப்பினும் ஆம். வெடிபோதல்-இஃது ஒருசொல், துள்ளி வெளிப்போதல் என்பது பொருள். பாகீரதி: தத்திதாந்த நாமம், பகீரதனால் பூவுலகிற்குக் கொண்டுவரப்பட்டது. (எ)

நஞ்சில் தோய்த்துக் கொலைதீற்றும்
நயன வேலும் கரும்புருவ
நாமச் சிலையும் அகலல்குல்
நகுபொன் தேரும் இகல்கடந்து
வஞ்சிக் கொடிநுண் இடைசாய்த்து
மதர்த்துக் களித்த மால்களிறும்
மற்றும் படைகள் பற்பலவும்
வகுத்துக் கொண்டு மடலவிழ்ந்த
கஞ்சத் தவிசில் திருவன்னார்
கடலந் தானைக் கைநிமிரக்
காமன் படைவீ டெனப்பொலியும்
காட்சி யானும் அப்பெயரிட்டு
அஞ்சொல் தமிழோர் புகழ்வேளூர்க்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே.

(சொ - ள்.) நஞ்சில் தோய்த்துக் கொலைதீற்று நயன வேலும் கரும்புருவ நாமச் சிலையும் அகல் அல்குல் நகுபொற் றேரும் - விடத்தில் தோய்த்துக் கொலை பூசிய கண்களாகிய வேற் படைகளையும், கரிய புருவம் என்னும் பெயரையுடைய வில்லினை யும், அகன்ற அல்குலாகிய விளங்குகின்ற பொற்றேரினையும், இகல்கடந்து வஞ்சிக்கொடி நுண்இடை சாய்த்து - பகைவரை வென்று, வஞ்சிக்கொடி போலும் நுண்ணிய இடையை வருத்தி, மதர்த்துக் களித்த மால்களிறும் - மதர்த்துக் களித்திருக் கின்ற மத மயக்கத்தையுடைய யானைகளையும், மற்றும் படைகள் பற்பலவும் வகுத்துக்கொண்டு-மற்றுமுள்ள படையாகிய பற்பல வற்றையும் ஏற்படுத்திக்கொண்டு, மடல் அவிழ்ந்த கஞ்சம் தவிசில் திருஅன்னார் - இதழ்விரிந்த தாமரை மலர்ப் பீடத்தில் வீற்றிருக்கின்ற இலக்குமியை நிகர்ப்பவராகிய பெண்கள் என்ற, கடல்தானை கைமிரக் காமன்படை வீடு எனப் பொலியும் காட்சியானும் - சேனைக்கடலானது மிக்குவர மன்மதனது படை வீடு என்று சொல்லும்படி விளங்குகின்ற தோற்றத்தாலும், அப் பெயர் இட்டு அம்சொல் தமிழோர் புகழ்வேளூர்க்கு அரசே வருக வருக - அந்தப் பெயரையே யிட்டு அழகிய சொல் இலக்கணம் வல்ல தமிழ் நூலோர் புகழ்கின்ற வேளூர்க்கு அரசனே வருக வருக; அருளானந்தக் கடற்பிறந்த அமுதே வருக, வருக-; (எ - று.)

(வி - ம்.) தோய்த்தல் - நனைத்தல். மால்களிறு - மயக்கத் தைத் தரும் யானை; இங்கு நுண்இடை சாய்த்து என்ற குறிப்பி னாற் கொங்கையை யுணர்த்திற்று. கஞ்சம்-கம்சம், நீரில் தோன்று வது, கஞ்சத்தவிசிற்றிரு என்றதனால், செந்தாமரையாயிற்று. காமன் படைவீடாய்த் தோன்றுங் காட்சியால் இதற்கு வேளூர் எனப் பெயர் கூறுவர் தமிழர். (அ)

வேறு

உலகு குளிர எமது மதியில்
ஒழுகும் அமுத கிரணமே
உருகும் அடியர் இதய நெகிழ
உணர்வி லெழுந லுதயமே
கலையும் நிறையும் அறிவும் முதிர
முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய
கருணை பெருகு சலதியே

அலகில் புவன முடியும் வெளியில்
அளியும் ஒளியின் நிலையமே
அறிவுள் அறிவை அறியு மவரும்
அறிய அரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய
மதலை வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின்
மருவு குமரன் வருகவே.

(சொ - ள்.) *உலகு குளிர எமது மதியில் ஒழுகும் அமுத கிரணமே - உலகம் குளிரும்படி எமது அறிவில் ஒழுகுகின்ற சந்திரனே!, உருகும் அடியர் இதயம் நெகிழ உணர்வில் எழும் நல் உதயமே! - உருகாநின்ற அடியார்களுடைய இதயமானது நெகிழும்படி அறிவினிடத்துத் தோன்றுகின்ற நல்ல சூரியனே!, கலையுள் நிறையும் அறிவும் முதிர முதிரும் மதுரம் நறவமே! - நூல்களால் நிறைந்த உணர்வும் முதிரும்படி முதிர்கின்ற இனிய தேனே!, கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே - குற்றமற்ற ஞானியர் முழுகுவதற்குரிய பெரிய கருணைநீர் பெருகுகின்ற கடலே!, அலகுஇல் புவனம் முடியும் வெளியில் அளியும் ஒளியின் நிலையமே - அளவில்லாத புவனங்கள் யாவும் முடிகின்ற வெளியிடத்தில் முதிர்ந்த ஒளிக்குப் பிறப்பிடமே!, அறிவுள் அறிவை அறியும் அவரும் அறிய அரிய பிரமமே! - அறிவுக்கு அறிவாயிருப்பதை அறிகிறவராகிய ஞானிகளும் அறிதற்கரிதாகிய பிரமமே!, மலையின் மகள் கண்மணியை அனைய மதலை வருக வருக - மலைமகளது கண்மணியை நிகர்த்த புதல்வனே! வருக வருக; வளமைதழுவு பருதிபுரியின் மருவு குமரன் வருக - வளங்கள் யாவும் பொருந்திய பரிதிபுரியில் எழுந்தருளிய குமரனே வருக;* (எ - று.)

(வி - ம்.) *துகள் கழுவினாரைக் கழுவு துகளர் என்றார்; பற்றுவிட்டவர் என்பதை விட்ட பற்றினர் என்பது போன்றது. வடமொழியில் இதனை விகுதி பிரித்துக்கூட்டல் என்பர். துகள் + அர் = துகளர். இதிலுள்ள அர் என்ற விகுதியைப் பிரித்து கழுவு என்ற முதனிலையோடு சேர்த்துத் துகள் கழுவுவர் எனக் காண்க. 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' 'உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்' என்று இறைநிலை யுணர்ந்தோர் கூறுதலான், "அறிவுள் அறிவை அறியும் அவரும் அறிய அரிய பிரமமே" என்றார். சூரியன் பூசித்த திருப்பதியாதலால் பருதிபுரி என்று இப்பதிக்குப் பெயர் வழங்கும்.* (௧)

இழுமென் அருவி சோரியும்இமய
முதல்வி புதல்வன் வருகவே
இயலு நடையும் வடிவு மழகு
மெழுத அரியன் வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல
வதனன் வருக வருகவே
ஒருவன் இருவ ரோடுகை தொழுநல்
உபய சரணன் வருகவே
விழுது விடுவெ ணிலவு பொழியும்
நகையன் வருக வருகவே
விளரி பயிலும் அளியும் ஞிமிறும்
விரவு குரவன் வருகவே
மழலை முதிர முதிரு மதுர
வசனன் வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின்
மருவு குமரன் வருகவே.

(சொ - ள்.) இழும்என் அருவி சொரியும் இமய முதல்வி புதல்வன் வருக - இழும் என்னும் அருவிகளைச் சொரிகின்ற இமயமலையிற் பிறந்த தலைவியின் புதல்வனே வருக, இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியன் வருக - இயலையும் நடையையும் வடிவையும் அழகையும் எழுதுதற்கு அரியனாஅனவனே! வருக, ஒழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருக - ஒழுகாநின்ற அருள் வெள்ளத்தில் மூழ்கியிருக்கின்ற தாமரை முகனே வருக, ஒருவன் இருவரொடு கைதொழும் நல் உபய சரணன் வருக-ஒப்பற்றவனாகிய சிவபெருமான் பிரமன் திருமால் ஆகிய இருவரோடு கைகுவித்து வணங்குகின்ற நல்ல இரு சரணனே வருக, விழுதுவிடு வெண்நிலவு பொழியும் நகையன் வருக-விழுதுவிட்ட வெண்ணிலவைச் சொரிகின்ற நகையுடையவனே வருக, விளரி பயிலும் அளியும் ஞிமிறும் விரவு குரவன் வருக-விளரியைப் பயில்கின்ற கருவண்டும் பொன்வண்டும்கலந்து வாழ்கின்ற குராமலர் மாலையையுடையவனே வருக, மழலைமுதிர முதிரும் மதுரவசனன் வருக வருக - மழலைமொழி முதிராநிற்க முதிர்கின்ற இனிமையாகிய சொல்லுடையவனே வருக; (எ-று.)

(வி - ம்.) விளரி-ஏழிசையில் ஒன்று; நெஞ்சிற் பிறப்பது. இதனை 'யாழோசை' எனவுங் கூறுவர். முழுகு என மேல் வருதலால் கருணை வெள்ளம் என்றுரைக்க. புதல்வன், அரியன், வதனன், சரணன், நகையன், குரவன் வசனன் என்பன அண்மைவிளிகள். (கo)

---

## எ. அம்புலிப் பருவம்

*[வானத்திலுள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடு தற்குச் செவிலித்தாயர் முதலியோர் அழைக்கின்ற பருவம். அம்புலி - நிலவு; அழகு பொருந்தியது என்னும் பொரு ளுடையது.]*

மண்டலம் போற்றுருவம் அமுதமய மாய்முழு
மதிக்கடவு ளெனவருதலால்
வானாறு தலைமடுக் கப்பொங்கும் ஆனந்த
மாக்கடல் இடைத்தோன்றலால்
தண்டலில் கொடிச்சிவாய்க் குமுதம்விள் ளக்கரத்
தாமரை முகிழ்த்திடுதலால்
சகலபுவ னத்திலும் உயிர்ப்பயிர் தழைப்பகல்
தண்ணளி சுரந்திடுதலால்
துண்டமதி நதியோடு போதிந்தவே ணிப்பரஞ்
சோதிகட் பொறியாதலால்
தோன்றலிவன் நின்னையொத் துளனால் நினக்குமொரு
துணையிவன் போலில்லைகாண்
அண்டரண் டத்தொடகி லாண்டம் படைத்தவனொ
டம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) *மண்டலம் போற்றுருவம் அமுத மயமாய்முழு மதிக்கடவுள் என வருதலால் - எல்லா உலகங்களும் வணங்குதற் குரிய வடிவமானது முத்தியுருவமாக முற்றறிவையுடைய தெய்வம் என வருதலாலும், வான்ஆறு தலைமடுக்கப் பொங்கும் ஆனந்த மாக்கடல் இடைத் தோன்றலால் - ஆகாய கங்கை தலைமடுத்துப் பொங்குகிற இன்பக்கடல் ஆகிய சிவபெருமா னிடத்தில் தோன்றுதலாலும், தண்டல்இல் கொடிச்சிவாய் குமுதம் விள்ள கரத்தாமரை முகிழ்த்திடுதலால் - தடைஇல்லாத குறத்தி வாயாகிய குமுதமலர் விரியும்படி கையாகிய தாமரை யைக் கூப்புதலாலும், சகல புவனத்திலும் உயிர்ப்பயிர் தழைப்ப*

நல் தண்அளி சுரந்திடுதலால் - எல்லா உலகங்களிலும் உள்ள உயிர்களாகிய பயிர்கள் செழிக்க நல்ல திருவருளைத் தோற்றுவிக்கின்றமையாலும், துண்டமதி நதியொடு பொதிந்தவேணி பரஞ்சோதி கட்பொறி ஆதலால் - பிறைமதியைக் கங்கையுடன் அணிந்த சடாபாரத்தையுடைய சிவபெருமானுடைய கண்ணிற் றோன்றிய தீப்பொறியாக வந்ததாலும், தோன்றல் இவன் நின்னை ஒத்துளன் ஆல் நினக்கும் இவன்போல் ஒரு துணை இல்லை - தோன்றலாகிய இவன் நின்னை ஒத்திருக்கின்றானாதலால் உனக்கும் இவனைப்போல் ஒரு துணைவர் வேறு ஒருவருமிலர். (ஆதலால்), அண்டர் அண்டத்தொடு அகில அண்டம் படைத்தவனோடு அம்புலீ ஆடவா - தேவலோகத்தோடு எல்லா உலகங்களையும் படைத்தவனாகிய இவனுடன் சந்திரனே விளையாட வருவாயாக, அழகுபொலி கந்தபுரி தழைய வரு கந்தனுடன் அம்புலீ ஆடவா - அழகானது மிக்கு விளங்குகின்ற கந்தபுரி செழிக்க எழுந்தருளிய கந்தனுடன் அம்புலீ ஆடவா-; (எ - று.)

(வி - ம்.) இது முருகனுக்கும் மதிக்கும் சிலேடை. முன் கூறிய பொருள் முருகனுக்குப் பொருந்தியது. சந்திரனுக்குக் கூறும்போது, அமுத வடிவமாகி நிறைந்த சந்திரன் ஆகிய தெய்வம் என்று யாவரும் சொல்லும்படி வருதலாலும், ஆகாய கங்கை தன்பக்கஞ் சேர மிகுந்த ஆனந்தமாகக் கடலினின்று எழுந்து வருதலாலும், கொடியின் இடத்துள்ள அல்லி மலர்கள் விரியவும் ஒளியுள்ள தாமரைமலர்கள் குவியவும் வருவதாலும், மக்கட்கு உயிர் என்று சொல்லுகின்ற பச்சைப் பயிர்கள் செழிக்கும்படி குளிர்ச்சியைப் பெருக்கிக்கொடுப்பதாலும், சிவபெருமானுடைய கண்களில் ஒரு கண் என்ற பொறியாக இருப்பதாலும் எனப் பொருள் கொள்க. இப்பொருட்கு, கொடிச்சி - கொடி, வாய் - இடம், கரம் - ஒளி, தண்ணளி - குளிர்ச்சி எனக் கொள்க; தண்ணளி: ஒருபொருட் பன்மொழி.

வா + ஏ = வாவே, ஏ இரண்டும் ஈற்று அசையாய் நின்றன. இந்தப் பருவம் சந்திரனை நோக்கி நால்வகை உபாயத்தாலும் அழைத்ததாகக் கூறப்படுதல் கவி மரபாதலால், அவ்வுபாயங்களை அவ்வச் செய்யுட்களின் கீழ்க் குறித்திருத்தல் காண்க. நால்வகை உபாயங்கள்: சாமம் பேதம் தானம் தண்டம் என்பன. அவற்றுள் சமப்படுத்திக் கூறல் சாமம் என்றும், வேறுபடுத்துக் கூறல் பேதம் என்றும், வேண்டிய தொன்றைக் கொடுப்பதாகக் கூறல் தானம் என்றும், தண்டிப்பதாகக் கூறல் தண்டம் என்றும் கூறப்படும். மண்டலம்: இடவாகுபெயர். அமுதமயமாய் என்பதை முருகனுக்குக் கூறும்போது இன்ப வுருவாக என்றும் பொருள் கொள்ளலாம். ஆனந்தமாக் கடல் என்றது சிவபெருமானை.

(க)

சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினாய்
தோற்றிமுன் பொங்கிமலை போலஅலை மோதுமச்
சோதிவே லையுமுகந்தாய்
குற்றமில் குணத்தைக் குறித்தஇர வலர்முகம்
கோடா தளித்தல் செய்தாய்
கோகனக நாயகன் வரக்கூ விடுங்குக்
குடங்கொடிய தாகவைத்தாய்
உற்றிடும் இதழ்க்குமுதம் விண்டுதண் தேனொழுக
ஒளிநிலா நகைமுகிழ்த்தாய்
உன்செய்கை யெம்பிரான் தன்செய்கை போலுமால்
உனையுமிவ னொவ்வாதிரான்
அற்போதி களத்தவன் அளித்தகும ரேசனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(பொ - ள்.) *சொல்தரு பெரும்புலவர் கலைஅமுது கொள இருந்து ஓகைமேல் கொண்டருளினாய் - புகழ்பெற்ற பெருந்தேவர் நின் கலையாகிய அமுதத்தைக்கொள்ள இருந்து மகிழ்ச்சியைக் கொண்டருளினாய், தோற்றிமுன் பொங்கி மலைபோல அலை மோதுமச் சோதிவேலையு முகந்தாய்-எதிரே தோன்றி மலைபோல அலைமோதுகின்ற அந்த ஒளியுள்ள கடலையும் உவந்தனை, குற்றம் இல் குணத்தைக் குறித்த இரவலர் முகம் கோடாதளித்தல் செய்தாய் - குற்றமில்லாத குணத்தையுடைய இரவில் மலர்கின்ற மலர்களின் முகம் கோடாது காத்தனை, கோகனக நாயகன் வரக் கூவிடுங் குக்குடம் கொடியதாக வைத்தாய் - தாமரை நாயகன் ஆகிய சூரியன் வரக் கூவுகின்ற சேவற் கோழியைக் கொடிய பொருள் ஆக வைத்தனை, உற்றிடும் இதழ்க் குமுதம் விண்டுதண் டேனொழுக வொளிநிலா நகை முகிழ்த்தாய் - பொருந்திய இதழ்களையுடைய குமுத மலர் விரிந்து குளிர்ந்த தேன் ஒழுகும்படி ஒளிநிலாவைத் தோற்றுவித்தாய், உன்செய்கை எம்பிரான் தன் செய்கை போலுமால் உனையும் இவன் ஒவ்வாது இரான் - உன் செய்கைகள் எல்லாம் எம்பெருமானின் செய்கைகளை ஒத்திருக்*

கின்றன ஆதலால் இவன் உன்னையும் நிகர்க்காமலிருக்கமாட்டான், அல்பொலி களத்தவன் அளித்த குமரேசனுடன் அம்புலீ ஆடவா - இருட்டுப்போல் விளங்குகின்ற நீல கண்டத்தை யுடையவனாகிய சிவபெருமான் பெற்ற குமாரக் கடவுளுடன் அம்புலீ விளையாடவா, அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா - ; (எ - று.)

(வி - ம்.) முருகன் செய்கையாகக் கூறும்போது, "சொல் மாலை சூட்டுகின்ற பெரிய புலவோராகிய நக்கீரர் முதலியவர்களது தமிழ்க்கலைச் சுவையாகிய அமுதத்தைக் கொள்வதற்காகப் பெரிய மயிலின்மேல் வந்தருளினான்; எதிரே தோன்றிச் சினமிகுந்து கிரவுஞ்சமலையை மோதியதுபோல அலைவீசுகின்ற கடலையும் மோதிக்கெடுத்த அந்த ஒளியுள்ள வேற்படையையும் விரும்பினான்; குற்றமில்லாத குணத்தைப் பொருந்திய ஏற்பவரிடத்தில் நடுநிலைமையாக இருந்து அவர்களைக் காத்தருளினான்; சூரியன் உதிக்கும்போது கூவுகின்ற கோழிச் சேவலைக் கொடியாக உயர்த்துக் கட்டியிருக்கின்றான்; பொருந்திய வாயாகிய செவ்வல்லிமலர் விரிந்து குளிர்ந்த தேன்போன்ற எச்சில் ஒழுக ஒளிநிலாப் போன்ற புன்முறுவல் செய்தான்" எனப் பொருள் கொள்க.

புலவர் - தேவர்க்கும் கற்றறிந்தார்க்கும் பெயர். ஓகை - உவகை என்பதன் மரூஉ. தோகை - சினையாகு பெயராய் மயிலையுணர்த்தியது. இராமலர் - இரவில் மலருங் குமுதம் போல்வன. கொடியதாக வைத்தாய்-(சேவலை) பகையாக வைத்திருக்கின்றாய். சந்திரனுக்குப் பகைவன் சூரியன் ஆதலால் அப்பகைவனை வரக் கூவுங் கோழியும் பகையென்பது கருத்து. இதழ் - சந்திரனுக்குப் பூ இதழும், குமரனுக்கு வாய் இதழும், ஆம். இவ்விரண்டும் சாமம் என்னும் உபாயத்தாற் கூறப்பட்டன. (உ)

கங்கைமுடி யடிகட்கோர் கண்ணா யிருத்தியக்
　　கண்ணினுள் மணியிவன்காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதியிவ னென்றுமொண்
　　கலைமுழுதும் நிறையநின்றான்
எங்குமிர வோனெனத் திரிதியிவன் அடியவர்
　　எவர்க்கும்இர வினையொழித்தான்
இருநிலத் தங்குரிக் கும்பயிர் வளர்த்தியிவன்
　　எவ்வுயிரும் வாழச்செய்தான்

பொங்கமுதம் அமுதா சனர்க்குதவி னுயிவன்
புத்திமுத் தியுமளித்தான்
புவனம் படைத்த இவன் நின்னின் மிக்கானெனப்
புகல்வதோர் பொருளன்றுகாண்
அங்கண்மறை யோலிட் டரற்றநின் றவனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபோலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(பொ - ள்.) கங்கைமுடி, அடிகட்கு ஓர் கண்ணாய் இருத்தி அக் கண்ணின் உள்மணி இவன்காண் - (நீ) கங்கையைத் தலையணியாகக் கொண்ட சிவபெருமானுக்கு ஒரு கண்ணாயிருக்கிறாய், இவன் (குமரன்) அந்தக் கண்ணுள்ளே மணியாய் இருக்கிறான், கலைகள்சில நிறைதிபின் குறைதி - நீ சிலநாள் கலைகள் நிறைகிறாய் பின்னே குறைகிறாய், இவன் என்றும் ஒண்கலை முழுதும் நிறைய நின்றான் - இக் குமரன் எந்நாளும் ஒட்பமாகிய கலைகளெல்லாம் நிறைய நிற்கின்றான், எங்கும் இரவோன் எனத் திரிதி - நீ எவ்விடத்தும் இரவோன் என்று சொல்லும்படி திரிகிறாய், இவன் அடியவர் எவர்க்கும் இரவினை ஒழித்தான் - இவன் அடியார் எவர்க்கும் இரவினை ஒழித்தான், இருநிலத்து அங்குரிக்கும் பயிர் வளர்த்தி - பெரிய நிலத்தில் முளைக்கின்ற பயிர்க வளர்க்கிறாய், இவன் எவ்வுயிரும் வாழச் செய்தான் - இவன் எல்லா உயிர்களையும் வளர்த்தான், பொங்கு அமுதம் அமுதாசனர்க்கு உதவினாய் - நீ விளங்குகிற அமுதத்தைத் தேவர்கட்குக் கொடுத்தாய், இவன் புத்திமுத்தியும் அளித்தான்-இவன் புத்திகளையும் முத்திகளையும் கொடுத்தான், புவனம் படைத்த இவன் நின்னினும் மிக்கான் எனப் புகல்வது ஓர் பொருள் அன்று - உலகங்களைப் படைத்த இவன் உன்னினும் மேலானவன் என்று சொல்வது ஒரு பொருளல்ல, அம்கண்மறை ஓலமிட்டு அரற்ற நின்றவனுடன் அம்புலீ ஆடவா - அழகிய விழிபோன்ற வேதங்களும் முறையிட்டரற்றும்படி நின்றவனோடு சந்திரனே விளையாட வா, அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா - ; (எ - று.)

(வி - ம்.) கங்கை முடி என்பதற்குக் கங்கையை முடியிலுடைய எனினுமாம். சந்திரனுக்குக் கலை ஒளிக் கூறுகள் குமரனுக்குக் கலை வேதங்கள் புராணம் இதிகாசங்கள். இரவோன்சந்திரனைக் குறிக்குமிடத்து இரவினை யுண்டாக்குவா னென்றும்,

குமரனைக் குறிக்குமிடத்து இரவு ஏற்குந் தொழில் என்றும், அறியாமையாகிய இருள் என்றும் கொள்க. அங்குரித்தல் - முளைத்தல். அமுதாசனர் - அமுத+அசனர், அமுதத்தை யுண்பவர். புத்தி - நுகர்தற்குரிய இகபோகங்கள். முத்தி - வீடு. நின்னின் என்பதில் இன் ஐந்தாவதின் உறழ்பொருளது. அங்கண் - அழகிய காண்டம் முதலிய உறுப்புக்கள் எனினுமாம். மறை - அற முதலிய நாற்பொருளையும் தன்னுள்ளே மறைத்திருப்பது என்றும் மறுக்கப்பட்டதென்றும் பொருள் தரும். ஓலமிட்டு என்பது ஓலிட்டு என்று தொக்கு வந்தது. மறை ஓலிட்டரற்றல் எற்றுக்கெனின் இக்குமரன் பெருமை தமக்கு எட்டாமையான் என்க. (௬)

பாயிருட் போதத் திருட்டன்றி அகவிருட்
படலங் கிழிப்பதுணராய்
பனிவிசும் பிற்பொலிவ தோன்றலாற் புவனப்
பரப்பெலாம் பொலிவதோராய்
சேயிதழ்க் குமுதந் திறப்பதல் லாவுளத்
திருமலர் திறக்க அறியாய்
சிறைவிரி சகோரப்பு ளன்றியெவ் வுயிரும்
திளைத்தின்பம் ஆரச்செயாய்
நீயிவற் கொப்பன்மை செப்புவதென் இப்பரிசில்
நின்பெருந் தவமென்சொல்கேன்
நெடியவன் முதல்தேவர் குறுகிநிற் பவுமுனை
நினைத்தழைத் தருளினன்காண்
ஆயிர மறைக்குமொரு பொருளா யிருப்பவனொ
டம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) பாய்இருள் போதத்து இருட்டு அன்றி-பரவிய இராக்காலத்து இருட்டை நீக்குவதல்லாமல், அகம் இருள் படலம் கிழிப்பது உணராய் - உள் இருட்செறிவாகிய அஞ்ஞானத்தை நீக்குவதை நீ அறிந்திலை, பனிவிசும்பில் பொலிவது ஒன்று அல்லால்-குளிர்ச்சி பொருந்திய ஆகாயத்தில் விளங்குவது ஒன்றையன்றி, புவனப்பரப்பு எல்லாம் பொலிவது ஓராய் -

உலகப்பரப்பு முழுவதும் விளங்குவதை நீ அறிந்திலை, சே இதழ் குமுதம் திறப்பது அல்லால் உள்ளத் திருமலர் திறக்க அறியாய் - செவ்விதழ்களையுடைய குமுதமலரை விரிப்பதல்லாமல் மன மாகிய அழகிய தாமரை மலரை விரிக்க அறிந்திலை, சிறைவிரி சகோரப்புள் அன்றி எவ்வுயிரும் இன்பம் திளைத்து ஆரச்செயாய்- சிறைவிரிக்கின்ற சகோரப் பறவைக்கு உணவளிப்பது அன்றி எல்லா உயிர்களும் பேரின்பம் நுகரச் செய்திலை, இவற்கு ஒப்பு அன்மை செப்புவது என் - இக்குமார நாயகனுக்கு நீ ஒப்பில்லா மையைச் சொல்லுவதென்ன பயன், இப் பரிசில் நின் பெருந்தவம் என் சொல்கேன் - இந்தத் தன்மையில் உனது பெரிய தவப்பயன் யாதென்று சொல்லுவேன், நெடியவன் முதல் தேவர்குறுகி நிற்ப வும் உன்னை நினைத்து அழைத்தருளினன் - நெடியோன் முதலிய தேவர்கள் கிட்டி நிற்பவும் உன்னை நினைந்து உன்னுடன் விளையாடுமாறு அழைத்தருளினன், ஆயிரமறைக்கும் ஒரு பொரு ளாய் இருப்பவனொடு அம்புலீ ஆடவா - ஆயிரம் வேதங் களுக்கும் ஒப்பற்ற பொருளாயிருப்பவனுடன் அம்புலீ ஆடவா ;- அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா - ; (எ - று.)

(வி - ம்.) பொழுது என்று பொருள்படும் போது என்னுஞ் சொல் அத்துச்சாரியை பெற்றுப் போதத்து என நின்றது. உள் இருள் - அஞ்ஞானம் அல்லது அறியாமை இருள். ஓர்தல் - அறிதல். நெடியவன் - திருமால், இவ் விரண்டு செய்யுட்க ளாலும் பேதம் என்ற உபாயம் கூறப்பட்டது.

தருமன்னு பொன்னுலகும் மண்ணுலகு மொக்கத்
தலைத்தலை மயங்கத்தோகும்
சந்நிதி யடைந்தவர்கள் பையுள்நோய் முற்றும்
தவிர்ந்தக மகிழ்ந்துதவிராக்
கருமன்னும் ஊழிப் பெரும்பிணியு மாற்றிடுதல்
கண்டனை இருத்தியால்நின்
கயரோக முடன்முயற் கறையுந் துடைத்திடக்
கருதிடுதி யேலெம்பிரான்
திருமுன்னர் அள்ளியிடு வெண்சாந்தும் மற்றைத்
திருச்சாந்தும் நிற்கவற்றுச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குறுந்
திவலையோன் றேஅமையுமால்

**அருவென்ன உருவென்ன அன்றென்ன நின்றவனொ**
**டம்புலீ ஆடவாவே**
**அழகுபோலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்**
**அம்புலீ ஆடவாவே.**

(சொ - ள்) *தருமன்னு பொன் உலகும் மண் உலகும் ஒக்கத் தலைத்தலை மயங்கத் தொகும் - கற்பகத்தரு நிலைபெற் றிருக்கிற வானுலகும் மண்ணுலகும் ஒத்திருக்கும்படி இடம் இடந்தோறும் தலைமயங்கக் கூடுகின்ற, சந்நிதி அடைந்தவர்கள் பையுள்நோய் முற்றும் தவிர்த்து அகம் மகிழ்ந்து - (இவனது) சந்நிதியைச் சேர்ந்தவர்களுடைய பிறவித் துன்பம் முழுதும் நீக்கி அகம் மகிழ்ந்து, தவிராக் கருமன்னும் ஊழிப் பெரும் பிணியும் மாற்றிடுதல் கண்டனை இருத்தியால் - நீங்காத கருப் பத்தில் நிலைபெற்ற ஊழிப் பெருநோயும் ஒழிந்திடுதலைக் கண் டிருக்கின்றாயாதலால், நின் கயரோகம் உடன் முயற்கறையும் துடைத்திடக் கருதிடுதியேல் - உன்னுடைய சயரோகத்துடன் முயற்களங்கமும் ஒழித்துக்கொள்ள நினைப்பையாயின், எம்பிரான் திருமுன்னர் அள்ளியிடு வெண்சாந்தும் மற்றைத் திருச்சாந்தும் நிற்க - எம்பெருமானது சந்நிதிக்கு எதிரே அள்ளிக்கொடுக்கின்ற வெண்ணீறும் பிற சிறந்த சாந்துகளும் வேண்டாம் இவைகள் நிற்க, வற்றா சித்தாமிர்த தடத்திர்த்தத் துறை குறும் திவலை ஒன்றே அமையும் - வடியாத சித்தாமிர்தம் என்கின்ற பெருமை யான தீர்த்தத்துறையிற் பொருந்திய சிறிய நீர்த்துளியொன்றே போதும், ஆல் - ஆதலால், அருஎன்ன உருஎன்ன அன்று என்ன நின்றவனொடு அம்புலீ ஆடவாவே - அருவெனவும் உருவெனவும் இவ்விரண்டும் அன்றெனவும் நின்றவனாகிய குமரக்கடவுளொடு அம்புலீ ஆடவா, அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா -; (எ - று.)*

(வி - ம்.) *தரு - மரம், பஞ்சதருக்கள் எனினுமாம். அவை அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம். மந்தாரம், தேவலோகம் பொன்மயமாயிருத்தலால் அதனைப் பொன்னுலகு என்றார். கண்டனை இருத்தி - கண்டு இருக்கின்றாய், கண்டனை என்னும் வினைமுற்று எச்சப்பொருளைத் தந்தது, மற்றைத் திருச் சாந்தாவன சந்தனம் குங்குமம் முதலியவை,*

*உன் சயரோகமும் முயற்கறையும் ஒழியவேண்டுவையாயின் இவன் சந்நிதியின் வெண்ணீற்றை அள்ளித் தரித்துக்கொள், சித்தாமிர்த தீர்த்தத்து ஒரு துளியை அள்ளி உன் உடல்மேல் தெளித்துக்கொள் என்பது கருத்து.* (௯)

ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப
தொருதெய்வம் உண்டெனவெடுத்
துரையால் உணர்த்துவதை யொழியஎவ ரேவர்கட்கும்
ஊன்கண் உளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வம்இத் தெய்வமல் லாற்புவியில்
வேறில்லை யென்றுணர்தியாற்
பொழியாத புயல்தங்கு புவனமுந் திசைமுகப்
புத்தேள் பெரும்புவனமும்
பொன்னுலகும் மண்ணுலகும் எவ்வுலகு வேண்டினும்
பொருளன் றிவற்குமற்ற
அழியாத வீடும் தரக்கடவன் இவனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

**(சொ - ள்.)** *ஒழியாத புவனத்து உயிர்க்கு உயிரதாய் நிற்பது ஒரு தெய்வம் உண்டு என எடுத்து உரையால் உணர்த்துவதை ஒழிய - தொலையாத புவனங்களிலுள்ள உயிர்கட்கு உயிராய் நிற்பதாகிய ஒரு தெய்வம் உண்டு என்று சொல்லால் எடுத்து அறிவிப்பதை யொழிய, ஊன்கண் உளக்கண்ணது ஆம் விழியாக முன்நின்று தண் அளி சுரந்து அவர்கள் வேண்டிய வரம் கொடுப்பான் - உடம்பிலுள்ள கண்ணுக்கும் மனமாகிய கண்ணுக்கும் கண்ணுக எதிர் நின்று அருள் சுரந்து அவர்கள் விரும்பின வரங்களைத் தந்தருள்வான், புவியில் இத்தெய்வம் அல்லால் மெய்கண்ட தெய்வம் வேறு இல்லை என்று உணர்தி - உலகத்தில் இந்தத் தெய்வமன்றி உண்மையாகக் கண்ட தெய்வமானது வேறில்லை என்றறிவாயாக. பொழியாத புயல்தங்கு புவனமும் திசைமுகப் புத்தேள்பெரும் புவனமும் பொன் உலகும் மண்ணுலகும் எவ்வுலகு வேண்டினும் - திருமாலுலகமும் நான்குமுகத் தெய்வமாகிய பிரமன் உலகமும் சுவர்க்கலோகமும் மத்திய லோகமும் இவற்றுள் எவ்வுலகம் பெற விரும்பினாலும், இவற்கு பொருள் அன்று-இவனுக்கு அவற்றைக் கொடுப்பது ஒரு பொரு*

ளல்ல, மற்ற அழியாத வீடும் தரக்கடவன் - இவ் வுலகங்களின் வேறுகிய கெடாத முத்தியையும் தந்தருளவல்லன், இவனுடன் அம்புலீ ஆடவா - ஆதலால் இவனுடன் அம்புலீ விளையாடவா, அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா-; (எ - று.)

(வி - ம்.) மேகவண்ணனாதலால் திருமாலைப் பொழியாத புயல் என்றார் ; இஃது உவமையாகு பெயர். வீடு-முத்தி, ஓ்தன் சுற்றும்மை உயர்வு சிறப்பு ; இறந்தது தழீஇயதுமாம். அழியாத வீடும் என்றமையால் மேற்கூறப்பட்ட உலகங்கள் யாவும் அழிவன என்பதும் பெறப்பட்டது. இவ் விரண்டு செய்யுட்களானும் தானம் என்ற உபாயம் கூறப்பட்டது. (சு)

நெட்டுடற் பைங்கட் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கிஆர்த்து
நிற்குங் குறட்பூத மொன்றினை விடுத்துடலின்
நெடியபழு என்புநெரியக்
கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக்
கணநாதர் கடுகமுடுகிக்
கடல்வாய் திறந்தெனப் பிலவாய் திறந்தலறு
காட்சிநீ காணுயலை
மட்டுடைத் தூறுந் தடங்கமலன் முதலியோர்
வாய்புதைத் தஞ்சிநிற்ப
வருகென் றழைத்திடவும் வாரா திருத்தியால்
மற்றிவன் முனிந்தாலுனக்
கட்டதிக் கினிலுமொரு திக்கிலையெம் ஐயனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - வி.) நெட்டுடற் பைங்கண் கரும்பேய்கள் செம்மயிர் நிரைத்தூணம் வீக்கி - நெடிய உடம்பையும் பசிய கண்களையும் உடைய கரிய அலகைகளைச் செம்மயிர் வரிசையையுடைய தூணில் கட்டி, ஆர்த்து நிற்கும் - ஆரவாரித்து நிற்கிற, குறட்பூதம் ஒன்றினை விடுத்து உடலின் நெடிய பழு என்பு நெரிய-குறும்பூதம் ஒன்றை ஏவி உடம்பிலுள்ள நெடுகிய பழுஎலும்பு கெடும்படி,

கட்டு எனப் பிடி எனக் கொடிறு உடைத்து அடி எனக் கண நாதர் கடுக முடுகி - கட்டென்றும் பிடியென்றும் கபோலத்தை உடைத்து அடி என்றும் சொல்லிக் கணநாதர் கடுகுதலும் விரைந்து, கடல்வாய் திறந்து என பிலவாய் திறந்து அலறு காட்சிநீ காணாய் அலை-கடலானது வாய் திறந்தாற்போலக் குகைபோலும் வாயைத்திறந்து அப்பேய்கள் அலறுகிற காட்சியை நீ பாராயல்லை, (பார்த்திருக்கின்றாய்) மட்டு உடைத்து ஊறும் தடம் கமலன் முதலியோர் வாய் புதைத்து அஞ்சி நிற்ப, தேனானது முறுக்குடைத்துச் சுரக்கின்ற பெரிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் முதலானவர் வாய்பொத்திப் பயந்து நிற்க, வருக என்று அழைத்திடவும் வாராது இருத்தி - உன்னை வாவென்று அழைக்கவும் வாராமல் இருக்கிறாய், இவன் முனிந்தால் உனக்கு அட்டத்திக்கினிலும் ஒரு திக்கு இல்லை - இவன் வெகுள் வாணுயின் னினக்கு எட்டுத் திசையிலும் ஒரு புகலிடம் இல்லை, எம் ஐயனுடன் அம்புலீ ஆடவா - (ஆதலால்) எம் இறைவனாகிய குமரனோடும் அம்புலீ ஆடவா, அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆட வா-; (எ - று.)

(வி - ம்) பழுஎலும்பு-விலா எலும்பு. கொடிறு-கன்னம். காணாயலை என்றது கண்டேயிருக்கின்றாய் என்றவாறு. பிரமன் முதலியோர் வாய்புதைத்து நிற்க, உன்னிடத்துக் கருணையால் உன்னை அழைத்தான், நீ வாராதிருப்பின் இவன் முனிவான். அப்போது உனக்குப் புகலாயிருந்து உன்னைக் காப்பவர் ஒருவரும் இலர். ஆதலால் இவனுடன் ஆடவா என்பது கருத்து. (எ)

குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூர்உயிர்
குடித்திட விடுத்துநின்றான்
குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்
குருதிபோங் கப்புடைத்தான்
இன்றைக் குழந்தையென் றெண்ணுது குலிசன்முதல்
எண்மரும் பிறருமொருஞான்
றெதிர்நின் றுடற்றியவர் பட்டபா டறியா
திருத்தியலை அதுகிடக்க
முன்றக்கன் வேள்விக் களங்கொலைக் களமென்ன
முடிஅமரர் மொத்துண்டநாள்
முழுமதிக் கடவுள்நீ அவமதிப் புண்டதை
மொழிந்திடக் கடவதன்றால்

அன்றைக் கணக்கின்றும் வந்திருக் கின்றதினி
அம்புலீ ஆடவாவே
அழகுபோலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(செ - ள்.) குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூர்உயிர் குடித்திட விடுத்து நின்றான் - மலையைப் பிளந்திட்ட நுனியை யுடைய வேற்படையைச் சூரன் உயிரை உண்ணும் பொருட்டு ஏவி நின்றான், குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங் குருதி பொங்கப் புடைத்தான் - குண்டிகையையுடைய வஞ்சகன் ஆகிய பிரமனைக் குடுமித் தலையில் பச்சுதிரம் ஒழுகக் குட்டினன், இன்றை குழக்தை என்று எண்ணாது குலிசன்முதல் எண்மரும் பிறரும் ஒரு ஞான்று எதிர்நின்று உடற்றி - இன்று பிறந்த குழந்தை என்று எண்ணாமல் இந்திரன் முதலாகிய எட்டுத்திக்குப் பாலகரும் மற்றுள்ளாரும் ஒருநாள் எதிர்நின்று போர் செய்து, அவர் பட்ட பாடு அறியாது இருத்தி அலை - அவர்கள் பட்டபாட்டினை நீ அறியாமல் இருக்கின்றாய் அல்லை, அதுகிடக்க - அதுநிற்க, முன் தக்கன் வேள்விக்களம் கொலைக்களம் என்று முடி அமரர் மொத்துண்ட நாள் முழுமதிக் கடவுள்நீ அவமதிப்புண்டதை மொழிந்திடக் கடவது அன்று ஆல் - முற்காலத்தில் தக்கனது வேள்விக் களமானது கொலைக்களம் என்று சொல்லும்படி முடியையுடைய தேவர் அடிபட்ட நாளில் பூரண சந்திரனே! நீ அவமானப்பட்டதைச் சொல்லத்தகுவதன்றாதலால், அன்றைக் கணக்கு இன்றும் வந்து இருக்கின்றது - அன்று நிகழ்ந்த காரியம் இன்றைக்கும் நிகழும் எனத் தோன்றுகிறது, இனி அம்புலீ ஆடவா - இப்பொழுது அம்புலீ ஆடவா, அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா-; (எ - று.)

(வி - ம்.) குன்றம் என்றது கிரவுஞ்சமலையை. குண்டிகை-கமண்டலம். வேதப்பொருளை உணராது எல்லாம் உணர்ந்தவன் போல் தருக்குற்று நடித்தவனாதலின், பிரமனைக் கள்வன் என்றார். உடற்றி - பிறவினை வினையெச்சம், பகுதி: உடற்று: பாடு - துன்பம். களம் - இடம். கணக்கு என்பது ஈண்டு நிலைமை என்னும் பொருள் தந்து நின்றது. (அ)

தள்ளும் பவக்கடல் உழக்கும்எனை முத்தித்
தடங்கரை விடுப்பவனைத்
தலையளிப் பான்வர வழைப்பவும் வராவிடில்
தண்ணளி சுரந்துகருணை

வெள்ளம் கொழிக்கும் கடைக்கண் சிவப்பஇவன்
வெகுளாது விடினும் அழுது
விழிசிவப் பக்காணில் இரவிபகை சாய்த்தஇள
வீரன் பொறுப்பான் அலன்
கள்ளம் பழுத்தகட் கடைசியர் சிறுர்திரைக்
காவிரித் தண்துறைதோறும்
கதிர்நித் திலங்குவி மணற்குன்ற மேறியக்
கலைமதிக் கலசவமுதை
அள்ளும் தடம்பணைச் சோனுடன் இவனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ. வ.) *தள்ளும் பவக்கடல் உழக்கும் எனைத் தடங் கரை விடுப்பவன்* - தள்ளப்பட்ட பிறவிக்கடலில் வீழ்ந்து வருந்துகின்ற என்னை மோட்சமாகிய பெருங்கரையில் செலுத்து பவன், *உன்னைத் தலையளிப்பான் வரவழைப்பவும் வராவிடின்* - உன்னைத் தலையளி செய்வானாய் வரவழைக்கவும் வராவிட்டால், *தண்ணளி சுரந்து கருணைவெள்ளம் கொழிக்கும் கடைக்கண் இவன் வெகுளாது விடினும்* - குளிர்ந்த அன்புஊறி அருள்வெள் ளம் பொழிகின்ற கடைக்கண் சிவக்கும்படி இவன் முனியாவிடி னும், *அழுதுவிழி சிவப்பக் காணின் இரவிபகை சாய்த்தஇள வீரன் பொறுப்பான் அல்லன்* - அழுது கண்சிவக்கக் கண்டால் பானுகோபனைக் கொன்ற இளைய வீரன் பொறுப்பவன் அல்லன், *கள்ளம் படைத்தகண் கடைசியர் சிறுர்* - கள்ளத்தைப் பெற் றிருக்கிற கண்களையுடைய கடைசியரது மக்கள், *திரைகாவிரி தண்துறைதொறும் கதிர் நித்திலம்குவி மணற்குன்றம் ஏறி* - அலைகளையுடைய காவிரியாற்றின் தண்ணிய துறைதோறும் ஒளியுள்ள முத்துக்கள் குவிந்து கிடக்கின்ற மணற்குன்றின்மேல் ஏறி, *அக் கலைமதிக் கலச அமுதை அள்ளும் தடம்பணைச் சோனு டன் இவனுடன் அம்புலீ ஆடவா* - அந்தக் கலைமதியாகிய கலசத்திலுள்ள அமுதத்தை அள்ளிக்கோடற்குரிய பெரிய வளங்கள் சூழ்ந்த சோனுடனாகிய இவனுடன் அம்புலீ ஆடவா' *அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா* - அழகு விளங்குகின்ற புள்ளிருக்கு வேளூர் செழிக்கும்படி வந்து வீற்றிருக்கும் கந்தனுடன் கூடிச் சந்திரனே நீ விளை யாட வா; (எ - று.)

(வி - ம்.) தலையளி: ஒரு சொல், கருணை என்பது பொருள், இரவிபகை சாய்த்த இளவீரன் - வீரவாகு. இரவிபகை - சூரியனுக்குப் பகைவனான பாநுகோபன், சூரபன்மன் மகன். அவனை அழித்தவன் குமரன் இளைஞனான வீரவாகு. கள்ளம் - ஆடவரை மயக்கும் வஞ்சத் தொழில், கலசம் - கலயம். கலைமதி - நிறை நிலா. (கூ)

தன்னொத்த தெய்வச் சிறுருமிள வீரரும்
தாள்நிழற் கீழ்நிற்பஇச்
சகதண்ட மண்டல அடுக்கழியு நாள்அமரர்
தமைஅழக் காண்பவன்இவன்
நின்னைப் பொருட்படுத் தொருவிரற் றலைசுட்டி
நீள்கழற் றாள்உதைந்து
நெடுமலர்க் கண்பிசைந் தழுதழு தழைத்தனன்
நினக்கிதில் வியப்பில்லைகாண்
பின்னல் திரைச்சுர நதித்தண் துறைத்தேவர்
பேதைக் குழாங்களென்னப்
பெருகுந் தடம்புனற் காவிரிப் பூவிரி
பெருந்தண் துறைச்சிறைவிரித்
தன்னக் குழாந்திளைத் தாடுசோ ணாடனுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) தன் ஒத்த தெய்வச் சிறுரும் இளவீரரும் தாள் நிழல் நிற்ப - தன்னை நிகர்த்த தெய்வச் சிறுவரும் இளையவீரரும் திருவடி நிழலின்கீழே நிற்க, இச்சகத்து அண்டம் மண்டலம் அடுக்கு அழியும் நாள்அமரர் தமைஅழக் காண்பவன் இவன் - இந்த உலகமும் தேவருலகமும் மற்றப்புவனங்களும் நிலைகுலையும் நாளில் தேவரை அழக்காண்பவனாகிய இவன், நின்னைப் பொருட்படுத்து ஒரு விரல் தலைசுட்டி நீள்கழல் தாள்உதைந்து - உன்னைப் பொருளாக்கி ஒரு விரல் நுனியாற் சுட்டி நீண்ட கழலைஅணிந்த காலுதறி, நெடுமலர்க் கண்பிசைந்து அழுது அழுது அழைத்தனன் - நீண்ட கமலம்போலும் கண்களைப் பிசைந்து அழுது கூப்பிட்டனன், நினக்கு இதில் வியப்பு இல்லை - உனக்கு இதில்

இரு வியப்பில்லை, பின்னல் திரைச்சுர நதித்தண் துறைத்தேவர் பேதைக் குழாங்கள் என்ன-ஒன்றோடொன்று பின்னியதுபோல வரும் அலைகளோடுகூடிய தேவ நதியின் தண்ணிய துறைகளில் தெய்வப் பெண்களுடைய கூட்டங்கள்போல, பெருகும் தடம் புனற் காவிரிப் பூவிரி பெருந்தண்துறை - பெருகி வருகின்ற நீர்ப் பெருக்கையுடைய காவிரியாற்றின் மலர்கள் விரிந்த பெருங் குளிர்ந்த துறைகளில், அன்னக்குழாம் திளைத்து ஆடு சோணாடனுடன் அம்புலீ ஆடவாவே - அன்னப் பறவைக் கூட்டங்கள் மூழ்கி ஆடுதற்கிடமான சோணாடனுடனே அம்புலீ ஆடவா, அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆடவா-; (எ - று.)

(வி - ம்.) இளவீரர்-வீரவாகுதேவர் முதலியோர். சகத்து - தோன்றியழிதல் மாலையதாகிய பிரபஞ்சம். வியப்பு - வியத்தல், அதிசயம், காவிரி - காவேரி, இஃது அகத்திய முனிவர் கமண்டலத்திலுள்ள கங்கைநீரை விநாயகக்கடவுள் இந்திரன் வேண்டுகோட்கிணங்க அவன் நந்தவனம் தழைக்கும்பொருட்டுக் காகவடிவமாய்த் தோன்றிக் கவிழ்த்தனர். காவானது விரியும் பொருட்டுக் காகவடிவமான விநாயகரால் விரிக்கப்பட்டது (பரப்பப்பட்டது) ஆதலால், காவிரி என்ற பெயர் வந்தது என்க. இவை நான்கு பாடல்களாலும் தண்டம் என்ற உபாயம் சொல்லப்பட்டதறிக. (௧௦)

— —

## அ. சிற்றிற் பருவம்

*[சிற்றிற்பருவம் என்பது சிறுமியர் சிறுவீடு கட்டி விளையாடுகின்றகாலை அதனைச் சிறுவர் தம் காலால் அழித்துக் கெடுத்தலைக் கூறுகின்ற பருவம். இதிற் சிறுமியர் 'எம் வீட்டை அழிக்கவேண்டா' என வேண்டுவதாகப் பொருள் அமைத்துக் கூறுவது மரபு.]*

குறுமென் னடையும் நெடுவெணிலாக்
கோட்டு நகையும் வாள்தடங்கண்
குளிரமுகந்துண் டொளிர்சுட்டிக்
குஞ்சி திருத்தி நறுங்குதலை
முறுகு நறைத்தேன் கனிபவள
முத்துண் டுச்சி மோந்துகொண்டுன்
முகமுந் துடைத்து விளையாட
முன்றிற் புறத்துப் போன்ததும்பி
இறுகும் புளகக் கும்பமுலை
எம்பி ராட்டிவிடுத்ததுமற்
றிளையார் மறுக மறுகுதோறும்
இடுக்கண் செயற்கோ எந்தாய் நின்
சிறுகிண் கிணிச்செஞ் சீறடியாற்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) குறுமெல் நடையும் நெடுவெண் நிலாக் கோட்டு நகையும் வாள்தடங்கண் குளிர முகந்து உண்டு ஒளிர் சுட்டிக் குஞ்சி திருத்தி - குறுகிய மெல்லிய நடையினையும் நெடிய வெண்ணிலவைச் செய்கின்ற நகையினையும் வாள்போலும் பெரிய கண்கள் குளிரும்படி அள்ளியுண்டு ஒளிர்கின்ற சுட்டியுடன் குஞ்சியைத் திருத்தி, நறுகுதலை முறுகு நறைத்தேன் - நல்ல குதலை முதிர்கின்ற மணத்தையுடைய தேன்போன்ற, கனிபவளம் முத்து உண்டு உச்சி மோந்து கொண்டு-கனிந்த திருப்பவளத்தை முத்தமிட்டு உச்சியை மோந்து, உன்முகம் துடைத்து விளையாட முன்றில் புறத்து - உன் முகத்தையும் துடைத்து

விளையாடும் பொருட்டு முற்றத்தின் புறத்தில், பொன்ததும்பி இறுகும் புளகம் போர்த்த கும்பமுலை எம்பிராட்டி-தேமல் பரந்து இறுகிய புளகம் போர்த்த குடம்போன்ற முலையையுடைய எம் பெருமாட்டி, விடுத்தது - அனுப்பினது, இளையார் மறுக மறுகு தொறும் இடுக்கண் செயற்கோ - இளஞ் சிறுமியர் வருந்த தெருத்தோறும் துன்பம் செய்யத்தானோ?, எந்தாய் நின்சிறு கிண்கிணிச் செஞ்சிறடியால் சிறியேம் சிற்றில் சிதையேல்- எந்தையே! உனது சிறிய கிங்கிணி அணிந்த சிவந்த சிற்றடியினால் சிறியேங்களுடைய சிறுவீட்டை அழியாதிருப்பாய், செந்நெற் பழனப் புள்ளூரா சிறியேம் சிற்றில் சிதையேல் - செந்நெற் பயிர்கள் பொருந்திய வயல்கள் சூழ்ந்த புள்ளூரனே சிறியேங்கள் சிறுவீட்டைச் சிதையாதிருப்பாய், (எ - று.)

(வி - ம்.) குறுமென்னடை - தளர்நடை. திருத்தல் - ஒப்பனை செய்தல். கனிபவளம் என்றது திருவாயை. எம்பிராட்டி- எம் தலைவியாகிய உமாதேவி. எம்பிராட்டி உன்னை ஒப்பனை செய்து வீதியில் விடுத்தது, விளையாடற்கே; சிற்றிலைச் சிதைத்தற்கு அன்று ஆதலால் இது செய்யாதே என்பது கருத்து. (க)

கொழுநாண் மலர்க்கற் பகமும்நறைக்
குரவு நாறு நறுங்குஞ்சிக்
கோமான் மகனே நங்கள்குலக்
கொழுந்தே யென்று குறையிரந்து
தொழுவா னவர்தம் முடிசூட்டும்
சோதி முடியில் துகளேழநின்
துணைத்தாள் வண்டல் துறைப்புழுதித்
தூளி படினும் படுகசுடர்க்
கழுவா மணியும் நிலவுவிரி
கதிர்நித் திலமும் உமையம்மை
கண்ணில் உறுத்த அடிகேள்நின்
காலில் உறுத்தல் கடனன்றால்
செழுகான் மறையின் பெருஞ்செல்வச்
செருக்கே சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) கொழுநாண் மலர்க் கற்பகமும் நறைக்குரவு நாறும் நறுங்குஞ்சிக் கோமான் மகனே நங்கள் குலக்கொழுந்தே- செழிய புதிய கற்பக மலரும் மணம்பொருந்திய குரவமலரும் பரிமளிக்கின்ற அழகிய குடுமியையுடைய இறைவன் மகனே! எங்கள் குலக்கொழுந்தே, என்று குறையிரந்து தொழுவானவர் தம் முடிசூட்டும் சோதிமுடியில் துகள்எழ - என்று சொல்லிக் குறைகூறி இரந்துவணங்கிய தேவர்கள் தமது கிரீடத்தைத் தரிப் பதற்குக் காரணமாகிய ஒளிபொருந்திய நின் திருமுடிமேல் துகள் எழும்படி, நின் துணைத்தாள் வண்டல் துறைப் புழுதித் தூளி படினும் படுக - உன் இரண்டு திருவடிகளும் வண்டல் விளை யாடும் இடத்திலுள்ள புழுதியாகிய தூளிபட்டாலும் படட்டும், சுடர்கழுவா மணியும் நிலவு விரிகதிர் நித்திலமும் உமைஅம்மை கண்ணில் உறுத்த - ஒளியையுடைய சுத்தப்படுத்தாத இரத்தின மும் ஒளியுள்ள முத்தும் உமையம்மையின் கண்ணில் உறுத்தும் படி, அடிகேள் நின்காலில் உறுத்தல் கடன் அன்று ஆல் - சுவாமி உன் திருவடியில் உறுத்துதல் முறைமையன்றாதலால், செழுநான் மறையின் பெருஞ்செல்வச் செருக்கே சிற்றில் சிதையேல் - செழுமையாகிய நான்கு வேதத்தின் பொருளாகிய பெருஞ் செல்வக் களிப்பே! சிறியேங்களுடைய சிறு வீட்டைச் சிதையா திருப்பாய், செந்நெற் பழனப் புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல்-; (எ - று.)

(வி - ம்.) கோமான் - சிவபிரான். கோமான் மகன் என் பது ஒருசொல்லாய்க் கந்தவேளைக் குறித்தது. கற்பகமலரும் குராமலரும் நாறுதல் கந்தவேள் குஞ்சியின் எனக்கொள்க. முருகன் திருமுடி தரித்துச்சென்று சூரர்களைத் தொலைத்த பின்பு தான் தேவர்கள் முடிசூட்டி வாழ்ந்தனர் என்பதை விளக்க "வானவர் தம் முடி சூட்டும் சோதிமுடி" என்றார்.

யாம் இழைத்துள்ள சிற்றிலைச் சிதைக்குங்கால் அப்புழுதி நின் முடியினும் படியும். அடியினும் படியும் ஆயினும் அது குறித்து நாம் வருந்தோம். அங்குள்ள மணியு முத்தும் உன் திருவடியில் உறுத்துமேயென்றும் அவை உறுத்தல் உன் திருத் தாயாகிய உமாதேவிக்குக் கண்ணில் உறுத்தல் போல வருத்துமே என்றும் வருந்துகின்றோம் ஆதலால், அது செய்யாது ஒழிதி என்பது கருத்து. (உ)

வழிக்குப் புறம்பா யாம் இழைத்த
வண்டல் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பான் நடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே

கொழிக்கும் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியேம் மனைமுன்றிற்
குவியா நின்ற மணிக்குவைஅக்
குருகு பெயர்க்குன் றமும்அன்றுற்
சுழிக்குண் டகழி வாய்மடுப்பச்
சுடர்வால் வளைத்தெண் டிரைக்கரத்தாற்
சுரபி சொரிபால் மடையடைத்த
சோற்றி ன்றேடுங் கலந்தூட்டிச்
செழிக்குந் தடங்கா விரிநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) வழிக்குப் புறம்பாய் யாம் இழைத்த வண்டல் மனை அவ்வசுரேசன் வான்கூட்டுண்பான் நடுக்கடலில் வகுத்த நகர் அன்று-வழிக்கு ஒதுக்கமாக யாங்கள் செய்த வண்டல்வீடு அந்தஅசுரேசர் விண்ணுலகைக் கொள்ளை கொண்டுண்ணக் கடல் நடுவே ஏற்படுத்திய நகரம் அல்ல, இகழாமே கொழிக்குஞ் சிறு மூற்றிலில் வாரிக் கொடுவந்து அடியேம் மனைமுன்றில் குவியா நின்ற மணிக்குவை அக்குருகு பெயர்க்குன்றமும் அன்று - இகழா மல் கொழித்தற்குரிய சிறு சுளகில் அள்ளிக்கொணர்ந்து அடி யேங்களுடைய வீட்டு முற்றத்தில் குவிக்கின்ற மணிக்குவியல் அந்தப் புட்பெயரையுடைய மலையும் அன்று, சுழிக்குண்டு அகழி வாய் மடுப்பச் சுடர்கால் வளைத்தெண் திரைக்கரத்தால் சுரபி சொரிபால் மடை அடைத்த - சுழிகளோடு கூடி ஆழ்ந்திருக்கிற அகழியிடத்துவிழ ஒளிர்கின்ற வெள்வளையையுடைய தெளி வாகிய அலைகள் என்கின்றகையால் பசுக்கள் சொரிகின்ற பாலா னது மடைகளை அடைத்துக் கொண்ட. சோற்றிறேடும் கலந்து ஊட்டிச் செழிக்குந் தடங் காவிரிநாடா - சோற்றோடும் கலந்து உண்பித்துத் தழைக்கின்ற பெரிய காவிரி நாடனே!, சிறியேம் சிற்றில் சிதையேல்-, செங்கெற் பழனப் புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல் - ; (எ - று.)

(வி - ம்.) அசுரேசன் என்றது சூரபன்மனை. கூட்டுண் பான்: பான்ஈற்று வினையெச்சம். நடுக்கடலில் வகுத்த நகர் - மகேந்திரம். சுளகு - முறம்- குருகுபெயர்க்குன்றம் - கிரவுஞ்ச மலை. சோறு - தாழை மலர் முதலியவற்றின் சோறு. வால்வளை -

வெள்ளிய சங்கு, செழிக்கும் தடங்கா விரிநாடா - செழிக்கின்ற பெரும் பொழில்கள் விரிந்த நாடனே என்றுமாம். (ரு)

மூரிக் களிற்றோ மழவிடையோ
முடுகிற் றெனப்பார்த் துழிஉனது
முகத்தின் அழகெம் வடிக்கண்ணால்
மொண்டுண் டனம்யாம் எனவுமிகப்
பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொற் புயத்தைக் கண்ணேறு
பட்டேம் எனவும் அடிகள்பகை
பாராட் டுவதோர் பண்பன்றால்
வேரிக் கொழுந்தாற் றிளம்பாளை
விரிபூங் கமுகும் பால்பாயும்
வேழக் கரும்பும் இருட்பிழம்பை
விழுங்கிக் கக்குஞ் சுடர்ப்பருதித்
தேருக் கெழில்செய் சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செங்கேழ் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) *மூரிக்களிற்றோ மழவிடையோ முடுகிற்று எனப் பார்த்துழி* - வலிமை பொருந்திய யானையோ இளமை வாய்ந்த இடபமோ முடுகி வந்தது என்று நாம் பார்த்தபோது, *உனது முகத்தில் அழகு எம் வடிக்கண்ணால் யாம் மொண்டு உண்டனம் எனவும்* - உனது முகத்தழகை எமது மாவடுப் போன்ற கண்ணினால் யாம் முகர்ந்து உண்டோம் என்றும், *மிகப் பாரித்து ஓங்கிப் பூரித்த பைம்பொற் புயத்தை கண்ணேறு பட்டேம் எனவும்* - மிகுந்த பொறை யுடைத்தாய் உயர்ந்து பருத்த பைம்பொன்மலை போலும் திருத்தோள்களைக் கண்ணெச்சில் ஆக்கினேம் என்றும், *அடிகள் பகை பாராட்டுவது பண்பு அன்று ஆல்* - சுவாமிகள் எம்மேற் பகை பாராட்டுதல் ஒரு நற்குணம் அல்ல ஆதலால், *வேரிக்கொழும் தாற்று இளம்பாளை விரிபூங்கமுகும் பால் பாயும் வேழக்கரும்பும்* - மணமுள்ள செழுமையாகிய தாறுகளை யுடைய இளம்பாளைகள் விரிந்த பொலிவாகிய கமுக மரங்களும் பால்பெருகிய வேழக்கரும்புகளும், *இருட்பிழம்பை விழுங்கிக்*

கக்கும் சுடர்பரிதித் தேருக்கு எழில்செய் சோணாடா! - இருட் கூட்டத்தை விழுங்கி உமிழ்கின்ற காந்தியையுடைய சூரியனது தேருக்கு அழகுசெய்கின்ற சோணாடனே!, சிறியேம் சிற்றில் சிதையேல் - ; செந்நெற் பழனப் புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல் - ; (எ - று)

(வி - ம்.) வடி - மாவடுவகிர். கண்ணெச்சிற்படல் - திருட்டி படல் (கண்ணேறு). பால் - சாறு. வேழக்கரும்பு - ஒருவகைக் கரும்பு, மூங்கிலோடு கரும்பும் என்றுரைப்பினுமாம். கமுகும் கரும்பும் பரிதித்தேருக்கு எழில் செய் என்றதனால் இவை சூரிய மண்டலத்தளவு உயர்ந்திருக்கின்றன வென்பது பெறப் பட்டது. (ச)

பொன்னம் கொடிபோல் நுடங்குமிடைப்
புத்தேள் மகளிர் விளையாடப்
புனைமா ளிகையும் சூளிகையும்
புதுக்கிக் கொடுத்தாய் போதுஞானம்
மெய்ந்நின் றவர்உள் விழிப்பாவை
விளையாட் டயர அழியாத
வீடுங் கொடுத்தாய் எம்மனையும்
விடுத்துச் சென்றால் மிகையுண்டோ
பின்னும் திரைத்தீம் புனற்கங்கைப்
பேராற் றாற்று நறைக்கோட்டுப்
பெருங்கற் பகத்தின் கழுத்தொடியப்
பிறழும் வாளைப் பகடுதைத்த
தென்னம் பழம்வீழ் சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) பொன்னம் கொடிபோல் நுடங்கும் இடை புத்தேள் மகளிர் விளையாடப் புனைமாளிகையும் சூளிகையும் புதுக்கிக் கொடுத்தாய் - பொன்னால் இயன்ற அழகிய கொடி போலத் துவளாநின்ற இடையையுடைய தேவமாதர் விளையாடும் பொருட்டு அலங்கரிக்கப்பட்ட மாளிகையினையும் சூளிகைகளை

யும் புதுக்கித் தந்தாய், பொதுஞான மெய்ந்நின்றவர் உள்விழிப் பாவை விளையாட் டயர அழியாத வீடும் கொடுத்தாய் - பொது வான மெய்யறிவோடு நின்றவரது அகக்கண்ணின் பாவை விளை யாடலைச் செய்யக் கெடாத வீட்டையும் தந்தாய், எம்மனையும் விடுத்துச் சென்றால் மிகையுண்டோ? - எங்கள் வீட்டையும் விட்டுப் போனால் குற்றம் உண்டோ?, பின்னும் திரை தீம்புனல் கங்கைப்பேர் ஆற்று நறைகோட்டுப் பெருங்கற்பகத்தின் கழுத்து ஓடிய - பின்னல் இடுகின்ற அலைகளையும் இனிய நீரையுமுடைய கங்கையாகிய பெரிய ஆற்றில் தேனைப் பொருந்திய பெரிய கொம்புகளோடு கூடிய கற்பக மரத்தின் கழுத்து முறியும்படி, பிறழும் வாளைப்பகடு உதைத்த தென்னம் பழம்வீழ் சோணாடா! சிறியேம் சிற்றில் சிதையேல் - துள்ளுகின்ற வாளைப்பகடுகளால் மோதப்பட்ட தென்னம் பழங்கள் வீழ்கின்ற சோணாடனே! சிறியேம் சிற்றில் சிதையேல், செங்கெற்பழனப் புள்ளூரா சிறி யேம் சிற்றில் சிதையேல்-; (எ - று.)

(வி - ம்.) புத்தேள் மகளிர் விளையாட மாளிகை முதலிய புதுக்கிக்கொடுத்தாய் என்றது விண்குடியேற்றினமையைக் குறித்தது. ஞானமெய் நின்றவர் - மெய்யுணர்வோடு நின்றவ ராகிய ஞானியர். "ஐயறி வறிந்தவை யடங்கினர்க ளேனும், மெய்யறிவி லாதவர்கள் வீடது பெறாரே" என்றார் பிறரும். அழியாத வீடு முத்தி. "கற்பகத்தின் கழுத்தொடிய...தென்னம் பழம் வீழ் சோணாடா" என்றது சோணாட்டுத் தென்னைகள் கற்பகத்திற்குமேல் உயர்ந்துள்ளன வென்பது. (௫)

கானக் குறப்பெண் குடியிருந்த
கன்னிப் புனத்துத் தினைமாவும்
கமழ்தேன் தெளிவும் உண்டுசுவை
கண்டா யென்றேம் அதுவல்லால்
மீனத் தடங்கண் அவள்மிச்சில்
மிசைந்திட் டதுவும் நசைமிக்கு
விரைத்தீங் குமுதத் தமுதடிகள்
விருந்தா டியதும் விண்டோமோ
கூனற் பிறையின் கோடுரிஞ்சும்
கோடிமா டத்து வெயில்விரிக்கும்
குருமா மணியால் சுரநதியிற்
கொழுந்தா மரைகள் முறுக்குடைந்து

தேனக் கலரும் சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) கானக் குறப்பெண் குடியிருந்த கன்னிப் புனத்துத் தினைமாவும் கமழ்தேன் தெளிவும் உண்டுசுவை கண்டாய் என்றேம் அது அல்லால் - காட்டில் வாழ்கின்ற குறப் பெண்ணாவள் குடியிருந்த தினைப்புனத்தில் தினைமாவும் மணக்கின்ற தேனின் தெளிவும் நுகர்ந்து சுவை கண்டனை என்று கூறினம் அதுவேயன்றி, மீனத் தடங்கண் அவள் மிச்சில் மிசைந்திட்டதுவும் நசைமிக்கு விரைத்தீங் குமுதத்தடிகள் விருந்தாடியதும் விண்டேமோ - மீன்போலும் பெருங் கண்களை யுடைய அவளது எச்சிலைத் தின்றதையும் ஆசைமிகுந்து மணம் கமழ்கின்ற இனிய வாயாகிய குமுதமலரின் எச்சிலாகிய அமு தத்தைச் சுவாமிகள் விருந்துண்டதையும் சொன்னேமோ, கூனல் பிறையின் கோடு உரிஞ்சும் கொடிமாடத்து வெயில் விரிக்கும் குருமாமணியால் சுரநதியில் கொழும் தாமரைகள் முறுக்கு உடைந்து - வளைவாகிய பிறையின் நுனி உரிஞ்சுகின்ற கொடிகள் கட்டிய மாடங்களின்மேல் வெயில் பரப்புகிற ஒளியுள்ள பெரிய மணிகளால் கங்கையாற்றிலுள்ள செழிய தாமரைகள் கட் டவிழ்ந்து, தேன்நக்கு அலரும் சோணாடா - தேனோடு விளங்கி மலர்கின்ற சோணாடனே!, சிறியேம் சிற்றில் சிதையேல் -, செங்நெற் பழனப் புள்ளூரா சிறியேம் சிற்றில் சிதையேல்-; (எ - று.)

(வி - ம்.) கானம் - காடு (இசையுமாம்). விரைத்தீங் குமுதம் - மணம் பொருந்திய இனிய குமுதமலர் போன்ற வாயிதழ். விருந்தாடியது - சுவைத்தது, விருந்து உண்டது. குருமாமணி - மாணிக்கம். இதனொளி வெயில் போன்றலால் வான்யாற்றுத் தாமரைகள் மலர்வனவாயின. குறப்பெண்ணாகிய வள்ளிநாயகி கொடுத்த தேனும் தினைமாவும் உண்டனை யென்ற தன்றி நீ யவள் எச்சிலுண்டதும் அதரஞ் சுவைத்ததுஞ் சொன்னேமல்லேம். அங்ஙனமாக நீ சினந்து சிற்றிலைச் சிதைக்க வருவதற்குரிய காரணம் ஒன்றும் இன்று ஆதலால் எமது சிற்றில் சிதைத்தலடாதென்பது கருத்து. கன்னிப்புனம் - புதுமைப் புனம். கன்னி - அழியாதது. கமழ்தேன் - மணக்கும் தேன். மீன் - மீனம் என்று அம்சாரியை பெற்றுப்பின் மகரங்கெட்டு வருமொழித் தகரம் மிக்கு மீனத்தடங்கண் என நின்றது. மீன் போன்ற அகலமாகிய கண்கள் என விரியும். முன்னது உவமைத் தொகை பின்னது பண்புத்தொகை எனக் காண்க. (சு)

பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும்
பெருமா ளுர்க்கும் உலகேழும்
பெற்ற தாய்க்கும் நீ அருமைப்
பிள்ளை யெனிலெம் பேராய
வெள்ளம் அமைத்த சிறுசோறு
வேண்டின் இடுகேம் அலதெளியேம்
விளையா டிடத்துச் சிறுகுறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ
கள்ள விழிச்சூர் அரமகளிர்
காமன் கொடியேற் றெனவியப்பக்
கற்ப தருவிற் படர்ந்தேறு
காமர் கொடிச்செங் கயல்பாயும்
தெள்ளு புனற்கா விரிநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) *பிள்ளைமதிச் செஞ்சடைச் செருகும் பெருமா ளுர்க்கும் உலகேழும்பெற்ற தாய்க்கும் நீ அருமைப் பிள்ளை எனில்* - இளம்பிறையைச் சிவந்த சடையில் செருகுகின்ற சிவ பெருமாளுர்க்கும் ஏழுலகங்களையும் பெற்ற தாயாகிய உமாதேவி யாருக்கும் நீ அருமைப்பிள்ளையானல், *எம்பேராய வெள்ளம் அமைத்த சிறுசோறு வேண்டில் இடுகேம் அலது எளியேம் விளையாடிடத்துச் சிறுகுறும்பு விளைத்தால் பொறுக்க விதி உண்டோ* - எமது பெரிய ஆய வெள்ளத்தால் அமைக்கப்பட்ட சிறு சோற்றை வேண்டினல் படைக்கிறேம் அன்றி, எளியேங் கள் விளையாடும் இடத்தில் சிறு குறும்புகள் செய்தால் பொறுக் கச் சட்டம் உண்டோ?, *கள்ளம் விழிச்சூர் அரமகளிர் காமன் கொடியேற்று என வியப்பக் கற்பதருவில் படர்ந்து ஏறு* - வஞ்சம் பயின்ற கண்களையுடைய அச்சத்தை விளைக்கின்ற தெய்வமாதர்கள் மன்மதன் கொடி ஏற்றம் என்று வியக்கும்படி கற்பகமரத்தின்மேற் படர்ந்து ஏறுகின்ற, *காமர் கொடி செங்கயல் பாயும் தெள்ளு புனற்கா விரிநாடா!* - காமர் வல்லிக் கொடிமேல் சிவந்த கயல்மீன்கள் பாயாநின்ற தெளிந்த நீரை யுடைய காவிரி நாடனே!, *சிறியேம் சிற்றில் சிதையேல்*-,

*செங்நெற் பழனப் புள்ளூரா சிறியேம் சிற்றில் சிதையேல் -; (எ - று.)*

**(வி - ம்.)** *பிள்ளைமதி - ஒற்றைக் கலையாகிய சந்திரன். சிறுசோறு - சிறுமியர் சிறுவீட்டில் விளையாட்டுக்குச் சமைக்குஞ் சோறு. குறும்பு - சிறு தீங்கு. கொடியேற்று - கொடியேற்றம், ஏற்று: முதனிலைத் தொழிற்பெயர். காவிரியிலுள்ள கயல் மீன்கள் தாவி வான் உலகிலுள்ள கற்பக மரத்திற் படர்ந்துள்ள காமவல்லிக்கொடியில் இருப்பது காமன் விழாவுக்கு மீன்கொடி யேற்றியதுபோலத் தோன்றும் என்பது கருத்து.* (எ)

மடல்வாய் அவிழ்ந்த குழற்பேதை
யொருத்தி திருத்தும் பகிரண்ட
மணற்சிற் றிலையோர் கணத்தின்கண்
மட்டித் தாடு மைந்தன் அருள்
விடலாய் தமியேம் சிற்றில்முற்றும்
விளையாட் டாக ஒருநீயும்
வீட்டா நிற்பத் தொடங்கினையால்
வித்தும் முளையும் வேறன்றே
கடமா மருப்பும் சுடர்மணியும்
கதிர்நித் திலமும் மகளிர்முலைக்
களபத் தொடுகுங் குமச்சேறும்
கரைத்து விடுத்தக் கடற்குட்டம்
திடராச் செயுங்கா விரிநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செங்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

**(செ - ள்.)** *மடல்வாய் அவிழ்ந்த குழற்பேதை ஒருத்தி திருத்தும் பகிரண்ட மணற்சிற்றிலை ஓர் கணத்தின்கண் மட்டித் தாடும் மைந்தன் அருள் விடலாய் - பூமடல்கள் வாய்விரிந்த கூந்தலையுடைய பேதைப்பெண் ஒருத்தி திருத்துகின்ற பகிரண் டங்களாகிய மணற் சிறுவீட்டை ஒரு கணப்பொழுதில் அழித்தாடுகின்ற வலியோனாகிய சிவபெருமான் ஈன்றருளின விடலையே!, தமியேம் சிற்றில் முற்றும் விளையாட்டாக ஒரு*

*நீயும் வீட்டா நிற்பத் தொடங்கினை - தமியேங்களது சிற்றில் முழுதும் திருவிளையாடலாக ஒப்பற்ற நீயும் அழிக்கத் தொடங்கினாய், வித்தும் முளையும் வேறு அன்றே - ஆதலால் வித்தும் அதனிடத்துத் தோன்றும் முளையும் வேறல்லவே, கடமா மருப்பும் சுடர்மணியும் கதிர்நித்திலமும் மகளிர்முலைக் களபத்தொடு குங்குமச்சேறும் - மதயானைக் கொம்புகளையும் ஒளியுள்ள மணிகளையும் விளக்கமான முத்துக்களையும் மாதர்முலையிற் பூசப்பட்ட கலவைச் சாந்துடன் குங்குமக் குழம்பையும், கரைத்துவிட்டு அக் கடற்குட்டம் திடராச்செயும் காவிரிநாடா! - கரைத்துவிட்டு அந்தக் கடற்பள்ளத்தை மேடாகச்செய்கின்ற காவிரிநாடனே!, சிறியேம் சிற்றில் சிதையேல் -, செந்நெற் பழனப் புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல் -; (எ - று.)*

(வி - ம்.) பேதையொருத்தி - உமாதேவி. மைந்து - வலி. இதனையுடையவராதலால் சிவபெருமான்மைந்தன் எனப்பட்டார். ஈண்டு வலி என்றது பேராற்றல். இஃது இறைவற்குரிய எண் குணங்களில் ஒன்று. மட்டித்தல் - அழித்தல். வித்தும் முளையும் போல நீ உன் தந்தை செயலை மேற்கொண்டாய் என்பது கருத்து.

(அ)

வாமாண் கலைப்பேர் அகல்அல்குல்
மடமான் நோக்கின் அரமகளிர்
மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு
வந்த இடுக்கண் மாற்றினையால்
கோமான் நினைக்கப் பெருந்தேவர்
குலமே யன்றி அடியேமும்
குற்றே வலுக்காம் அகம்படிமைக்
குடியாக் கொண்டாற் குறையுண்டோ
காய்மாண் குலைச்செவ் விளநீரைக்
கடவுட்சாதி மடநல்லார்
கதிர்ப்பூண் முலையென் றேக்கறப்பைங்
கமுகு நகைவால் முத்தரும்பும்
தேமாம் பொழில்தீம் புனல்நாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) வாமாண் கலைப்பேர் அகல் அல்குல் மடமான் நோக்கின் அரமகளிர் மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு வந்த இடுக்கண் மாற்றினையால் - அழகு மாட்சிமைப்பட்ட மேகலையை அணிந்த பெரிய அகன்ற அல்குலையும் மடமானின் நோக்கத்தையும் உடைய தெய்வமாதர் மகிழ்ச்சிகொண்டிருக்கத் தேவர்க்கு நேர்ந்த துன்பத்தை ஒழித்தனையாதலால், கோமான் நினக்கு அப்பெருந்தேவர் குலமே அன்றி அடியேமும் குற்றேவலுக்கு ஆம் அகம்படிமைக் குடியாக்கொண்டால் குறை உண்டோ - பெருமானே! உனக்கு அந்தப் பெரிய தேவர் கூட்டமேயன்றி அடியேங்களும் குற்றேவலுக்கு ஆகின்ற அகம்படிமைக் குடிகளாகக்கொண்டால் குறையுளதோ!. காய்மாண் குலைச்செவ் விளநீரைக் கடவுட்சாதி மடநல்லார் கதிர்ப்பூண் முலை என்று ஏக்கற - காய்கள் மாட்சிமைப்பட்ட குலையிலுள்ள செவ்விளநீர்களைத் தேவர்குலத்தில் உதித்த இளமாதர்கள் ஆபரணங்கள் அணிந்த முலை எனக்கருதி ஏக்கற்று நிற்க, பைங்கமுகு நகைவால் முத்து அரும்பும் தேமாம் பொழில் தீம்புனல் நாட - (அதுகண்டு) பசிய கமுகமரங்கள் நகைப்பதுபோல ஒளியுள்ள முத்துக்களை அரும்புகின்ற தேமாஞ் சோலைகள் சூழ்ந்த இனிய நீர்நாடனே!, சிறியேம் சிற்றில் சிதையேல் -, செங்நெற் பழனப் புள்ளூரா சிறியேம் சிற்றில் சிதையேல் -; (எ - று.)

(வி - ம்.) வாமம்: வாம் எனத் தொக்கது. வாமம் - அழகு. கலை, மேகலை - மாதரிடை யணியினொன்று; இஃது ஏழ் கோவையிலுள்ளது. குற்றேவல்-சிறு பணிகள், அஃது அடைப்பை யேந்தல் முதலிய போல்வன. அகம்படிமைக்குடி - உள் வேலை செய்யும் (வீட்டுள்) குடும்பம். இவர்கள் அகம்படியர் என அழைக்கப்படுவர். 'காய்மாண் குலைச்செவ் விளநீரைக்...கமுகு நகைவால் முத்தரும்பும்' என்றதனால் தெய்வப் பெண்களது பேதைமையை நோக்கிக் கமுகு நகைக்கின்றதென்பது பெறப் பட்டது. (க)

கருவீற் றிருந்த பெருங்கருணை
கடைக்கண் பொழிய வீற்றிருக்கும்
கடவுள் நீயே பகிரண்டம்
கண்டா யெனின்வண் டடைகிடப்ப
மருவீற் றிருந்த குழல்மகளிர்
வண்டல் துறைக்கு மணற்சிற்றில்
மனைகோ லுவது மற்றடிகேள்
வகுக்கும் தொழிற்கு மாறன்றே

குருவீற் றிருந்த மணிமாடக்
கோடிமா நகரம் தோறுமலர்ந்த
கொழுந்தா மரைப்பூங் கோயிலிற்பல்
கோடி உருவங் கொண்டுசெழுந்
திருவீற் றிருந்த சோணாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(சொ - ள்.) கருவீற்றிருந்த பெருங்கருணை கடைக்கண் பொழிய வீற்றிருக்கும் கடவுள் நீயே பகிரண்டம் கண்டாய் எனின் - கருப்பங்கொண்டு வீற்றிருந்த பெருங்கருணை மழையைக் கடைக்கண் பொழியும்படி எழுந்தருளியிருக்கின்ற கடவுளாகிய நீயே பகிரண்டங்களை உண்டாக்கினை என்றால், வண்டு அடைகிடப்ப மருவீற்றிருந்த குழல் மகளிர் வண்டற்றுறைக்கு மணற் சிற்றில் மனைகோலுவது - வண்டுகள் அடைகிடக்கும்படி மணம் பொருந்திய கூந்தலையுடைய மாதர்கள் வண்டல் விளையாட்டிடத்துக்கு மணற்சிறுவீடு கோலுவது, அடியேங்கள் வகுக்கும் தொழிற்கு மாறு அன்றே - சுவாமிகள் படைக்குந் தொழிற்கு மாறுபட்டதன்றே, குரு வீற்றிருந்த மணிமாடக் கொடிமா நகரந்தோறும் அலர்ந்த கொழுந் தாமரைப்பூங் கோயிலில் - சிறந்த மணிகள் பதித்த மாளிகைக் கொடிகள் கட்டிய பெரிய நகரந்தோறும் விரிந்த செழுமையான தாமரையாகிய கோயிலில், பல்கோடி உருவம் கொண்டு செழுதிரு வீற்றிருந்த சோணாடா - பலகோடி வடிவங்கொண்டு செழுமையாகிய திருமகள் வீற்றிருக்கின்ற சோழநாட்டானே! சிறியேம் சிற்றில் சிதையேல், செந்நெற் பழனப் புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல் -; (எ - று.)

(வி - ம்.) மரு - மணம். யாம் சிற்றில் கோலுதல் நீ பகிரண்டம் படைக்கும் தொழிலுக்கு மாறானது அல்ல ஆதலால் எஞ்சிற்றில் சிதைத்தலுனக்குத் தகாதது என்பது கருத்து. மக்கட்கு வேண்டும் செல்வம் ஆகிய உணவுப் பொருள்கள அணி வகைகள் எல்லாவற்றிலும் திருமகள் இருப்பதால் "பலகோடி உருவங்கொண்டு" என்றார். "பதுமம் கொடி நகர்மீன் பைந் துளவு வில்வம், கதிர் விளவு சங்கு கடல் தீபம் வதுவை மனை நற்பரி பாற்பாண்டமிவை நாண் மலராணீங்காது நிற்பிடம் நல்லோர் நெஞ்சமே" என்பதும் காண்க. (௧0)

## ௬. சிறுபறைப் பருவம்

*[சிறுபறைப் பருவம் என்பது குழந்தை, சிறுபறை கொட்டி விளையாடும் பருவம். இதில் தாயர் முதலியோர், "சிறுபறை கொட்டி விளையாடுக" எனக் கூறியதாகப் பொருள் அமைத்துப் பாடுவது மரபு.]*

ஊற்றும் பசுந்தேன் உவட்டநெட் டிதழ்விரியும்
ஒண்காந்தள் முச்சியுச்சி
ஒருவன்நீ மும்முதற் கடவுளும் இளைப்பாற
உலகெலாந் தலையளித்துப்
போற்றும் திறத்தினப் பழமறைக் கிழவன்
புரிந்தபகி ரண்டங்கள் தாம்
புதுக்குவ கடுப்பநெடு வெளிமுகட் டுக்குவிரி
புதுநிலாக் கற்றையிட்டுத்
தூற்றும் பெயற்கரு முகிற்படாத் தையும்வெண்
துகிற்படாம் ஆக்கிவீக்கித்
தொடுகடற் புவனப் பெருந்தட்டோ டண்டச்
சுவர்த்தலத் துக்கும்வெள்ளை
தீற்றும் சுதைத்தவள மாடமலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே.

(சொ - ள்.) *ஊற்றும் பசுந்தேன் உவட்ட நெடு இதழ் விரியும் ஒண் காந்தள் முச்சியுச்சி ஒருவன் நீ - ஒழுக்குகிற பசிய தேனானது தளும்ப நெடிய இதழ்கள் விரிகின்ற ஒட்பமாகிய காந்தள் மலரை முடித்த முச்சியைக்கொண்ட உச்சியையுடைய ஒப்பற்றவனாகிய நீ, மும்முதல் கடவுளும் இளைப்பாற உலகு எல்லாம் தலைஅசைத்துப் போற்றும் திறத்தின் - மும்முதற் கடவுளும் இளைப்பு ஒழியும்படி எல்லா உலகங்களையும் கருணை செய்தருளிக் காப்பாற்றுந் தன்மையால், அப்பழமறைக் கிழவன் புரிந்த பகிரண்டங்கள் புதுக்குவ கடுப்ப-அந்தப் பழமறைக் கிழவனாகிய பிரமன் படைத்த பகிரண்டங்களைப் புதுக்குவனபோலத் தோன்ற, நெடுவெளி முகட்டுக்குப் புதுநிலாக் கற்றை யிட்டு -*

பெருவெளி முகட்டுக்கு விரிந்த புதுநிலாவின் கற்றையை அமைத்து, தூற்றும் பெயல் கருமுகிற் படாத்தையும் வெண் துகிற் படாம் ஆக்கி வீக்கி - மழைத்துளி சிதறுகின்ற கரிய மேக மாகிய படாத்தையும் வெள்ளாடையாகச் செய்துகட்டி, தொடு' கடல் சூழ்ந்த புவனம் பெருந்தட்டொடு அண்டச் சுவர்த்தலத் துக்கும் வெள்ளை தீற்றும் - தோண்டப்பட்ட கடல்சூழ்ந்த உலக மாகிய பெரிய தட்டுடனே அண்டச்சுவராகிய இடத்தினுக்கும் வெள்ளை தீற்றுகின்ற, சுதைத்தவள மாடம்மலி வேளூர சிறுபறை முழக்கி யருளே - சுண்ணச்சாந்தமைந்த வெண்மாடங்கள் மிக்கு விளங்குகின்ற வேளூரனே சிறுபறை கொட்டி யருள்வாயாக, தென்கலைக்கும் பழைய வடகலைக்குந் தலைவ சிறுபறை முழக்கி யருளே - தென்மொழிக்கும் பழைமையாகிய வடமொழிக்கும் தலைவனே சிறுபறை முழக்கியருள் - ; (எ . று.)

(வி - ம்.) முச்சி - ஐவகை மயிர் முடியிலொன்று. இதனை உச்சிக்கொண்டை யென்பர். கிழவன் - உரியவன். (கிழமை : பகுதி). கடுத்தல் - நிகர்த்தல், ஒத்தல். படாம் - ஆடை, துணி. வீக்குதல் - கட்டுதல். வீ : பகுதி. அண்டச்சுவர் - வானமாகிய சுவர். பறை முழக்கல் - பறை அடித்தல். இவர் மும்முதற் கடவுள் இளைப்பாற உலகெலாம் தலை அளித்தார் ; அஃது பிரம னைக் குட்டிச் சிறையிட்டபொழுது. வேளூரில் வெண்மையான சுண்ணச் சாந்து பூசப்பட்ட மாடங்கள் மேலுயர்ந்து நிற்பதால் அவைகளின்மீது சந்திரனும் மேகங்களும் தவழ்ந்து செல்லும் என்பதும், அஃது அண்டச் சுவர்களுக்குச் சுதை தீற்றுவது போலத் தோன்றும் என்பதும் கருத்து. மும்முதற் கடவுள் - அயன் அரி அரன் என்ற மூவர். இவர்கள் இளைப்பாற என்பது படைத்தல், காத்தல், அழித்தல் என்ற தத்தம் தொழில்களைச் செய்யாமல் இருக்க. உலகு எலாம் தலையளித்துப் போற்றும் திறமாவது தானே அம்மூவர் செய்யும் செயலையும் செய்து வருவது. (௩)

விளைக்கும் பெரும்புவனம் ஒக்கக் கரைத்தகடை
வெள்ளம் சுருங்கவீங்கி
வேதண்டம் எட்டினொடு மூதண்ட கூடத்தும்
விளையாடி உலகமேழும்
வளைக்கும் கருங்கடல் பெரும்புறக் கடலோடும்
வாய்மடுத் தெதிரேடுப்ப
வருபுனற் காவேரி வளநாடன் நாள்தோறும்
மதிக்கடவுள் ஏறியேறி

இளைக்கும் பளிக்கறை முயற்கறை அறக்காலும்
இளநிலா வெள்ளமூழ்கி
எறிதிரைப் பாகீரதிப்புனல் குடைந்திடும்
இடைக்கோடி நகிற்கோடியெனத்
திளைக்கும் துகிற்கோடி முகிற்கோடி செய் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே.

(சொ - ள்.) விளைக்கும் பெரும்புவனம் ஒக்கக் கரைத்த கடைவெள்ளம் சுருங்க வீங்கி - உண்டாக்கப்பட்ட பெரிய புவனங்கள் எல்லாவற்றையும் சேரக்கரைத்த ஊழிப் பெருக்கும் சுருங்கும்படி பெருகி (பொங்கி), வேதண்டம் எட்டிெனாடு மூதண்ட கூடத்தும் விளையாடி உலகம் ஏழும் வளைக்கும் கருங் கடல் - எட்டுக் குலமலைகளுடன் பழைமையாகிய அண்ட முகட்டினும் சென்று விளையாடி ஏழுலகங்களையும் வளைக்கின்ற கருங் கடலானது, பெரும்புறக் கடலினொடும் வாய் மடுத்து எதிர் எடுப்ப - பெரிய புறக் கடலுடன் கலந்து எதிர்த்து ஏறி வரும் படி, வருபுனற் காவிரி வளநாட-பெருகி வருகின்ற நீரையுடைய காவிரியாறு சூழாநின்ற வளநாடனே ! நாடொறும் மதிக்கடவுள் ஏறிஏறி இளைக்கும் பளிக்கறை முயற்கறை அற - நாடோறும் சந்திரன் ஏறிஏறி இளைத்தற்குரிய பளிக்கறைகள் முயற்களங்கம் ஒழிய, காலும் இளநிலா வெள்ளம் மூழ்கி எறிதிரைப் பாகீரதிப் புனல் குடைந்திடு இடைக்கொடி நகிற்கொடி என - உமிழ்கின்ற இளநிலாப் பெருக்கில் படிந்து வீசுகின்ற அலைகளையுடைய கங்கையாற்றில் மூழ்கிடும் இடையாகிய கொடியும் முலையு முடைய பெண் கொடிகளைப்போல, திளைக்கும் துகிற்கொடி முகிற்கொடிசெய் வேளூர - நிறைந்த துகிற்கொடிகளும், மேகக் கூட்டங்களை மறைத்தல் செய்கின்ற வேளூரனே !, சிறுபறை முழக்கியருளே-, தென்கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவ சிறுபறை முழக்கியருளே -; (எ - று.)

(வி - ம்.) அட்டகுலகிரிகள் - எட்டுச் சிறந்த மலைகள். அவை : கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்பன. இடைக்கு, முகிற்கு என்பன. உருபு மயக்கம். ஓடிசெய் : ஒருசொல் - ஓடித்தலைச் செய்கின்ற தெனினுமாம். இடைக்கு உருபு மயக்கமாகக்கொண்டு இடையை ஓடிக்கின்ற நகில் என்றலும் ஆம். (உ)

இருளும் தரங்கக் கருங்கடல் முகட்டெழும்
இளம்பிறை முயற்குழந்தைக்
கேறவிடும் ஓடமென வான்மீன் தடந்திரை
யெடுத்தெறியும் நெடுமீனெனத்
தரளம் பதிந்திட்ட மணிமுறுவ லவரோடு
தருநிழற் செல்வருய்க்கும்
தமனிய விமானமும் வெயிற்கதிர்ப் போர்வையான்
தனிஆழி திசையுருட்ட
உருளும் கொடித்தேரும் வீற்றுவீற் றெழில்புனைந்
தோட்டுபொன் தெப்பம் என்ன
உலகேழும் மலையெட்டும் ஒழுகுகதிர் விழுதுவிடும்
ஒள்நிலாப் புணரிகோப்பத்
திரளும் பளிக்குமா டங்கள் பொலிவேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே.

(சொ - ள்.) *இருளும் தரங்கம் கருங்கடல் முகட்டு எழும் இளம்பிறை - இருளாகின்ற அலைகளையுடைய கரிய கடலின் முகட்டில் எழுகின்ற இளம்பிறையாகிய, முயற் குழந்தைக்கு ஏறவிடும் ஓடம் என - முயலாகிய குழந்தைக்கு ஏறவிடுகின்ற ஓடம் போலவும், வான்மீன் தடந்திரை எடுத்து எறியும் நெடு மீன் என - வான்மீன்கள் பெரிய அலைகளால் எடுத்தெறியப்பட்ட நெடிய மீன்கள் போலவும், தரளம் பதிந்திட்ட மணிமுறுவ லவரோடு தருநிழற் செல்வர் உய்க்கும் - முத்துக்கள் பதிந்தாற் போன்ற அழகிய பல்லையுடைய மாதருடன் கற்பகதரு நிழலில் வாழ்கின்ற செல்வர்களாகிய தேவர்கள் செலுத்துகின்ற, தமனிய விமானமும் - பொன் விமானமும், வெயில்கதிர்ப் போர்வையான் தனிஆழி திசை உருட்ட உருளும் - வெயில் கதிர்ப் போர்வை யுடையவனாகிய சூரியன் ஒப்பற்ற ஆணைச் சக்கரத்தை உருட்டு வதற்காக எல்லாத் திசையிலும் உருளாகின்ற, கொடித்தேரும் - கொடிகள் கட்டின தேர்களும், வீறறு வீற்று எழில் புனைந்து ஓட்டு பொன்தெப்பமும் என - வேறுவேறாகிய அழகுபெற்ற ஓட்டப்படுகின்ற பொற்றெப்பமும் போலவும், உலகுஏழும் மலை எட்டும் ஒழுகு கதிர்விழுது விடும் - ஏழுலகத்திலும் மலை எட்டி*

லும் ஒழுகாநின்ற ஒளியின் விழுது விடுகின்ற, ஒண்நிலாப்புணரி கோப்பத் திரளும் பளிக்கு மாடங்கள் பொலிவேளூர! - ஒள்ளிய நிலாக்கடல் சேர்த்துக்கொள்ளத் திரண்ட பளிங்கு மாடங்கள் விளங்குகின்ற வேளூரனே!, சிறுபறை முழக்கியருளே, தென்கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவ! சிறுபறை முழக்கியருளே -; (எ - று.)

(வி - ம்.) இருளும் - இருள்கின்ற, பெயரெச்சம். முகடு - உச்சி. தமனியம் - தபநியம, பொன். பளிங்கு; பளிக்கு என வலித்தது. வேளூரில் உள்ள பளிங்கு மாடங்கள் ஓடமெனவும், நெடுமீன் எனவும், தமனிய விமானம் எனவும், கொடித்தேர் எனவும் பொற்றெப்பம் எனவும் பொலியும் எனப் பொருள் கொள்க. (௩)

மொய்ம்பிற் பெரும்புவனம் ஒக்கச் சுமக்கின்ற
மோட்டாமை முதுகுளுக்க
முடவுப் படங்கிழிந் தரவரசின் ஆயிர
முடித்தலையும் மூளைபோங்கக்
கம்பக் கடாயானை எட்டும் பிடர்த்தலை
கழுத்தொடு முரிந்துகவிழக்
கதிர்மணிச் சூட்டுநெட் டரவெட்டும் வடவைக்
கடுங்கனற் கண்பிதுங்க
அம்பொன் தடம்புரிசை யெழுபெருந் தட்டுருவி
அண்டகூ டத்தளவலால்
அவரவர் வழங்குதற் கிடுதலைக் கடையென
அடுக்கேழு நிலையேழுமாம்
செம்பொன் திருக்கோ புரங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே.

(சொ - ள்.) மொய்ம்பின் பெரும்புவனம் ஒக்கச் சுமக்கின்ற மோட்டாமை முதுகுளுக்க - வலியினுல் பெரிய புவனங்களை ஒருசேரச் சுமக்கின்ற பெரிய ஆமையானது முதுகு நெளியவும், முடவுப்படம் கிழிந்து அரவு அரசின் ஆயிர முடித்தலையும் மூளை

பொங்க - வளைவாகிய படம் கிழிபட்டு ஆதிசேடனது ஆயிர முடித்தலைகளும் மூளை கொதிக்கவும், கம்பக் கடாயானை எட்டும் பிடர்த்தலை கழுத்தொடு முரிந்து கவிழ - கட்டுத்தறியிற் கட்டப் படுகிற மதங்கொண்ட எட்டுத்திசை யானைகளும் பிடர்த்தலை யானது கழுத்துடன் ஒடிந்து கவிழ்ந்து விழவும், கதிர்மணிச் சூட்டு நெடு அரவுஎட்டும் வடவைக் கடுங்கனல் கண் பிதுங்க-ஒளிபெற்ற மணியமைந்த உச்சியுடைய! நெடியவாகிய எட்டுப் பாம்புகளும் வடவைகளாகிய சுடுந் தீயினையுடைய கண்கள் பிதுங்கவும், அம்பொன் தடம்புரிசை எழுபெருந் தட்டு உருவி அண்டகூடத்து அளவலால் - அழகிய பொன்னினுற் செய்யப் பட்ட பெரிய மதிலானது ஏழாகிய பெருந்தட்டுக்களை ஊடுருவி அண்டமுகட்டிற் சேர்தலால், அவரவர் வழங்குதற்கு இடுதலைக் கடைஎன அடுக்கு ஏழும் நிலைஏழும்ஆம் செம்பொன் திருக் கோபுரங்கள் பொலி வேளூர! - அவ்வவ் வுலகத்தார் சஞ்சரிப்ப தற்கு(இயங்குவதற்கு) அமைக்கப்பட்ட தலைக்கடை என்னும் படி ஏழடுக்கும் ஏழ்நிலையும் ஆகிய செம்பொன்னுல் இயன்ற திருக்கோபுரங்கள் விளங்காநின்ற வேளூரனே!, சிறுபறை முழக்கியருள் - தென் கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவ சிறுபறை முழக்கியருளே - ; (எ - று.)

(வி - ம்.) மொய்ம்பு - வலி. கம்பம்: சாதியடை; கட்டுத் தறி. அட்டநாகங்கள் - எட்டுப் பாம்புகள். அவை: வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்பன. இவை முறையே கிழக்கு முதலிய எட்டுத் திசைகளையும் தாங்க, இவற்றினடுவே ஆதிசேடன் பூமியைச் சுமக்கின்றுன். இவைகள் காசிபனுக்கும் கத்துருவுக்கும் பிறந்தவைகள். அட்டதிக்கயங்கள் - எட்டுத்திசை யானைகள். முதுகுளுக்க, மூளைபொங்க, முரிந்து கவிழ, கண்பிதுங்க, புரிசை அண்டகூடத்தளவியது எனக் காரண காரியம் இயைபுபடுத்துக. (ச)

தரிக்குஞ் சுடர்ப்பருதி முழுமதிக் கடவுளொடு
தடமதில் கடந்தகநகர்
சாரஅரி தாற்புவன கோடிகட் கொளிசெயச்
சதுர்முகன் கற்பந்தோறும்
விரிக்கின்ற இருசுடரும் ஒருவழித் தோக்கென
வியன்கதிர்ப் படலமூடி
வீங்கிருள் விழுங்குசெம் மணிமாட நிரையுமொளி
விளைபசுங் கதிர்வெண்புரி

புரிக்கும் செழுந்தரள மாடமும் வெயிலினொடு
போழிநிலாப் போர்ப்பமுற்றும்
போதுதெரி யாமையிற் குமுதமோடு சதஇதழ்ப்
போதுமே இருபோதையும்
தெரிக்கும் தடம்பணை உடுத்ததமிழ்வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே.

(சொ - ள்.) தரிக்கும் சுடர்ப்பருதி முழுமதிக் கடவுளொடு தடமதில் கடந்து அகநகர் சாரஅரிதால் - தரிக்கின்ற காந்தியை யுடைய சூரியன் பூரணச் சந்திரனொடு பெரிய மதிலைத்தாண்டி நகரினுள்ளே சேர அருமையாதலால், புவனகோடிகட்கு ஒளி செய்யச் சதுர்முகன் கற்பந்தோறும் விரிக்கின்ற இரு சுடரும் ஒருவழி தொக்கது என - அண்டகோடிகட்கு ஒளியைத் தரும் பொருட்டு நான்முகனாகிய பிரமன் கற்பங்கள்தோறும் படைக் கின்ற இரு சுடர்களும் ஓரிடத்தில் கூடினாற்போல, வியன்கதிர்ப் படலம் மூடி வீங்கி இருள் விழுங்கு செம்மணிமாட நிரையும் - பெரிய ஒளித்தொகுதி மூடி அதிகரித்த இருட்டை விழுங்கு கின்ற செம்மணிகள் பதிந்த மாளிகை வரிசையும், ஒளிவிளை பசுங்கதிர் வெண்புரி புரிக்கும் செழுந்தரள மாடமும் வெயிலி னொடு பொழிநிலாப் போர்ப்ப.ஒளியுண்டாகிய பசிய கிரணத்தை யுடைய வெண்சங்குகள் ஈனுகின்ற செழிய முத்து மாளிகைகளும் வெயிலுடன் போர்க்கின்ற நிலாவினால் மூட, முற்றும்போது தெரியாமையின் குமுதமொடு சதஇதழ்ப் போதுமே இருபோதை யும் தெரிவிக்கும் தடம்பணை உடுத்த தமிழ் வேளூர! - முழுதும் பொழுது தெரியப்படாமையால் குமுதங்களோடு நூற்றிதழ்த் தாமரைகளுமே இரு பொழுதையும் தெரிவிக்கின்ற பெரிய வயல்கள் சூழ்ந்த தமிழ் வழங்குகிற வேளூரனே!, சிறுபறை முழக்கியருள் -, தென்கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவ! சிறுபறை முழக்கி அருள்; (எ - று.)

(வி - ம்) கோடி - வரிசை. இரு சுடர் - சூரியசந்திரர். இருபோதும் - இரவும் பகலும். பொழுது என்பது போது என மருவிற்று. குமுதமலர் இராப்பொழுதையும், கமலமலர் பகற் பொழுதையும் தெரிவிக்கின்றன. செம்மணி மாடநிரையும், செழுந்தரள மாடமும் நிரையே சூரியன் போலவும் சந்திரன் போலவும் ஒளி தருதலின் "இருசுடரும் ஒருவழித் தொக்கென" என்றார். (கு)

வேறு

மழைமுகில் பிளிறு முழக்கென விரிசிறை
மடமயி லினம்அகவ
மால்கட லோலிடும் ஒலியென விரக
மடந்தையர் மனநெகிழப்
பழமறை ஆர்ப்பென ஆகுதி வேட்டெழு
பண்ணவர் உளமகிழப்
பரநா தத்தொலி யெனஅநு பூதி
பலித்தவர் நெக்குருக
அழலவிர் சோதியெம் ஐயன் நடஞ்செய
ஆயிரம் அங்கையினோர்
அண்ணல் துவைத்திடு குடமுழ வொடுசுடர்
ஆழி யவன்கொட்டும்
முழவென அமரரும் முனிவரும் ஆர்ப்ப
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே.

(சொ - ள்.) *மழைமுகில் பிளிறு முழக்கு என விரிசிறை மடமயில் இனம் அகவ - குளிர்ச்சியையுடைய மேகங்கள் ஒலிக்கின்ற முழக்கம் என்று எண்ணி விரிந்த கலாபத்தையுடைய இளம்மயிற்கூட்டங்கள் ஆடவும், மால்கடல் ஒலிடும் ஒலி என விரக மடந்தையர் மனம் நெகிழ - பெரிய கடல் ஒலிக்கின்ற ஒலியென்று நினைத்து விரகங்கொண்ட மாதர்கள் மனம் உருகாநிற்கவும், பழமறை ஆர்ப்பு என ஆகுதிவேட்டு எழுபண்ணவர் உள்மகிழ - பழைமையாகிய வேத முழக்கம் என்று எண்ணி ஆகுதியை விரும்பி எழுந்த தேவர்கள் மனமகிழவும், பரநாதத்து ஒலி என அனுபூதி பலித்தவர் நெக்கு உருக - பரநாதத் தொலி என்று எண்ணி அநுபவம் பலிக்கப்பெற்றவர் மனம் நெகிழ்ந்து உருகவும், அழல் அவிர் சோதி எம்ஐயன் நடம்செய ஆயிரம் அங்கையின் ஓர் அண்ணல் துவைத்திடு குடமுழவொடு - அனல் விளங்குகிற ஒளியுருவாகிய எம் இறைவன் திருக்கூத்தாட ஆயிரம் கைகளையுடைய ஒரு பெரியோன் முழக்குகிற குடமுழாவுடனே, சுடர் ஆழியவன் கொட்டும் முழவு என அமரரும்*

முனிவரும் ஆர்ப்ப - ஒளியையுடைய சக்கராயுதத்தை ஏந்தியவனாகிய திருமால் கொட்டுகின்ற முழவொலி என்றெண்ணித் தேவர்களும் முனிவர்களும் ஆரவாரிக்கவும், சிறுபறை முழக்கியருள் -, முத்தமிழ் பயில்பரிதிபதி முருகன் - மூவகைத் தமிழும் வழங்குகின்ற பரிதிபுரி முருகனே, சிறுபறை முழக்கியருள் - ; (எ - று.)

(வி - ம்.) மழைமுகில் - மழையைப் பெய்கின்ற மேகம். அகவுதல் - ஆடுதல். மயில் மேகத்தைக் கண்டு ஆடுவது. இதனை, "கார்பெற்ற தோகையோ" என்ற நளவெண்பா அடியிற் காண்க. ஆகுதி - தேவருணவு (யாகத்தில் நெருப்பின்வழி கொடுக்கப்படுவது). ஆயிரம் அங்கையின் ஓரண்ணல் : வாணாசுரன். (சு)

பெருவெளி முகடு திறந்திட் டண்டப்
பித்திகை வெடியாமே
பேரண் டத்துள வேதண் டங்கள்
பிதிர்ந்துதிர் வாகாமே
குருமணி சிதறிய வென்ன உடுத்திரள்
கோட்டுண் டுதிராமே
குவடு படுந்திசை செவிடு படச்சிலர்
குடர்கள் குழம்பாமே
திருவிர லோடுசுக கண்களி னுஞ்செங்
குருதி ததும்பாமே
சேயொளி நின்று துளும்பிட நின்சிறு
செங்கை வருந்தாமே
முருகலர் தாரவன் ஒருமுறை மெல்ல
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே.

(சொ - ள்.) பெருவெளி முகடு திறந்திட்டு அண்ட பித்திகை வெடியாமே - பெருவெளியின் முகடு பிளந்திட்டு அண்டச்சுவர் வெடிக்காமலும், பேரண்டத்துள வேதண்டங்கள் பிதிர்ந்து உதிர்வு ஆகாமே - பெரிய அண்டங்களிலுள்ள மலைகள்

பொடியாகி உதிராமலும், குருமணி சிதறிய என்ன உடுத்திரள் கொட்டுண்டு உதிராமே - சிறமுள்ள மணிகள் சிதறின என்னும் படி உடுக்கூட்டம் மேலிருந்து கொட்டப்பட்டதுபோல உதிராமலும், குவடு படுந்திசை செவிடுபடச் சிலர் குடர்கள் குழம்பாமே - குலமலைகள் பொருந்திய எட்டுத்திசையிலுள்ள சிலர் செவிடுபட்டுக் குடர்கள் குழம்பாமலும், திருவிரலொடு நகம் கண்களிலும் செங்குருதி ததும்பாமே - அழகிய விரல்களுடன் நகக்கண்களிலும் சிவந்த இரத்தம் தளும்பாமலும், சேயொளி நின்று துளும்பிட நின்சிறு செங்கை வருந்தாமே - செவ்வொளி நின்று ததும்பிட உனது சிறிய செங்கை வருந்தாமலும், முருகு அலர் தாரவன் ஒருமுறை மெல்ல முழக்குக சிறுபறையே - வாசனையோடலர்ந்த பூமாலையையுடையவனே ! ஒருதரம் பையச் சிறுபறை முழக்குக, முத்தமிழ் பயில் பருதிப்பதி முருகன் முழக்குக சிறுபறையே - ; (எ - று.)

(வி - ம்.) பெருவெளி முகடு - அண்டச்சுவர், குவடு - மலை.

வம்மின் எனப்புல வோரை அழைத்திடு
வண்கோடை முரசமெண
வடகலை தென்கலை யொடுபயி லுங்கவி
வாணர்கள் ஓடிவர
அம்மென் மடப்பிடி பொன்னுல கீன்ற
அணங்கை மணம்புணரும்
அணிகிளர் மணிமுர சென்னஎம் ஐயனொ
டம்மை மனங்குளிரத்
தெம்முனை சாயச் சமர்விளை யாடிச்
செங்கள வேள்விசெயும்
திறல்முர சென இமை யவர்விழ வயரச்
செழுநகர் வீதிதொறும்
மும்முர சுமுமதிர் காவிரி நாடன்
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே.

(சொ - வ்.) வம்மின் எனப் புலவோரை அழைத்திடு வண்கொடை முரசம் என - வாருங்கள் என்று புலவர்களை

அழைக்கின்ற வளவிய கொடைமுரசம் என்று கருதி, வடகலை தென்கலை ஓடுபயிலும் கவிவாணர்கள் ஓடிவர - வடகலையைத் தென்கலையுடன் பயில்கின்ற வித்துவான்கள் ஓடிவரவும், அம்மென் மடப்பிடி பொன்னுலகின்ற அணங்கை மணம் புணரும் - அந்த மெல்லிய இளம்பிடிபோன்ற பொன்னுலகத்திற் பெற்ற தெய்வப்பெண்ணை மணம்புணர்தற்குரிய, அணிகிளர் மணிமுரசு என்ன - அழகு விளங்குகின்ற மணிமுரசம் என்று எண்ணி, எம் ஐயனொடு அம்மை மனம் குளிர-எம் இறைவனுடன் இறைவியின் மனமும் குளிரவும், மதம்முனை சாயச் சமர் விளையாடிச் செங்கள வேள்விசெய்யும் திறல்முரசு என - பகை வரது முற்படை முறிந்தோடும்படி போர்புரிந்து செங்களவேள்வி செய்கின்ற வெற்றிமுரசமாகக் கருதி, இமையவர் விழவு அயர - தேவர்கள் திருவிழாக் கொண்டாடவும் செழுநகர் வீதிதொறும் மும்முரசமும் அதிர் காவிரிநாடன்! - செழுமையாகிய நகரத் தெருத்தோறும் மும்முரசங்களும் முழங்குகின்ற காவிரிநாடனே!, முழக்குக சிறுபறை -, முத்தமிழ்பயில் பருதிப்பதி முருகன்! முழக்குக சிறுபறை - ; (எ - து.)

(வி - ம்.) வம்மின் : ஏவல்பன்மை வினைமுற்று. "அம் மென் மடப்பிடி பொன்னுலகீன்ற வணங்கு" என்றது தெய்வ யானையாரை. இமையாதவரை இமையவர் என்றது மங்கல வழக்கு. ஓடிவர, மனங்குளிர, விழவயர நீ சிறுபறை முழக்குக எனக் கூட்டுக. (அ)

## வேறு

பெருகுசு வைத்தெளி நறவொழு கக்கனி கனியமுதே
  பிடிநடை கற்றிட அடிகள்பெ யர்த்திடு மடவனமே
கருவரை நெக்குடன் உருகமி ழற்றுமொர் கிளியரசே
  கருணைசெ யத்தகும் அளியனி டத்தேனும் மொழிபுகலா
அருளில் புனத்தவர் மகளிரு பொற்பதம் வருடல்செயா
  அவள்முனெ டுத்துநின் முடியின் முடித்திடு கரமலராற்
பருவ யிரப்புய சயிலன்மு ழக்குக சிறுபறையே
  பருதிபு ரிச்சிறு குமரன்மு ழக்குக சிறுபறையே.

(சொ-ள்.) பெருகுசுவை தெளிநறவு ஒழுகக்கனி கனிஅமுதே- பெருகாநின்ற சுவையுள்ள தெளிந்த தேன் ஒழுகாநிற்கக் கனிந்த கனியின் அமுதமே!, பிடிநடை கற்றிட அடிகள் பெயர்த்திடு மடஅனமே! - பெண்யானைகள் நடைகற்கும்படி அடிகளைப்

பெயர்த்திடுகின்ற இளமையாகிய அன்னமே!, கருவரை நெக்கு உடன் உருகமிழற்றும் ஓர் கிளி அரசே-கரிய மலைகள் நெகிழ்ந்து விரைந்து உருகும்படி குழறிப் பேசுகிற ஒப்பற்ற கிள்ளை அரசே!, அளியனிடத்துக் கருணை செயத்தகும் என்னும் மொழி புகலா-எளியேனிடத்தில் கிருபைசெய்யத்தகும் என்னும் சொற்களைச் சொல்லி, அருள்இல் புனத்தவர் மகள் இரு பொற்பதம் வருடல்செயா - இரக்கமில்லாத குறவர் மகளுடைய இரண்டு அழகிய அடிகளை வருடி, அவள்முன் எடுத்து சென்முடியில் முகிழ்த்திடு கைம்மலரால் - அவளுக்கு எதிரே நின்று உயர்த்தி உன் தலைமீது கூப்பிய கையாகிய மலரால், பரு வயிரப் புய சயிலன் முழக்குக சிறுபறையே - பெருவயிரமலை போலும் தோள் மலையையுடையவனே முழக்குக சிறுபறை, பருதிபுரிச் சிறு குமரன்! - பரிதிபுரியிலுள்ள இளங்குமரனே!, முழக்குக சிறு பறை - ; (எ - று.)

(வி - ம்.) புகலா - புகன்று; செய்யாவெனும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். புனத்தவர் மகள்: வள்ளிநாயகி. வருடல் செயா - வருடி. செயா - செய்து. சயிலன்: அண்மை விளி. (க)

இழுமென்மொ ழித்தெளி தமிழின் வடித்திடு நவரசமே
இதய இருட்டற உணர்விலு தித்திடு சுடரொளியே
கழுவு மணிக்கலன் நடுவிலி ழைத்திடு குலமணியே
கனிதரு முக்கனி யொடுவடி கட்டிய சுவையமுதே
ஒழுகுந றைச்செழு மலர்விரி யக்கமழ் புதுமணமே
உருகுமு ளத்தருள் பெருகியு வட்டெழு சலநிதியே
பழமறை கட்கொரு முதல்வன்மு ழக்குக சிறுபறையே
பருதிபு ரிச்சிறு குமரன்மு ழக்குக சிறுபறையே.

(சொ - ள்.) இழுமென் மொழித்தெளி தமிழின் வடித்திடு நவரசமே - இழும் என ஒலிக்கின்ற சொற்களையுடைய தெள்ளிய தமிழினின்றும் வடித்திட்ட ஒன்பான் சுவையே!, இதய இருட்டு அற உணர்வில் உதித்திடு சுடர் ஒளியே - மனத்திலுள்ள அறியாமை இருள் ஒழிய அறிவினிடத்தே உதிக்கின்ற ஒளியுடைய சூரியனே!, கழுவும் மணிக்கலன் நடுவில் இழைத்திடு குல மணியே - கழுவப்பட்ட மணிகளால் இயன்ற ஆபரணங்களின் இடையே இழைத்திட்ட உயர்ந்த மாணிக்கமே!, கனிதரு முக்கனியொடு வடிகட்டிய சுவை அமுதே-கனிந்த முப்பழங்களோடு

கலந்து வடித்த சுவையுள்ள அமுதமே!, ஒழுகுநறை செழுமலர் விரிய கமழ் புதுமணமே! - ஒழுகாநின்ற தேனையுடைய செழுமை யாகிய மலர்கள் விரிய மணக்கின்ற புதுமணமே!, உருகும் உளத்து அருள் பெருக உவட்டெழு சலநிதியே! - (அன்பரது) உள்ளத்தில் அருள்வெள்ளம் பெருகத் ததும்புகின்ற கடலே!, பழமறைகட்கு ஒரு முதல்வன்! - பழைமையாகிய வேதங்கட்கு ஒப்பற்ற முதல்வனே! முழக்குக சிறுபறை -, பருதிபுரிச் சிறு குமரன் முழக்குக சிறுபறையே -; (எ - று.)

(வி - ம்.) இமுமென் என்பது ஒலிக்குறிப்பு இடைச்சொல். கழுவல் - கழுவுதல், தூய்மையாக்கல். இழைத்தல் - பதித்தல். முக்கனி - வாழை, பலா, மா. இவற்றுள் ஒவ்வொன்றும் தனிச் சுவை யுடையது. இது "முக்கனி களுட்சுவை முதிர்ச்சி பெற்றுள தெக்கனி" என்ற சிவப்பிரகாசர் திருமொழியால் உணரப்படும். (கo)



# கo. சிறுதேர்ப் பருவம்

*[குழந்தை சிறுதேர் உருட்டி விளையாடுதலைத் தெரிவிக்கும் பருவம். இதிற் "சிறுதேருருட்டி விளையாடுக" எனத் தாயர் முதலியோர் கூறுவதாகப் பொருள் அமைத்துப் பாடுவது மரபு.]*

போரோடு படைதுறந் துடல்திறந் தோடுசெம்
 புனலோட ஓடிநிமிரும்
புணரிப் பெருந்தானை அவுணப் படைத்தலைவர்
 பூதப் படைத்தலைவர்முன்
தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட
 தழல்விழிக் கெதிர்செலாத
தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமநும்
 தாலிக்கு வேலிகொல்எனுப்
பீரோடு கொங்கைக்கண் நீரோடு வெள்ளருவி
 பெருகக் கடைக்கணிற்கும்
பெய்வளை யவர்க்கோத அவர்விழிகள் தோறுமிளம்
 பேதையர்கள் கண்தோறுமெனத்
தேரோடும் ஒருபெருஞ் சிலையோடும் நின்றவன்
 சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
 சிறுதேர் உருட்டியருளே.

(செ - ள்.) *போரோடு படை துறந்து உடல்திறந்து ஓடு செம்புனல் ஓடஓடி நிமிரும் - போர்க்களத்தில் ஆயுதங்களை எறிந்துவிட்டு உடம்புகள் வகிரப்பட்டு வழிகிற செந்நீர் ஓடும் படி ஓடி நிமிர்ந்த, புணரிப் பெருந்தானை அவுணப் படைத் தலைவர் - கடல்போன்ற பெரும் படையையுடைய அவுணர் சேனைத்தலைவர்கள், பூதப்படைத்தலைவர் முன் - பூதப்படைத் தலைவர்க்கு எதிரில், தாரோடு அவிழ்ந்திட்ட குஞ்சிக்கு இமைத் திட்ட தழல்விழிக்கு எதிர்செலாத தாளுக்கு - பூமாலையுடன் அவிழ்ந்துபோன குடுமிக்கும் இமைக்கின்ற நெருப்புப்போலும் கண்ணுக்கும் முன்னேறி நடவாத அடிக்கும், வாள்சோர் தடக் கைக்கு நாமம் நும் தாலிக்கு வேலிகொல் எனு - வாள் நழுவ விட்ட பெருங்கைக்கும் அஞ்சுவது உங்கள் தாலிகட்கும் வேலி*

என்று, பீர் ஓடு கொங்கைக்கண் நீரோடு வெள்ளருவி பெருகக் கடைக்கண் நிற்கும் பெய்வளையவர்க்கு ஓத - பசலைபூத்த தனங்களின்மேல் கண்ணீராய் ஓடுகிற வெள்ளருவி பெருகும்படி (தங்கணவரை எதிர்பார்த்து) வாயிலில் நிற்கிற மாதர்க்குச் சொல்ல, அவர் விழிகள்தோறும் இளம்பேதையர் கண்தொறும் என - அவர்களுடைய கண்கள்தோறும் இளம் பெண்களுடைய கண்கள்தோறும் நிற்பதுபோல, தேரோடும் ஒரு பெருஞ் சிலையோடும் நின்றவன் - தேருடனும் ஒரு பெரு வில்லுடனும் நின்றவனே !, சிறுதேர் உருட்டி அருள், திருவளர வளர்கந்தபுரி வளர் இளங்குமர ! - திருமகள் விளங்க விளங்குகின்ற கந்தபுரியில் எழுந்தருளியிருக்கின்ற இளங் குமரனே !, சிறுதேர் உருட்டி அருள் -' (எ - று.)

(வி - ம்.) புணரி - கடல்- பெருந்தானை; பண்புத்தொகை. பூதப்படை - சிவகணத்தானை. குஞ்சி - குடுமி. தாள் - அடி. தடக்கை - பெரிய கை. என - என்று. பீர் - பசப்பு, பசலை. ஓடுதல் - பரத்தல். சிலை - வில். புறங்காட்டி ஓடி நிமிர்ந்த அவுணப் படைத்தலைவர் கடைவாயிலில் நிற்கிற மங்கையர்க்கு அவிழ்ந்த குடுமிக்கும், இமைத்த கண்களுக்கும், முன்னேறாது பின்வாங்கும் கால்களுக்கும், ஆயுதம் நீக்கிய கைகளுக்கும் இவன் அஞ்சுவது உங்களுடைய தாலிக்கும் வேலி என்று ஓதி முருகனைச் சுட்டிக்காட்ட அப்பேதையர் கண்டு மகிழும்படி நின்றவன் எனப் பொருள் காண்க. குடுமி குலைந்தவர்களையும், ஆயுதங் கண்டு கண்ணிமைப்பவர்களையும், காலைப் பின்வைப்பவர்களையும் ஆயுதத்தைக் கீழே போட்டவர்களையும் கொல்லலாகாது என்ற போர்முறையின்படி நடக்கிறான். அவ்வாறு நடப்பதனால் உங்கள் தாலிக்கு அவன் வேலியாக இருக்கிறான் என்பதும், நாம் அச்செயல் புரிந்து தப்பி வந்தோம் என்பதும் கருத்து. நாமம் - அச்சம். அதுவே நும் தாலிக்கு வேலியாயிற்று என்று கூட்டுக. கொல் - அசை. (க)

கம்பக் களிற்றுக் கடற்றானை வீரர்கட்
கடையிற் கடைக்கனல்எழக்
கண்தோட்டுணுஞ்சில மருட்பேய் கரிந்தெழு
கடுங்குருதி வெள்ளமூழ்கித்
தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை யினைச்சுடு
கனற்சிகை யெனப்பதைப்பச்
சூட்டிறைச் சிக்குச் சிணுங்குங் குறட்பேய்க்கோர்
சூர்ப்பேய் கொழுந்தசைகள்கோத்து

அம்பிற் சுடத்தான் கவந்தமொடு தொந்தமிட்
டாடும் பறந்தலை நிலத்
தானைப் பிணக்குன்றும் அவுணப் பிணக்காடும்
அளறுபட் டொழியநின்றோர்
செம்பொன் தடந்தேர் உருட்டிவரு சேவகன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ - ள்.) *கம்பக் களிற்றுக் கடல்தானை வீரர்கட் கடையில் கடைக்கனல் எழ - கட்டுத்தறியிற் கட்டப்படுகிற யானைகளையுடைய கடல்போலும் படைவீரரின் கடைக்கண்களில் ஊழிநெருப்புண்டாக, கண்தொட்டு உண்ணும் சில மருட்பேய் - கண்களைத் தோண்டி உண்கின்ற சில மருட்சியையுடைய பேய்கள், கரிந்துஎழு கடுங்குருதி வெள்ளம் மூழ்கி - கரிந்து எழாநின்ற வேகமுள்ள உதிரவெள்ளத்திற் படிந்து, தும்பைத் தலைச்செம்மயிர்ச் சிகையினைச் சுடு கனற்சிகை எனப் பதைப்ப - தும்பைமாலையைச் சூடிய முடியிலுள்ள செம்மயிர்க் குடுமியைச் சுடுகின்ற தீக்கொழுந்து என்றே எண்ணி நடுங்காநிற்க, சூட்டு இறைச்சிக்குச் சிணுங்குங் குறட்பேய்க்கு ஓர் சூர்ப்பேய் கொழுந் தசைகள் கோத்து அம்பிற்சுட - சூட்டிறைச்சியின் பொருட்டு அழுகின்ற குறும்பசாசுக்கு ஓர் அச்சத்தைச் செய்கின்ற பேயானது கொழுவிய மாமிசக் கண்டங்களை அம்பிற் கோத்துச் சுட, கவந்தமொடு தொந்தமிட்டு ஆடும் பறந்தலை நிலத்து - உடற்குறையோடு தொடர்ந்து ஆடாநின்ற போர்க்களத்தில், ஆனைப் பிணக்குன்றும் - யானைப் பிண மலையும், அவுணப் பிணக் காடும் அளறுபட்டு ஒழியநின்று - அசுரப் பிணக்காடும் சேறு பட்டொழியும்படி நின்று, ஓர் செம்பொற் றடந்தேர் உருட்டிவரு சேவகன் - ஒப்பற்ற செம்பொன்னான் இயன்ற பெருந்தேரை உருட்டி வருகின்ற வீரா !, சிறு தேர்உருட்டி அருள் -, திருவளர வளர்கந்தபுரி வளர் இளங்குமர !-, சிறுதேர் உருட்டி யருள் -; (எ - று.)*

(வி - ம்.) *சூட்டிறைச்சி - தலைக்கறி. பறந்தலை நிலம் - போர்க்களம். கடற்றானை : உவமைத்தொகை. குறட்பேய் - சிற்றுருவப் பேய். குறள் - சிறுமை, குறுகியது கவந்தம் - உடற்குறை (தலையற்ற முண்டம்). தொந்தம் - கூத்து. பிணக் காடு - பிணக்குவியல். அளறு - சேறு. சேவகன்: அண்மை விளி.*

*மருட்பேய் குருதிவெள்ள மூழ்கிச் சிவந்த குடுமியை தீக் கொழுந்து என்று நடுங்கவும், குறட்பேய்க்குச் சூர்ப்பேய் தசைகள் கோத்து அம்பிற் சுடவும், உடற்குறைப் பேய்கள் ஆடுகின்ற பறந்தலை நிலம் என்று கூட்டுக.* (உ)

வண்டேறு செங்கிறப் பங்கித் தலைக்கமல
வனமூடு குருதியாற்று
மால்யானை கையெடுத் தார்த்துநீந் தப்புணரி
மகரமீன் எனநினைந்து
கொண்டேகு சிறுகுடர் பெருவலை யெடுத்தெறி
குறட்பேய் நெடுஞ்சினமுறக்
குறுநரி பிடித்தீர்ப்ப அலறுவதும் வீரர்தொடு
கொலைநேமி அவுணருயிரை
உண்டேகு வதுமொருவன் விடவோ லிடுங்கரிக்
குதவவரு திகிரிஎய்க்கும்
ஒல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டசூர்
உய்த்திட்ட இந்த்ரஞாலத்
திண்தேரை உருளாது நிற்கப் பணித்தவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

**(சொ - ள்.)** *வண்டு ஏறு செங்கிறப் பங்கித் தலைக்கமல வனமூடு குருதியாற்று மால்யானை கைஎடுத்து ஆர்த்து நீந்த - வண்டுகள் ஏறப்பெற்ற செந்நிற மயிர்களையுடைய தலைகளாகிய தாமரைக் காட்டூடே இரத்தவெள்ளத்தில் பெரிய யானைகள் கைதூக்கி ஆரவாரித்து நீந்திநிற்க, புணரி மகரமீன் என நினைந்து கொண்டு ஏகு சிறுகுடர் பெருவலை எடுத்து எறிகுறட்பேய் - (அந்த யானைகளை) கடலிலுள்ள மகர மச்சம் என்றெண்ணிக் கொண்டு குருதியிற் செல்கின்ற சிறு குடராகிய பெரிய வலையை எடுத்து வீசிய குட்டைப்பேய், நெடுஞ்சினம்உறக் குறுநரி பிடித்து ஈர்ப்ப - பெருங்கோபங் கொள்ளும்படி குள்ளநரிகள் பிடித்து இழுக்க, அலறுவதும் வீரர்தொடு கொலைநேமி அவுணர் உயிரை உண்டு ஏகுவதும் - அலறுவதும், வீரர் விடுகின்ற கொலைச்சக்கரம் அவுணர் உயிரை உண்டுபோவதும், ஒருவன்விட*

ஓலிடும் கரிக்கு உதவவரு திகிரி ஏய்க்கும் - ஒப்பற்றவனாகிய திருமால் ஏவ முறையிட்ட யானைக்கு உதவவந்த சக்கரத்தை நிகர்க்கிற, ஓல்என் பறந்தலை - ஓல் என்று ஒலிக்கின்ற போர்க் களத்தில், மறந்தலைக்கொண்ட சூர் உய்த்திட்ட இந்திரஞாலம் திண்தேரை உருளாது நிற்கப் பணித்தவன் - கோபத்தை மிகுதியாகக்கொண்ட சூரபன்மன் செலுத்திவந்த இந்திரஞாலம் என்று சொல்லப்படுகிற திண்ணிய தேரை உருளாது நிற்கும்படி நியமித்தவனே !, சிறுதேர் உருட்டி அருள்-, திருவளர வளர்கந்த புரி வளர் இளங்குமர சிறுதேர் உருட்டி அருள் -; (எ - று.)

(வி - ம்.) குடல் - குடர்: ஈற்றுப்போலி. ஈர்த்தல் - இழுத்தல்; ஈர்: பகுதி. ஓலிட்ட கரி: கஜேந்திரன் (ஆதிமூலமே என்றழைத்த கஜேந்திர யானை.) ஓலிடுதல் - ஓலமிடுதல்; அஃதாவது முறையிடுதல். கரி - யானை; கருமையது, வடநூலார் கரமுடையது என்பர். பணித்தவன்: அண்மை விளி. பணி- ஏவு, நேமி - சக்கரம். (க)

பைங்கட் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள்
விரிசிறை படைத்தெழுவபோற்
படருந்தன் வேகத்தின் ஒக்கப் பறக்கப்
பறந்தலைச் செந்தலையறும்
வெங்கண் தயித்தியர் உடற்குறை தலைக்குறை
விரைந்துயி ரினைத்தொடர்ந்து
மீச்செல்லு மாச்செல் லெனச்செலப் பூமாரி
விண்தூர்ப்ப தெனஉடுஉகப்
பொங்கற் கடற்குட்டம் அட்டதிக் குந்தமிற்
போர்செயப் பார்கவிழவெம்
பொறியுடற் சேடன் படந்தூக்கி ஆர்க்கும்
புகைப்படலம் வடவாமுகச்
செங்கட் பசுந்தோகை வாம்பரி உகைத்தவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ - ம்.) பைங்கண் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள் விரிசிறை படைத்து எழுவபோல் - பசுங்கண்களையுடைய

சிறகுக்காற்றானது ஊழிக்காற்றை உண்டாக்க மலைகள் விரிந்த சிறகுகள் பெற்று எழுவனவற்றைப் போல, படருந்தன் வேகத்தின் ஒக்க பறக்க - செல்லுகின்ற தனது வேகத்தால் உடன் பறக்க, பறந்தலை செந்தலை அறும் வெங்கண் தயித்தியர் உடற்குறை தலைக்குறை விரைந்து உயிரினைத் தொடர்ந்து மீச்செல்லும் - போர்க்களத்தில் செந்தலை அறுபட்ட தறுகண்மையுள்ள தயித்தியர் (அவுணர்) உடற்குறைகளும் தலைக்குறைகளும் விரைவாய் உயிரைப் பின்பற்றி மேலே செல்கின்ற, மா செல் எனச் செல்ல - கரிய மேகம்போலப் போகவும், அ பூ மாரி விண் தூர்ப்பது என - அந்த மலர்மழை ஆகாயத்தைத் தூர்ப்பது போல, உடு உக - விண்மீன்கள் உதிரவும், பொங்கற் கடற்குட்டம் அட்டதிக்கும் போர்செய பார் கவிழ - பொங்குதலையுடைய கடற்பள்ளங்களும் எட்டுத் திக்குகளிலும் தம்மிற் போர்புரியவும் பூமியானது குப்புறவும், வெம்பொறி உடல் சேடன் படம்தூக்கி ஆர்க்கும் புகைப்படலம் வடவாமுகம் செங்கண் பசுந்தோகை வாம்பரி உகைத்தவன் - வெவ்விய புள்ளிகளையுடைய உடம்புடைய ஆதிசேடனது படத்தைக் கவ்வி எடுத்து ஆர்த்தலால் உண்டாகின்ற புகைக் கூட்டத்தையுடைய வடவைத் தீயை நிகர்த்த சிவந்த கண்களையும் பசுமையாகிய கலாபத்தையும் உடைய மயிலாகிய தாவும் வாகனத்தை (குதிரையை)ச் செலுத்தினவனே!, சிறுதேர் உருட்டி அருள்-, திருவளர வளர் கந்தபுரிவளர் இளங்குமர! சிறுதேர் உருட்டி அருள்-; (எ - று.)

(வி - ம்.) பைங்கண்: பண்புத்தொகை (பசுமை+கண்). சிறைக்கால்-சிறகுக்காற்று. கடைக்கால்-ஊழிக்காற்று. கடையுகக்கடை (ஊழிமுடிவு) படர்தல் - செல்லுதல். உடு - விண்மீன். வாவும் - தாவும், வாமெனத் தொக்கது. தோகை - சினையாகுபெயராய் மயிலை உணர்த்திற்று. உகைத்தல் - செலுத்தல், உய்த்தல். சிறைக் காற்றினும் கிரிகள் பறக்க, உடற்குறை தலைக்குறை செல் எனச் செல்ல, உடு உக, கடற்குட்டம் தம்மிற் போர்செய ,பார்கவிழ சேடன் படத்தைத் தூக்கி யார்க்கும் பசுந்தோகை வாம்பரி எனவும், புகைப்படல வடவாமுகச் செங்கட் பசுந்தோகை எனவும் பொருள்கொள்க. வடவாமுகம் என்பது பெண்குதிரை முகம்போலக் கடலில் ஊழிக்காலத்துத் தோன்றும் தீ. அத்தீயை ஒத்த சிவந்த கண் என்க. (௪)

நெய்வைத்த கூந்தற் பிடிக்குதவ நாற்கோட்டு
நிகளத் தடங்குன்றுவான்
நிமிரும் கதிர்க்குலைச் செந்நெலைப் பாகுபடு
நெட்டிலைக் கன்னல்கோல்எனுக்

கைவைத் திடப்பரி முகஞ்செய்து வெய்யோன்
கடும்பரியை நட்புக்கொளும்
கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
காட்டிற் பிறந்துபிரியா
மெய்வைத்த காதன்மை அரமகளிர் பேராய
வெள்ளந் திளைத்தாடிஓர்
மெல்நடைக் கேக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை
வேழங்கள் உடனுலாவும்
தெய்வப் பிடிக்குக் கிடைத்ததோரு மழகளிறு
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ - ள்.) நெய்வைத்த கூந்தற் பிடிக்கு உதவ நால்கோடு நிகளம் தடம் குன்று - நெய்பூசப்பட்ட கூந்தலையுடைய பெண் யானைக்குக் கொடுக்கும் பொருட்டு நான்கு கொம்புகளையுடைய சங்கிலிபூண்ட பெரிய மலைபோன்ற ஐராவதமானது, வான்மிரும் கதிர்க்குலைச் செந்நெல்லை பாகுபடு நெடுஇலை கன்னல்கொல் எனு கை வைத்திட - ஆகாயம் அளவும் உயர்ந்த கதிர்களோடு கூடிய செந்நெற்றாள்களைச் சர்க்கரைபடுகிற நெடிய இலைகளை யுடைய கரும்போ என்று கைவைத்துப் பிடுங்கும்படி, பரிமுகம் செய்து வெய்யோன் கடும்பரியை நட்புக்கொளும் கழனி விரி திருக் காவிரி நாட - குதிரைமுகத்தைப்போலக் குலையை வளைத்து சூரியனது வேகத்தையுடைய குதிரைகளை நட்புச் செய்தற்குரிய வயல்கள் பரந்த அழகாகிய காவிரி நாடனே!, கற்பகக் காட்டிற் பிறந்து பிரியா மெய்வைத்த காதன்மை அரமகளிர் பேர் ஆய வெள்ளம் திளைத்து ஆடி - கற்பகக்காட்டில் தோன்றிப் பிரியாத உண்மையாகிய அன்பினையுடைய தெய்வப் பெண்களது பெரிதாகிய ஆயவெள்ளம் படிந்து ஆடி, ஓர் மெல்நடைக்கு ஏக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை வேழங்கள் உடன் உலாவும் - ஒப்பற்ற மெல்லிய நடைக்கு ஏக்கற்ற பெண்யானை பின்பற்ற முலையானைகளோடு உலாவுகின்ற, தெய்வப்பிடிக்குக் கிடைத்தது ஒரு மழகளிறு - தெய்வயானைக்கு வாய்த்ததாகிய ஒப்பற்ற இளங் களிறே! சிறுதேர் உருட்டி அருள்-; திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர - செல்வம் பெருகி உயர்ந்த கந்தபுரியில் வளர் இளங்குமரனே! சிறுதேர் உருட்டி அருள் -; (எ - று.)

(வி - ம்.) 'காற்கோட்டு நிகளத் தடங்குன்று' என்றது ஐராவதத்தை. இஃது இந்திரன் யானை. நிகளம் - விலங்கு, சங்கிலி. நாற்கோடு : பண்புத்தொகை. குன்று : உவமையாகு பெயர். யானையைக் கைம்மலை, அசையும் மலை என்பர். குதிரை முகஞ் செய்தல் - வளைதல் (குனிதல்). மழகளிறு : உரிச்சொற்றொடர், அண்மைவிளி. ஏக்கறல் - ஏங்குதல். முலையானைகள் என்றது தெய்வப் பெண்களை. (இ)

பற்றுவிற் காமன் கொடிப்படைக் கூரெலாம்
படைவீடு கயல்கள்தாவும்
பழனங்க ளோஅத்ர சாலைபூஞ் சோலைப்
பரப்பெலாங் காற்றேரோடும்
கோற்றவங் கங்குற் கடாயானை யுங்கட்டு
கூடமே யெனினுமருதக்
கோமகன் குடிகொண்ட சோணாட சேணாடு
குங்குமங் கோட்டுதிண்டோள்
பொற்றடம் குன்றினிரு கொங்கைப் பொருப்புமொரு
பூங்குழற் காடும்வெயில்கால்
புனைமணிக் கலைஅல்குல் மாக்கடலும் ஏந்தியோர்
புனத்தின்கண் மிகநுடங்கும்
சிற்றிடைக் கோல்குமேன் கொடிபடர நின்றவன்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ - ள்.) பற்றுவிற் காமன் கொடிப்படைக்கு ஊர் எலாம் படைவீடு - பிடித்த கரும்புவில்லையுடைய மன்மதனது கொடிப்படைக்கு ஊர் முழுவதும் பாசறை, கயல்கள்தாவும் பழனங்களோ அஸ்திரசாலை - கயல்மீன்கள் குதிக்கின்ற வயல்களோ அம்புச்சாலை, பூஞ்சோலைப் பரப்பு எல்லாம் கால்தேரோடும் கொற்றம் அம் கங்குல் கடாயானையும் கட்டு கூடமே எனினும் - மலர்ச்சோலைப் பரப்பு முழுவதும் தென்றற் காற்றாகிய தேருடனே வெற்றியைத் தருகின்ற அழகிய இரவு ஆகிய கடா யானையையும் கட்டுகின்ற கூடமே யாயினும், மருதம் கோமகன் குடிகொண்ட சோணாட-மருதநிலமாகிய அரசகுமாரன்

குடிகொண்டிருக்கிற சோணுடனே, சேண் ஆடு குங்குமம் கொட்டு திண்டோள் தடம்பொன் குன்றின்-திரட்சி பொருந்திய குங்குமம் அப்பிய திண்ணிய தேகங்களாகிய பெரிய பொன்மலை மேல், இரு கொங்கை பொருப்பும் - இருதன மலையும், ஒரு பூ குழல் காடும் - ஒப்பற்ற மலர்க்கூந்தலாகிய காடும், வெயில்கால் புனைமணிகலை அல்குல் மாகடலும் ஏந்தி-ஒளியை வீசுகின்ற அலங்கரிக்கப்பட்ட மணிகள் இழைத்த மேகலையுடுத்த நிதம்பமாகிய பெருங்கடலும் தாங்கி, ஓர் புனத்தின்கண் மிக நுடங்கும் சிற்றிடைக்கு ஒல்கும் மெல்கொடி படர்கின்றவன் - ஒப்பற்ற தினைப் புனத்தில் மிகுதியாகத் துவளாநின்ற சிற்றிடையோடு அசைகின்ற மெல்லிய கொடியானது படர்ந்து ஏறும்படி நின்றவனே !, சிறுதேர் உருட்டி அருள் -, திருவளர வளர் கந்தபுரிவளர் இளங்குமர ! சிறுதேர் உருட்டி அருள் -; (எ - று.)

(வி - ம்.) பற்று-பிடி. வில் - கரும்புவில். கொடிப்படை - தூசிப்படை. கால் தேர் - தென்றல் காற்றாகிய தேர். கடா யானை - ஆண்யானை. :கடாம்-மதம். கூடம்-யானைகட்டு மிடம். சிற்றிடைக்கு : உருபு மயக்கம். (சு)

கோல்பாய் பசும்புண் அசும்புகும் பத்தடங்
குன்றுகவுள் மடைதிறந்து
கோட்டுநெட் டருவியோடு தேனருவி யுந்திரை
கோழித்துடன் கோப்பமேதிப்
பால்பாய் பெருக்கா றுவட்டெழுதல் தன்துணைப்
பாவைய ரோடுங்குறுகும்அப்
பாகீ ரதிக்குநிகர் தண்டுறை தோறுந்திசைப்
பாலர்மேற் படையெடுத்து
வேல்பாய் நெடுங்கட் கடற்றனை யோடுமோருவன்
மேற்செல்ல நாற்றிசையிலும்
வெற்றிக் கயற்கொடி யெடுத்தென எடுத்தெறியும்
வெண்திரை கிழித்துவெடிபோம்
சேல்பாய் தடம்பணை உடுத்தகா விரிநாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ. ள்.) கோல்பாய் பசும்புண் அசும்பு கும்பம் தடங் குன்று கவுள் மடைதிறந்து கொட்டுநெடு அருவியொடு - தாறு பாய்ந்துண்டாகிய பச்சைப்புண் கசிந்துகொண்டேயிருக்கின்ற கும்பத்தலத்தையுடைய பெரிய யானையானது, கபோல மடையைத் திறந்து சொரிகின்ற பெரிய அருவியுடன், தேன் அருவியும் திரை கொழித்து உடன் கோப்ப - தேன் அருவியும் அலையெறிந்து ஒன்றாய்க் கோத்துக்கொள்ள, மேதிபால் பாய பெருக்கு ஆறு உவட்டு எழுதல் - எருமைப்பால் பாய்கிற பெருக்கம் நிறைந்து எழுதலானது, தன்துணைப் பாவையரொடும் குறுகும் அ பாகீரதிக்கு நிகர் தண்துறைதொறும் - தனக்குத் துணையாகிய யமுனை காளிந்தியென்ற மாதர்களோடும் சேர்ந்து வந்த கங்கைபோலத் தோன்றும் குளிர்ந்த துறைதோறும், திசைப்பாலர்மேற் படையெடுத்து வேல்பாய் நெடுங்கண் கடற் றுனையொடும் ஒருவன் மேற்செல்ல - திசைக்காவலர்மீது வேல் போலப்பாய்கிற நெடுகிய கண்களையுடைய பெண்களாகிய கடல்போலும் சேனையோடும் ஒப்பற்றவனாகிய மன்மதன் படையெடுத்துச் செல்லும்பொருட்டு, நால்திசையினும் வெற்றி கயல் கொடி எடுத்து என - நான்கு திக்கிலும் வெற்றியைத் தருகின்ற மீனக்கொடிகளை உயர்த்தினாற்போல, எடுத்து எறியும் வெண்திரை கிழித்து வெடிபோம் சேல்பாய் தடம்பணை உடுத்த காவிரி நாட! - எடுத்து வீசுகின்ற வெள்ளிய அலைகளைப் போழ்ந்து கொண்டு மேலே தாவுகின்ற சேல்மீன்கள் பாய்தற்கு இடமாகிய பெரிய வயல்களாற் சூழப்பெற்ற காவிரி நாடனே!, சிறுதேர் உருட்டி அருள் -, திருவளரவளர் கந்தபுரிவளர் இளங்குமர! சிறுதேர் உருட்டி அருள் -; (எ - று.)

(வி - ம்.) தாறு - அங்குசம், கோல். ஒருவன் - ஈண்டு மன்மதன். யானை மதமும் தேனும் கறுப்பு நிறமுடையன. காவிரிநீர் வெண்ணிறமுடையது இவைகள் ஒன்றாய்க் கலந்த தோற்றம் கங்கை என்ற பெண் தன் துணைவியராகிய யமுனை காளிந்தி என்பவர்களோடு சேர்ந்துவருவதுபோலத் தோன்றும் நீர்த்துறை என்பது கருத்து. கங்கையின் நிறம் வெண்மை யமுனை காளிந்தியின் நிறம் கருமை. ஆதலால் இவ்வாறு கற்பனை செய்தார் என்க. கெண்டை மீன்கள் மேலே தாவுவது மன்மதனுக்கு வெற்றிக்கொடி எடுத்ததுபோலத் தோன்றும் என்பது.

(எ)

மீத்தந்த மாகத்து மேகத்தி னோடுமுடு
மீன்இரியல் போகஉகளும்
வேடிவாளை மதியக டுடைத்தூற்று தெள்ளமுத
வெள்ளருவி யாற்பசுந்தண்

காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய்
காவேரி ஆயிரமுகக்
கங்கையா கச்செய்து மீட்டுநாற் கோட்டுவெங்
களிறுபிளி றத்தாவிவான்
பூத்தந்த கற்பகக் காட்டினை உழக்கிவிரி
பொற்று தெழுப்பிமற்றப்
பூந்துகட் படலத்தி னுல்தெய்வ நதியையும்
பொன்னிநதி யாகச்செயும்
தேத்தந்த தண்பணை உடுத்ததீம் புனல்நாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ - ள்.) *மீத்தந்த மாகத்து மேகத்தினோடும் உடுமீன் இரியல்போக - மேலிடத்துள்ள ஆகாயத்தில் மேகத்தினோடும் விண்மீன்கள் ஓட்டெடுக்க, உகளும் வெடிவாளை மதி அகடு உடைத்து ஊற்று தெள்அமுத வெள்அருவியால் - துள்ளுகின்ற வெடிவாளைகள் சந்திரன் வயிற்றைக் கிழித்து அங்கிருந்து ஊற்றப்படுகிற தெள்ளிய அமுதத்தின் வெள்ளிய அருவிப் பெருக்கால், பசுந்தண் காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய் காவேரி ஆயிரமுகக் கங்கையாகச் செய்து - பசிய தண்ணிய சோலைதந்த சண்பகமலர்த் தேனுனது மழைபோலப் பெருகுகிற காவிரியாற்றை ஆயிரமுகங்களையுடைய கங்கையாகச் செய்து, மீட்டும் நால்கோடு வெங்களிறு பிளிறத் தாவி - மறுபடியும் நான்கு கொம்புகளையுடைய வெள்ளிய யானையானது ஒலிக்கும்படி மேல் எழுந்து, வான்பூ தந்த கற்பகக் காட்டினை உழக்கி - மேலான மலர்களைத் தந்த கற்பகக் காட்டை அலைத்து, விரிபொன் தாது எழுப்பி அ பூதுகள் படலத்தினுல் தெய்வ நதியையும் பொன்னி நதியாகச் செய்யும் - விரிந்த பொன் போலும் மகரந்தத்தை எழப்பண்ணி அந்த மலர்த்துகளின் கூட்டத்தினுல் தேவநதியையும் பொன்னதியாகச் செய்யும், தேத்தந்த தண்பணை உடுத்த தீம்புனல் நாட! - இனிமையைத் தந்த தண்ணிய வயல்களாற் சூழப்பட்ட இனிமையாகிய நீர் நாடனே!, சிறுதேர் உருட்டி அருள்-, திருவளர வளர்கந்தபுரி வளர் இளங்குமர! சிறுதேர் உருட்டி அருள் - ; (எ - று.)*

**(வி - ம்.) வெண்களிறு=வெள்ளையானை (ஐராவதம்). (அ)**

கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகிற் படர்ந்துபூங்
கற்பகத் தும்படர்தலால்
காமன் பெருஞ்செல்வம் அன்னவர்கள் குழுமியக்
கமுகின் கழுத்தில்யாத்த
ஒள்ளொளிய செம்மணிப் பொன்னூசல் பன்முறை
உதைந்தாட ஆடுந்தோறும்
ஒண்கமு கொடுந்துணர்ப் பைங்கற் பகக்காடும்
ஒக்கஅசை யத்தலையசைத்
தள்ளிலை அலங்கல்வேல் எம்பிரானைப்பாடி
ஆடுகின் றூரெனத்தாம்
அலர்மாரி பொழிவபோல் அங்கற் பகத்தெய்வம்
அம்பொன்மலர் மாரிதூர்க்கும்
தெள்ளுதமிழ் விரிபுனற் காவிரித் திருநாட
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ - ள்-) *கள்அவிழ் நறும்கொடிகள் கமுகிற் படர்ந்து பூங்கற்பகத்தும் படர்தலால் - தேனோடு மலர்ந்த மணமுள்ள கொடிகள் கமுகமரத்தின்மேற் படர்ந்து அழகிய கற்பக மரத்தின் மேலும் படர்வதனால், காமன் பெருஞ்செல்வ மன்னவர்கள் குழுமி அக்கமுகின் கழுத்தில் யாத்த - காமனது பெருஞ் செல்வத்தைப் போன்ற மங்கையர்கள்கூடி அந்தக் கமுகமரத்தின் கழுத்திற்கட்டின, ஒள்ஒளிய செம்மணிப் பொன்ஊசல் பன்முறை உதைந்து ஆட - ஒட்பமாகிய ஒளியையுடைய செம்மணிகளாற் செய்யப்பட்ட பொன்ஊசலைப் பல முறையும் உதைந்து ஆட, ஆடுந்தொறும்-அவ்வாறு ஆடும்போதெல்லாம், ஒண்கமுகொடும் துணர்ப்பைங் கற்பகக்காடும் ஒக்க அசையத் தலை அசைத்து - ஒள்ளிய கமுகொடும் மலர்க்கொத்துக்களையுடைய பசிய கற்பகக் காடும் கூடவே அசையும்படி தலையாட்டி, அள்இலை அலங்கல் வேல் எம்பிரானைப் பாடி ஆடுகின்றனர் என - கூர்மையாள இலை போன்ற வடிவும் மாலையும் கொண்ட வேற்படையையுடைய எம் இறைவனைப் பாடி ஆடுகின்றூர் என்று நினைத்து, தாம் அலர்மாரி பொழிவபோல் அம் கற்பகத் தெய்வம் அம்பொன் மலர்மாரி தூர்க்கும் - தாமும் மலர்மழை சொரிவனபோல அழகாகிய*

*கற்பகத் தெய்வமானது அழகையுடைய பொன்மலர் மழையால் தூர்க்கின்ற, தென்னு தமிழ் விரிபுனல் காவிரித் திருநாட- தெளிந்த தமிழ் பரவிய நீரையுடைய அழகாகிய காவிரி நாடனே !, சிறுதேர் உருட்டி அருள்-, திருவளர வளர்கந்தபுரி வளர் இளங்குமர-, சிறுதேர் உருட்டி அருள் - ; (எ - று.)*

(வி - ம்.) *கா-கற்பகச்சோலை. மன்-இறைவன். இந்திரன் எனக்கொண்டு அவனது செல்வம் போன்ற அரம்பையர் எனப் பொருள்கோடலும் ஆம். யாத்தல் - கட்டுதல். கள் - தேன். குழுமி - கூடி; குழுமு: பகுதி. பொன்னூசல் - பொன்னலாகிய ஊஞ்சல். துணர் - பூங்கொத்து. அள்ளிலை - கூர்மையான இலை வடிவுள்ள. மலர்மாரி-மலர்மழை. தூர்க்கும் - நிரப்பும். உருட்டி: பிறவினை வினையெச்சம்; உருள்: தன்வினைப் பகுதி.* (க)

வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதென
மணிமுறுவல் நிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டும் உச்சிமோந் துந்திரு
மடித்தலத் தினில்இருத்திப்
பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்
பாலரோடும் விளையா டெனப்பணித் துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயும்
தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவில் ஒருபாதி குளிரஒரு புறநின்ற
தையலு யகியும்வைத்துச்
சீராட்டி விளையாடு சேனாபதிக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(சொ - ள்) *வார்ஆட்டு தடமுலைப் பால்ஒழுகிவழிவது என மணிமுறுவல் நிலவுகாலும் - வார் அணிந்த பெரிய முலையினின் றும் பாலானது ஒழுகப்பெற்று வழிந்தோடுதல் போல, முத்துப் போலும் பற்கள் நிலவை உமிழ்கின்ற, மழலைவாய் முத்து*

உண்டும் உச்சிமோந்தும் திருமடித் தலத்தினில் இருத்திப் பாராட்டியும் - மழலைச் சொற்களையுடைய வாயினை முத்தமிட்டும், உச்சியை மோந்தும் அழகிய மடித்தலத்தினில் வைத்துக் கொண்டு அருமை பாராட்டியும், தமது கண்மணிப்பாவை நின் படிவம் ஆகக் காட்டி-தமது கண்மணிப் பிரதிமையை உன் உருவமாகக் காட்டி, இப் பாலரொடு விளையாடு எனப் பணித்தும் தங்கள் பார்வை களியாடச் செய்யும் - இந்தச் சிறுவரோடும் விளையாடு என்று நியமித்தும் தங்கள் பார்வைகள் களிப்பில் மூழ்கப்பண்ணுகின்ற, தார் ஆட்டுமதிமுடித் திராத வினைதீர்த்த தம்பிரானும் தம்பிரான் தழல் உருவில் ஒருபாதி குளிர ஒருபுறம் நின்ற தையல் நாயகியும் வைத்து-மாலையைத்தரித்த பிறையை முடித்த திருமுடியை உடைய தீராதவினைதீர்த்த தம்பிரானும் அந்தத் தம்பிரானது நெருப்பு உருவத்தில் ஒரு பாதி குளிரும்படி ஒரு பக்கத்தில் நின்ற தையல்நாயகியும் தம்மிடத்தில் வைத்து, சீராட்டி விளையாடு சேனுபதிக்கடவுள் - சீராட்டி விளையாடுகின்ற சேனுபதிக் கடவுளே !, சிறுதேர் உருட்டி அருள் -, திருவளர வளர்கந்தபுரிவளர் இளங்குமர ! சிறுதேர் உருட்டி அருள் - ; (எ - று.)

(வி - ம்.) மணிமுறுவல் முத்துப்போன்ற பற்கள், முறுவல் நிலவு - பற்களாகிய நிலவு. நகையாகிய நிலவு என்றும் பொருள் கொள்ளலாம். முன்னது உவமைத்தொகை, பின்னது பண்புத் தொகை.

வார் - கச்சு. காலும் - சொரியும், பொழியும், உமிழும். மோந்து - மோ என்னும் பகுதியடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம். இது முகந்து என்றும் வரும். மதிமுடி-மதியைச் சூடிய தலை. தழலுரு - நெருப்பு வடிவு. புறம், பக்கம். சேனுபதிக்கடவுள்-படைத்தலைவனாகிய முருகப் பெருமான். (௧0)

முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

மூலமும் விளக்கவுரையும்

முற்றுப்பெற்றன.

# பொருட் குறிப்புக்கள்

[எண் - பாட்டின் எண்]

**முருகர் அருமைத் திருநாமங்களுட் சில:**

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

கழக வெளியீடு: அகூ

பகழிக் கூத்தர்

இயற்றிய

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்



பேராசிரியர் பெருநாவலர்

திரு பு சி புன்னைவனநாத முதலியார்

எழுதிய

அரும்பொருள் விளக்கத்துடன்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.,

திருநெல்வேலி-6. சென்னை-1

1963

புலவரகம் சிதம்பரநாத புன்னைவனநாத முதலியார் (1889)



Ed 1 July 1927

Reprints:

July 1941; Mar 1957; Nov 1963

O31,IL20,1
K3

THIRUCHENDUR PILLAITH THAMIZH

Paari Achakam, Madras-1.

# பதிப்புரை

ஒல்காப் பெருமைத் தொல்காப்பியக் காலத்தின்பின் நம் செந்தமிழியற்கை சிவணிய நம் தமிழகத்தில் தோன்றிய அருந் தமிழ் நூல்கள் அளப்பில, அவற்றுள் சிறு நூல்களும் பெரு நூல்களும் பல.

சிறு நூல்களின் நிரலில் ஒன்றாகத் திகழ்வது பிள்ளைத் தமி ழெனப் பெயரிய நூலாகும். பிள்ளைத்தமிழென்பது, கடவுளர் களையோ மக்களுள் மாண்புற்றார்களையோ பிள்ளைமைப் பருவத் தினராக்கி அவ்விளம்பருவ நிலைகளைச் சுவைபடப் புகழ்ந்து பாடப் பெறுவது.

அவ் வகையில் மணங்கமழ் தெய்வத்து இள நல உருவத் திறையோனாகிய முருகப்பெருமான்மீது பத்தியின் பாலராய்ப் பல புலமைச் சான்றோர்களால் பாடப்பெற்ற பிள்ளை நூல்கள் பெருவரவின. அவையிற்றுள் ஒன்றே 'திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்' எனப்பெறும் இத் திருநூல்.

இது, தண்பொருந்தம் தத்துறு அலைகளால் முத்தையும் நெல்லையும் ஒதுக்கி வளம்பெருக்கி அப் பயனால் முத்தமிழையும் வளர்த்துச் செல்வ வளத்தையும் கல்வி வளத்தையும் பெருக்கும் நாடாகிய பாண்டிநாட்டில் சீரலைவாயென்னும் சீரலையாப் பேறுற்ற திருச்செந்தூர் நகர்க்கண் திருக்கோயில் கொண் டெழுந்தருளியிருக்கின்ற திருச்செந்தி லாண்டவனாகிய முருகப் பெருமான்மீது பகழிக் கூத்த ரென்னும் புலவர் பெருமானால் இயற்றப்பெற்ற சிறப்புப் பொருந்தியது,

முருகப் பெருமான், அன்பர் நினைந்த வடிவோ டெழுந்தருளி அவர் வேண்டுவனவற்றை அருள்சுரந்தளிக்கும் அண்ணல்: அவன் மாமயில் மீதமர்ந்து வருங்காட்சி, அலைகடல் நடுவண் காலைப்போதில் தோன்றும் இளவள 'ஞாயிற்றின் தோற்றத்தை யும் ஏற்றத்தையும் போற்றத் தகுவதாகும்.

அம் முருகவேள், காடும் காவும் கவின்பெறு துருத்தியும், யாறுங் குளனும் வேறுபல் வைப்பும், சதுக்கமும் சந்தியும் புதுப் பூங்கடம்பும், மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும் எழுந்தருளித் தன்னை வழிபடும் அடியார்க்கு அருள்சுரந் தருளுவன்.

இத்தகைய பெருமான் வேதவுணவை வெறுத்து மேந்தமி ழால் ஓதுசுவைக்கு உழலுந்திருச் செவியுடையோன்; இக் கருத் தானே 'முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் முதல்வ, னென அருளினர், அருணகிரிப் பெருமானுர்.

இப் பெருமான் ஏற்ற பிள்ளைத்தமிழ் இஃதொன்றெனின் மிகையாகாது. இதனை உள்ளங் கரைந்து ஒவ்வொரு நாளும் ஓதுவோர், எண்ணிய எண்ணியாங் கெய்தி எல்லா இன்பமும் இடையரு தென்றும் பெற்றுத் திகழ்வர்.

சீரானும் ஏரானுமிக்க இந்நூல் கொழிதமிழ்ப் பனுவற் றுறையின் இன்பநலத்துக்கு எடுத்துக்காட்டாக இன்னிசை, இழுமென் மொழியால் இயைந்த சொல்லழகு, பொருளாழம், கற்பனைத் திறம் பலவும் ஒருங்கே கெழுமி ஓதுவார் உளத்தில் முருகப் பெருமான் நாண்மலர்த் திருவடிகள் எழுந்தருளும் வாய்ப் புப் பெற்றுய்யச் செய்யும் பெருமை மிக்கதாகும்.

இதன் ஓசையின்பத்துடன் பொருளின்பமும் கண்டுணர வாய்ப்பாக நம் கழகப் புலமையாளர். **பெருநாவலர் பேராசிரியர், வித்துவான் திரு. பு. சி.** புன்னைவனநாத முதலியாரவர்களைக்கொண்டு அருஞ்சொற் பொருளுரை யெழுதுவித்து அச்சிட்டு அழகிய அமைப்புடன் நூலுருவாக்கி வெளியிட்டுள்ளோம்.

இச்சீரிய தீஞ்சுவை நறுஞ்சுவை அமிழ்தை நம் தமிழகத் தார் வாங்கிக் கற்ருரும் மற்ருரும் ஓதி உணர்ந்து ஒருமுகத் தறுமுகத்திருவினன் அருள்பெற்று எம்மையும் இன்னன போன்ற நன்னர்ப் பணிக்கண் ஒருவாது இன்புற ஆற்ற உதவு வார்களென நம்புகின்ருேம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# முன்னுரை

**திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்:—**இஃது திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான்மீது பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ் என விரியும். திருச்செந்தூர் ஆறுபடை வீடுகளில் ஒன்று. பிரபாகரன் மகன் சூரபன்மனை ஆறுமுக வடிவில் அமர்ந்து, உமையம்மை உதவிய சத்திவேல் கொடு அழித்தொழித்த இடம். இது தலம், தீர்த்தம், மூர்த்தியாகிய மூன்றனும் சிறந்தது. இப் பிள்ளைத் தமிழ் பாடியவர், பகழிக் கூத்தர் என்பவர்,

**பகழிக் கூத்தர் வரலாறும், பிள்ளைத்தமிழ்ப் பெருமையும்:—** இவர் சேதுமன்னர் அரசாட்சிக் குள்ளாகிய செம்பி நாட்டைச் சேர்ந்த சன்னுசிக் கிராமத்தில் பிறந்தவர். இது சதுர்வேத மங்கலம் என்றும் அழைக்கப்படும் **காமங்கோட்டைச் சேகரத்தைச்** சார்ந்துள்ளது. இவர் வைணவப் பார்ப்பன மரபினர். இவர் தந்தையார் **தர்ப்பாதனர்**. இவர் வேதாகமங்களை யுணர்ந்து மெய்ப்பொருளை யறிந்தவர். தமிழ் இலக்கண இலக்கியங்களையும் கசடறக் கற்ற பெரும்புலவர். இவர் தமக்கு ஏற்பட்ட வயிற்று வலிக் கொடுமை பொறுக்கலாற்ருது வருந்தினர். பின், தெய்வத் திருவருளால் திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானைப் பாடித் தம் நோயைத் தீர்த்துக்கொள்வதாக உறுதி கொண்டு இப் பிள்ளைத்தமிழ் நூலைப் பாடி முடித்தனர். முருகன் அருளால் நோயும் நீங்கிற்று. திருச்செந்தூர் சென்று முருகனை வழிபட்டு அவர் சந்நிதியிலே, புலவர்கள், அடியார்கள், திரிசுதந்தரர்கள் (முக்காணிகள்) குழுமியிருக்க அரங்கேற்றி மகிழ்ந்தனர்.

பின்னர், சபையிலிருந்த முக்காணிகளும் பிறரும் பிள்ளைத் தமிழ் நூலில் சொற்சுவை, பொருட்சுவை, பற்பல சந்தச் சுவை, கற்பனை, அலங்காரம் முதலிய பலநலமும் பத்திப் பந்தங் கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய் நிரம்பியுள்ளன

வென்பதை யுணர்ந்திருந்தும், பகழிக் கூத்தருக்குச் செய்யவேண்டிய மரியாதையொன்றேனும் செய்யாமற் பராமுகமாயிருந்து விட்டனர். அங்ஙனமிருந்ததற்குக் காரணம் இவர் வைணவராயிருந்ததென்று சிலர் கூறுவர்; அதுநிற்க, பகழிக்கூத்தர் அவையினர் செய்யும் சிறப்பை எதிர்நோக்காது தமக்கு வயிற்றுநோயைத் தீர்த்த ஞானபண்டிதராகிய குமாரக் கடவுள் திருவருளையே பொருளாகக்கொண்டு தமதிருப்பிடஞ் சென்று நித்திய கன்மாநுட்டானஞ் செய்து பேரின்பப் பெருவாழ்விலழுந்தித் துயில் செய்வாராயினர்.

அப்போது கலியுக வரதராகிய குமாரக் கடவுள் பகழிக் கூத்தரது மெய்யன்பையும், தமிழால் தம்மைப் பாடுவார்க்குத் தாம் செய்யுந் திருவருளையும் பிறருக்கறிவிக்கும் பொருட்டுத் தமது திருமார்பில் சிறப்பழகாகச் சாத்தப் பெற்றிருந்த விலையுயர்ந்த மாணிக்கப் பதக்கத்தைக் கொண்டு வந்து நித்திரை செய்து கொண்டிருந்த பகழிக் கூத்தரது மார்பிலணிந்துவிட்டுச் சென்றனர். மறுநாள், திருவனந்தற் பூசை செய்யவந்த பெரியவர்களுங் கோவிலதிகாரிகளுஞ் சுவாமி மார்பிலிருந்த பதக்கத்தைக் காணுமல் மதிமயங்கி, இதைத் திருடிச் சென்றவன் யாவனென்று ஊரெங்குந் தேடுவாராய், எங்குங் காணுமல் பகழிக் கூத்தர் மார்பிலிருக்கக் கண்டு, இக் காரியஞ் செய்தவர் உயிர்தொறு மொளித்திருந்த நம் குமாரக் கடவுளேயன்றி வேறில்லையென்று முன்னை நாள் நிகழ்ச்சியாலறிந்து பகழிக்கூத்தரை வணங்கி, உம்முடைய பெருமையை யறியாதிருந்த எங்கள் பிழையைப் பொறுத்துக் கொள்ளல் வேண்டுமென்று வேண்டிப் பல்லக்கிலேற்றி அநேக விருதுகள் வாத்தியங்கள் சூழ வெகு சிறப்பாக நகர்வலஞ் செய்வித்துச் சாமி சந்நிதானத்திற் கொண்டு போய்த் தீர்த்தம், திருநீறு, சந்தனம், மாலை, பரிவட்டம் முதலியவைகளாலுபசரித் தனுப்பினர்.

அன்று முதல், இவர் முருகப்பெருமான் அன்பிற் சிறந்து திருவருள்பெற்ற அருள் வித்துவானுக மதிக்கப்பட்டுள்ளார்; இவரது திருவாக்காகிய பிள்ளைத்தமிழ் திருச்செந்தூர்த் திருக்கோயிலில், முருகக்கடவுள் பூசையின் முடிவில் ஓதுவார்களால் திருப்புகழோடு சேர்த்து ஓதப்பட்டு வருகின்றது.

பிள்ளைத்தமிழ் இருவகைப்படும். அவை ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்பன. இவற்றில் காப்பு முதல் அம்புலிப் பருவம் ஈறுகவுள்ள ஏழுபருவங்களும் இருபாற் பிள்ளைத் தமிழுக்கும் பொதுவான பருவங்களாம். மற்ற மூன்று பருவங்கள் வேறுபட்டு வரும். ஆண்பாற் பிள்ளைத் தமிழாயின் சிற்றில், சிறுபறை, சிறுதேர் ஆகிய பருவங்களும், பெண்பாற் பிள்ளைத் தமிழாயின் அம்மானை, நீராடல், ஊசல் ஆகிய பருவங்களும் அமையப் பாடுவது.

தமிழின் இனிய மெல்லிய இழுமென்னும் சொற்கள் வாய்ந்த தமிழ்மொழியில் அவ் வினிமை நலத்தினைச் சுவைமிகுத்துக் காட்டுவது பிள்ளைத்தமிழ்ப் பாட்டாகும். மக்கள் வாழ்நாள் முழுமையிலும் 'பிள்ளைப் பருவம்' என்பது எத்துணை இனிமை யானதோ, அத்துணை இனிமையானதே ஏனைத்தமிழ்ப் பாட்டுக் களிலும் பிள்ளைத்தமிழ்ப் பாட்டு என்பது. பிள்ளைப்பருவம் களங்க மற்ற நல் லெண்ணத்தையும் அவ் வெண்ணத்தின் வழியே களங்கமற்ற தூய அன்பையும் விளைப்பதாய்த் திகழ்தலால், அவை தம்மைப் பெற விரும்புவோர் பிள்ளைத்தமிழ்ப் பாட்டுக் களில் உள்ளம் இடையறுது பழகுதல் இன்றியமையாததாகும்.

கடவுள் இடத்திலும் பெரியாரிடத்திலும் அன்பிற் பழக விரும்பும் ஆசிரியன்மார்கள் அவர்களை அவ் வன்பிற் கினிய குழந் தைப் பருவத்தராய் உருவெண்ணி, ஆண்பாலாறல் ஆண் குழந்தைகளின் விளையாட்டுவகைகளையும், பெண்பாலாறல் பெண் குழந்தைகளின் விளையாட்டு வகைகளையும் இனிய கொஞ்சு தமிழ்ச்சொற்களால் பாடுகின்ற நூலே பிள்ளைத்தமிழாகும். அவ்வகை வந்த பிள்ளைத்தமிழ் நூல்களுள் இத் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழும் ஒன்று.

**காப்புப் பருவம்:** —பிள்ளைத்தமிழ் பாடுமிடத்து இரண் டாம் மாதத்தில் பிள்ளையைக் காக்க என்று திருமால், சிவபெரு மான், உமையவள், கணபதி, கலைமகள், அரிகரபுத்திரன், பகவதி ஆதித்தர், முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆகிய பல கடவுளர் காக்க எனக் கூறுவது.

**செங்கீரைப்பருவம்:** —ஐந்தாவது செங்கீரை ஆடும் பருவம். இப் பருவத்தின்கண் நிகழும் செயல் ஒரு காலை மடக்கி ஒரு காலை

நீட்டி இருகைகளையும் நிலத்தில் ஊன்றித், தலை நிமிர்த்தி, முகம் அசைய ஆடுதல். இஃது ஐந்தாம் திங்களில் நிகழ்வது,

**தாலப் பருவம்:**— தாலாட்டைக் கேட்கும் பருவம். தாலாட்டு—ஒருவகை நாவசைப்பு. தாலாட்டையேல் தாலாட்டையேல் என்னும் அடுக்கு, தாலோ, தாலேலோ என இணைத்தும் தால் எனத் தனித்தும் மரீஇயிற்று. இது ஏழாந் திங்களில் நிகழ்வது.

**சப்பாணிப் பருவம்:**—இருகைகளையும் ஒருங்கு சேர்த்துக் கொட்டும் பருவம். இஃது ஒன்பதாந் திங்களில் நிகழ்வது.

**முத்தப் பருவம்:**— குழந்தையை முத்தம் தருமாறு தாய் தந்தை முதலியோர் வேண்டும் பருவம். இது பதினோராந் திங்களில் நிகழ்வது.

**வருகைப் பருவம்:**—நடக்கும் பருவக் குழந்தையைத் தம்பால் நடந்து வருமாறு தாய் தந்தை முதலியோர் வேண்டுதல். இது பதின்மூன்றாந் திங்களில் நிகழ்வது.

**அம்புலிப் பருவம்:**—வானத்திலுள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடுதற்குச் செவிலித் தாயர் முதலியோர் அழைக்கின்ற பருவம். இது பதினைந்தாந் திங்களில் நிகழ்வது.

**சிற்றிற் பருவம்**—சிறுமியர் சிறு வீடுகட்டி விளையாடுகின்ற காலை அதனைச் சிறுவர் தம் காலால் அழித்துக் கெடுத்தலைக் கூறுகின்ற பருவம். இதிற் சிறுமியர் 'எம் வீட்டை அழிக்க வேண்டா' என வேண்டுவதாகக்கொண்டு அமைத்துக் கூறுவது. இது பதினேழாந் திங்களில் நிகழ்வது.

**சிறுபறைப் பருவம்:**—குழந்தை சிறுபறை கொட்டுகின்ற பருவம். இது பத்தொன்பதாந் திங்களில் நிகழ்வது.

**சிறுதேர்ப் பருவம்;**—சிறுதேர் உருட்டி விளையாடுதலைத் தெரிவிக்கும் பருவம். இது இருபத்தொன்றாம் திங்களில் நிகழ்வது.

---

திருச்சிற்றம்பலம்

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

---

## சிறப்புப்பாயிரம்

### நேரிசை வெண்பா

செந்தமிழ்க்கு வாய்த்ததிருச் செந்திற் பதிவாழுங்
கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தான்—அந்தோ
திருமாது சேர்மார்பன் தேர்ப்பாகற் கன்பு
தருமால் பகழிக்கூத் தன்.

(அருஞ்சொல் உரை.) பிள்ளைக்கவி - பிள்ளைத்தமிழ் நூல். அந்தோ : வியப்பிடைச்சொல். திருமாது - இலக்குமிதேவி. தேர்ப்பாகன் - அருச்சுனனுக்குத் தேரோட்டும் சாரதியான கண்ணன். மால் - அழகு, பெருமை. (க)

### அவையடக்கம்

அத்தனையும் புன்சொல்லே யானாலும் பாவேந்தர்
எத்தனையுங் கண்டுமகிழ்ந் தெய்துவார்—முத்தி
புரக்குமரன் தந்தகந்தன் பூணணிமுந் நான்கு
கரக்குமரன் பிள்ளைக் கவி.

(அ - ரை.) அத்தனையும் - முழுமையும். புன்சொல் - புன்மொழி. பாவேந்தர் - கவிராயர். முத்திபுரக்கும் அரன் - வீடு உதவும் சிவன். கந்தன் - பற்றுக்கோடாயுள்ளவன், கந்து - பற்று. மூந்நான்கு கரம் குமரன் - பன்னிருகைகளுடைய முருகன். (உ)

## நூற்பயன்

மருநாள் மலர்ப்பொழில் உடுத்ததட மெங்கும் அலை
வாய்கொழித் தெறியுமுத்தை
வண்டலிடும் எக்கர்புடை சூழ்திருச் செந்தில்வரு
மயில்வா கனக்கடவுளெங்

குருநாதன் ஒருதெய்வ யானைதன் பாகன்
குறக்கொடிக் குந்தழைசிறைக்
கோழிக் கொடிக்குங் குமார கம்பீரன்
குறும்பிறை முடிக்கும்பிரான்

இருநாழி நெற்கொண்டு முப்பத்தி ரண்டறமும்
எங்குமுட் டாதளக்கும்
இறைவிதிரு முலையமுத முண்டுஞா னம்பெருகும்
எம்பிரான் இனிய பிள்ளைத்

திருநாமம் எழுதுவார் கற்பார் படிப்பார்
செம்பொது அறப்புரந்து
தேவாதி தேவரும் பரவுசா யுச்சியச்
சிவபதத் தெய்துவாரே.

(அ - ரை.) மரு-மணம். நாள் மலர்ப்பொழில் - அன்றலர்ந்த பூக்களையுடைய சோலை. தடம் - தடாகம், குளம். வண்டல்இடும் - மகளிர் விளையாடும். எக்கர்-மணல்மேடு. வாகனம்-ஊர்தி. தெய்வயானைதன் பாகன்-தெய்வயானையைப் பாகத்திலுடையவன். குறக்கொடி - குறக்குலத்திற் பிறந்த கொடிபோன்ற வள்ளியம்மை. குறும்பிறை - இளஞ்சந்திரன். பிரான் - எப்பொருட்கும் இறைவன். கம்பீரன் - செருக்குடையவன். நாழி - நான்குழக்குக் கொண்டது. அறம்-தருமவகைகள், முட்டாது-குறைவுபடாமல். நாமம் - பெயர். பொதுஅற புரந்து - தனக்கே உரிமையானதாகக் காத்து. பரவு - துதி. சாயுச்சியம் - இறைவனோடு இரண்டறக் கலப்பது. (ந)

---

# க. காப்புப்பருவம்

## திருமால்

பூமா இருக்கும் பசுங்களபப்
புயபூ தரத்துப் புருகூதன்
போற்றக் ககன வெளிமுகட்டுப்
புத்தேள் பரவப் பொதிகைமலைக்

கோமா முனிக்குத் தமிழுரைத்த
குருதே சிகனைக் குரைகடற்குக்
குடக்கே குடிகொண் டிருந்தசெந்திற்
குமரப் பெருமான் தனைக்காக்க

தேமா மலர்ப்பொற் செழும்பொகுட்டுச்
செந்தா மரையில் வீற்றிருக்குந்
தேவைப் படைத்துப் படைக்குமுதல்
சேரப் படைத்துப் படைக்குமுயிர்

ஆமா றளவுக் களவாகி
அனைத்துந் தழைக்கும் படிகருதி
அளிக்கும் படிக்குத் தனியேசங்
காழி படைத்த பெருமாளே.

(அ - ரை.) களபம் - மணப்பொருள். புயபூதரம்-தோளாகிய மலை. புருகூதன் - இந்திரன். ககனவெளி - ஆகாயவெளி. முகடு - உச்சி. புத்தேள் - சிவபெருமான். முனி - அகத்தியன். தேசிகன் - ஆசிரியன். குரைகடல்-ஒலிக்கின்ற கடல், குரை : வினைத்தொகை. குடக்கு - மேற்கு. குமரப்பெருமான் - முருகனாகிய பெருமையை யுடையவன். பொகுட்டு - தாமரைக் கொட்டை. தேவு-பிரமன். படைக்கு முதல் - படைப்புக்கு முதலாகிய பிரகிருதிமாயை. அளிக்கும் - காக்கும். சங்குஆழி - சங்கும் சக்கரமும். படைத்த- கைக்கொண்ட. பெருமாள் - பெருமையை ஆளுதலைப் பொருந்தியவன், திருமால். (க)

## சிவபெருமான்

உடல்வளை குழவி மதியமும் நதியும்
உரகமும் ஒழுகு செஞ்சடைக் காட்டினர்
உமைமுலை குழைய மருவிய புனிதர்
உரைகொடு பரவு தொண்டரைக் காத்தவர்
உமிழ்திரை மகர சலதியில் விளையும்
உறுவிட வடவை கண்டமட் டேற்றினர்
உடைமணி கனக பரிபுர முரல
ஒருமுறை பவுரி கொண்டமெய்க் கூத்தினர்
வடவரை முதுகு நெளிநெளி நெளிய
வரிசிலை யெனவொர் அம்பினைக் கோத்தவர்
மறுவறு முழுவெண் நிலவெழு முறுவல்
வளரொளி இருள்வ னங்கெடப் பூத்தவர்
மருவிய சகள வடிவினர் அரிய
வடகலை தமிழுவ ளம்பெறச் சேர்த்தவர்
மதுரையில் இறைவர் இரசத பொதுவர்
மணமலி பதயு கங்களைப் போற்றுதும்
இடவிய மதுர வரியளி குமுறி
இடறிய களப குங்குமத் தூட்பொதி
இமசலம் ஒழுகு கனதன விரகம்
எழுகுற வனிதை சிந்தையிற் சேர்ப்பனை
இடிபடு முரச முழவுடன் அதிர
எதிர்பொரு நிருதர் தம்படைப் போர்க்களம்
இடமற முதிய கழுதுகள் நடனம்
இடவடல் புரியு மொய்ம்பனைத் தூற்றிய
கடதட வழுவை முகமுள கடவுள்
கருணையின் முதிய தம்பியைப் பார்ப்பதி
கரமலர் அணையில் விழிதுயில் மருவி
களிபெறு குதலை மைந்தனைப் பூப்பயில்
கடிகமழ் தருவின் இறைமகள் புதிய
கலவியின் முழுகு கொண்கனைப் போற்றிசெய்
கலைமகள் பரவு குமரனை மதுர
கவிதரு குரிசில் கந்தனைக் காக்கவே.

(அ - ரை.) குழவி - இளமை. உரகம்-பாம்பு; மார்பால் நகர்வது. குழைய மருவிய புனிதர் - குழையும்படி தழுவிய தூயர். கச்சியில் கம்பை யாற்றில் சிவபூசை யாற்றிய உமையம்மை, வெள்ளப்பெருக்கால் தான் அமைத்து வழிபட்ட மணல் இலிங்கம் கெடாத வண்ணம் மார்போடும் வளைக்கையோடும் தழுவிய வரலாறு ஈண்டு குறிக்கத்தக்கது. மகரசலதி - மகரமீன்களையுடைய கடல். வடவை - வடவைத்தீ. கனகபரிபுரம் முரல - பொற்சிலம்பு ஒலிக்க. பவுரி - கூத்துவகை. முறுவல் - சிரிப்பு. இரசத பொதுவர் - வெள்ளியம்பலவாணர். பதயுகம் - இரண்டடிகள். அளி-வண்டு. குறவனிதை - குறமாது. விரகம்-வேட்கை. நிருதர்- இராக்கதர். கழுதுகள் - பேய்கள். அடல் - வலிமை, கொலை. இடவிய - அகலமான. பயில் - பொருந்து. தருவுக்கிறை - கற்பக தருவின் நீழலில் அரசுபுரியும் இந்திரன். கொண்கன் - கணவன். குரிசில் - நம்பி, பெருமையிற் சிறந்தவன். கடி கமழ் - மணம் வீசுகின்ற. (உ)

உமையம்மை

அரிபிரமர் சந்த தம்பு கழ்ந்திடு
பரசுடைய நம்பர் பங்கின் மென்கொடி
அகிலலோகமும் ஆதரத் தாற்ப டைத்தவள்
அரிவைமட மங்கை மென்க னங்குழை
திரிபுரை அணங்கு கங்கை அம்பிகை
அகளமாய்அனு பூதியிற் பூத்த பொற்கொடி
அபினவை முகுந்தர் தங்கை சுந்தரி
உரகபண பந்தி கொண்ட கங்கணி
அமுதமூறிய பாடலுக் கேற்ற சொற்குயில்
அறுசமய முங்க லந்து நின்றவள்
மறலிபா வும்பர சண்ட சங்கரி
அழகெலாமிது தானெனப் போற்று சித்திர

முரிபுருவ வஞ்சி திங்கள் தங்கிய
திருமுகம லர்ந்த பைங்க ருங்கிளி
முதல்விபூரணி ஞானவித் தாய்க்கி ளைத்தவள்

முருகுவிரி கொந்த ளம்பி றங்கிய
மணிமவுலி மண்ட லங்கொள் செஞ்சடை
முடிமனோன்மணி வாலைவற் றுக்கு ணக்கடல்
முகில்முலை சுமந்து நொந்த சைந்திறும்
இறுமென மருங்கி ரங்க இன்புறு
முறுவலாடிய கோமளத் தாற்பெ ருத்தவள்
முறைமுறை முழங்கு கின்ற கிண்கிணி
பரிபுரம் அலம்பு செம்ப தம்புரை
முளரிநாண்மலர் வாழ்வெனப் போற்றி நிற்குதும்

உரியபதி னெண்க ணங்க ளுஞ்சது
மறைமுனிவ ரும்ப ரிந்து நின்கழல்
உறுதிதானென நாவெடுத் தேத்தி நித்தலும்
உளமிக மகிழ்ந்து செங்க ரங்களின்
மலர்கொடு வணங்கி யஞ்சல் என்றமை
உடைமையாயருள் நீயெனக் காத்த நட்பனை
உடுமுக டதிர்ந்து விண்த லங்களும்
அரியபகி ரண்ட மும்பி ளந்திட
உதறுதோகை மயூரனைத் தோற்ற முற்றெழும்
உபநிடத மந்த்ர தந்தி ரந்தனில்
அசபையி லடங்கும் ஐம்பு லன்களில்
உவகைகூறும னோகரக் கூத்தனைப்பொரு

தரியலர் நெருங்கு செங்க ளம்புகு
நிசிசரர் துணிந்த வெம்ப றந்தலை
தழுவுபாடல் விசாகனைப் பாற்க டற்றரு
தரளநகை செங்க ருங்கண் இந்திரை
குறமகள் மணம்பு ணர்ந்த திண்புய
சயிலமோகன மார்பனைத் தோட்டி தழ்ப்பொதி
தழைமுகையுடைந்து விண்ட ரும்பிய
புதுநறவு சிந்து பைங்க டம்பணி
தருணசீதள வாகனைக் கோட்ட கத்துயர்
சரவண மிலங்க வந்த கந்தனை
முருகனை விளங்கு செந்தில் வந்திடு
சமரமோகன வேலனைக் காத்த ளிக்கவே.

(அ - ரை.) சந்ததம் - எப்பொழுதும். பரசுடைய நம்பர்-மழுவைக்கொண்ட சிவபெருமான். ஆதரம் - விருப்பம். அனுபூதி-உண்மை, அனுபவம். உரக பணபந்தி - பாம்பின் படவரிசை. அகளம் - கள்ளமின்மை. அபினம் - பின்னமில்லாத. கங்கணி - கங்கணத்தையுடையவள். மறலி - இயமன். பூரணி-நிறைந்தவள். வித்து - மூளே. கொந்தளம்-கூந்தல். மவுலி-முடி, கிரீடம். வாலே-இளம்பெண். இறும் - ஒடியும். மருங்கு இரங்க - இடைவருந்த, கோமளம் - அழகு. புரை - ஒத்த. நிற்குதும் - நிற்போம். பகிர் அண்டம் - புறக்கோளம். அசபை - வெளிப்படாமல் உள்ளே செபித்தல். உடு - நட்சத்திரம். மனோகரம் - மகிழ்ச்சி. தரியலர்-பகைவர். நிசிசரர்-இரவில் இயங்குவார். வெம்பறந்தலை-கொடிய போர்க்களம். இந்திரை - இலக்குமி. சயிலம்-மலை. மோகனம் - புணர்ச்சி. தோடு - இதழ். முகை - மொட்டு. விண்டு - விரிந்து. தருணம் - புதுமை, இளமை. கோட்டகம் - இமயமலே. சமரமோகன வேலன் - போர் விரும்பும் முருகன். சரவணம் - இமயமலே அடிவாரத் தடாகம்; நாணற்புல் அடர்ந்த பொய்கை: ஆகுபெயர். (ந)

பிள்ளையார்

கருணையின் வழிபடு முதியவள் தனையுயர்
கயிலையி னொருமுறை உய்த்த விதத்தினர்
கனவட கிரிமிசை குருகுல மரபினர்
கதைதனை யெழுதிமு டித்த கருத்தினர்
கலைமதி யினைஇரு பிளவு செய் தொருபுடை
கதிரெழ நிறுவிய ஒற்றை மருப்பினர்
கடுநுகர் பரமனை வலமுறை கொடுநிறை
கனிகவர் விரகுள புத்தி மிகுத்தவர்

பொருவரும் இமகிரி மருவிய பிடிபெறு
பொருகளி றெனமிகு பொறப்பு விளைத்தவர்
பொதிஅவிழ் நறுமலர் அணைமிசை தமதுடல்
புளகம தெழவொரு சத்தி தரித்தவர்
பொதுவற விடுசுடர் முழுமணி யொளிவிடு
பொலிவெழு பவளம தித்த நிறத்தினர்

புகர்முகம் உடையவர் குடவயி றுடையவர்
புகழிரு செவியில்நி றுத்தி வழுத்துதும்

இருமையும் உதவிய சிவபர சமயமும்
இமையவர் உலகும ளித்த களிப்பனை
இசைமுரல் மதுகர முறைமுறை பெடையுடன்
இடறிய முகைவிரி செச்சை வனப்பனை
இளகிய புளகித மலைமுலை யரமகள்
இகலிய புலவிய சுற்று மழுப்பனை
இகல்புரி பரநிசி சரர்குல கலகனை
எனைவழி யடிமைப டைத்திடு நட்பனை

அருமறை யுரைதரு பிரமனை அமரரும்
அடிதொழ விடுசிறை விட்ட திறத்தனை
அடியவர் கொடுவினை துகள்பட நடமிடும்
அழகிய சரணம் அளித்த வரத்தனை
அளவறு கலவியின் முழுகிய குறமகள்
அழகினில் ஒழுகியி ருக்கு மயக்கனை
அலையெறி திருநகர் மருவிய குமரனை
அறுமுக முருகனை நித்தல் புரக்கவே.

(அ - ரை.) வழிபடு முதியவள் - பூசித்த மூத்தவளாகிய ஔவை. உய்த்த - செலுத்திய, உய: பகுதி. வடகிரிமிசை - வடமலையாகிய மேருவில். குருகுல மரபினர் கதை - கவுரவ பாண்டவர்களின் கதையாகிய பாரதம். "வாடாத தவ வாய்மை முனிராசன் மாபாரதம் சொன்னநாள், ஏடாக வடமேரு வெற்பாகவெங்கூர் எழுத்தாணி தன், கோடாக எழுதும் பிரான்" என்ற வில்லி பாரதச் செய்யுளால் அறிக. புடை - பக்கம். மருப்பு, கொம்பு. கடுநுகர் - நஞ்சுண்ட. விரகு - நுட்பம். பொருவரும் - ஒப்பற்ற. புளகிதம் - மயிர்ச் சிலிர்ப்பு, மகிழ்ச்சி. புலவி - ஊடல், பிணக்கம். குலம் - கூட்டம், இனம். துகள்பட - பொடியாக. நடம் - நடனம். கூத்து. மழுப்பனை - இங்கித நயம் பேசுபவனை. மயக்கனை-மயக்கமுடையவனை. நித்தல் - தினம்; நித்தம் என்பதன் போலி. (௪)

### கலைமகள்

அவணி பருகிய மால்திரு உந்தியில்
அமரு மொருபிர மாவெனும் அந்தணன்
அரிய சதுமறை நாவிலி ருந்தவள்
அளவில் பலகலை யோதியு ணர்ந்தவள்

தவள முளரியில் வாழ்வுபு ரிந்தவள்
தவள மணிவட மாலைபு னைந்தவள்
தவள வடிவுள வாணிசு மங்கலி
தனது பரிபுர பாதம் இறைஞ்சுதும்

உவரி முதுதிடர் பாயவி டம்பொதி
உரகன் மணிமுடி தூள்பட மந்தரம்
உலைய எறிசுழல் மாருதம் எங்கணும்
உதறு சிறைமயில் வாகனன் இன்புறு

கவரில் வரிவளை சூல்கொடு தங்கிய
கமட முதுகினில் ஏறநெ டுந்திரை
கதறு கடலலை வாய்முரு கன்பெறு
கருணை தருகவி மாலைவி ளங்கவே.

(அ - ரை.) அவனி பருகிய மால் - ஊழிக்காலத்து உலகம் உண்ட திருமால். உந்தி - உந்திக்கமலம், கொப்பூழ். தவளமுளரி - வெண்டாமரை. இறைஞ்சுதும் - வணங்குவோம். உவரி - கடல், உவர்ப்புடையது, பௌவம். உரகன் - ஆதிசேடன். உலைய - கெட. மாருதம் - காற்று. கவரில் - பிளப்பில், வெடிப்பில். வளை - சங்கு. சூல் - கருப்பம், கமடம் - ஆமை. அலைவாய் - திருச்செந்தூர். (௫)

### அரிகரபுத்திரன்

வரியு நீள்சடி லத்திடை மகுட ராசித ரித்தவர்
வளையு நீடுக ருப்புவில் மதுர வாளிதொ டுத்தவர்
அரிய பூரணை புட்கலை அரிவை மார்இரு பக்கமும்
அழகு கூருமகிழ்ச்சியர் அடிவி டாமல்வ ழுத்துதும்
உரிய நான்மறை நித்தலும் உறுதி யாகவ ழுத்திய
உவமை யாசுக வித்துறை உதவு நாவலன் முற்றிய

பரிய வாளைகு தித்தெழு பரவை சூழுந கர்க்கிறை
பழநிவேல வணைப்புகழ் பனுவல் மாலைத மைக்கவே.

(அ - ரை.) சடிலம் - சடை. மகுடராசி - கிரீடக்கூட்டம். வாளி - அம்பு. புட்கலை-ஐயன் தேவிகளில் ஒருத்தி. பரவை - கடல். ஆசுகவி - பொருளடி பாவணி முதலியன கொடுத்து விரைந்து பாடுக எனப் பாடும் கவி. மற்றைக் கவிகள் மதுரம், சித்திரம், வித்தாரம் எனப்படும். (௬)

பகவதி

விளையுஞ் செழுந்தேன் உடைந்துமுகை விண்டொழுகு
வெண்டா மரைப் பொகுட்டு
வேதா முடித்தலை முடிக்குஞ் சடாடவியள்
வெங்கொலை மடங்கலேறி

வளையும் பனிப்பிறை மருப்புக் குறுங்கண்நெடு
மயிடாசு ரன்சிரத்தில்
வலியநடம் இடுகுமரி பகவதிச ரோருக
மலர்த்தாள் வணக்கமுறுவாம்

உளையுந் தடந்திரைத் திமிர தம ரக்குழி
உவர்ப்பரு மகரவேலை
ஒலியிடுங் குண்டகழி சுவறிமே டாகவேல்
உள்ளுறை கழித்துநிருதக்

களையுங் களைந்துகலன் அணிபுலோ மசைதன்மங்
கலநாண் அளித்தபெருமாள்
கடியமயில் வாகனப் பெருமாள் உவந்தெனது
கவிமாலை கொண்டருளவே.

(அ - ரை.) வேதன் - பிரமன். சடாடவி - சடைக்காடு. மடங்கல் - சிங்கம். மகிடாசுரன் - எருமைக்கடா வடிவினனான அசுரன். மகிடம் - எருமை. சரோருகம் - தாமரை; நீரில் முளைப்பது. திமிரம் - இருள். தமரம் - பேரொலி. குண்டு அகழி - ஆழமாகத் தோண்டப்பட்ட கடல்; சாகரம். சுவறி - வற்றி. புலோமசை - இந்திராணி; புலோமன் மகள். மங்கல நாண் - தாலி. கடிய - வேகமான. (எ)

காளி

**காயுங்** கொடும்பகைத் தாருக விநாசனி
கபாலிகங் காளிநீலி
காளிமுக் கண்ணிஎண் தோளிமா தரிவீரி
கவுரிகலை யூர்திகன்னி

**பாயுந்** தழற்புகைப் பாலைக் கிழத்திவெம்
பண்ணம் பணத்திமோடி
பரசுதரன் உடன்நடனம் இடுசூலி சாமுண்டி
பாதார விந்தநினைவாம்

**ஆயும்** பெரும்பனுவ லாசுகவி மதுரகவி
அரியசித் திரகவிதைவித்
தாரகவி இடுமுடிப் புக்குள மயங்காமல்
அடியவர்க் கருள்குருபரன்

**தேயும்** பனிப்பிறைத் திருநுதற் கடல்மகளிர்
தெள்நித் திலங்கொழித்துச்
சிற்றில்விளை யாடல்புரி யுந்திருச் செந்தில்வரு
சேவகன் புகழ்பாடவே.

**(அ - ரை.)** காயும் - கோபிக்கும். தாருக விநாசனி - தாருகா **சுரனைக்** கொன்றவள். கலையூர்தி - மானை வாகனமாக உடையவள். **கங்காளி** - முழு எலும்பு அணிந்தவள். பாலைக்கிழத்தி - பாலை நிலத் **தேவி.** மோடி-வனக்காளி. பரசுதரன்-மழுவாளி. பாதாரவிந்தம்- **அடிமலர்.** முடிப்புக்கு உளமயங்காமல் - முடிவுகளுக்கு மனம் கலங் காதபடி. பனி - குளிர்ச்சி. நித்திலம்-முத்து. சேவகன் - வீரன். (அ)

ஆதித்தர்

வெள்ளப் பெருந்துளி இறைக்கும் பெருங்காற்று
வெண்டிரையின் மூழ்கியெழூ
வெம்புரவி ஒற்றையா ழித்தடந் தேரேறி
வேதபா ரகர்இறைஞ்சப்

பள்ளக் கடல்திரை கலக்கியூ ழியின்இருட்
படலமுழு துந்துடைத்துப்
படர்சுடர் விரித்துவரு பன்னிரு பதங்கர்பொற்
பாதமலர் சென்னிவைப்பாம்

உள்ளக் களிப்பருு வரிவண்டு பண்பாட
ஓதிம நடிக்கமுள்வாய்
உட்குடக் கூன்வலம் புரிமுத்தம் உமிழநீர்
ஓடையிற் குருகுகாணக்

கள்ளக் கருங்கட் சிவந்தவாய் வெண்ணகைக்
கடைசியர் நுளைச்சியருளங்
களிகூரும் அலைவாய் உகந்தவே லனையெங்கள்
கந்தனைக் காக்கவென்றே.

(அ - ரை.) திரை-அலை. ஆழி - சக்கரம், உருளி. புரவி -குதிரை. வேதபாரகர்-வேதத்தை மேற்கொண்டவர், மறையோர். படலம் - திரை, கூட்டம், பதங்கர் - சூரியர். ஓதிமம்-அன்னம். கூன் வலம்புரி - வளைந்த வலம்புரிச் சங்கு. குருகு-நாரை. நுளைச்சியர் - நெய்தல் நிலமகளிர். (கூ)

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்

பொதுவி லாடு மத்தற்கு நீடு
பொருளை யோதி ஒப்பித்த சீலர்
புணரி தோய்ந கர்க்குச்ச காயர்
புலமை நீதி யொப்பற்ற கேள்வர்

குதலை வாய்மொ ழிச்சத்தி பாலர்
குருதி பாய்க திர்க்கொற்ற வேலர்
குறவர் பாவை சொற்கத்தின் மோகர்
குமரர் காவ லுக்கொத்த காவல்

மதுர கீத விற்பத்தி வாணர்
மகுட வேணி முத்துத்த ரீகர்
மவுன போன பத்திக்க லாபர்
மனையில் வாழ்வு வைப்புற்ற நேயர்

முதுமை யான சொற்பெற்ற நாவர்
முனிவர் வேள்வி இச்சிக்கும் ஊணர்
முடிவி லாத கற்பத்தின் ஊழி
முதல்வர் தேவர் முப்பத்து மூவரே.

(அ - ரை.) பொது - அம்பலம். மத்தர்க்கு - ஊமத்த மாலை யணிந்த சிவனுக்கு, நீடு பொருளை - பிரணவப் பெரும்பொருளை. சகாயர்-உதவியாளர். கேள்வர் - உரியவர், சத்திபாலர் - சத்திகட்குப் பாலராய் இருந்தவர். சொற்கம்-கொங்கை; முலை. உத்தரீகர் - மேலாடையர். கலாபர் - மயிலுடையவர். (க0)

---

## உ. செங்கீரைப்பருவம்

வெங்காள கூடவிடம் ஒழுகுபற் பகுவாய்
விரித்துமா சுணம் உமிழ்ந்த
வெங்கதிர் மணிக்கற்றை ஊழியிரு ளைப்பருக
வேய்முத் துதிர்ந்து சொரியக்

கங்காளர் முடிவைத்த கங்கா நதிக்கதிர்
கடுப்பக் குறுங்க வைக்காற்
கவரியின் பருமுலைக் கண்திறந் தொழுகுபால்
கதிர்வெயிற் படமு ரிந்து

மங்காமல் இரசதத் தகடெனச் சுடர்விட
மலைக்குறவர் கண்டெடுத்து
வண்தினைக் கெருவிடுஞ் சாரலிற் கரியகுற
மகளிருளம் ஊச லாடச்

செங்காவி விழிபருகு பன்னிருகை மேகமே
செங்கீரை யாடி யருளே
திரையெறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) வெங்காளகூடம் - கொடிய நஞ்சு - பகுவாய் - பிளந்த வாய். மாசுணம்-பாம்பு. மணி-இரத்தினம். ஊழி-உகாந்த

காலம். வேய்-மூங்கில். கங்காளர்-முழு எலும்பணிந்த சிவபெருமான். கடுப்ப-ஒப்ப. கவை-பிளப்பு. கவரி - எருமை. முரிந்து - ஒடிபட்டு. இரசதம் - வெள்ளி. வண் தினைக்கு எருஇடும் - வளவிய தினைப்பயிர்க்கு உரமாகப் போடும். ஊசல்-ஊஞ்சல். சாரல்-மலைப் பக்கம். அலைவாய் - கடலிடம். உகந்த - விரும்பிய. (கக)

கறைகொண்ட முள்ளெயிற் றுத்துத்தி வரியுடற்
கட்செவிப் பஃற லைநெடுங்
காகோ தரச்சிர நெளிக்கவட பூதரங்
கால்சாய மகரம் எறியுந்

துறைகொண்ட குண்டகழ்ச் சலராசி யேழுஞ்
சுறுக்கெழ முறுக்கெ யிற்றுச்
சூரன் பயங்கொளச் சந்த்ரசூ ரியர்கள்செந்
தூளியின் மறைந்தி டத்திண்

பொறைகொண்ட சுரர்மருவும் அண்டகோ ளகைமுகடு
பொதிரெறிய நிருதர் உட்கப்
பூச்சக்ர வாளகிரி கிடுகிடென வச்சிரப்
புருகூதன் வெருவி வேண்டுந்

திறைகொண்ட ளக்கவரு மயிலேறு சேவகா
செங்கீரை யாடி யருளே.
திரையெறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) கறை-விடம்; நஞ்சு. முள் எயிறு - முள்போன்ற பல். துத்தி - புள்ளி. கட்செவி - கண்ணையே காதாகவுடையது; பாம்பு. பஃறலை - பலதலை. காகோதரம்-ஆதிசேடனாகிய பாம்பு. வடபூதரம்-வடமலை. சலராசி-நீர்த்திரள். சுறுக்குஎழ - வற்ற. செந்தூளி-சிவந்த தூசி. கோளகை - வட்டம். பொதிர் எறிய - ஓட்டை பட. உட்க-பயப்பட; என்னும் பகுதியடிப் பிறந்த வினையெச்சம். கிரி - மலை. திறை - கப்பம். வெருவி - பயந்து; அஞ்சி. வெருவு: பகுதி. (கஉ)

ஏர்கொண்ட பொய்கைதனில் நிற்குமொரு பேராசின்
இலைகீழ் விழின்ப றவையாம்
இதுநிற்க நீர்விழின் கயலாமி தன்றியோர்
இலையங்கு மிங்கு மாகப்

பார்கொண்ட பாதியும் பறவைதா னுகஅப்
பாதியுஞ் சேலதாகப்
பார்கொண் டிழுக்கஅது நீர்கொண் டிழுக்கவிப்
படிகண்ட ததிச யமென

நீர்கொண்ட வாவிதனில் நிற்குமொரு பேழ்வாய்
நெடும்பூதம் அதுகொண் டுபோய்
நீள்வரை யெடுத்ததன் கீழ்வைக்கும் அதுகண்டு
நீதிநூல் மங்கா மலே

சீர்கொண்ட நக்கீர னைச்சிறை விடுத்தவா
செங்கீரை யாடி யருளே
திரையெறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை யாடி யருளே.

- ரை.) விழின் - விழுந்தால். கயல்ஆம் கயல்மீன் ஆகும். சேல் - மீன். அதிசயம் - வியப்பு. வாவி - தடாகம். பேழ்வாய் - பெரிய வாய். பூதமது-அது: துணைமொழி, வரைஎடுத்ததன்கீழ் - மலையிலுள்ள குகையில். திருப்பரங்குன்றத்திலுள்ள சரவணப் பொய்கையில் சிவவழிபாடு புரியலான நக்கீரனார் அப் பொய்கையில் விழுந்த அரசிலையின் ஒருபாதி நீரிலும் மற்றொரு பாதி நிலத்திலும் பொருந்தும்படி வீழ்தலைக் கவனிக்கையில், நீரில் விழுந்த பகுதி மீனுகவும் நிலத்தில் விழுந்த பகுதி பறவையாகவும் வடிவுற்று ஒன்றையொன்று இழுத்துக் கொண்டிருக்கும் காட்சியில் மயங்கியது கண்ட சிவபூதம், இதுவே இவரைப் பற்றித் தொளாயிரத்துத் தொண்ணூற்றென்பது பூசைவழுவியவர்களுடன்சேர்த்துக் குகையில் அடைத்துப் பின் புசிக்க வேண்டும் என்றிருப்பதுணர்ந்த நக்கீரனார் முருகப்பெருமானை முன்னிலைப்படுத்தித் திருமுருகாற்றுப்படை பாடவே, முருகன் தோன்றிப் பூதத்தையும் துரத்திச் சிறையிடப்பட்டவர்கள் அனைவரையும் சிறைவீடும் செய்து மகிழ்வித்தார் என்பது இதிலடங்கிய வரலாறு. (கக)

கந்தமலி யெட்டிதழக் குறுமுகைப் பாசடைக்
கமலமல ரைக்க றித்துக்
கடைவாய் குதட்டும் புனிற்றெருமை தன்குழக்
கன்றுக் கிரங்கி யோடிக்

கொந்தவிழ் கருங்குவளை ஓடைத் தடாகக்
குரம்பைக் கடந்து செந்நெற்
குலைவளைக் கும்பழக் குலைமடற் கதலிக்
குருத்தற மிதித்து மீளப்

பந்தரிடு சூலடிப் பலவுதரு முட்குடப்
பழமெலாம் இடறி வெள்ளைப்
பணிலஞ் சொரிந்தநித் திலமுறுத் தப்பதை
பதைத்துமுலை பாலு டைந்து

சிந்தமக ராழியலை யொடுபொருத செந்தூர
செங்கீரை யாடி யருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய்
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) கந்தம்மலி - மணம் நிறைந்த, குறுமுகை - சிறிய அரும்பு. நெட்டிதழ்க் குறுமுகை என்பதில் சொல்முரண் அமைந்துள்ளது. பாசடை - பச்சிலை. கறித்து - கடித்து. குதட்டும் - அதக்கும். புனிறு - இளமை. கொந்து - வாசனை. குரம்பு - கரை, கதலி - வாழை. பலவு - பலா. "குறியதன்கீழ் ஆக்குறுகலும்" என்ற நன்னூல் சூத்திரப்படியாயிற்று. முட்குடப்பழம் - முள்ளையுடைய குடம்போன்ற பழம்(பலாப்பழம்). இடறி-எற்றி. பணிலம் - சங்கு. உறுத்த - அழுத்த. பொருத-தாங்கிய. பதாகை- கொடி. செந்நிறக் குடுமி வெண்சேவல் - இவ்வடியில் சேவலின் கொண்டை நிறச்செம்மையும், உடலின் வெண்மையும் விளங்கும். (௧௪)

வீருட வெங்கதிர்ப் புகர்முகக் கூரிலை
மிருத்தவே லுறை கழித்து
வெவ்வாய் பிளந்துசிறு கட்பேர் இடாகினிகள்
விளையாட வெங்க வந்த

மாரூட முதுபகட் டுயர்பிடர்க் கரியநிற
மறலிஇரு கைசலித்து
மன்ரூட உடல்விழிக் குரிசில்கொண் டாடநெடு
மாகமுக டிடைவெளியறப்

பாரூட அம்பொற் கிரீடம் பரித்தலகை
பந்தாட விந்தா டவிப்
பாலைக் கிழத்திமுக் கவரிலைச் சூலம்
பசுங்கொழுங் குருதி வெள்ளச்

சேரூட வென்றுசிறு முறுவலா டுங்குமர
செங்கீரை யாடி யருளே
செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய்
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) வீறுஆட - பெருமை பாராட்ட. கதிர்ப்புகர் - சூரியன் நிறம். கூர்இலை - கூர்மையான தகட்டு வடிவமுள்ள. இடாகினிகள் - துர்க்கை ஏவற் பெண்கள். வெம் கவந்தம் - கொடிய உடற்குறைப் பிணங்கள். மாறுஆட - விரோதமாகக் குதிக்க. பகடு - எருமைக்கடா. மன்ரூட - வேண்ட, இரங்கிக் கேட்க. மாகம் - விண்; ஆகாயம். பாறுஆட - பருந்துகள் விளையாட. உடல் விழிக்குரிசில்-மெய்யில் கண்களையுடைய இந்திரன். பரித்து - தாங்கி. அலகை - பேய். விந்தாடவி - மலைக்காடு. குருதி-இரத்தம்; சேறுஆட - குழம்பு தோய. முறுவல் ஆடும் - புன்சிரிப்புச் செய்யும். (கரு)

மகரசல ராசிதனில் வருணன்வந் தடிபரவி
வைத்தமணி முத்து மாலை
வடபூ தரத்தில்விழும் அருவியென உத்தரிக
மார்பிலா டாட மன்னும்

தகரமல ரிதழ்முருகு கொப்புளிக் குஞ்சிகைத்
தமனியச் சுட்டி ஆடத்
தவளமுழு மதியமுத துளியெனத் திருமுகத்
தாளவெயர் வாட முழுதும்

பகரவரு மறைமுனிவர் கொண்டாட மழுவாளி
பங்காளி திருமுலைப்பால்
பருகக் குழைந்துசிறு பண்டியுந் தண்டையும்
பாதமும் புழுதி யாடச்
சிகரவரை அரமகளிர் சிறுமுறுவ லாடநீ
செங்கீரை யாடி யருளே.
செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய்
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) சலராசி - கடல். உத்தரிகம் - மேலாடை. தகரம் - மயிர்ச்சாந்து. முருகு - வாசனை. தமனியம் - பொன். துவளம் - வெண்மை. தரள வெயர்வு ஆட - முத்துப் போன்ற வேர்வையுண்டாக. மழுவாளி பங்காளி - மழுப்படை தாங்கும் சிவனுடைய செம்பாதியைப் பங்காகக் கொண்ட உமாதேவி. பண்டி-வயிறு. புழுதியாட-தூசிபடிய. சிகரம்-உச்சி, முகடு. (கசு)

வேறு

இந்திர னுஞ்சசி யும்பர வும்படி
யிங்கே வந்தார்காண்
இந்திரை யுங்கர சங்கமு குந்தனும்
இந்தா வந்தார்பார்
அந்தண னுங்கலைமங்கையு மின்சர
ணஞ்சேர் கிவிருர்போய்
அண்டரு டன்பல தொண்டர்ப ணிந்தனர்
அஞ்சே லென்ருளாய்
முந்துத டந்திரை யுந்துவ லம்புரி
மொண்டே கொண்டேக
முன்றில்தொ றுந்தர ளங்கள் உமிழ்ந்திட
முந்தூர் நந்தூருஞ்
செந்தில்வ ளம்பதி வந்தரு ளுங்குக
செங்கோ செங்கீரை
தென்றல்ம ணங்கமழ் குன்றுபு ரந்தவ
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) சசி - இந்திராணி. பரவும்படி - போற்றும்படி. இந்திரை - இலக்குமி. முகுந்தன்-திருமால். அந்தணன் - பிரமன். அஞ்சேல் - பயப்படாதே. ஆளாய் - ஆட்கொள்வாய். உந்து - தள்ளும். முன்றில்தொறும் - முற்றமெங்கும். நந்து - சங்கு. ஊர் - நகர், தவழ். தென்றல் - தெற்கிருந்து வருங்காற்று. செங்கோ செங்கீரை: செங்கீரையாடியருளே என்பதன் மரூஉ. (கஎ)

வரைபொரு புளகித மலைமுலை அரிவையர்
வந்தார் பந்தாட
மறிகட லிறைதரு நவமணி வடமது
வண்டார் தண்தார்பார்
உரைபொரு கவிஞரு முனிவரும் அமரரும்
உன்போ லுண்டோதான்
உரையெமர் வழிவழி யடிமையி துளதென்
உன்பா லன்பானோர்
கரைபொரு கடறிட ரெழுமயில் மிசைவரு
கந்தா செந்தூரா
கழிமட அனமொடு முதுகுரு கொருபுடை
கண்சாய் தண்கானல்
திரைபொரு திருநகர் மருவிய குருபர
செங்கோ செங்கீரை
செருவினில் எதிர்பொரு நிசிசரர் தினகர
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) புளகிதம் - மயிர்ச் சிலிர்ப்பு. அரிவையர்-பெண்கள். மறி - மடங்கி எறிதல். இறை - தலைவன். தண்தார் குளிர்ந்த மாலை. எமர் - எம்மவர். திடர் - மேடு. கண்சாய்தல் - தூங்குதல். கானல் - கடற்கரைச் சோலை. மருவிய - பொருந்திய. (கஅ)

## வேறு

உரைசெய் வரையர மகளிர் முறைமுறை
உன்பேர் கொண்டாட
உலகும் இமையவர் உலகும் அரகர
உய்ந்தோம் என்றுட

வரைசெய் வனமுலை மகளி ரெழுவரும்
வந்தே பண்பாட
மலய முனியொடு பிரம முனிதொழ
வந்தார் கண்டாயே

கரையின் மணலிடு கழியில் நெடியக
லஞ்சே ருஞ்சார்பிற்
கரிய முதுபனை அடியில் வலைஞர்க
ணஞ்சூழ் மென்கானில்

திரையில் வளைதவழ நகரில் வருகுக
செங்கோ செங்கீரை
செருவில் நிசிசர திமிர தினகர
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) உரைசெய் - புகழ்கின்ற, இமையவர் - தேவர், வரைசெய்-மலையை ஒத்த, மகளிர்எழுவர்-எழு கன்னிமார், கழி-கடல்நீர் கழிந்து நிற்கும்இடம். கணம் - கூட்டம், வளை - சங்கு, செரு - போர், திமிரம் - இருள், தினகர - சூரியனே ! (கக)

வேறு

குறுமுகை விண்ட நெட்டிலைத் தாழை
அடியில்வி ளைந்த முட்குடக் காயில்
இனிய குவளை யோடையில் விண்தோ யுந்தேவர்
குணலைபு ரிந்த கற்பகச் சோலை

நிழலிடு பந்த ரிட்ட பொற்றூணில்
அளவர் குடிலில் வாசலில் நின்றோடுந் தோணி
குழுவொடு வந்து விட்டிளைப் பாறு
துறைமணல் வண்ட லிட்டுவற் றுத

பழைய குமிழி வாவியில் வண்டா னந்தாவுங்
குரவுநெ ருங்கும் எக்கரிற் கானல்
உழுநர்ப ரம்பின் நெற்குலைத் தாளில்
இளைய குமரர் ஊர்சிறு திண்டேர் மென்காவில்

இருகுகு ரும்பை யொத்தபொற் பார
நகிலரி ருந்து வைத்தவைப் பூசல்
அருகில் இளைஞர் ஊடலில் வண்டார் தண்டாரில்
எவரும கிழ்ந்த சித்திரச் சாலை
நிழன்மணி துன்று தெற்றியில் தேவர்
மகுடம் இடறு பூழியில் வங்கா ளஞ்சீனம்
எனமொழி தங்கும் அற்புதத் தீவில்
வணிகரின் வந்த மிக்கபட் டாடை
வகையி லெறியும் ஆரவ டம்பூ ணும்பூணில்
இரைகவர் ஞெண்டு முக்குளித் தூறும்
அளறுகி டங்கில் வித்துவித் தாரத்
தூரவில் இடுமுள் வேலியில் வெங்கா மன்காண

முறுகவி ளைந்து முற்றி முத்தேறு
கரியக ரும்பு சுற்றுசிற் றூலை
நிலையின் முதிய தாழியில் வெந்தா றும்பாகின்
முடியைவி ளம்பி வைத்துமுட் டாது
கடைசித ருகின்ற கட்குடப் பானை
முதுகின் முளைகொள் சாலியின் மென்பூ
முருகுது ளும்பு கொத்துடைப் பாளை [கந்தோறு
சிதறியு திர்ந்த பித்திகைப் பீட
மறுகின் முதல்வர் தேவியர் பந்தாடுங் காவின்
முனிவர்வி ரும்பு கற்புடைப் பான்மை
மகளிர்கள் மொண்டெ டுத்தகைச் சாலின்
மடுவில்முழுகு மேதியில்வம்பே செஞ்சேல்பாய்

செறுவில்வி ளைந்த நெற்குலைக் காயில்
உழவிலு டைந்த கட்டியிற் பார
மதகு செறியும் ஏரியின் மண்டூ கம்பானல்
செருமிமு ழங்கு கற்பிளப் பான
புடையின்வி ழும்பு னற்பெருக் கான
தமர திமிர வாவியி லெங்கே யுந்தாவுந்
திரையில் வலம்பு ரிக்கணத் தோடு
பணிலமு ழங்கு பட்டினக் காவல்

திகிரி முருக வேலவ செங்கோ செங்கீரை
தினகரர் அஞ்ச விட்புலத் தேவர்
மகபதி முன்கு வித்த வித்தார
மவுலி திறைகொள் சேவக செங்கோ செங்கீரை.

(அ - ரை.) விண்ட - விரிந்த. குணலை - ஒரு கூத்து, வீராவேசக் கொக்கரிப்பு. குடில் - குடிசை. வற்றுத - சுருங்காத. வண்டல் - நீர்ச்சுழி. வண்டானம் - நாரை. குரவு - குராமரம். நகிலர் - கொங்கையையுடைய சிறு பெண்கள். தெற்றி - திண்ணை. இட்று - தட்டு; எற்று. ஆரம் - முத்து. பூண் - நகை. ஞெண்டு - நண்டு. முக்குளித்து - அமிழ்ந்தி. அளறு - சேறு. வித்தாரம் - அகலம். தரவு - தோட்டம். முறுக - மிக. ஆலை - கரும்பு ஆட்டும் இயந்திரம். விளம்பி - கள். கடைசி - மருதநிலப் பெண். சாலி - நெற்பயிர். முருகு - தேன். பித்திகைப் பீடம் - சுவர்த்தலங்களையுடைய ஆசனம். மறுகு - தெரு. முதல்வர் - மும்மூர்த்திகள். பான்மை - தன்மை. கைக்கால் - சிறியகால்வாய். மடு - தடாகம். மேதி - எருமை. வம்பு - புதுமை. செறு - வயல். மண்டூகம் - தவளை. பானல் - நீலோற்பல மலர். செருமி - இருமி. புடையில் - குழியில். தமரம் - பேரொலி. விட்புலம் - ஆகாயத்திடம். மகபதி - இந்திரன்; நூறு மகங்கள் செய்து தேவர் தலைவன் ஆனவன். (௨0)

---

## ௩. தாலப்பருவம்

அடரும் பருநவ மணிமுடி அமரரும்
அமரர்க் கிறைவனுநீ
டளகைந ராதியும் ஈரொன் பதின்மரும்
அருமறை முனிவோருஞ்
சுடருந் தருமிரு சுடரும் பரவிய
தோகைய ரெழுவருமுத்
தொழின்முக் கடவுளும் அவரவர் தங்குறை
சொல்லித் துதிசெய்தார்

படருங் கிரணப் பரிதி நெடுங்கதிர்
பாயும் பகிரண்டம்
பழுமரம் என்னப் பணையென நிமிரும்
பாழிக் கைந்நீட்டித்
தடவும் புகர்முக தந்திக் கிளையாய்
தாலோ தாலேலோ
சந்த மணங்கமழ் செந்திற் பதியாய்
தாலோ தாலேலோ.

(அ - ரை.) அடரும் - நெருங்கும். அமரர் - தேவர், மரண மில்லாதவர். அமரர்க்கு இறைவன் - இந்திரன். அளகை நராதி - அளகாபுரி மன்னனாகிய குபேரன். ஈரொன்பதின்மர் - பதினெட்டுச் சிவகணத்தர். சுடரும் இருசுடரும் - ஒளிதருகின்ற சூரிய சந்திரர் இருவரும். பரவிய - துதிக்கப்படும் அல்லது துதித்த. தோகையர். எழுவர் - கன்னியர் எழுவர். பரிதி - சூரியன். பகிர் அண்டம் - வெளியுலகம். பழுமரம் - ஆலமரம். பாழி - பருத்த. புகர் - புள்ளி. தந்தி - யானை. இங்கு யானைமுகக்கடவுள். சந்தம் - சந்தனம்; அழகு. (உக)

கங்குல் பொருந்திய குவளைக் குழியில்
கழியில் பழனத்தில்
கரையிற் கரைபொரு திரையில் வளைந்த
கவைக்கால் வரி அலவன்
பொங்கு குறுந்துளி வாடையின் நொந்து
பொறாதே வெயில்காயும்
புளினத் திடரில் கவரில் துரவில்
புன்னை நறுந்தாதில்
கொங்கு விரிந்த மடற்பொதி தாழைக்
குறுமுட் கரியபசுங்
கோலச் சிறிய குடக்கா யில்புயல்
கொழுதுஞ் செய்குன்றிற

சங்கு முழங்கிய செந்திற் பதியாய்
தாலோ தாலேலோ
சமய விரோதிகள் திமிர திவாகர
தாலோ தாலேலோ.

(அ - ரை.) கங்குல் - இரவு. பழனம் - வயல். கரைபொரு திரை - கரையை மோதுகின்ற அலை. அலவன் - நண்டு. காயும் - கொதிக்கும், எரியும். புளினத்திடர் - மணல்மேடு. கவர் - வெடிப்பு நிலம். துரவு - தோட்டம். கொங்கு - வாசனை. குடக்காய் - குடம்போன்ற தாழங்காய். புயல் - மேகம். கொழுதும் - கோதும்; கிண்டும். சமயம் - மதம். (உஉ)

வேறு

தண்தேனொழுகு மொழிமடவார்
தாமங் கொளுதிச் சுருண்டிருண்டு
தமரக் களிவண் டடைகிடந்து
தழைத்து நெறித்த குழற்பாரங்
கொண்டே மெலிந்த தல்லாது
குரும்பைக் களப முலைசுமந்து
கொடிபோல் மருங்குல் குடிவாங்கக்
குழையிற் குதித்த விழிக்கயலைக்
கண்டே வெருவிக் கயல்மறுகக்
கனகவெயில்மா ளிகையுடுத்துக்
ககனம் தடவுங் கோபுரத்தைக்
கருதி வடவெற் பெனக்கதிரோன்
திண்தேர் மறுகுந் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ.

(அ - ரை.) தாமம் - பூமாலை, செறித்த - செறிப்பையுடைய. குழற்பாரம் - கூந்தற்சுமை, மருங்குல் - இடை. குடிவாங்க - குடியிருப்பில்லாமற்போக, இற்றுப்போக. மறுக - கலங்க. ககனம் - விண். (உ௩)

பாம்பால் உததி தனைக்கடைந்து
படரும் கொடுங்கார் சொரிமழைக்குப்
பரிய வரையைக் குடைகவித்துப்
பசுக்கள் வெருவிப் பதருமற்
காம்பால் இசையின் தொனியழைத்துக்
கதறுந் தமரக் காளிந்திக்
கரையில் நிரைப்பின் னேநடந்த
கண்ணன் மருகா முகையுடைக்கும்
பூம்பா சடைப்பங் கயத்தடத்திற்
புனிற்றுக்கவரி முலைநெரித்துப்
பொழியும் அமுதந் தனைக்கண்டு
புனலைப் பிரித்துப் பேட்டெகினந்
தீம்பால் பருகுந் திருச்செந்தூர்ச்
செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம் புணர்ந்த
சிறுவா தாலோ தாலேலோ.

(அ - ரை.) உததி - கடல். படரும் - விரியும். பரியவரை - பெரிய கோவர்த்தன மலை. பதருமல் - நடுங்காமல். காம்பால் - மூங்கிற் குழலால். காளிந்தி - யமுனையாறு. நிரை - பசுக் கூட்டம். அடை - இலை. புனிற்றுக்கவரி - இளமையுடைய எருமைகள். நெரித்து - கட்டுவிட்டு. பேட்டெகினம் பெட்டையன்னம். தீம் பால் பருகும் - இனிய பாலைக் குடிக்கும். தெய்வக் களிறு - தெய்வ யானையம்மை. (உ௪)

## வேறு

மங்கல மங்கலநூல் எங்குமொ ழிந்தனர்காண்
வானோர் ஏனோர்போய்
வந்துவ ணங்கினர்மேல் அந்தர துந்துபிகேள்
வாரு டாடாதே
கொங்கைசு மந்திடைநூ லஞ்சும் அணங்கனையார்
கூடா கூடாரோ
கொண்டவ ரந்தருவாய் அண்டர்பெ ருந்தவமே
கோமான் ஆமாநீ

செங்கம லந்தனிலே பைங்குமு தங்களிலே
சேல்பாய் வானுடா
தென்றலு டன்றமிழ்தேர் தென்பொதி யம்பயில்
தேனுர் தார்மார்பா [வாழ்

சங்குவ லம்புரிசூழ் செந்தில்வ ளம்பதியாய்
தாலோ தாலேலோ
சங்கரி தன்குமரா மங்கையர் தங்கணவா
தாலோ தாலேலோ.

(அ - ரை.) மங்கலம் - சுபம். அந்தர துந்துபி - தேவ வாத்தியம். வார் - கச்சு. ஊடாரோ - ஊடல் செய்யமாட்டாரோ. கோமான் ஆமா - தலைவன் ஆகுமா. தேன்ஆர் - தேன்பொருந்திய. சங்கரி - உமை. (உ௫)

வேறு

மரகத வடிவம் செங்கதிர் வெயிலால்
வாகாய் வாடாதோ
மதிமுக முதுந் தண்துளி தரவே
வார்வேர் சோராதோ

கரமலர் அணைதந் தின்புறு மடவார்
காணு தேபோமோ
கனமணி குலவுங் குண்டலம் அரைஞா
ணோடே போனல்வார்

பொருமிய முலையுந் தந்திட வுடனே
தாய்மார் தேடாரோ
புரவலர் எவருங் கண்டடி தொழுவார்
போதாய் போதாநீள்

சரவண மருவுந் தண்டமிழ் முருகா
தாலோ தாலேலோ
சதுமறை பரவுஞ் செந்திலை யுடையாய்
தாலோ தாலேலோ.

(அ - ரை.) மரகதம் - பச்சை, வாகாய் ஒழுங்காய். வார்வேர் - நீண்ட வேர்வை, வேர்: முதனிலைத் தொழிற்பெயர்.

கரமலர் - கைத்தாமரை. மடவார் - இளம் பெண்டிர். மடம் - அழகுமாம். அரைஞாண் - அரைநாண், ஞாண் என்பது நாண் என்பதன் போலி. பொருமிய - விம்மிய. போதாய் - வருவாய். போது - விரியுந் தருணப் பூ. (உசு)

## வேறு

கூருமிகல் சாய்த்த வீரா தீரா தார்மார்பா
கூறுமியல் பார்த்துன் மேலே யாரார் பாடாதார்

மேருவரை நாட்டு வாழ்வார் வாறு டாள்வார்போல்
வேளையென மீட்டுன் மேலே வீழ்வார் சூழ்வார்பார்

ஆருமிரை பார்த்து நீள்நீ ரூடே தாராமே
யானகழி நீக்கி மேலே நாவா யோடேசேல்

சேருமலை வாய்க்கு நாதா தாலோ தாலேலோ
தேவர்சிறை மீட்ட தேவா தாலோ தாலேலோ.

(அ - ரை.) கூரும்இகல் - மிகும்போர். சாய்த்த - அழித்த, இயல் - நன்மை, மேருவரைநாடு - பாண்டி நாடு; பாண்டியனொருவன் மீனக் கொடியை மேருமலையிலே நாட்டி அரசாண்டதனாலே பாண்டி நாடு மேருமலை நாடெனப்பட்டது. ஆரும் - உண்ணும். தாரா - பறவை. மேயான - மேய்தலான. கழி - உவர்நீர் நிலம். நாவாய் - கப்பல். (உஎ)

## வேறு

அரைவடமுந் தண்டையும் மின்புரை யரைமணியுங்
கிண்கிணி யுங்கல னணியு மாறு வீறார்சீர்
அறுமுகமுந் தொங்கல் சுமந்தபன் னிருகரமுங்
குண்டல முங்குழை யழகும் ஆரார் பாராதார்

விரைபொரு மென்குஞ்சி அலம்பிய புழுதியுமங்
கங்குழை பண்டியு மெலியு மேலே வீழ்வார்பார்
வெகுளி தழுங் கொண்டு தவழ்ந்திடில் அவரவர்தங்
கண்கள் படும்பிழை விளையு மேதே னேகாதே

வரைமணியுந் தங்கமும் ஒன்றிய கனபரியங்
கந்தனில் இன்றுகண் வளர வாராய், வாழ்வேநீ
மணிநகையுங் கொண்டு துயின்றிலை விரலமுதங்
கொண்டுகிடந்தனை மதுரமாய்நீ பேசாயோ

திரைபொருதென் செந்தில் வளம்பதி வளரவருங்
கந்தசிவன்பெறு சிறுவா தாலோ தாலேலோ
திசைமுகனுஞ் சங்கரி புஞ்சது மறையும்இறைஞ்
சும்பரை அம்பிகைசிறுவா தாலோ தாலேலோ.

(அ - ரை.) அரைவடம் - அரைநாண். மின்புரை - மின்னலை ஒத்த. வீறுஆர் - பெருமை பொருந்திய. தொங்கல் - மாலை. விரை - மணம். பண்டியும் - வயிறும். பொரு - பொருந்தும். புழுதி - தூசி. அலம்பிய - கழுவிய. குஞ்சி - குடுமி. வீழ்தல் - விரும்புதல். படும்பிழை - உண்டாகுங்குற்றம். ஏதேன் ஏகாது - ஏதேனும் நீங்கமாட்டாது. கனபரியங்கம் - மேன்மையான கட்டில். திசைமுகன் - பிரமன், நான்முகன். (உஅ)

### வேறு

அரவுசிறு பிறைஇதழி திரிபதகை பொதிசடிலர்
பாலா வேலாதேர்
அருணவெயில்இரவிசுழல் இமகிரியில் அரிவைபெறு
வாழ்வாய் வாழ்வோனே
குரவருள மகிழஉயர் குருவடிவு தருபெருமை
கோடாய் தாடாளா
குமரகுரு பரமுருக குதலைமொழி தெரியவுரை
கூறாய் மாறாதே
இரவலரும் முனிவர்களும் இமையவரும் உனதடிமை
ஆமே ஆமேநீ
எமைமுனியில் ஒருதுணையும் இலையடிமை யடிமை
வீழ்வார் சூழ்வார்பார் [யெண
பரசமய குலகலக சிவசமய குலதிலக
தாலோ தாலேலோ
பணிலம்உமிழ் மணியையலை யெறியுநகர் வருகடவுள்
தாலோ தாலேலோ.

(அ - ரை.) இதழி - கொன்றை; திரிபதகை - கங்கை. இரவி சுழல் - சூரியன் சூழ்கின்ற. இமகிரி அரிவை - இமயமலை யரசன் பெற்ற பார்வதி. குரவர் - பெற்ற மாதாபிதாக்கள். கோடாய் - கோணுதலில்லாதவனே! தாள் தாளா! - முயற்சி யுள்ளவனே! குதலை - மழலை மொழி. இரவலர் - யாசகர். முனி யில் - கோபிக்கில். மணி - முத்து, பணிலம் - சங்கு. (உகூ)

## வேறு

பங்கயன் முதலோர் இந்திரன் இமையோர்
பாரோர் ஏனோர்பார்
பண்புடன் உனையே சிந்தையின் இனைவார்
பால்நீ மால்கூருய்

வெங்கட கரிசூ ழெண்திசை நிறைவார்
வீணுள் காணுதே
மின்பரி புரதாள் பொன்புரை முடிமேல்
வேய்வார் வீருலே

செங்கனி மணிவாய் தங்கிய நகைதா
தேவா சீருதே
திண்திறல் முருகா தண்டமிழ் விரகா
சேரார் போரேறே

சங்கரி மருகா சங்கர் சிறுவா
தாலோ தாலேலோ
சந்ததம் இயல்தேர் செந்திலை உடையாய்
தாலோ தாலேலோ.

(அ - ரை.) பங்கயன் - பிரமன், மால்கூராய் - ஆசைப் படாய். கூர்வாய் என்பது பாடமாயின் ஆசைப்படுவாய் என்க. வீணுள் - வீண்நாள்; பயனற்றநாள். காணுதே - காணுமல். பொன் புரை - பொன்னை ஒத்த. வேய்வார் - சூடுவார். சீருதே - கோபி யாமலிரு. சங்கரி மருகா - சங்கைக் கையிற்கொண்ட திருமாலின் மருகனே! சங்கரி - சங்கரன் மனைவியாகிய உமாதேவி. இயல் தேர் - தமிழை ஆராய்கின்ற. (௩௦)

## ௪. சப்பாணிப்பருவம்

பரவரிய நவமணி அழுத்துகல னுக்கழகு
பாலித்து வீறு பெற்ற
பன்னிரு புயங்களுங் காமல்நீள் குழைதொறும்
பருவயிர குண்ட லங்கள்

இரவியொளி மட்கவின் றசையாமல் அழுதொழுகு
இந்துமுக மண்ட லத்தில்
எழுதரிய திருநுதற் புண்டரங் குறுவெயர்
விறைக்கச் சிதைந்தி டாமல்

கரகமல மலர்விரல் சிவப்புரு மல்கடக
கங்கணம் ஒலித்தி டாமல்
கழிவண் டலம்புங் கருங்குவளை ஓடைசூழ்
கழிதொறுங் கானல் தோறுந்

தரளமுழு மணிநிலவு தருசெந்தில் வேலவா
சப்பாணி கொட்டி யருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) பரவரிய - புகழ்தற்கருமையான. கலன் - அணி. குழை - காது. மட்க - மழுங்க. இந்துமுக மண்டலம் - சந்திரன் போன்ற முகவட்டம். புண்டரம் - திருநீற்றின் முக்கீற்றுத் தொகுதி. குறுவெயர்வு - சிறு வேர்வை. கரகமல மலர் - கையாகிய தாமரைப் பூ. கடக கங்கணம் - கையணி: மீமிசை மொழி. கானல் - கடற்கரைச் சோலை, சமரமுகம் - யுத்தகளம், ரணவீர - பகைவர்க்குப் புண்செய்யும் வீரனே, திமிராரி - இருளைக் கெடுப்பவன், சப்பாணி - இரண்டு கையுங் கூட்டி, (௧௧)

அண்டர் தந் துயரொழித் தனமென்று கொண்டாடி
ஆவலங் கொட்ட மன்னும்
அயிராணி கலவியமு துண்டனம் எனத்தேவர்
அரசிரு கரங்கள் கொட்டத்

துண்டவெண் பிறைபுரை எயிற்றுவெஞ் சூருளந்
துண்ணெனப் பறைகொட் டநீள்
சுருதியந் தணர்இடந் தொறுமங் கலப்பெருந்
தூரியங் கொட்ட முட்டப்

பண்டரு பெருங்கவிப் புலமைக்கு நீசொன்ன
படிதிண்டி மங்கொட் டவெம்
பகைநிசா சரர்வளம் பதிமுழுது நெய்தலம்
பறைகொட்ட வெள்வளை தருந்

தண்தரள மலைமொண்டு கொட்டுநக ராதிபா
சப்பாணி கொட்டி யருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) ஆவலங் கொட்டுதல் - வாயால் துதித்து விளையாடல். வெம்சூர் - கொடிய சூரன். பறைகொட்ட - பதைக்க. தூரியம் - வாச்சியம். திண்டிமம் - தம்பட்டம். நிசாசரர்-அசுரர். நெய்தலம் பறை - நெய்தல் நிலத்து வாச்சியம்; சாப்பறை. நகராதிபா - திருச்செந்தூர்த் தலைவனே. (கூஉ)

பௌவமெறி கடலாடை உலகிலொரு வேடுவன்
பறவைக்கு நிறைபு குந்த
பார்த்திவன் பாவையும் இயற்குலச் சிறையும்
பணித்தருள மதுரை புக்குத்

தெவ்வரிடு திருமடத் தெரிசெழிய னுடலூறச்
சென்றுபற் றலும் எவர்க்குந்
தீராத வடவையனல் வெப்புமுது கூனுந்
திருத்தியொரு வாது வென்று

வெவ்வழலில் எழுதியிடும் ஏடும் பெருக்காற்று
விட்டதமி ழேடும் ஒக்க
வேகாம லெதிரே குடக்கேற வெங்கழுவில்
வெய்யசமண் மூகர் ஏறச்

சைவநெறிஈடேற வருகவுணி யக்குழவி
சப்பாணி கொட்டி யருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) பௌவம்-உப்புடைய. கடலாடை - கடலாகிய உடை. பறவை - புறா. பார்த்திபன் - சிபிச்சக்கரவர்த்தி. நிறை - துலாத்தட்டு. சோழ மன்னனாகிய சிபி யாகம் செய்த காலத்தில் இவன் உத்தம குணத்தைப் பரீட்சிக்க விரும்பிய, இந்திரன் பருந்தாகவும், அக்கினி புறாவாகவும் வடிவுற்று, பருந்து புறாவைத் துரத்தப் புறா சிபியிடம் அடைக்கலம் புகுந்தது. பருந்து புறாவைத் தன்னிடம் கொடுக்கும்படி பன்முறை வேண்டியும் இசையாமல் அடைக்கலப் பொருளுக்கு ஈடாகத் தன் உடலின் தசையை அறுத்துத் தராசில் வைக்கவும் சமமாகாமை கண்டு தானே தராசில் ஏறினன். இவ்வருமை கண்ட இந்திரனாகிய பருந்தும், மகிழ்ந்து வாழ்த்திப் புறாவும் சென்றது. இவன் குலத்துப் பாவை மங்கையர்க்கரசி. இவர் மதுரைக் கூன்பாண்டியனை மணந்து தம்முடன் வந்து குலச்சிறை நாயனார் என்னும் மந்திரியுடன், திருஞான சம்பந்தர் திருவருளால் பாண்டிய நாட்டை மூடியிருந்த சமணிருளை ஓட்டி அரசனையும், நாட்டாரையும் சைவ சமயந் தழுவச் செய்தவர். தெவ்வர் - பகைவராகிய சமணர். எரி-தீக்கொடுமை. செழியன் - பாண்டியன். முதுகூன் - முதிர்ந்த கூனல். குடக்கு - மேற்கு. மூகர் - ஊமையர். இவ்வடிகளில் கவுணியக் குழந்தையாகிய திருஞானசம்பந்தர் பாண்டியன் சுரநோய் தீர்த்த பின் அமணர் விருப்பப்படி அனல் வாதமும், புனல் வாதமும் புரிந்து வெற்றி கண்டு அமணர் சொற்படி அவர்களே கழுவேறும்படி செய்தனர் என்னும் வரலாறு குறிக்கப்படுவதாம். (௫௩

பைந்தாள தழைச்சிறைக் கானவா ரணமருவு
பந்தரிடு முல்லை வேலி
பாயுமுட் பணைமருப் பேறுதழு வியுமுடைப்
பாலரு மேனி மடவார்
கொந்தார் குரும்பைஇள வனமுலை முகக்கோடு
குத்தக் குருந்தொசித்துங்
குறுங்கழைத் துண்டந் தனில்சிறு துளைக்கருவி
குன்றுருக நின்றழைக்குங்

செந்தா மரைக்கைவிரல் கொடுபுதைத் துஞ்சுருதி
தெரியவிரல் முறையில் விட்டுந்
தேனுவின் பிறகே திரிந்துங் கவுட்குழி
திறந்துமத மாரி சிந்துந்

தந்தா வளந்தனக் குதவுதிரு மால்மருக
சப்பாணி கொட்டி யருளே
தரளமெறி கரையில்வளை தவழ்செந்தில் வேலவா
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை,) கானவாரணம் - காட்டுக்கோழி. முல்லைவேலி - முல்லைக்கொடியாகிய வேலி. பணைமருப்பு - பருத்த கொம்புகள். முடைப்பால் அரு மேனி மடவார் - கொச்சை வீசும் பால்மணம் நீங்காத உடம்புடைய இடைச்சியர். கொந்து-குலை, கொத்து. ஓசித்தும் - ஒடித்தும். கழை - மூங்கில். சுருதி தெரிய - இராகத்தின் ஒலி வெளிப்பட. தேனு-பசுக்கள். கவுள் - கன்னம். தந்தா வளம் - யானை; கசேந்திரன். (கூச)

கார்கொண்ட பேரண்ட கூடமோ ரேழுநீ
கற்பிக்கு மந்த்ர சாலை
கற்பதா ருவுநின் புயத்தினுக் கணிமாலை
கட்டவளர் நந்தன வனஞ்

சீர்கொண்ட புருகூத னுந்தேவர் குழுவுநின்
திருநாம மறவா தபேர்
சிகரகன காசலமும் உனதுதிரு வாபரண
சேர்வைசேர் பேழை கடல்நீர்

பேர்கொண்ட வேலின் புலால்கழுவு நீரேழு
பொழிலுமத் தனைதீ வுமோர்
பொலிவினுட னேநின் கலாபமயில் வையாளி
போய்மீளும் வீதி யெனவே

தார்கொண்ட மணிமார்ப செந்தில்வடி வேலனே
சப்பாணி கொட்டி யருளே
தரளமெறி கரையில்வளை தவழ்செந்தில் வேலவா
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) கார்கொண்ட - மேகங்களாற் சூழப்பட்ட. சாலை - கூடம், இடம். கற்பதாரு - கற்பகவிருட்சம். நந்தனவனம் - பூந்தோட்டம். குழு - கூட்டம், சிகரம் - குடுமி. கனகாசலம் - பொன்மலை. பேழை - பெட்டி. புலால் - மாமிசம். பொழில் - உலகம், பொலிவு - பிரகாசம்; தோற்றம். வையாளி - குதிரை நடந்துபோம் வழி. (௯௫)

கவளமத வெற்புநிலை உலகுபர வப்ரபைகொள்
கைத்தா மரைக் கடகபூண்
கதிரொளி விரிக்கவளர் சிகையினிடு சுட்டிமிசை
கட்டாணி முத்தொ ளிரவே
பவள இதழ் புத்தமுதம் ஒழுகுமத லைக்குதலை
பற்பாதி சொற்றெ ரியவே
பரிபுரம் ஒலிக்கவரு குறுநகை யெழுப்பியிடு
பைச்சேடன் உச்சி குழிபாய்
உவளகம் அணைத்துமின வரிவளை முழக்கவெடி
யுற்றேபெ ருத்த கயல்போய்
ஒருபுடை குதிக்கவரி யலவனளை யிற்புகுத
உப்பூறு நெட்ட கழிதோய்
தவளமணி முத்தையலை எறியுநக ருக்கதிப
சப்பாணி கொட்டி யருளே
சருவிய புறச்சமய விரதியர் குலக்கலக
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) மதவெற்பு - யானை, நிலையுலகு - நிற்றலையுடைய பூமியுளுள்ளார். ஆணி முத்து - முதன்மையான முத்து. குறுநகையெழுப்பி - புன்சிரிப்புச் செய்து. பை - படம். உவளகம் - அகழி. அளை - சேற்றின் குழி. சருவிய - அணுகிய, நெருங்கிய. (௯௬)

வேறு

கருதிய தமனிய மணியரை வடமிடு
கட்டுவ டத்தோடுங்
கழலிடு பரிபுரம் ஒலியெழ மணியுமிழ்
கைக்கட கப்பூணும்

இருசுட ரொளிபெற மருவிய தளர்நடை
யிட்டும திப்பாக
எழுமதி புரைதிரு முகமலர் குறுவெயர்
இட்டுவ ரத்தாமஞ்

சொருகிய நறுமலர் முகையவிழ் சிகையிடு
சுட்டிநு தற்றுழத்
தொழுதுனை வழிபடும் அடியவர் இளையவர்
சொற்படி தப்பாமற்

குருமணி யலையெறி திருநக ரதிபதி
கொட்டுக சப்பாணி
குருபர சரவண பவசிவ மழவிடை
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) தமனியம்-பொன். கழல்-திருவடி: தானியாகு பெயர். மருவிய-பொருந்திய. தளர்நடையிட்டு-தடுமாற்றமாக நடந்து. தாமம்-கடப்பமாலை. குரு-நிறம். மழவிடை. இளமையுடைய இடபம் போல்பவனே. (கஎ)

### வேறு

வரைபுரை புயமிசை இடுதொடி அணிகலன்
மற்றுள முத்தார
மணிமுடி குழையிடும் இருசிகை யழகெழ
மைக்குவ ளைப்போதின்

விரைசெறி குழலியர் செவிலியர் அவரவர்
மிக்கவி ருப்பானர்
விபுதரு முனிவரும் உனதடி பரவியுன்
வெற்றியு ரைப்பார்சிர்

அரைமணி யுடைமணி கணகண கணவென்
அத்திமு கத்தோனும்
அரிபிர மனுமுமை கணவனும் மனமகிழ்
அற்புவி ளைத்தார்பார்

குரைகடல் அலையெறி திருநக ரதிபதி
கொட்டுக சப்பாணி
குருபர சரவண பவசிவ மழவிடை
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) தொடி - தோள்வளை. விரைசெறி - வாசனை நெருங்கிய. விபுதர் - தேவர். உடைமணி - மேகலாபரணத்திற் கோத்த மணி. அத்திமுகத்தோன் - யானைமுகம் உடையோன். அற்பு - அன்பு. (௩அ)

வேறு

கந்தத் தகட்டினர விந்தத் தனிக்கடவுள்
கற்பா யெனச்சுருதி நூல்
கண்டித் துரைத்திடவும் இந்தக் கரத்திலுரை
கற்பா லுரைத்தி யெனவே
அந்தப் பொருட்பகுதி அந்தத் தினைப்பகரும்
அபபோ வெறுத்து முனிவாய்
அஞ்சத் திருக்குமயன் அஞ்சச் சிறைக்குளிடும்
அப்பா சிறக்கும் அமலா
பந்தப் பிறப்பொழிய வந்தித் திருக்குமவர்
பற்றுக நிற்கு முதல்வா
பண்டைக் குடத்திலுறு முண்டச் சிறுத்தமுனி
பற்றுசை யுற்று மிகவாழ்
சந்தப் பொருப்பிறைவ செந்திற் பதிக்குமர
சப்பாணி கொட்டி யருளே
சங்கத் தமிழ்ப்புலவ துங்கக் கொடைக்குமர
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) கந்தம் - வாசனை. இந்தக்கரத்தில் - இந்தப் பிரணவ எழுத்தில். உரை கற்பால்-பொருளைப் படித்தவிதத்தால். அந்தம் - முடிவு. அஞ்சத்து இருக்கும் அயன்-அன்ன ஊர்தியில் அமரும் பிரமன். அமலன் - குற்றமற்றவன். பந்தம் - பாசம். சிறுமுனி - அகத்தியமுனி, குறுமுனி. சந்தப் பொருப்பு - சந்தனமலை, பொதிகைமலை. துங்கம் - உயர்ச்சி. (௩௯)

முதுமொழி நினைவுதெ ரிந்த நாவலர்
முட்டா துனைப்பு கழவே
முளரியில் மருவியி ருந்த நான்முகன்
முக்கா லுமிச்சை சொலவே

புதுமலர் சிதறிம கிழ்ந்து வானவர்
பொற்று வினைப்ப ரவவே
புகலரும் இசைதெரி தும்பு ராதியர்
புக்கா தரித்து வரவே

மதுகரம் இடறிய தொங்கல் மாலிகை
மற்பூர ரத்த சையவே
மணியொளி வயிரம் அலம்பு தோள்வளை
மட்டாய் நெருக்கம் உறவே

சதுமறை முனிவர்கள் தங்கள் நாயக
சப்பாணி கொட்டி யருளே
சரவண பவகுக செந்தில் வேலவ
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) நாவலர் - நாவன்மையுடையவர். **முளரி** - தாமரை; முள்ளையுடைய தண்டையுடையது. **ஆதரித்து** - விரும்பி. மதுகரம் - வண்டு; தேனைச் சேர்ப்பது. **மல்பூதரம்**- மற்போர் செய்கின்ற தோளாகிய மலை. மட்டு - அளவு. (சo)

## ரு. முத்தப்பருவம்

கத்தும் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்திற்
கான்ற மணிக்கு விலையுண்டு

தத்துங் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளந் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்

கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலந்தனக்குக்
கூறுந் தரமுண் டுன்கனிவாய்

முத்தந் தனக்கு விலை இல்லை
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே.

(அ - ரை.) கத்தும் - முழங்கும். தரங்கம் - அலை. கடுஞ்சூல் - கடுமையான கருப்பம். உளைந்து - வருந்தி. வாலுகம் - வெண்மணல். கான்ற மணி - சொரிந்த முத்து. கரடம் - மதம். விகடம் - விகடக் கூத்து, உன்மத்தமுமாம். தடம் - மலை, தந்திப் பிறைக்கூன் மருப்பு - யானையின் பிறைச்சந்திரன்போல் வளைந்திருக்கின்ற கொம்பு. தரளம் - முத்து, சாலி - நெல், கொண்டல் - மேகம். நித்திலம் - முத்து. கனிவாய் முத்தம் - கொவ்வைக் கனிபோன்ற வாயின் முத்தம். (சுக)

வளைக்குந் தமரக் கருங்கடலின்
வளைவாய் உகுத்த மணிமுத்துன்
வடிவேற் கறைபட் டுடல்கறுத்து
மாசு படைத்த மணிமுத்தம்

துளைக்குங் கழையிற் பருமுத்தம்
துளபத் தொடைமால் இதழ்பருகித்
தூற்றுந் திவலை தெறித்தமுத்தம்
சுரக்கும் புயலிற் சொரிமுத்தம்

திளைக்குங் கவன மயிற்சிறையிற்
சிறுதாட் பொதிந்த குறுமுத்தஞ்
செந்நெல் முத்தங் கடைசியர்கால்
தேய்த்த முத்தஞ் செழுந்தண்தேன்

முளைக்குங் குமுதக் கனிவாயான்
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே.

(அ - ரை.) தமரம் - ஒலி. வளை சங்கு. கறை - களங்கம், கறுப்பு. மாசு - அழுக்கு, துளைக்குங் கழை - துளைக்கப்படும் மூங்கில், துளபத்தொடை மால் - துளசி மாலையணிந்த திருமால், திவலை - துளி. திளைக்கும் - நெருங்கும், கவனம் - வேகம். குமுதம்-ஆம்பல். (சஉ)

கலைப்பால் குறைத்த பிறைமுடிக்குங்
கடவுள் உடலின் விளைபோகங்
கனலி கரத்தில் அளிக்க அந்தக்
கனலி பொறுக்க மாட்டாமல்

மலைப்பால் விளங்குஞ் சரவணத்தில்
வந்து புகுத ஓராறு
மடவார் வயிறு சூலுளைந்து
மைந்தர் அறுவர்ப் பயந்தெடுப்பக்

கொலைப்பால் விளங்கும் பரசுதரன்
குன்றி லவரைக் கொடுசெல்லக்
கூட்டி அணைத்துச் சேரவொரு
கோலம் ஆக்கிக் கவுரிதிரு

முலைப்பால் குடித்த கனிவாயால்
முருகா முத்தம் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தம் தருகவே.

(அ - ரை.) கலைப்பால் - கலையின் பகுதி. போகம் - இன்பமாகிய அக்கினிப் பொறி, கனலி - அக்கினி தேவன். மலைப்பால்-மலையின் பக்கம், பயந்து - பெற்று, பரசுதரன் - மழுப்படையுனை சிவபெருமான். கொலைபால் - கொலைக்கூறு- கோலம் - வடிவம் ; இவ்வடிவு கந்தன் என்று அழைக்கப்படும்; கந்தன் - சேர்க்கப்பட்டவன், கவுரி - உமை, (சந)

கத்துங் கடலில் நெடும் படவில்
கழியில் சுழியில் கழுநீரில்
கானற் கரையில் கரைதிகழுங்
கைதைப் பொதும்பில் சுரும்பினங்கள்

தத்துங் கமலப் பசும்பொகுட்டிற்
சாலிக் குலையில் சாலடியில்
தழைக்குங் கதலி அடிமடலில்
தழைவைத் துழுத முதுகுரம்பைக்

குத்துந் தரங்கப் புனற்கவரில்
குவளைத் தடத்தின் மடைவாயில்
குடக்கூன் சிறுமுட் பணிலமொரு
கோடி கோடி யீற்றுளைந்து

முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முருகா முத்தந் தருகவே
மொழியுஞ் சமயம் அனைத்தினுக்கு
முதல்வா முத்தந் தருகவே.

(அ - ரை.) படவு - தோணி. கைதைப் பொதும்பு - தாழஞ்சோலை. சாலிக்குலை - நெற்கதிர். சாலடியில் - உழுசால் சென்ற வழியில். குரம்பை-வரம்பை, குவளைக்குளம்-குவளைக் குளத்தில். ஈற்றுளைந்து - ஈற்றுல் வருந்தி; கருவுயிர்த்து. (சச)

வயலும் செறிந்த கதலிவன
மாடம் செறிந்த கதலிவன
மலர்க்கா வெங்குந் தேனினிரை
மாலை தோறுந் தேனினிரை

புயலுஞ் செறிந்த கனகவெயிற்
புடையே பரந்த கனகவெயில்
பொதும்பர் தோறு மோதிமமென்
புளினந் தோறு மோதிமஞ்செங்

கயலுஞ் செறிந்த கட்கடையார்
கலவி தரும்போர் கட்கடையாா
கருணை புரியும் அடியாருன்
காதல் புரியும் அடியார்சீர்

முயலும் படிவாழ் திருச்செந்தூர்
முருகா முத்தந் தருகவே
மொழியுஞ் சமயம் அனைத்தினுக்கு
முதல்வா முத்தந் தருகவே.

(அ - ரை.) கதலிவனம்:—(1) வாழைச்சோலை, (2) கொடிக் கூட்டம். தேனின் நிரை :—(1) மது வரிசை, (2) வண்டினம். கனக வெயில் (1) கல்நக எயில், கல் மலையாகிய மதில், (2) பொற்கிரணம், பொதும்பர் - சோலை. புளினம் தோறும் - மணற் குன்றெங்கும் அன்னப்பறவை. கட்கடையார் (1) கடைக்கண்க ளுடைய பெண்டிர், (2) போர்கட்கடையார் - யுத்தத்திற்கு நெருங் கார். அடியார் - தொண்டர், சீர் - புகழ், கீர்த்தி. (சஇ)

தெர்ழுதும் துதித்தும் துயரகற்றிச்
சுரருக் கிறையுஞ் சுரருமுடன்
சூழ்ந்த கடம்பா டவியிலுறை
சொக்கக் கடவுள் தனையூன்று

பொழுதும் பரவி எழுத்துச்சொற்
போலப் பொருளும் புகறியெனப்
புகலு மாறஞ் சிரட்டிதிணைப்
பொருட்கூத் திரத்தின் பொருள்மயங்கா

தெழுதும் பனுவற் பரணன்முதல்
ஏழேழ் பெருமைக் கவிப்புலவர்
இதயங் களிக்க விருப்பமுடன்
இறையோன் பொருட்குப் பொருள்விரித்து

முழுதும் பகர்ந்த கனிவாயான்
முருகா முத்தந் தருகவே
மொழியுஞ் சமயம் அனைத்தினுக்கு
முதல்வா முத்தந் தருகவே.

(அ - ரை.) சுரருக்கிறை - இந்திரன், சுரர் - தேவர், கடம் பாடவி - கடம்பமரக்காடு. சொக்கக் கடவுள் - சொக்கலிங்கம். சொக்கு-பேரழகு. புகறி-புகல்வாய். ஆறு அஞ்சிரட்டி-அறுபது. திணைப்பொருள் - அகத்திணைப் பொருள்; இஃது இறையனாரால் செய்யப்பெற்ற அகப்பொருள் நூல், ஏழேழ் புலவர் - கடைச் சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர்.

பொருள் விரித்து முழுதும் பகர்ந்த கனிவாயால் - உருத்திர சன்மராய்த் தலைமை தாங்கிப் புலவர் கூறும் பொருளுரை கேட்டுச் சிறந்ததிதுவெனக் கூறிய கனி போன்ற வாயால். (சசு)

## வேறு

கடுந டைச்சிந் துரம ருப்பின்
கதிர்கொள் முத்துஞ் சரவைநீள்
கடல ளிக்கும் பணில முத்தும்
கழையின் முத்தும் கரடுவான்

உடுமு கட்டம் புயல்க ருக்கொண்
டுமிழு முத்தம் கருகல்தேன்
ஒழுகு பொறபங் கயம டல்தந்
தொளிரு முத்தந் திருகல்காண்

படுக ரைக்குண் டகழி நத்தின்
பரிய முத்தந் தெரியவே
பரவை யெற்றுந் திரைகொ ழிக்கும்
படியில் முத்தஞ் சிறுமகார்

கொடுப ரப்பும் பதிபு ரக்குங்
குமர முத்தம் தருகவே
குறுமு ,ளிக்குந் தமிழு ரைக்குங்
குழவி முத்தம் தருகவே.

(அ - ரை.) சிந்துரம் - யானை. கதிர் - ஒளி. சரவை-அற்பம். அம் புயல் - அழகிய மேகம். கருகல் - கருகலாகிய குற்றம். பங்கயம் - தாமரை. நத்து - சங்கு. பரவை - கடல். பரங் திருப்பது. (சஎ)

பருவ முற்றுங் குடவ யிற்றொண்
பணிலம் மொய்க்குந் துறையெலாம்
பருமு ரட்செங் கயல்கு திக்கும்
பலப டத்தெண் திரைமுநீர்
பொருது குத்துந் திடரனைத்தும்
புறவு மொய்க்கும் புறவுசேர்
புளின வெற்பெங் கணுநி ரைக்கும்
புளின மொய்க்கும் குவளைவாய்
அரும டற்கண் டினமெ னச்சென்
றளிகள் மொய்க்கும் புதியசூல்
அலவன் மொய்க்குங் குழிவ ழிச்சென்
றலைகொ ழிக்குங் கரையெலாங்
குருகு மொய்க்கும் பதிபு ரக்குங்
குமர முத்தம் தருகவே
குறுமு ளிக்குந் தமிழு ரைக்குங்
குழவி முத்தம் தருகவே.

(அ - ரை.) பணிலம் - சங்கு. முரண் - வலிமை. புறவு - புறு; காடு. குறியதன்கீழ் ஆ குறுகி உகரம் பெற்றது. புளினம்- மணற்குன்று; பறவைக் கூட்டம். குவளை - கருங்குவளை; அதனை கருநிறத்தைத் தன் இனமெனக் கருதி வண்டுகள் மொய்த்தன வென்க. குருகு - நீர்வாழ் பறவை. பதி - ஈண்டுத் திருச்செந் தூர். குழவி - இளம்பருவ முருகப்பெருமான்: அண்மைவிளி இயல்பாயிற்று. (சஅ)

**வேறு**

பையரவின் உச்சிகுழி யப்பொருங் குண்டகட்
படுகடற் பணிலமுத்தம்
பார்வையா னுஞ்சிறிது பாரோம் இதன்றிப்
பசுங்கழை வெடித்த முத்தஞ்
செய்யசிந் தையினுமிது வேணுமென் றொருபொழுது
சிந்தியோ முத்தி வட்டத்
திரைமுழங் கக்கொழுந் திங்கள்வட் டக்குடைச்
செழுநிழற் சம்ப ராரி
எய்யுமலர் வாளியை எடுத்துத் தெரிந்துநாண்
இறுகப் பிணித்த வல்வில்
ஈன்றகுளிர் முத்தத்தை முத்தமென் றணுகோம்
இதழ்க் கமல முகையு டைக்குந்
துய்யமணி முத்தந் தனைத்தொடோம் உன்னுடைய
துகிரில்விளை முத்த மருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்விளை முத்த மருளே.

(அ - ரை,) பை அரவு-படத்தையுடைய பாம்பு, ஆதிசேடன். குண்டகட்படு - குண்டு. அகழ்படு : ஆழமாகத் தோண்டுதல் பொருந்திய. சம்பராரி - மன்மதன். பிணித்த வல்வில் - கட்டிய வலிய வில்லாகிய கரும்பு. துகிரில் - பவளம் போன்ற வாயில். மேகாரம் - மயில். (சக)

இறுகல்கரு குதல்முரிவி லட்சுமி புடாயமுள்
ளேறல்புகை யேறல் செம்மண்
ஏறல்வெச் சந்திருகல் மத்தகக் குழிவன்றி
இரவியொளி யிற்க ரத்தல்
மறுவ்று தகட்டிலோ ரத்திலுயர் தூக்கத்தின்
மன்னுமா தளைக விர்ப்பூ
மாந்தளிர் முயற்குருதி செவ்வரத் தங்கோப
மருவுமணி வகைய ளிப்பேர்

முறுகல்வளி யேறல்கல் வேறல்சிப் பிப்பத்து
முரிதல்திரு குதல்சி வப்பு
முருந்திற் குருத்துச் செருந்துருவி யிடையாடி
மூரிகுதை வடிவொ துங்கல்
துறுமுகங் கக்கலொளி மட்கல்கர டென்னுத
துகிரில்வினை முத்தம் அருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்வினை முத்தம் அருளே.

(அ - ரை.) இறுகல் - உள்ளொடுங்குதல். இப்பாடற்கண் மாணிக்கமணியின் குற்றங்களையெல்லாம் எடுத்துக்காட்டி, இதழின் நிறம் மாணிக்கம் போன்ற செந்நிறத்ததாகலின், அதைப் பவளமாக்கி அப்பவளத்தின்கண் தோன்றிய முத்தந்தருதலை 'துகிரில் வினை முத்தமருள்' என இளங்கோல முருகப்பெருமானை விளித்துக் கூறியவாறு. (௫0)

கோதிவரி வண்டுமது உண்டுகுடி கொள்ளுமெங்
குழலுக் குடைந்து விண்ணிற்
குடிகொண்ட கொண்டற் குருந்துளியின் நித்திலக்
கோவையொரு கால்வி ரும்பேம்
காதிலுறும் வள்ளைமக ரக்குழை கடக்குமெங்
கண்ணுக் குடைந்து தொல்லைக்
கயத்திற் குளித்தசேல் வெண்தரள மென்னிலொரு
காலமுங் கருதி நயவேம்
போதிலுறு பசுமடற் பாளைமென் பூகம்
பொருந்துமெங் கந்த ரத்தைப்
பொருவுறு வேள்வலம் புரியாரம் இன்புறேம்
பொற்றோள் தனக்கு டைந்த
சோதிவேய் முத்தந் தணைத்தொடேம் நின்னுடைய
துகிரில்வினை முத்தம் அருளே
தோகைமே காரவா கனசெந்தி லாயுனது
துகிரில்வினை முத்தம் அருளே.

(அ - ரை.) குழலுக்குடைந்து - கூந்தலுக்குத் தோற்று- கயம் - குளம். பூகம் - கமுகு. கந்தரம் - கழுத்து. நயவேம் - விரும்பேம். பொருஉறு - ஒப்பாகாத. வேய் - மூங்கில். தோகை- மயில் வால். (௫௧)

# ௬. வாரானைப்பருவம்

ஊரிப் பகட்டு வரிவாளை
முழங்கிக் குதிக்கக் கால்சாய்ந்து
முதிர விளைந்து சடைபின்னி
முடங்கும் பசுங்காய்க் குலைச்செந்நெல்
சேரிக் கருங்கை மள்ளர்குயந்
தீட்டி அரிந்த கொத்தினுக்குத்
தெண்முத் தளப்பச் சிறுகுடிலிற்
சேரக் கொடுபோய் அவர் குவிப்ப
வேரிக் குவளைக் குழியில்வரி
வெண்சங் கினங்கள் ஈற்றுளைந்து
மேட்டில் உகுத்த பருமுத்தை
வெள்ளோ திமந்தன் முட்டையென
வாரிக் குவிக்குந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) ஊரிப்பகட்டு வரிவாளை - வலிமையுடைய வரி பொருந்திய ஆண் வாளைமீன். சடைபின்னி - ஒன்றோடொன்று சுற்றி. முடங்கும் - வளையும். சேரிக் கருங்கை மள்ளர் - பட் சேரியிலிருக்கும் வலிய கையையுடைய மள்ளர்கள் (பள்ளர்), குயம் - அரிவாள். குடில் - சிறுவீடு. வேரி - தேன். ஈற்றுளைந்து- கருவுயிர்த்து. உகுத்த - சொரிந்த. வெள் ஓதிமம் . வெள்ளை அன்னம். (௫௨)

புள்ள மரிந்த கதிர்ச்செந்நெற்
போரிற் பகடு தனைநெருங்கப்
பூட்டி அடித்து வைகளைந்து
போதக் குவித்த பொலிக்குவையை
விள்ள அரிய குடகாற்று
வீசப் பதடி தனைநீக்கி
வெள்ளிக் கிரிபோற் கனகவட
மேரு கிரிபோல் மிகத்தூற்றிக்

கள்ளம் எறியுங் கருங்கடைக்கட்
கடைசி பிரித்த மணிமுத்தைக்
களத்தி லெறிய அம்முத்தைக்
கண்டுகுடித்த கட்குவிலே

மள்ளர் அளக்குந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) புள்ளம் - அரிவாள். பகடு - எருமைக்கடா. வை - வைக்கோல். போதகுவித்த - போகுமாறு செய்து குவிக்கப்பட்ட. குவை - குவியல். விள்ள - பிரிய. குடகாற்று - மேல் காற்று, கோடை. பதடி - பதர். கிரி - மலை. கள்ளம் - வஞ்சம். கடைசி - உழத்தி. கட்கு - கள்ளுக்கு. குரும்பை - தென்னம் பிஞ்சு; இளநீர். (௫௩)

தேட அரிய மணியரைஞாண்
சேர்க்க வருக விரற்காழி
செறிக்க வருக திலதநுதல்
தீட்ட வருக மறுகில்விளை

யாட வருக மடியிலெடுத்
தணைக்க வருக புதுப்பனிநீர்
ஆட்ட வருக நெறித்தமுலை
அமுதம் பருகவருக முத்தஞ்

சூட வருக உடற்புழுதி
துடைக்க வருக ஒருமாற்றஞ்
சொல்ல வருக தள்ளிநடை
தோன்ற வருக சோதிமணி

மாட நெருங்குந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) விரற்குஆழி செறிக்க வருக - விரலில் மோதிரம் நெருக்கிச் சேர்ப்பதற்கு வருவாயாக. நுதல் திலதம் தீட்ட - நெற்றியிற் பொட்டு எழுத. நெறித்த - சிலிர்த்த. அமுதம் பருக - பால் குடிக்க. சூட - கொடுக்க. மாற்றம் - மொழி. தள்ளி - நெருக்கி. (௫௪)

இறுகும் அரைஞாண் இனிப்பூட்டேன்
இலங்கு மகர குண்டலத்தை
யெடுத்துக் குழையின் மீதணியேன்
இனியுன் முகத்துக் கேற்கவொரு
சிறுகுந் திலதந் தனைத்தீட்டேன்
திருக்கண் மலர்க்கு மையெழுதேன்
செம்பொற் கமலச் சீறடிக்குச்
சிலம்பு திருத்தேன் நெறித்துவிம்மி
முறுகு முலைப்பால் இனிதூட்டேன்
முகம்பார்த் திருந்து மொழிபகரேன்
முருகா வருக சிவசமய
முதல்வா வருக திரைகொழித்து
மறுகு மலைவாய்க் கரைசேர்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ ரை.) இறுகும்-நெருங்கும். இலங்கு-விளங்கு. குழை-காது. சிறுகும் - சிறிதாயிருக்கும். சீறடி - சிறிய அடி. பகரேன்-சொல்லேன். மறுகும் - சுழலும். (௫௫)

எள்ளத் தனைவந் துறுபசிக்கும்
இரங்கிப் பரந்து சிறுபண்டி
எக்கிக் குழைந்து மணித்துவர்வாய்
இதழைக் குவித்து விரித்தழுது
துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து
தொட்டில் உதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத்
தோளின் மகரக் குழைதவழ

மெள்ளத் தவழ்ந்து குறுமூரல்
விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து
வேண்டும் உமையாள் களபமுலை

வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) இரங்கி - வருந்தி. பரந்து-சென்று. எக்கி - ஒரு புறம் வற்றி வளைந்து. குழைந்து - வாடி. மகரக் குழை - மகர குண்டலம். குறு மூரல் - புன்சிரிப்பு. உமையாள் களபமுலை வள்ளத்தமுதுண்டு - பார்வதியின் களபமணிந்த கொங்கையி னின்று ஒழுகிய பாலைக் கிண்ணத்தில் ஏந்திக்கொடுக்க உண்டு; இதனால் உமைமுலை எவராலும் வாய்வைத்து உண்ணப் பெறாத தாக உண்ணாமுலை யென்பார். (கசு)

வெண்மைச் சிறைப்புள் ஓதிமங்கள்
விரைக்கே தகையின் மடலெடுத்து
விரும்புங் குழவி யெனமடியின்
மீதே இருத்திக் கோதாட்டித்

திண்மைச் சுரிசங் கினிற்குவளைத்
தேறல் முகந்து பாலூட்டிச்
செழுந்தா மரைநெட் டிதழ்விரித்துச்
சேர்த்துத் துயிற்றித் தாலாட்டப்

பெண்மைக் குருகுக் கொருசேவற்
பெரிய குருகு தன்வாயிற்
பெய்யும் இரையைக் கூரலகு
பிளந்து பெட்பின் இனிதளிக்கும்

வண்மைப் புதுமைத் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) சிறை - சிறகு. விரைக்கேதகை - மணம் பொருந்திய தாழை. கோது ஆட்டி - குற்றம் போக்கி. திண்மை-உறுதி. தேறல்-தேன். துயிற்றி - தூங்கச் செய்து. துயில் என்னும் தன்வினைப் பகுதியடியாகப் பிறந்த பிறவினையெச்சம். பெட்பின் - ஆசையுடன். (௬௭)

ஓடைக் குளிர்தண் துளிப்பனியால்
உடைந்து திரையில் தவழ்ந்தேறி
ஒளிரும் புளினத் திடையொதுங்கி
உறங்குங் கமடம் தனைக்கடந்து

கோடைக் குளிர்காற் றடிக்கஉடல்
கொடுகி நடுங்கி ஊன்கழிந்த
குடக்கூன் பணிலத் துட்புகுந்து
குஞ்சுக் கிரங்கி இரைகொடுக்கும்

பேடைக் குருகுக் கொருசேவற்
பெரிய குருகின் சிறைப்புறத்துப்
பிள்ளைக் குருகுதனை யணைத்துப்
பிரச மடற்கே தகைப்பொதும்பின்

வாடைக் கொதுங்குந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) புளினத்திடை-மணல்மேட்டில். கமடம்-ஆமை. குடக்கூன் - குடம்போல் வளைந்த. பேடை - பெட்டை; இதன் எதிர்மொழி சேவல். புறத்து- இடத்து. பிரசம் - தேன். (௬௮)

விண்டு மாவின் கனிதடத்தின்
மீதே வீழக் குருகினங்கள்
வெருவி இரியக் கயல்வெகுண்டு
வெடிபோய் மீள மண்டூகம்

கண்டு பாய வரிவாளை
கழிக்கே பாயக் கழிக்கானற்
கம்புள் வெகுண்டு துண்ணெனக்கட்
கடைதான் விழித்துத் தன்பார்ப்பைக்

கொண்டு போயக் கருவாளைக்
குலைக்கே பாயக் குடக்கனியின்
குறுங்காற் பலவு வேர்சாய்ந்த
குழிக்கே கோடி கோடிவரி

வண்டு பாயுந் திருச்செந்தூர்
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) விண்டு - காற்று. தடம் - தடாகம், குளம். வெருவி இரிய - அஞ்சியோட. வெடிபோய் - தாவி. மண்டூகம்-தவளை. கழி - உப்பங்கழி. கம்புள் - சம்பங்கோழி. பார்ப்பை-குஞ்சை. குலைக்கே-மணல் மேட்டில், செய்கரையில். குழிக்கே - குழியில். (௫௧)

பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா

சேரா நிருதர் குலகாலா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா என்றுன் திருமுகத்தைப்

பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்
பாவா வாவென் றுனைப்போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்

வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

(அ - ரை.) பேராதரிக்கும்-பெயரை விரும்பும். பேறும்-பிரயோசனமும். பேராள-புகழுடையவனே. பிள்ளைப்பெருமான்-

**இளையபெருமாள்.** நிருதர்குல காலா - அசுரர் கூட்டத்துக்குக் காலனே. பாரா - பார்த்து. பரவிப்புகழ்ந்து - மிகவும் புகழ்ந்து. வழக்கு - முறை. (௬0)

## வேறு

கலைதெரி புகலி வளமுற மருவு
கவுணிய வருக வருகவே
கருணையின் உரிமை அடியவர் கொடிய
கலிகெட வருக வருகவே

சிலைபொரு புருவ வனிதையர் அறுவர்
திருவுள மகிழ வருகவே
சிறுதுளி வெயர்வு குதிகொள உனது
திருமுக மலர வருகவே

கொலைபுரி விகட மணிமுடி நிருதர்
குலமற வருக வருகவே
குருமணி வயிரம் இருசிகை நெடிய
குழைபொர வருக வருகவே

மலைமகள் கவுரி திருமுலை பருகு
மழவிடை வருக வருகவே
வளையுமிழ் தரளம் அலையெறி நகரில்
வரபதி வருக வருகவே.

**(அ- ரை.)** கலைதெரி புகலி - கலைகள் தெளிந்த சீகாழி. **கவுணிய**-கவுணிய குலத்தில் தோன்றிய திருஞான சம்பந்தனே! **கலி**-வறுமை, துன்பம். சிலை-வில். வனிதையர் அறுவர்-பாலூட்டி வளர்த்த கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர். பொர - மோத. **கவுரி** - பார்வதி. வரபதி - மேலான தலைவ! (௬௧)

அணிநெடு மவுலி எறிசிறு புழுதி
அழகுடன் ஒழுக வருகவே
அடியிடு மளவில் அரைமணி முரலும்
அடியொலி பெருக வருகவே

பணிவிடை புரிய வருமட மகளிர்
பரவினர் புகழ வருகவே
பலபல முனிவர் அனைவரும் உனது
பதமலர் பரவ வருகவே
பிணிமுக முதுகில் அரியணை யழகு
பெறவரு முருக வருகவே
பிறைபொரு சடிலர் தமதிட மருவு
பிடிபெறு களிறு வருகவே
மணியிதழ் ஒழுகும் அமுதுகு குதலை
மழவிடை வருக வருகவே
வளையுமிழ் தரளம் அலையெறி நகரில்
வரபதி வருக வருகவே.

(அ - ரை.) அரைமணி - அரையிற் கட்டியுள்ள மணிகள். மூரலும் - ஒலிக்கும். அடியொலி - அடிபெயர்த்துவரும் முழக்கம். பரவ-போற்ற. பிணிமுகம்-மயில். அரியணை -சிங்காதனம். பிடி-உமையம்மை. பிடி பெறு களிறு - பெண்யானையான உமையவள் பெற்ற ஆண்யானை. குதலை-பொருள் புலப்படாத சொல். (௬௨)

---

## எ. அம்புலிப் பருவம்

கலையால் நிரம்பாத கலையுண் டுனக்குநிறை
கலையுண் டிவன்தனக்குக்
களங்கமரு குறமான் உனக்குண்டு குறமான்
கருத்துண் டிவன்தனக்குத்
தொலையாத கணமுண் டுனக்குமங் கலக்கணத்
தொகையுண் டிவன்தனக்குத்
துளியமுத முண்டுனக் கிவனுக்கு மாறாத
சொல்லமுதம் உண்டுனக்குக்
கொலையா டராவழிப் பகையுண்டு கடுவிடங்
கொப்புளிக் குங்கட்செவிக்
கோளரவைக்கொத்தி யெறியுமே காரமிக்
குமரனுக் குண்டுகண்டாய்

அலையாழி சூழ்திருச் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ யாடவாவே.

(அ - ரை.) நிரம்பாத கலை-குறைந்த சந்திர கலை. நிறைகலை-நிறைந்த கல்வி நூல். களங்கம் அருகுஉற - குற்றம் பக்கத்திற் பொருந்த. மான்-முயலகனென்னும் மான். குறமான்-குறப்பெண்ணாகிய வள்ளி. கணம்-தாராகணம். கணத்தொகை-சிவகணத்தின் கூட்டம். துளி அமுது-அமுதத்துளி. சொல்லமுது-சொல்லாகிய அமுதம். கொலைஆடு-கொலை செய்கின்ற. அராவழிப்பகை - பாம்பின் மூலம் பகைமை. கோள் - வலிமை. மேகாரம் - மயில். அலை ஆழி - அலைகடல். (௯௫)

மாமோக மண்டலம் அகற்றிஅறி வென்னுமுழு
மண்டலத் தைத்தொடுத்து
வடவைமுக மண்டலத் தழலா லுருக்கியினன்
மண்டலத் தூடுபுக்குச்
சோமோத யக்கிரண மண்டலத் தமுதத்
துளித்திவலை பருகியுடலைச்
சோதிமண் டலமென விளக்குமவர் இவனுடைய
துய்யமுக மண்டலத்தை
ஏமோ கருத்துற இருத்திப் பெரும்பரத்
தெல்லைமண் டலமெய்தலாம்
என்றுகொண் டிவன்மண் டலச்சக்ர நிலையா
றெழுத்திலீ டேறுவருனக்
காமோ பெருக்கமென் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ யாடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ யாடவாவே.

(அ- ரை.) மோகமண்டலம் - மோகபூமி. தொடுத்து - ஆரம்பித்து. மண்டலத்தழலால் - மூலாதாரத்திலுள்ள அக்கினிமண்டலத்துத்தீயால். இனன் மண்டலத்துஊடு-இருதயகமலத்திலுள்ள

சூரிய மண்டலத்தின் நடுவில். சோமோதயம் - சோம உதயம். சந்திரனுதித்தலையுடைய. சோதிமண்டலமென-சிவமண்டலமாக. துய்ய-தூய்மையான. ஏம்-மயக்கம். ஓ-நீங்கிய. பரம்-பிரமம். நிலை-நிற்றலையுடைய. ஈடேறுவர்-கடைத்தேறுவர். (௬௪)

முதிரும்இசை வரிவண் டலம்புகம லாலய
முகிழ்க்குமிரு நாலிதழ்க்குள்
முக்கோண நடுவிலொரு வட்டச் சுழிக்குள்மலர்
முகமண் டலத்துவெயிலால்

எதிருமிருள் அந்தகா ரப்படலை தள்ளிவந்
தெழும்இரவி மண்டலத்தில்
இன்புற்று நீவந் தொளிக்குமிடம் அந்தவான்
இரவிமண் டலமுடுக்கள்

உதிருமடு செருவிலிவன் வேலேறு பட்டவர்
உகந்தபெரு வெளியாகையால்
ஒள்ளமு துகுத்தபதி னாறுகலை கொள்ளுமுன்
உடலினுங் குறைபடாதோ

அதிருமக ராழிசூழ் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) வரி-கோடு. அலம்பு-முழங்குகின்ற. முகிழ்க்கும்-தோன்றும். அந்தகாரம் - இருள். படலை - தட்டிக்கதவு. வான் - ஆகாயம். உடுக்கள் - நட்சத்திரம். அடுசெரு - கொல்லும் போர். நெளிய-புரள. முடி-தலை. (௬௫)

வெறியார் இலைத்தொடைத் தக்கனழல் வேள்வியை
வெகுண்டுபகல் பல்லுகுத்து
வெள்ளிவிழி யைக்கெடுத் தயிரா வதப்பாகன்
வேறுருக் கொடுபறக்கச்
செறியா டகத்தகட் டிதழ்முளரி நான்முகன்
சென்னியைத் திருகிவாணி
செய்யதுண் டம்துண்டம் ஆக்கியத் தக்கன்
சிரத்தையொரு வழிப்படுத்திப்

பொறியார் அழற்கடவுள் கைத்தலம் அறுத்துவிண்
புலவர்முப் பத்துமூவர்
போனவழி ஒருவர்போ காமலுன் னுடலையும்
புழுதியில் தேய்த்ததெல்லாம்
அறியாத தல்லநீ செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) வெறியார்-மணம் பொருந்திய. தொடை-மாலை, தொடுத்தலுடையது: 'ஐ'செயப்படு பொருள் உணர்த்திற்று. தக்கன்-தட்சப்பிரசாபதி. இவன் தன்மகளைப்பரமசிவனுக்கு மணந்து கொடுத்தான். முழுமுதற்கடவுளாகிய பரமசிவனுக்கு மரியாதை செய்யாதிருந்தான். திருமால் தலைமையில் பிரமனைக் கொண்டு யாகம் செய்வித்தான். யாகத்தைக் காணவந்த தன் மகளாகிய உமாதேவிக்கும் வெறுப்பு உண்டாக்கினான். பின் இது தெரிந்த பரமசிவன் வீரபத்திரரை ஏவி யாகத்தை அழிப்பித்தார். தேவர்கள் அவமானப் படுத்தப்பட்டனர். சூரியன் பல் உடைந்தான். சந்திரன் மிதியுண்டான். தக்கன் தலை வெட்டுண்டு நெருப்பில் அழிந்தது. பின் சிவபெருமான் இரங்கிக் குற்றம் செய்தவர்களை மன்னித்து எழுப்பினர். தக்கன் தலைக்கு ஆட்டுத்தலை பொருத்தப்பட்டது. இதுவே தக்கன் செய்த வேள்விப் பயன். வெள்ளி-சுக்கிரன், அயிராவதப் பாகன்-இந்திரன். சென்னி-தலை. வாணி-நாமகள். துண்டம் - மூக்கு. அழற்கடவுள் - அக்கினி தேவன். விண் புலவர்-தேவர், ஓர்வாய்-சிந்திப்பாய்; ஓர் : பகுதி. (சுசு)

விடமொழுகு துளைமுள் எயிற்றுவன் கட்செவி
விரிக்கும் பணைவியரு
மென்பொறி உடற்பெரும் பகுவாய் அராவடிவை
வெம்பசி எடுத்து வெம்பிக்
குடதிசைக் கோடையைப் பருகிக் குணக்கெழுங்
கொண்டலை அருந்திவாடைக்
கொழுந்தையுந் தென்றலையும் அள்ளிக் குடித்துக்
கொழுங்கதிரை உண்டதினியுன்

இடமொழிய வேறோர் இலக்கில்லை நீயதற்
கெதிர்நிற்க வல்லையல்லை
இவனுடன் கூடிவிளை யாடிநீ யிங்கே
இருக்கலாம் இங்குவந்தால்
அடல்புனையு மயிலுண் டுனக்குதவி ஆகையால்
அம்புலீ ஆடவாவே
அரவின்முடி நெளியமயில் முதுகில்வரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) வன்கட் செவி-வலிய பாம்பு. பணுடவி-படக் கூட்டம். பகுவாய்-பிளந்த வாய். வை-வைக்கப்பட்ட. வெம்பி-வருந்தி. கோடை-மேல்காற்று, கொண்டல்-கீழ்காற்று. வாடை-வடகாற்று. தென்றல்-தென்காற்று. குடக்கு+திசை-குடதிசை. மேல்பால். குணக்கு-கிழக்கு. கொழுங்கதிரை-செழித்த கிரணங்களை. இலக்கு - குறிப்பு. வல்லையல்லை - வல்லமையில்லாதிருக்கின்றாய். அடல்புனையும் மயில்-மயிலுக்குப் பகையாவது பாம்பு. மயில் உதவியால் பாம்பின் அச்சம் ஒழிவாய். (௬௭)

பண்டுபோல் இன்னமுதம் இன்னங் கடைந்திடப்
பழையமந் தரமில்லையோ
படர்கடற் குண்டகழி அளருக வற்றியிப்
பாரினில் திடரானதோ
விண்டலத் தமரர்களும் அமரேச னுஞ்சேர
வீடிநீ டந்தகார
மேவியெழு பகிரண்ட கூடம்வெளி யானதோ
விடமொழுகு நெட்டெயிற்று
மண்டுவா சுகிதுண்ட மானதோ இன்னமொரு
வாலிக்கு வாலில்லையோ
மதியிலா மதியமே இவன்நினைந் தாலெந்த
வகைசெலா தாகையானீ
அண்டர்நா யகனெங்கள் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) பண்டு - முன், இன்னமுதம் - இனிய அமுதம். மந்தரம்-மத்தாகவிளங்கிய மந்தரமலை. அளறு-சேறு. திடர்-மேடு. அமரேசன்-இந்திரன். வீடி-இறந்து. வாசுகி - அட்ட நாகங்களில் ஒன்று. துண்டமானதோ - துண்டிக்கப் பட்டதோ. வாலி - கிட்கிந்தை மன்னன்; குரங்கரசன்; சுக்ரீவன் அண்ணன். இராமனால் அம்பெய்து கொல்லப்பட்டவன்; சிவபூசைச் செல்வன்; இராவணனை வாலில் தூக்கிச் சென்று அங்கதன் தொட்டிலிற் கட்டி விளையாட்டுப் பொம்மையாக்கியவன். மதியிலாமதி - அறிவில்லாத சந்திரனே. வகை - வழி, (சுஅ)

வட்டமா கத்துள்வெளி வடிவுகொள லாலென்று
மானைத் தரித்திடுகையால்
மந்தா கினித்தரங் கத்துவளம் எய்தலால்
மன்னுங் கணஞ்சூழ்தலால்
இட்டமொடு பேரிரவில் வீறுபெற லாலுலகில்
எவருந் துதித்திடுதலால்
இரவிகண் ணுறுதலால் இடபத்தி லேறலால்
ஏமமால் வரையெய்தலால்
முட்டமறை வேள்விக் குரித்தாகை யால்வெய்ய
சூரியர வுக்குடைதலால்
முக்கண்ணுமை பங்கனொ டொக்குநீ யென்றுதிரு
முகமலர்ந் துனையழைத்தால்
அட்டபோ கம்பெறுவை செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) வட்டம் - பரிவேடம். ஆகத்துள் - சரீரத்துள். வெளிவடிவு-வெள்ளைவடிவு. வெளிவடிவு-ஆகாய ரூபம். மாகம்-விண். தரித்திடுதல்-தாங்குதல். மந்தாகினி-கங்கை. தரங்கம்-அலை. வளம் - குளிர்ச்சி. கணம்—(1)நட்சத்திரம்; (2) சிவகணம். இரவி கண்ணுறுதலால்—(1) சூரியனிடம் பொருந்துதலால். (2) சூரியன் கண்ணாகப் பொருந்துதல், இடபம் - இடபராசி, இடபவாகன

ணம். பேரிரவில் - பெரிய இரவில்; பெரிய பிச்சாடன வடிவில். ஏமம் - பொன். வேள்வி - யாகம், உடைதலால் - தளர்தலால். அட்டபோகம் - எண்வகைச் செல்வம். (சுகூ)

காதலால் எறிதிரைக் கடல்மகளிர் சிறுமகார்
கரையிற் குவித்தழுத்தும்
கருவாய் வலம்புரி யுமிழ்ந்தமணி முத்துமுட்
கண்டல்மடல் விண்டசுண்ணத்

தாதலர இளவாடை கொடுவருங் கானல்வெண்
சங்குநொந் தீற்றுளைந்து
தனியே உகுத்தபரு முத்தமுந் தன்னிலே
சதகோடி நிலவெறிக்கும்

ஈதலா லொரு சிறிதும் இரவில்லை எவருக்கும்
இரவில்லை நீயும்இங்கே
ஏகினு லுனதுடற் கறைதுடைத் திடுதலாம்
என்பதற் கையமில்லை

ஆதலால் நீதிப்பனை செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) காதலால் - விருப்பினுல். சிறுமகார்-சிறுமக்கள். கருவாய் - கருப்பங் கொண்டு. முட்கண்டல் - முள்ளையுடைய தாழை, ஈற்றுளைந்து - கருவுயிர்த்து. சதகோடி - மிகப்பல. விண்ட - விரிந்த. சுண்ணம்-பொடி. கானல்-கடற்கரைச்சோலை. இரவு - யாசகம். இரவு - இராத்திரி. கறை - களங்கம், துடைத்திடுதல் - போக்குதல், மயில்கடவு - மயிலைச் செலுத்து. (எ0)

கடியவளி எறியுந் தழைச்சிறைக் கூருகிர்க்
கருடவா கனனும்இகல்கூர்
கட்டைமுள் அரைநாள கெட்டிதழ் உடுத்தபொற்
கமலயோ னியுமெழுந்து

கொடியவெங் கொலைபுரி வராகமென ஒருவனெழு
குவலயம் இடந்துதேடக்
குறித்தொருவன் எகினமாய் அண்டபகி ரண்டமுங்
கொழுதிக் குடைந்துதேட

முடியஇது காறுமவர் அறிவுரு வகைநின்ற
முழுமுதற் கடவுள் அடியும்
முடியுநீ கண்டனை எனக்கருதி இன்றுதிரு
முகமலர்ந் துனை அழைத்தால்

அடியவரை வாழ்வித்த செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் இடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) கடிய வளி - கொடிய காற்று. கடுமை - வேகம். உகிர் - நகம். நாளம் - தண்டு. கமலயோனி - உந்திக்கமலத்திலுதித்த பிரமன். குவலயம் இடந்துதேட - பூமியைத்தோண்டித் தேடும்படி. அழிவுருவகை - அழியாதபடி. கண்டனை - பார்த்துளாய்: முன்னிலை ஒருமை இறந்தகால வினைமுற்று. (எக)

பெரியமா கத்துள்நீ வருவைஇவன் வஞ்சகம்
பேசுமா கத்துள்வாரான்
பெருகநீ வேலையிற் புகுவாய் இவன்பார்
பிளக்கவோ வேலைவிட்டான்

உரியமா குணவரையில் உறுவைநீ இவனன்
புருதகுண வரையேயுறுன்
உடலிலே முழுமறு உனக்குண் டிவன்தனக்
கொருமறுவும் இல்லைமீளக்

கரியமா முகிலிலே மறைவைநீ இவன்நெடுங்
கரியமா முகிலின் மறையான்
கருதிநீ இவையெலாம் உணரிவன் பெருமையைக்
கண்டுநீ அங்கிராதே

அரியமா தவன்எங்கள் செந்தில்வடி வேலனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) மாகம் - விண்ணிடம். வருவை - வருகிறாய். பேசும் **ஆகத்துள்** - பேசுகின்ற நெஞ்சில். வேலையில் - கடலில். வேலை - வேற்படையை. குணவரை - கிழக்கிலுள்ள உதயகிரி. குணவரை - குணமுடையவரிடம். மறு - களங்கம். கரியமாமுகில் - கருத்த பெரிய மேகம். மறையான் - மறைக்கப்படான். (எ௨)

பரியநிழல் தன்னைச் சுளித்துவெயி லொடுபொருது
பாதசங் கிலியைநூறிப்
பாரிசா தத்தருவை இடுகுள கெனக்கவுட்
பகுவாய் புகக்குதட்டித்
தரியலர் நகர்ப்புறத் தெயிலிடு கபாடந்
தனைத்தூள் படுத்தியவர்பொன்
தருணமணி முடியிடறி முறைமுறை அழைக்குந்
தழைசெவிப் பிறைமருப்புச்
சொரியுமத தாரைக் குறுங்கட் பெருங்கொலைத்
துடியடிப் புகரொருத்தல்
துங்கவேள் இவனுடைய முன்றிற் புறத்தில்
துனைக்கர நிமிர்த்துநிற்கும்
அரியகரு நாகமென வெருவல்கொல் இவனுடன்
அம்புலீ ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) பரிய - பெரிய. சுளியும் - கோபிக்கும். வெயிலொடு - வெயிலுடன். நூறி - கெடுத்து. குளகு - இலையுணவு. **கவுள்** - கன்னம். குதட்டி - அதுக்கி, மென்று. தரியலர் - பகைவர். எயில் - மதில், கோட்டை. கபாடம் - கதவு. தூள்படுத்தி - துகளாக்கி. இடறி - எற்றி. தழைசெவி - இலைபோல் விரிந்த காது. துடிஅடி - உடுக்கை போன்ற கால். புகர் - புள்ளி. ஒருத்தல் - ஆண் யானை. துங்கம் - உயர்வு. துனைக்கரம் - துவாரம் உடைய கை. வெருவல் - பயப்படாதே: எதிர்மறை ஒருமை முன்னிலை. (எ௩)

## அ. சிறுபறைப்பருவம்

பொருவாகை சூடுமர வக்கொடிக் குருகுலப்
பூபாலர் ஏறும்அந்தப்
பூபால னுக்கிளைய துணைவர்நூற் றுவரும்
பொருபதினெட் டக்குரோணி
ஒருவாய்மை சொற்றபடை வீரருஞ் செருவினில்
உருத்தெழலும் நீதியைவர்
உடனுக நின்றுபற் குனன்மணித் தேரினுக்
குள்ளசா ரதியாகியம்
மருவார்கள் தானையிற் பட்டவர்த் தனர்மகுட
வர்த்தனர் அடங்கலும்போய்
மயங்கவொரு நாள்விசைய னுக்குவிசை யம்பெருக
மண்ணேழும் உண்டுமிழ்ந்த
திருவாய் வலம்புரி முழக்குதிரு மால்மருக
சிறுபறை முழக்கியருளே
செருவில்எதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) அரவக்கொடிக் குருகுலப் பூபாலர் ஏறு-பாம்புக் கொடியை உயர்த்திய கௌரவ மன்னர்கள் தலைவனாகிய துரியோதனன். வாகை - வெற்றி. பூபாலன் - பூமியைப் பாலனம் புரியும் அரசன். துணைவர்-உடன் பிறந்தார். அக்குரோணி-சேனையில் ஒருதொகை. செரு-போர். பற்குனன் - அர்ச்சுனன். பட்டவர்த்தனர்-பட்டம் தரித்துக்கொள்ளுதற்கிருக்கும் அரசர். மகுடவர்த்தனர்-மகுடம் தரித்த அரசர். விசையம்-வெற்றி. மண் ஏழும் - பூமி ஏழையும். வலம்புரி - சங்கு. திருமால் மருக - திருமாலுக்கு மருமகனே! பரநிருதர் - அன்னியரான அசுரர். சிறுபறை-சிறுகொட்டு.

(எச)

முருந்தாரு மணிமுறுவல் நெய்தல்நில மகளிரிள
முகிழ்முலை தனக்குடைந்து
முளரிமுகை நீரிற் குளித்துநின் றுருதாளின்
முற்றிய தவம் புரியவெங்

கருந்தாரை நெட்டிலைப் புகர்வே லெனப்பொருங்
கட்கடைக் குள்ளுடைந்து
காவிமலர் பங்கப் படக்கருங் குழல்கண்டு
கரியமுகில் உடல்வெளுத்துப்
பொருந்தாமல் ஓடியந் தரசாரி யாயொரு
பொருப்பேற வளமையேறும்
புகழேற வாழுந் திருச்செந்தி லாயுனது
பொற்றாள் வணக்கமுற்றுத்
திருந்தார்கள் நெஞ்சம் பெரும்பறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) முருந்து ஆரும் - மயிலின் இறகடியைப் போலும். முறுவல் - பல். உடைந்து - தோற்று. முற்றிய - முதிர்ந்த. வெம் கருந்தாரை - கொடிய பெரிய கூர்மை. கட்கடை - கண்ணின் கடை, கடைநுனி. பங்கப்பட - குறைவு அடைய. கருங்குழல் - கரிய கூந்தல். முகில் - மேகம். அந்தரசாரி - ஆகாயத்தில் சஞ்சரிப்பது. பொருப்பு - மலை. திருந்தார்கள் - மனம் திருத்தம் பெறாத பகைவர்கள். நெஞ்சம் பெரும்பறைமுழக்க - மனமானது பெரிதும் பறையடிப்பது போலத் துடிக்க. (எ௲)

கங்கையணி யுஞ்சடையில் வைத்தகுழ விப்பிறைக்
கடவுளா லயமணைத்துங்
கங்குற் கருங்கடல் கழிந்தவை கறையிற்
கலித்தவால் வளைமுழக்கும்
பங்கய மலர்ப்பொகுட் டிதழ்வாய் துளிக்கும்
பசுந்தேறல் உண்டுமெள்ளப்
பலகோடி சஞ்சரீ கப்படலை பெடையொடு
படிந்துபல கால்முழக்கும்
வெங்கய முடக்கும் புழைக்கர நிமிர்த்துவெளி
மேகநீ ரைக்குடித்து
வீதிவாய் நின்றுபிளி றித்தின முழக்கும்வெறி
வெண்திரைக் குண்டகழியிற்

செங்கயல் முழக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**(அ - ரை.)** குழவிப்பிறை - இளஞ் சந்திரன். கடவுள் ஆலயம்-இறைவன் திருக்கோயில். கங்குற் கருங்கடல்-இரவாகிய கரிய கடல். கழிந்த-நீங்கிய. வைகறை-விடியற்காலம். கலித்த-ஒலித்த. வால்வளை முழக்கும்-வெள்ளைச் சங்கின் ஓசையும். பசுந் தேறல் - இனிய தேன். சஞ்சரீகப்படலை - வண்டுக் கூட்டம். படிந்து - தோய்ந்து. வெங்கயம் - கொடிய யானை. முடக்கும் - வளையும். புழைக்கரம்-தும்பிக்கை. பிளிறி - இரைந்து. குண்டகழி - ஆழமான கடல். (எசு)

காவான பாரிசா தத்தருக் குலநிழற்
கடவுள்தெரு வீதிதோறுங்
கடிமணப் புதுமங் கலத்தொனி முழக்கமுகை
கட்டவிழ்த் திதழுடைக்கும்
பூவாரி லைத்தொடையல் அளகா புரேசன்
புரந்தொறுங் குளிறுமுரசம்
பொம்மென முழக்கமன் மதனுடைய பல்லியப்
பொங்குதெண் திரைமுழக்கப்
பாவாணர் மங்கலக் கவிவாழி பாடிப்
பரிந்துதிண் டிமமுழக்கப்
பரவரிய திருவிழா என்றுபல பல்லியம்
பட்டினந் தொறுமுழக்கத்
தேவாதி தேவருயர் சதுமறை முழக்கநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

**(அ - ரை.)** கா-பொழில். தருக்குலம்-மரக்கூட்டம். கடவுள்-இந்திரன். தொனி - ஒலி. கட்டு - முறுக்கு. உடைக்கும் - விரியும். பூ ஆர் - மலர் நிறைந்த. தொடையல் - மாலை. அளகா

ரேசன் - அளகாபுரித் தலைவனான குபேரன். குளிறும் - ஒலிக்கும்; பொம்என - விரைவாக: ஒலிக்குறிப்பு மொழி. பல்லியம் - பல வாத்தியம். மங்கலக் கவி - மங்கலப் பாடல். பரிந்து - விரும்பி. திண்டிமம் - ஒருவகை மங்கல வாத்தியம். சதுமறை - சதுர்மறை- நான்கு வேதம். (எஎ)

வரைவாய் முழங்குங் கடாயானை வெங்கூன்
மருப்பில்விளை முத்துமிளவேய்
மணிமுத்து மடுபாலை வனசுரத் திற்கரு
வராகத்தின் முத்துமண்டர்

உரைவாய் முழக்கும் பெரும்புறவி லுந்திநத்
துமிழுமணி முத்துமள்ளர்
ஒளியரு மருதவே லிச்செந்நெல் கன்னல்தரும்
ஒளிமுத்தும் ஒங்குநெய்தற்

கரைவாய் முழக்குமுட் கூனல்வெண் பணிலம்
கடுஞ்சூல் உளைந்துகான்ற
கதிர்முத்தும் ஒக்கக் கொழித்துவரு பொருநைபாய்
கழிதொறுங் கயல்குதிக்கத்

திரைவாய் முழக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) வரைவாய் - மலையினிடத்து. கடாயானை - மத யானை. வேய்-மூங்கில். வனசுரம்-காடு: ஒரு பொருட் பன்மொழி. வராகம்-பன்றி. அண்டர் - தேவர். உந்தி - காட்டாறு. நத்து - கன்னல் - கரும்பு, கரைவாய் - கரையில். சூல்உளைந்து - சூலால் வருந்தி. கதிர் - ஒளி. (எஅ)

முனைவாளை வடிவேலை வடுவைவெங் கடுவையிதழ்
முளரியைப் பிணையை மதவேள்
மோகவா ளியைபடு சகோரத்தை வென்றுகுழை
முட்டிமீ ளுங்கண்மடவார்

நினைவாளை வாள்முறுவ லாடியிள முலையானை
நேர்நேர் நிறுத்திநெய்தல்
நீடுமள காடவி வனத்திற் பிணித்துவெண்
நித்தில வடந்தெரிந்து

புனைவாளை நாள்முடி விளம்பிநடு வாளைமென்
போதிலுறை வாளை யொப்புப்
பொலிவாளை நின்றுகளை களைவாளை நாடிவிளை
போங்கழி கடந்துமெள்ளச்

சினைவாளை பாயுந் திருச்செந்தில் வேலனே
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) முனை - கூர்மை. கடு - விடம், பிணை - மான். வாளி - அம்பு. அடுசகோரம் - கொல்கின்ற சக்கரவாகப் பறவை. குழைமுட்டி - காதைத் தாக்கி. நினைவாளை - நினைவையுடையவளை. முலையானை - முலையாகிய யானை. அளக அடவி - கூந்தற் காடு. பிணித்து - கட்டி. நித்திலவடம் - முத்துமாலை. நாள் - நல்ல நாளில். முடி - நாற்றுமுடி. விளம்பி - கூறி. நடுவாளை - நடுகின்றவளை. மென்போதில் உறைவாளை - மெல்லிய மலரில் தங்கியிருப்பவளை. நாடி - விரும்பி. விளைபோம்கழி - விளைகின்ற நீண்ட உப்பங்கழி. சினை - கருப்பம். (௭௧)

அறந்தரு புரந்தரா தியருலகில் அரமகளிர்
ஆடுமணி யூசல்சிற்றில்
அம்மனை கழங்குபல செறியுந் தடஞ்சாரல்
அருவிபாய் பரங்கிரியுமுட்

புறந்தரு புனிற்றுவெள் வளைகடல் திரைதொறும்
பொருதசீ ரலைவாயுமென்
போதுகமழ் திருவாவி னன்குடியும் அரியமறை
புகலுமே ரகமுமினிமைக்

குறந்தரு கொடிச்சியர் பெருங்குரவை முறைகுலவு
குன்றுதோ றாடலுந்தண்
கொண்மூ முழங்குவது கண்டின மெனக்கரட
குஞ்சரம் பிளிறுமரவம்
சிறந்தபழ முதிர்சோலை மலையும் புரந்தநீ
சிறுபறை முழக்கியருளே
செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) அறம்தரு - தருமத்தைச் செய்கின்ற. புரந்தராதியர் - இந்திரன் முதலியவர்கள். கழங்கு - கழற்சிக்காய். செறியும் - சேர்ந்திருக்கும். பரங்கிரி - திருப்பரங்குன்றம். புனிறு - இளமையையுடைய. சீரலைவாய் - சிறந்த திருச்செந்தூர். திரு ஆவினன்குடி - பழநி. புகலும் - ஓதும். ஏரகம் - சுவாமிமலை. கும்பகோணத்தருகிலுள்ள முருகன் படைவீடுகளுள் ஒன்று. குறம்தரு - குறிசொல்கின்ற. கொடிச்சியர் - குறத்தியர். குரவை - கைகோத்தாடுங் கூத்து. குன்றுதோறு ஆடல் - மலைகளில் எல்லாம் தங்கியிருத்தல். கொண்மூ - மேகம். கரடகுஞ்சரம் - மதயானை. பிளிறும் அரவம் - ஒலிக்கும் ஓசை. பழமுதிர் சோலைமலை - திருமாலிருஞ்சோலை மலையாகிய அழகர்மலை. புரந்த - காத்த. நிருதர் குலகலகனே - அவுணர் குலத்தாருடன் கலகம் செய்பவனே! (அ0)

எழுமிரவி மட்கவொளி தருமணி யழுத்துமுடி
இமையவர் மகிழ்ச்சிபெறவே
இருகுழை பிடித்தவிழி அரமகளிர் சுற்றிநடம்
இதுவென நடித்துவரவே
வழுவறு தமிழ்ப்பனுவல் முறைமுறை யுரைத்துவெகு
வரகவிஞர் உட்குழையவே
மகபதியு மிக்கமுனி வரர்கணமும் இச்சையுடன்
வழியடிமை செப்பியிவே
பொழுதுதொறும் ஒக்கவிதி முறையுனை அருச்சனை
புனிதசிவ விப்ரருடனே [செய்
புகலரிய பத்தசனம் அரகர வெனக்குலவு
புரவலர் விருப்பமுறவே

செழுமறை முழக்கவரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) எழும்இரவி - உதிக்கின்ற சூரியன். மட்க - மழுங்க. வழு - குற்றம். தமிழ்ப்பனுவல் - தமிழ்ப் பாடல். குழை பிடித்த விழி - காதோடளாவும் கண். மகபதி - மகஞ்செய் தலைவன்- செப்பியிட - சொல்ல. சிவவிப்ரர் - சிவப்பிராமணர். புரவலர் - போற்றுகின்றவர், அரசர். (௮௧)

தவனனிர தப்புரவி வலமுறையில் வட்டமிடு
தருணவட வெற்பசையவே
தமரதிமி ரத்துமிதம் எறியுமக ரப்பெரிய
சலதியொலி யற்றவியவே

புவனமுழு தொக்கமணி முடிமிசை இருத்துபல
பொறியுரகன் அச்சமுறவே
புணரியிடை வற்றமொகுமொகுமொகுவெ னப்பருகு
புயலுருமு வெட்கியிடவே

பவனனு மிகுத்தகடை யுகமுடி வெனப்பெருமை
பரவியடி யிற்பணியவே
படகநிபி டத்துழனி அசுரர்வெரு விக்கரிய
பரியவரை யிற்புகுதவே

சிவனருள் மதிக்கவரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) தவனன் - சூரியன். தருணம் - புதுமை. துமிதம் - துளி. அற்று அவிய - கெட்டொழிய. பொறிஉரகன் - புள்ளியுடைய பாம்பு. புணரி - கடல். மொகுமொகுமொகு என - மொகுமொகு என்றொலி எழ. பரவி - போற்றி, புகழ்ந்து. படகம் - இரணபேரி. நிபிடம் - நெருக்கம். துழனி - பேரொலி. பவனன் - காற்று. (௮௨)

சகரமக ரச்சலதி உலகுதனில் இப்பொழுது
சருவிய புறச்சமயநூல்
தலையழிய முத்திதரு சிவசமய முத்தர்பெறு
தவநெறி தழைத்துவரவே

அகரஉக ரத்தில்வினை பொருளடைவு பத்தியுறும்
அடியவர் தமக்கருளவே
அமரருல கத்தவரும் எவருமரு விப்பரவி
அடியிணை தனைப்பணியவே

பகரவு நினைத்திடவும் அரிதுனது சொற்பெருமை
பரகதி அளிக்குமெனவே
பலப்பல முனித்தலைவர் அனைவரும் உனக்கினிய
பணிவிடை தனைப்புரியவே

சிகரபர வெற்பில்வரு முருககும ரக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) சகரமகரச் சலதி - சகரபுத்திரரால் தோண்டப்பட்டுச் சாகரம் எனப்படும் மகர மீன்களையுடைய கடல். சருவிய - மருவிய. அகரஉகரம் - ஓங்காரம்; பிரணவம். அடியவர் - அடியைப்பற்றிய அன்பர். பகர - சொல்ல. பரகதி - முத்தி, மேலானநிலை. பணிவிடை - ஏவல். சிகரம் - முடி; உச்சி; மேல். பரகிரி - பரங்குன்று. (அ௩)

## ௯. சிற்றிற்பருவம்

பொன்னின் மணக்கும் புதுப்புனலிற்
புடைசூழ் பணில முத்தெடுத்துப்
புறக்கோட் டகமுண் டாக்கிவலம்
புரியைத் தூதைக் கலமமைத்துக்

கன்னி மணக்குங் கழனியிற்செங்
கமலப் பொகுட்டு முகையுடைத்துக்
கக்குஞ் செழுந்தேன் உலையேற்றிக்
கழைநித் திலவல் சியைப்புகட்டிப்

பன்னி மணக்கும் புதுப்பொழிலில்
பலபூப் பறித்துக் கறிதிருத்திப்
பரிந்து சிறுசோ றடுமருமை
பாராய் அயிரா வதப்பாகன்

சென்னி மணக்குஞ் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) பொன்னின் - பொன்போல. பணிலம் - சங்கு. புறக்கோட்டகம் - பக்கத்தில் வளைந்த சிறுவீடு. தூதைக் கலம் - சிறுமுட்டியாகிய பாத்திரம். கன்னி - இளமை. பொகுட்டு - கொட்டை. உலையேற்றி - உலைநீராக அமைத்து. கழை - கரும்பு. வல்சி - அரிசி. பன்னி - பன்னீர். கறிதிருத்தி - கறியாகச் சமைத்து. அடும் - சமைக்கும். அயிராவதப்பாகன் - ஐராவதத்தை ஊர்ந்து செல்லும் இந்திரன். சென்னி - முடி. சிற்றில்சிதையேல் - சிறு வீட்டை அழிக்காதே. (அ௪)

தையல் மடவார் இழைத்தவண்டல்
தன்னை அழிக்கும் அதுக்கல்ல
தாளம் உறுத்தி உனது பொற்பூந்
தண்டைத் திருத்தாள் தடியாதே

துய்ய தவளப் பிறைமுடிக்குஞ்
சோதி யெடுத்து முகத்தணைத்துத்
தோளில் இருத்தும் பொழுதுகணித்
தோளிற் புழுதி தோயாதோ

வையம் அனைத்தும் ஈன்றெடுத்தும்
வயது முதிரா மடப்பாவை
மடியில் இருத்தி முலையூட்டி
வதனத் தணைக்கில் உன்கழற்காற்

செய்ய சிறுதாள் செறியாதோ
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) தையல் - அழகு. மடவார் - இளமையையுடையவர். தையல் மடவார் : மீமிசை மொழியுமாம். வண்டல்-மணல் விளையாட்டு. தரளம் உறுத்தி-முத்து அழுத்தி. தடியாதோ-தடிப்படையாதோ; வீக்கம் கொள்ளாதோ. துய்ய - தூய்மையான. தவளம்-வெண்மை. தோயாதோ-படியாதோ. முதிரா-முற்றாத. முலையூட்டி - பாலுண்பித்து. வதனம் - முகம். செறியாதோ-பொருந்தாதோ. (அ௫)

தௌவுங் கரட மடையுடைக்குந்
தந்திப் பகடு பிடிபட்டுந்
தருவும் அமுதம் இருநிதியுந்
தனியே கொள்ளை போகாமல்

எவ்வம் உறவிட் புலத்தமரர்
ஏக்கம் உறாமல் அயிராணி
இருமங் கலநாண் அழியாமல்
இமையோர் இறைஞ்சும் அரமகளிர்

பௌவம் எறியுந் துயராழிப்
பழுவத் தழுந்தி முழுகாமல்
பரக்குஞ் சுருதித் துறைவேள்வி
பழுதா காமல் பரவரிய

தெவ்வர் புரத்தை அடுஞ்சிறுவா
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) தௌவும்-தத்தும். கரடம்-மதம். தந்திப்பகடு-ஆண்யானை. பிடிப்பட்டு - கையிலகப்பட்டு. இருநிதி - சங்கநிதி, பதும நிதி. எவ்வம்-துன்பம். அயிராணி-இந்திராணி. பௌவம். குமிழி. துயர்ஆழி-துன்பக்கடல். பழுவம்-ஆழம். வேள்வி-யாகம். பழுது - குற்றம். தெவ்வர்-பகைவர். அடும்-கெடுக்கும். (அசு)

ஆடுங் கொடித்தேர் எழுபுரவி
அருணன் நடத்தும் அகலிடத்தை
அடைவே படைத்தும் படைத்தபடி
அளித்துந் துடைத்தும் முத்தொழிலுங்

கூடும் பெருமை உனக்குளது
கூடார் புரத்தைக் குழாம்பறிக்கக்
கொள்ளுங் கருத்து நின்கருத்துக்
கொங்கை சுமந்து கொடிமருங்குல்

வாடுங் கலக விழிமடவார்
மலர்க்கை சிவப்ப மணற்கொழித்து
வண்டல் இழைத்த மனையழிக்கை
வன்போ சுரரும் மகவானும்

தேடுங் கமலத் திருத்தாளால்
சிறியேம் சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) அருணன் - சூரியன் தேர்ப்பாகன். அளித்து-காத்து. கூடார்-பகைவர். கலகவிழி-போர்விளைக்கும் கண்கள். அழிக்கை-அழிப்பது. வன்போ-வலிமையோ? சிறியேம்-சிறியகளான எங்கள். (அஎ

புற்றில் அரவந் தனைப்புனைந்த
புனித ருடனே வீற்றிருக்கப்
பொலியுந் திகிரி வாளகிரிப்
பொருப்பை வளர்த்துச் சுவராக்கிச்

சுற்றில் வளர்ந்த வரையனைத்துஞ்
சுவர்க்கால் ஆக்கிச் சுடரிரவி
தோன்றி மறையுஞ் சுருப்பைவெளி
தொறுந்தோ ரணக்கால் எனநாட்டி

மற்றில் உவமை யெனுங்கனக
வரையைத் துளைத்து வழியாக்கி
மாக முகிலை விதானமென
வகுத்து மடவா ருடன்கூடிச்

சிற்றில் இழைத்த பெருமாட்டி
சிறுவா சிற்றில் சிதையேலே
திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) திகிரிவாளகிரி - சக்கரவாளமலை. வரை - மலை : மும்மடியாகுபெயர். தோரணம்-மாவிலை முதலியவற்றால் தொங்கவிடப்படும் சிறப்பலங்காரம். கனகவரை-மேருமலை. மாகமுகில் - விண்ணிலுள்ள மேகத்தை. விதானம் - மேற்கட்டி. பெருமாட்டி - மாதேவி : பெருமான் என்பதன் பெண்பால். (அஅ)

மிஞ்சுங் கனக மணித்தொட்டில்
மீதே இருத்தித் தாலுரைத்து
வேண்டும் படிசப் பாணிகொட்டி
விருப்பாய் முத்தந் தனைக்கேட்டு

நெஞ்சு மகிழ வரவழைத்து
நிலவை வருவாய் எனப்புகன்று
நித்தல் உனது பணிவிடையின்
நிலைமை குலையேம் நீயறிவாய்

பிஞ்சு மதியின் ஒருமருப்புப்
பிறங்கும் இருதாட் கவுட்சுவடு
பிழியுங் கரட மும்மதத்துப்
பெருத்த நால்வாய்த் திருத்தமிகும்

அஞ்சு கரக்குஞ் சரத்துணையே
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே.

(அ - ரை. தாலுரைத்து - தாலாட்டி. நிலவை - சந்திரனை. நீத்தல்-தினந்தோறும். குலையேம்-தவறமாட்டோம். சுவடு - அடையாளம். மதம் - செருக்கு. நால்வாய் - தொங்குகின்ற வாய். நாலுதல்-தொங்குதல். அஞ்சுகரம் - ஐந்துகை. இப்பாட்டில் தாலாட்டு முதல் அம்புலிப்பருவம் வரை குறிப்புக்கள் காணப் படுகின்றன. (அக)

துன்று திரைக்குண் டகழ்மடுவில்
சூரன் ஒளிக்கப் பகைநிருதர்
தொல்லைப் பதியும் அவரிருந்து
துய்த்த வளமுந் தூளாக்கி

வென்று செருவிற் பொருதழித்தாய்
வேதா விதித்த விதிப்படியை
விலக்கி வெகுண்டு மீண்டளித்தாய்
வேண்டும் அடியார் வினையொழித்தாய்

கன்றும் அமணர் கழுவேறக்
காழிப்பதியில் வந்துதித்துக்
கள்ளப் பரச மயக்குறும்பர்
கலகம் ஒழித்துக் கட்டழித்தாய்

அன்று தொடுத்துன் வழியடிமை
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே.

அ - ரை.) துன்று-நெருங்கிய. மடு-பள்ளம், கடல். தொல்லைப் பதி-பழம்பட்டினம். துய்த்த- நுகர்ந்த. வேதா-பிரமன் விதிப்

**படி** - படைக்குந் தன்மை. கன்றும் - முனியும். காழி - சீகாழி. குறும்பர் - முரடர். அன்று தொடுத்து - அன்று முதல். (௯0)

களிப்பார் உனைக்கண் டவரவரே
கண்ணு மனமும் வேருகிக்
கள்ளன் இவனை நம்முடைய
கா்தல் வலையிற் கட்டுமென

விளிப்பார் விரகம் அங்குரித்த
வேடப் பலிப்பைப் பாரென்று
மெள்ள நகைப்பார் இவருடனே
விளையா டாமல் வேருகித்

துளிப்பார் திரைக்குண் டகழுடுத்த
தொல்லைப் பதியும் பகிரண்டத்
தொகையுந் தொகையில் பல்லுயிருந்
தோற்றம் ஒடுக்கந் துணையாய்நின்

றளிப்பாய் அழிக்கை கடனலகாண்
அடியேஞ் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே.

**(அ - ரை.)** விளிப்பார் - அழைப்பார். விரகம் - ஆசை. அங்குரித்த - தோன்றிய. வேடப் பலிப்பை - வேடத்தின் வாய்ப்பை. திரைக்குண்டகழ் - கடல். தொகையில் - அளவற்ற. கடனல - முறைமையல்ல. (௯௧)

கூவிப் பரிந்து முலைத்தாயர்
கூட்டி யெடுத்து முலையூட்டிக்
குடுமி திருத்தி மலர்சொருகிக்
கோலம் புனைந்து கொண்டாடிப்

பூவிற் பொலிந்த திருமேனிப்
புனிதா வண்டற் புறத்தெயிலில்
புகுந்தால் இனியுன் னுடலேறப்
புழுதி இறைத்துப் போகாமல்

காவிக் குறுந்தோட் டிதழ்நெருக்குங்
கண்ணி தனைக்கொண் டோச்சிவளைக்
கானல் தரளத் தொடையாலுன்
கைத்தா மரையைக் கட்டிவிடோம்
ஆவித் துணையே வழியடிமை
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே.

(அ - ரை.) பரிந்து கூவி - விரும்பிக் கூவி. முலைத்தாயர் - முலைப்பால் கொடுக்கும் தாய். கோலம் - அழகு. எயிற் புறத்தில் - மதிற் பக்கத்தில். ஓச்சி - வீசி, எறிந்து. ஆவித்துணையே - உயிர் நண்பரே: விளி வேற்றுமை. (கூஉ)

பொய்யா வளமை தரும்பெருமைப்
பொருநைத் துறையில் நீராட்டிப்
பூட்டுங் கலன்கள் வகைவகையே
பூட்டி எடுத்து முலையூட்டி
மெய்யால் அணைத்து மறுகுதனில்
விட்டார் அவரை வெருமலுனை
வெறுக்க வேறு கடனுமுண்டோ
விரும்பிப் பரலைக் கொழித்தெடுத்துக்
கையால் இழைத்த சிற்றிலின்
காலால் அழிக்கை கடனலகாண்
காப்பான் அழிக்கத் தொடங்கிலெங்கள்
கவலை எவரோ டினியுரைப்போம்
ஐயா உனது வழியடிமை
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியுந் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே.

(அ - ரை.) பொருநை - தாம்பிரபர்ணி, துறை - பிரிவு, இறங்குமிடம். கலன் - ஆபரணம். பரலை - பருக்கைக் கல்லை. இனி - இப்பொழுது. (கூங)

## ௧௦. சிறுதேர்ப்பருவம்

தண்டே னுடைந்தொழுகு மருமாலை நீள்முடி
தரிக்குஞ் சதக்கிருதுசெந்
தருணமணி ஆசனத் தேறமா தலிசெழுந்
தமனியத் தேருருட்டப்

பண்டே பழம்பகை நிசாசரர்கள் உட்கப்
பரப்புநிலை கெட்டதென்று
பரவுங்கு பேரன்வட பூதரம் பொருபுட்
பகத்தேர் உருட்டவிறு

கொண்டே உதித்தசெங் கதிரா யிரக்கடவுள்
குண்டலந் திருவில்வீசக்
கோலப்ர பாமண் டலச்சுடர் துலக்குமுட்
கோலெடுத் தருண அருணன்

திண்டே ருருட்டவளர் செந்தில்வாழ் கந்தனே
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே.

(அ - ரை.) மரு-மணம். சதக்கிருது-இந்திரன்; நூறு மகம் இயற்றியவன். மாதலி - இந்திரன் தேர்ப்பாகன். உட்க - நடுங்க. புட்பகத்தேர்-புட்பக விமானம். வில்-ஒளி. ப்ரபாமண்டலம் - அழகிய ஒளி வட்டமாகிய பரிவேடம். அருண அருணன் - சிவந்த சூரியன். (௯௪)

வாராரும் இளமுலை முடைத்துகிற் பொதுவியர்
மனைக்குட் புகுந்து மெல்ல
வைத்தவெண் தயிருண்டு குடமுருட் டிப்பெருக
வாரிவெண் ணெயை யுருட்டிப்

பாராமல் உண்டுசெங் கனிவாய் துடைத்துப்
பருஞ்சகடு தன்னையன்று
பரிபுரத் தாளால் உருட்டிவிளை யாடுமொரு
பச்சைமால் மருக பத்தி

ஆராமை கூருமடி யவர்பழ வினைக்குறும்
பறவே உருட்டி மேலே
அண்டபகி ரண்டமும் அனைத்துலக முஞ்செல்லும்
ஆணையா ழியையு ருட்டிச்
சேராநி சாசரர் சிரக்குவ டுருட்டநீ
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே.

(அ - ரை.) பொதுவியர் - இடைச்சியர். பொதுவர் : ஆண்பால். பெருக-மிகுதியாக. சகடு-வண்டி (சாபமுற்ற நளகூபரர் என்னும் வண்டி). பரிபுரம்-சிலம்பு. மருக - மருமகனே. ஆணையாழி - ஆக்ஞாசக்கரம். சிரக்குவடு-தலையாகிய மலை. (கூ)

கொந்தவிழ் தடஞ்சாரல் மலயமால் வரைநெடுங்
குடுமியில் வளர்ந்த தெய்வக்
கொழுந்தென்ற லங்கன்றும் ஆடகப் பசுநிறங்
கொண்டுவிளை யும்ப ருவரைச்
சந்தன நெடுந்தரு மலர்ப்பொதும் பருமியல்
தண்பொருநை மாந தியுமத்
தண்பொருநை பாயவிளை சாலிநெற் குலையுமச்
சாலிநெற் குலைப டர்ந்து
முந்தவிளை யும்பரு முளிக்கரும் பும்பரு
முளிக்கரும் பைக்க றித்து
முலைநெறிக் கும்புனிற் றெருமைவா யுஞ்சிறுவர்
மொழியும் பரந்த வழியுஞ்
செந்தமிழ் மணக்குந் திருச்செந்தில் வேலனே
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே.

(அ - ரை.) கொந்து - பூங்கொத்து. மலயம் - பொதிகை. தென்றலங் கன்றும் - இளந்தென்றலும் ஆடகம்-பொன். சாலி நெல்-செந்நெல். பருமுளிக் கரும்பு-பெரிய கணுவையுடைய கரும்பு. சேவற் பதாகை - சேவல் கொடி. (கூ௬)

பெருமையுடன் நீள்தலத் திருவர்பர சமயமும்
பேதம் பிதற்றி விட்ட
பிறைமருப் புக்கரும் பகடுமுந் நீரிற்
பிழைத்துநீள் கரையி லேறப்

பொருவருஞ் சந்நிதியி லெய்துவது போல்மணி
புடைக்குமிள நீரி ரண்டு
புணரியின் மிதந்துசந் நிதியேற விந்நாட்
பொருந்தவிளை யாடி முன்னாள்

இருதிரையி னிற்சந் தனக்கொடி மரத்தினை
இழுத்துவரும் எருமை ஏற்றை
எப்பொழுது முதியகற் பகடாக உலகத்தில்
யாவருங்காண வென்று

திருவுள மகிழ்ந்துதிரு விளையாடல் கண்டநீ
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே.

(அ-ரை.) பிதற்றி - கூறி, பிறை மருப்புக் கரும்பகடு - பிறை போன்ற தந்தத்தையுடைய யானை. முந்நீர் - கடல்; மூவகை நீரையுடையது என்றும், படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தன்மையுடையது என்றும் கூறுவர். சந்தனக் கொடி மரம் - சந்தன மரத்தாலாகிய கொடி மரம். எருமை யேற்றை - எருமைக்கடாவை. (கஎ)

ஆதிநூல் மரபாகி அதனுறும் பொருள்ஆகி
அல்லவை யனைத்தும் ஆகி
அளவினுக் களவாகி அணுவினுக் கணுவாய்
அனைத்துயிரும் ஆகி அதனின்

சாதியின் பிரிவாகி வெவ்வேறு சமயங்கள்
தானாகி நானாகிமெய்ச்
சாலோக சாமீப சாரூப சாயுச்ய
தன்னெறியி லிலை யாகி

ஓதிய தனைத்தினும் அடங்காமல் வேருகி
உள்ளும் புறம்பும் ஆகி
ஒளியிலொளி யாகிமற் றிரவுபக லற்றவிடம்
ஒப்புவித் தெனையி ருத்தித்
தீதினை அகற்றிநின் திருவருள் புரிந்தவா
சிறுதேர் உருட்டி யருளே
சேவற் பதாகைக் குமாரகம் பீரனே
சிறுதேர் உருட்டி யருளே.

(அ - ரை.) மரபு - முறை. சமயம் - மதம். சாலோக, சாமீப, சாரூப, சாயுச்யமாகிய நால்வகை முத்தி நிலைகள். (கூ௮)

## வேறு

புலமை வித்தக மயூரவா கனவள்ளி
போகபூடணசூரன்
சலமொழித்தவ நிசாசரர் குலாந்தக
சடாட்சர காங்கேய
குலவுகொற்றவ குமாரகண் டீரவ
குருபர புரு கூதன்
உலக ளித்தவா செந்திவ்வாழ் கந்தனே
உருட்டுக் சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே.

(அ - ரை.) புலமை வித்தக - அறிவிற் சிறந்தவனே! போகபூடண - போகத்தை ஆபரணமாகக் கொண்டவனே, சலம்-பகை. சடாட்சர-ஆறு எழுத்துக்குரியவனே (குமாராய நம.) காங்கேய-கங்கையின் மகனே! கண்டீரவ - சிங்கம் போன்றவனே. உரக நாயகன் - ஆதிசேடன். பஃறலை - பல்தலை; நிலைமொழி வருமொழி மெய்கள் திரிந்தன. (கூகூ)

வீதி மங்கல விழாவணி விரும்பிய
விண்ணவர் அரமாதர்
சேர்தி மங்கல கலசகுங் குமமுலை
தோய்ந்தகங் களிகூரச்

சாதி மங்கல வலம்புரி இனமெனத்
தழைச்சிறை யொடுபுல்லி
ஓதி மம்துயில் செந்தில்வாழ் கந்தனே
உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே.

(அ - ரை.) மங்கல கலசகுங்குமம் முலை - சுபமான கும்பம் போன்ற குங்குமம் அணிந்த கொங்கை. தோய்ந்து - படிந்து. புல்லி - தழுவி. (கoo)

விரைத்த டம்பொழில் வரைமணி ஆசனத்
திருந்துவிண் ணவர்போற்றி
வரைத்த டம்புரை மழவிடை எம்பிரான்
மனமகிழ்ந் திடவாக்கால்
இரைத்த பல்கலைப் பரப்பெலாந் திரட்டிமற்
றிதுபொரு ளெனமேனாள்
உரைத்த தேசிகா செந்தில்வாழ் கந்தனே
உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலைபொடிபட
உருட்டுக சிறுதேரே

(அ - ரை.) விரை - வாசனை. தடம் - பெரிய. வரைத்தடம் புரை - மூங்கிலையுடைய மலைபோன்ற. மேல்நாள் - முற்காலம். தேசிகன் - குரு. (கoக)

மாதுநாயகம் எனவடி வுடையசிர்
வள்ளிநா யகமண்ணில்
ஈது நாயகம் எனவுனை யன்றிவே
றெண்ணநா யகம்உண்டோ
போது நாயகன் புணரியின் நாயகன்
பொருப்புநா யகன்போற்றி

ஓது நாயக செந்தில்வாழ் கந்தனே
உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே.

(அ - ரை.) மாதுநாயகம் - பெண்ணரசி. நாயகம் - தலைமை. போது நாயகன் - பிரமன், புணரியின் நாயகன் - வருணன், பொருப்பு - மலை, நாயகன் - சிவன். (கOஉ)

தக்க பூசனைச் சிவமறை யோர்பெருந்
தானநா யகர்தம்பேர்
திக்க னைத்தினும் எண்முதல் இமையோர்
தேவர்தந் திருமேனி
மிக்க மாலிகை தருபவர் அடியவர்
மின்னனார் சமயத்தோர்
ஒக்க வாழ்கெனச் செந்தில்வாழ் கந்தனே
உருட்டுக சிறுதேரே
உரக நாயகன் பஃறலை பொடிபட
உருட்டுக சிறுதேரே.

(அ - ரை.) சிவமறையோர்-சிவப் பிராமணர், தானநாயகர்-இந்திரர், எண் முதல் இமையோர்-எட்டுத்திசைகாவலர், மாலிகை-பூமாலை. மின்னனார்-மின்போன்ற மாதர். பல்தலை: பஃறலை எனப் புணர்ந்தது. உருட்டுக-உருட்டுவாயாக, உருட்டுக: உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று, உருட்டு : பகுதி. (கOங)

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்
அருஞ்சொற் பொருளுடன்
முற்றிற்று

---

# பொருட் குறிப்புக்கள்

[எண் : பாட்டின் எண்]

## முத்து



## முருகர்

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

---

# பிள்ளைத்தமிழ் நூல்கள்

| | ரூ. | பு.கா. |
|---|---|---|
| பிள்ளைத்தமிழ்க் கோத்து | 5 | 00 |
| முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | 2 | 00 |
| மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் | 2 | 50 |
| திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ் | 1 | 25 |
| செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் | 0 | 75 |

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.

திருநெல்வேலி 6 சென்னை 1,

கழக வெளியீடு: ரு_௬௬

மார்க்கசகாய தேவர்

இயற்றிய

# திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்



பேராசிரியர், பெருநாவலர்,

திரு பு சி புன்னைவனநாத முதலியார்

எழுதிய

அரும்பொருள் விளக்கத்துடன்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி-6. சென்னை-1.

1966.

# பதிப்புரை

'பிள்ளைத் தமிழ்' என்பது சிறு நூல் வகையைச் சேர்ந்தது. பிற்காலத்திற் சிறு நூல் வரிசைகள் மிகப் பரவின. தமிழ்மொழி காலத்துக் கேற்ற அணிகலன்களை அணிந்து விளங்கி வந்துள்ளது. சிறுநூல் வகைகளும் அத்தகைய அணிகலன்களும் ஒருவகை. அவற்றுள்ளும் பிள்ளைத்தமிழ் என்பது மிக அழகிய குழந்தையணிகலனாய் மிளிர்ந்து, தமிழில் மிக்க இன்பம் பயந்து வருகின்றது.

பிள்ளைகளின் பலவகையான பிள்ளைமைப் பருவங்களைச் சிறப்பித்துக் கூறுவது இந்நூலின் இயல்பு. ஆண்பால் பெண்பால் என்னும் இருவகையிலும் இஃது இயற்றப்படும். சொல்லணி பொருளணி சிறந்து, செய்யுட் சந்தமும் இன்னோசையும் வாய்ந்து, அன்பும் உருக்கமும் விளைத்து இந் நூல்வகை பெரும் பயனுடையதாய்த் திகழ்கின்றது.

'திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்' தமிழ்த் தாய்க்குக் கிடைத்தது, தவப்பயனென்றே கூறுதல் வேண்டும். தமிழ்த்தாயின் நெஞ்சை யள்ளிய பிள்ளைத் தமிழ் இது. இதன் ஆசிரியர் மார்க்கசகாய தேவர் என்பவர். தேவரின் தமிழ்வாக்கு மிக அருமையாக அமைந்துள்ளது. "செந்தமிழ்சேர் வாக்கெனக்கு நல்கி மதமா முகக்கடவுள் ஊக்கமுடன் காப்பான் உவந்து" என ஆசிரியர் விரும்பிய வண்ணமே, அவர்க்குத் திருவருள் உதவி செய்துள்ளது. அதனால் இந் நூல், தன்னை ஓதுவார்க்கு நினைந்தது நினைந்த வண்ணம் பயனளிக்கும் அருட்டிரு படைத்த தென்பது துணியப்படும்.

இத்தகைய சிறந்த பிள்ளைத்தமிழை, நன்முறையிற் பதித்துத் தமிழ் நாட்டிற் பரவச் செய்யவேண்டுமென்பது கழகத்தின் விருப்பம். தமிழ்த் தேவியின் எழிலமுதும்

தணிகை முருகன் அருட்பேறும் நாளுந் தெவிட்டாது உண்டு திளைத்துப் பிறக்கும் வழங்கிவரும் பெரியாராகிய இராவ்பகதூர் தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ. அவர்கள்பால் அவ் விருப்பத்தைத் தெரிவித்துக் கொள்ள, அவர்கள் பேரன்போடு இந்நூலைச் செப்பஞ்செய்து அருஞ்சொற் பொருளகராதி பொருட் குறிப்பு முதலியனவும் எழுதி யுதவினர்கள். கழகம், அவர்கள் திறத்திற் பெரிதும் நன்றி பாராட்டுகின்றது.

பேராசிரியர், பெருநாவலர், திரு. பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்களைக் கொண்டு இந் நூலுக்கு அருஞ்சொற் பொருள் விளக்கம் எழுதுவித்து நல்ல முறையில் யாம் இதனைப் பதிப்பித்துள்ளோம். தமிழுலகம் இதனருமையை யறிந்து பயனடையுமாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

திருவிரிஞ்சை என்பது தொண்டைநாட்டில், பாலாற்றங்கரையிலுள்ள ஒரு நகர். இதில் நான்முகன், திருமால், சத்தி முதலியோர் பூசித்துப் பேறு பெற்றுளர். கழுதை முகமுள்ள அசுரன் ஒருவன் பூசித்து கழுதைமுகம் போக்கிக்கொண்டனன். இதனால் இத்தலம் கரனூர், கரபுரி என்றழைக்கப்பெறுவதாயிற்று. இத்தலப் பெருமான் வழித்துணையான காரணத்தால் மார்க்கசகாயர் எனப் படுவர். அம்மை மரகதவல்லி. இறைவன் செய்தருளிய அற்புதங்கள் இப் பிள்ளைத்தமிழிலும், எல்லப்ப நயினார் செய்துள்ள திருவிரிஞ்சைப் புராணத்திலும் காணத்தகும். சிவநாதர் என்னும் வேதியச் சிறுவன் பொருட்டுச் சிவபெருமான் திருமுடி வளைத்துக்கொடுத்த தலம். இதற்கு விரிஞ்சிபுரம் இருப்புப்பாதை நிலையம் ஒன்றுளது.

பிள்ளைத்தமிழ் என்பது சிறுநூல்வகையைச்சேர்ந்தது. தமிழ்மொழி காலத்துக்கு ஏற்ற அணிகலன்களை அணிந்து விளங்கி வந்துள்ளது. அவற்றுள் பிள்ளைத்தமிழ் அணிகலன் மிக அழகிய குழந்தை அணிகலனாய் மிளிர்ந்து மிக்க இன்பம் பயந்து வருகின்றது. தமிழ்த்தாயின் நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் போன்று இப் பிள்ளைத் தமிழ் திகழ்கின்றது. இதன் ஆசிரியர் மார்க்கசகாய தேவர் அல்லது வழித்துணையாவார் என்ற தலப்பெருமான் பெயரைப் பூண்டவர். இப் பிள்ளைத்தமிழில் ஆசிரியர் பிள்ளையார் வணக்கத்தில் வேண்டியபடி, செந்தமிழ் அமுத வாக்கு மதமாமுகக் கடவுளால் இவர்க்கு நிரம்ப அருளப் பெற்றுளது என்பது, இப் பிள்ளைத்தமிழ்ப் பருவங்களில் வரும் செய்யுள்களின் போக்கை நோக்குவோர் எளிதின் அறிவர்.

காப்புப் பருவத்தில் மற்றை ஆசிரியர் அமைக்காத புதுமுறையில், திருவருள், திருநீறு, மார்க்கசகாயசுவாமி, மரகதவல்லி, கங்கை, கணபதி, வைரவன், திருவேல், திருமயில், திருமுருகாற்றுப்படையும் திருப்புகழும், பல தேவர்கள் என அமைத்திருப்பது புதுவிருந்து அளிப்பதாம். முதலில் திருவருளையும், திருநீற்றையும் வழுத்தியிருக்கும் முறைமை

இவருடைய ஆழ்ந்த சமயப்பற்றையும் அழுத்தமான தமிழ் உணர்ச்சியையும் விளக்கப் போதுமானது. இவர் பாடல்கள் சந்தச்சுவை ததும்பி விந்தைப் பொருள் அமைந்து, சிந்தை கவரும் செம்மையன. இவர் முருகனை "எமையாட் கொண்ட குமரேசனைச் செய்மையுள ஆறுமுகனைத் திருவிரிஞ்சை வருசேயைப் புரந்தருள்கவே, மும்மைமல மகல நக்கீரமுனி சொன்னதிரு முருகா றெனுந்தேறலும், எம் அருணகிரிநாதர் ஓதுபதினறு யிரந்திருப்புக ழமுதமே" என்று கூறும்முறையால், அஞ்சாநெஞ்சுடன் ஆறணி பெருமானுடன் வீறுகொள் போர் நிகழ்த்திய நக்கீர தேவரிடத்தும், முருகன் அருளால் ஈரெண்ணுயிரம் திருப்புகழ் பாடி அருளிய அருணகிரி நாதரிடத்தும் மிகுந்த ஈடுபாடு உடையவர் என்பது விளங்கும்.

இப்பிள்ளைத்தமிழில் சிற்றிற்பருவம் 72 முதல் 75 பாடல்கள், சிறுதேர்ப்பருவம் 96, இவ்வெண்கள் அமைந் துள்ளவை எவரும் படித்துச் சுவைத்து இன்புறற்பாலன.

இப் பிள்ளைத்தமிழ் மூலம், திருநெல்வேலித் தென் னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் பொருட்குறிப்புக்களுடன் இற்றைக்குப் பன்னிரண்டு ஆண்டுகட்குமுன் வெளியிடப் பெற்றுள்ளது. முருகன் பிள்ளைத்தமிழ் நூல்களைக் குறிப்புரைகளுடன் தனித் தனியும், தொகுத்தும் வெளியிட்டுப் பிள்ளைத்தமிழ் நூல்களைப் பேணவேண்டுமென்ற பெருநோக்கங்கொண் டுழைத்துவரும் கழக ஆட்சிப்பொறுப்பாளர் திருவாளர், வ. சுப்பையாபிள்ளை அவர்கள், இந் நூற்பணியிலும் என்னைப் பயன்படுத்திச் சிறப்பிக்க முன்வந்தமைக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தண்டமிழ்க் கடவுள் தண்ணருளால் பைந்தமிழ்ப் பாடல் நூல்கள் பல உரையுடன் எழுதி வெளிப்படுத்த இறைவன் துணை புரிவானாக.

புலவரகம், நெல்லை
25—3—57.

அன்புள்ள,
பு. சி. புன்னைவனநாதன்.

உ

திருச்சிற்றம்பலம்

# திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்



## பிள்ளையார் வணக்கம்

*சுந்தரனுந் தென்விரிஞ்சைத் தோகைமயில் வாகனன்மேல்
சந்தமுறும் பிள்ளைத் தமிழ்பாடச்—செந்தமிழ்சேர்
வாக்கெனக்கு நல்கி மதமா முகக்கடவுள்
ஊக்கமுடன் காப்பான் உவந்து.*

(அருஞ்சொல் உரை.) *சுந்தரன் - அழகன். மயில்வாகனன்- முருகன். சந்தம் - இசை, அழகு. நல்கி - கொடுத்து. மதமா - யானை. உவந்து - மகிழ்ந்து.*

## பருவத்தொகை

*சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
அம்புலியே சிற்றிலே ஆய்ந்த சிறுபறையே
பம்புசிறு தேரோடும் பத்து.*



## க. காப்புப்பருவம்

[பிள்ளைத்தமிழ் பாடும் இடத்து இரண்டாம் திங்களிற் பிள்ளையைக் காக்க என்று காத்தற் கடவுள் முதலிய தேவர்களை வணங்கி வேண்டுவது.]

### திருவருள்

திருக்கஞ்ச இருகரத்தின் அபயவர தமும்சேர்
திகழுமர கதம்அளித்த தெய்வசிகா மணியை

அருக்கன்சந் திரன்தவழும் புரிசைவிரிஞ் சையில்வாழ்
ஆறுமுகத் தரசைஎமை ஆண்டவனைப் புரக்க

பெருக்கம்சந் ததமேவுஞ் சிவநாத னிடத்திற்
பிறந்தவொரு சிறுபாலன் பெருங்காணி பெறவே

இருக்கஞ்சன் முதலமர ரரகரஎன் றேத்த
இளைத்தபிறை சூடுமுடி வளைத்ததிரு வருளே.

(அ - ரை.) இருகஞ்சகரத்தின் - இரண்டு தாமரை மலர் போன்ற கைகளின். அபயம் - அடைக்கலம். வரதம் - ஈதல். மரகதம் அளித்த - மரகதவல்லி பெற்ற. அருக்கன் - சூரியன். புரிசை - மதில், கோட்டை. புரக்க - காக்க: வியங்கோள் வினை முற்று. சந்ததம் - எப்பொழுதும். இருகஞ்சன் முதல் அமரர் - பெரிய நான்முகன் முதல் தேவர்கள். இளைத்த பிறை - குறைந்த பிறை. (க)

### திருநீறு

#### வேறு

முடிஆ றுடையாய் குமராசிவ மோட்சத் தேற்றும்
முருகா அசுரே சர்களாகிய காட்டைப் பாற்றும்
முனைவா கருணா கரனேமறை வாக்கிற் சாற்றும்
முடியா முதலே தனைஓதிம னுர்க்குப் பூட்டும்

அடியார் துணையே அவா பால்விளை யாட்டைக் காட்டும்
அமுதே கனியே நறவேமுரு காற்றைக் கேட்கும்
அரசே எமதா ருயிரேயெமை ஊத்தைக் கூட்டில்
அடையா நெறிநீ அருள்வாயென வாழ்த்திப் போற்றி

விடியா மலமா யைகளாம்இருள் தீர்த்துத் தீர்த்து
விழிநீர் தருயோ கிகள்சேர் தரு வீட்டுக் கேற்ற
வெளிரு அமுதாய் உலகோரிடர் நீக்கப் பாட்டு
மிகவோ தமுறு மொருநேயனுள் நாக்கீற் றீட்டும்

வடிவே லுடனே வயல்சூழ்கர னூர்க்குள் தோற்றும்
மயிலே றியசேய் சிறுவானுதல்மேற்பொற் பூத்த
மலைமான் முலையூ றியபாலொடு கூட்டிச் சாத்தும்
வளைபோல் மதிபோல் ஒளிசேர்திரு நீற்றுக்காப்பே.

(அ - ரை.) மோட்சம் - நற்கதி, பந்தம் அறுதல், வீடு. பாற்றும் - நீக்கும். தளை - விலங்கு. ஓதிமனூர் - அன்ன ஊர்தியையுடைய பிரமர். நறவே - தேனே. முருகாற்றை - நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையை. இப் படைநூல் முருகன் ஆறுபடை வீடுகளில் முதல் வீடாகிய திருப்பரங்குன்றத்தில் சரவணப் பொய்கைக் கரையிலிருந்து சிவபூசை செய்த நக்கீரதேவ நாயனார் அரச மரத்திலிருந்து விழுந்த இலையில் ஒரு பாதி நீரிலும், மறுபாதி தரையிலும் கிடந்த சிறு பொழுதில் தரைப் பகுதியது பறவையாகவும், நீர்ப்பகுதியது மீனாகவும் மாறி ஒன்றை ஒன்று இழுக்கக் கண்டு மயங்கி நின்றனர். இதற்குமுன் இவ்வாறு புதுமையைக் கண்டு மயங்கிச் சிவபூசையை மறந்து நின்ற தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேர்களோடு இவரைச் சேர்த்து ஆயிரவராக்கித் தன் வழக்கப்படி உண்ணுதற்கு நீராடச் சென்றது. முன் பூதத்தால் அடைபட்டிருந்தவர்கள் நக்கீரரைப் பார்த்து நாங்கள் நெடுநாளாக இப்பூதத்தால் சிறைப்பட்டிருந்தும் உணவு முதலியவைகளைப் பெற்று உயிர்பிழைத்திருந்தோம்; இன்று உம்மால் இறக்க நேரிட்டது என்று வருந்தினர். கீரர் தம்மால் வந்த கேடு இஃது என்று தம்மையும், பிறரையும் காக்கும் விருப்புடன் முருகனை நோக்கி முருகாற்றுப்படை பாடினார். "இன்றென்னைக் கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும் மெய்விடா வீரன் கைவேல்," என்று கீரரே கூறும் மொழிப்படி முருகன் வந்து சிறை வீடுசெய்து, யாவரையும் காத்தருள் புரிந்தார் என்க. ஊத்தைக் கூடு - அழுக்குப் பொதிந்த உடம்பு. விடியா - நீங்காத, புலராத. வளை - சங்கு. சேய் - முருகன். (உ)

## மார்க்கசகாயசுவாமி

### வேறு

சீரியவே லாயுதனைச் செவ்வேளைக் குகனைத்
தேவர்கள்சே னாபதியைத் திருமயில்வா கனனைக்
காரியகா ரணங்கடந்த கடவுளைஎங் கோனைக்
கரபுரியி லாறுமுகச் சேவகனைக் காக்க
கூரியகொங் தளதேசத் தனபாலன் மகிழக்
குளிர்பிறையுஞ் சடைமுடியும் மழுமானும் பணியும்
வாரிஇருட் கடுமிடறும் நுதல்விழியும் மறைத்தே
மறைப்புரியில் வழித்துணையாய் வந்தருள்சேவகனே.

(அ - ரை.) சீரிய - சிறப்பான. சேனாபதி - படைத்தலைவர். கரபுரி-விரிஞ்சை. கொங்தள தேச தனபாலன் மகிழும்படி பிறை, சடை, மழு, மான், பாம்பு, கடுமிடறு இவற்றை மறைத்து இறைவனே வழித்துணை புரிந்தான் என்க. இதனால் இறைவனுக்கு மார்க்கசகாயர் என்ற பெயரும் ஏற்பட்டது. வழித்துணையான வரலாறு:—தனபாலன் என்னும் வணிகன், மிளகு பொதி போட்டுக் கொண்டு திருவிரிஞ்சை நகருக்கருகில் வருகையில், பொழுதுபோனது கண்டு சிவமூர்த்தியை வழித்துணையாயின் மிளகு பொதி தருகிறேனென்று வேண்டினன். அவ்வகையே சிவமூர்த்தி இவன் காஞ்சி நகர் போமளவும் வழித்துணையாய் மறைந்தனர். பிறகு கள்ளர் மறிக்க வழித்துணை வந்தோர் கள்ளரைத் துரத்தி மறைந்தனர். வணிகன் சொன்னது மறந்து முழுதும் விற்க, வாங்கியவர் மிளகு, முழுவதும் பயறாயின. அதை வாங்கியவர் மீண்டும் வணிகனிடம் கொடுப்ப வணிகன் மிளகு பொதியைச் சிவமூர்த்தி சொற்படி, அடியவர்க்களித்துக் களித்திருந்தனன். (௧)

## மரகதவல்லி

### வேறு

அரவின் மணிகளும் அருண கிரணமும்
அழிய ஒளிவிடு தோற்றனை
அழகு பொழிதரும் இளைய குமரனை
அசுர ரொடுபொரு சீற்றனை

அயனு மலைவுறு மறையின் இறுதியை
அமுத மொழிகொடு தேற்றனை
அடிமை படுமவர் கொடுமை பொடிபட
முடுகி யெழும்அருள் ஊற்றனை

விரவி அளியின முரல நறவுறு
குவளை மலர்கமழ் நாற்றனை
விழிக ளொருபதொ டுபயம் உடையனை
மிருக மதம்அகில் சேற்றனை
விருது பெருகரு தலர்க ளுடலுயிர்
விடுதி பெறஅடு கூற்றனை
விபுதர் புகழ்கர புரியில் வரும்அறு
முகனை அணிதிரு நீற்றனை

இரவி மதிஅழல் நயனி பரிபுர
சரணி கவுரிச டாட்சரி
இறைவி திரிபுர தகனி முனிவர்கள்
இதய மலரை விடாக்கிளி
எழுக டலும்எழு புவியும் அருளியும்
இளமை நலமழி யாக்குயில்
இழிஞர் தொழிலது புரியும் அறிவிலர்
இடர்கள் இடியவ ராப்பிடி

வரையி லுறைபவள் கருணை மழைமொழி
வதனி சடிலிம கோத்தமி
வடுகி பகவதி குமரி சிவனிடம்
மருவி நிறையக லாத்திரு
வசன மலர்மகள் சகல கலைமகள்
வழிஅ டிமைவினை தீர்ப்பவள்
மலையின் மடமகள் வருண மரகத
வலிஅ மலியவள் காக்கவே.

(அ - ரை.) அரவின் மணிகள் - நாகரத்தினங்கள். அருண கிரணம் - சூரியன் செங்கதிர். தோற்றனை - காட்சியனை. சீற்றம்- கோபம், சீறு + அம். மறையின் இறுதி-வேத முடிவு. தேற்றனை- தெளிவித்தவனை. முடுகி - விரைந்து. அருள் ஊற்றனை - அருட்

பெருக்கனை. அளியினம் - வண்டுக் கூட்டம். விழிகள் ஒருப தொடு உபயம் - பன்னிரண்டு கண்கள். மிருகமதம் - கத்தூரி. கருதலர் - பகைவர். அடுகூற்றன் - கொல்லும் எமன். விபுதர் - தேவர். தகனி - எரித்தவள். இளமை நலம் அழியாக்குயில் - இளமைச் சிறப்புக் கெடாத குயில் போன்றவள். நிறை - கற்பு. சடிலி-சடையை உடையவர்கள். வனசமலர் மகள்-இலக்குமி, திரு மகள். மலையின் மடமகள் - பார்வதி. அமலி - மலமற்றவள். (ச)

## கங்கை

### வேறு

எம்பா தகம்நீக் கியவே லவனை
இமையோர் அரசைக் குமரே சனைஎன்
இதயத் திருளைக் களையுங் குகனை

அம்பால் மொழிஅம் மையளித் தருளும்
அமுதைக் கனியைக் கரனார் தனில்வாழ்
அடியார் பெருவாழ் வைஅளித் தருள்க.

கம்பா நதிகோ தமைகா வேரி
காளிந்தி கோதா விரிபா லிநதி
கனகா நதிகண் டிகைகுண் டிகைசூழ்

பம்பா நதிவா ணதிசீ தைநதி
பாஞ்சா லிதபோ நதியே முதலாம்
பலவா நதியா னபகீ ரதியே.

(அ - ரை.) பாதகம் - பாவச்செயல். இமையோர் அரசு - தேவர்கட்கு அரசன். இதயத்திருளை - அறியாமையை. அம்பால் மொழி அம்மை - அழகிய பால் போன்ற சொல்லை உடையவள். பாலிநதி - பாலாறு. கனகாநதி - பொன் முகரி. பகீரதி - கங்கை. இப் பாடலில் கண்ட நதிகள் யாவும் கங்கையின் பகுதிகள். கங்கை தெய்வத்தன்மை மிக்கதாகலின் அதனையும் இவ்வாறு தெய்வத்தொடு போற்றிப் பரவலானார். (ரு)

## கணபதி

### வேறு

முந்திவரு சூரரின மாளச் சிவந்தவனை
முன்புகடல் நீர்சுவற வேல்தொட்ட செங்கையனை
முண்டகனை நூல்வினவி வாதித்த புங்கவனை
மொய்ம்புபெற வேதொழுத கீரற்கி ரங்கினனை

எந்தையை என் ஆவியை என்னுவிக் கருந்துணையை
என்சிரசில் ஒலமிடு பாதச்ச தங்கையனை
இன்பமுரு கேசனைமெய்ஞ் ஞானக் கொழுங்கனியை
எங்கள்கர னூரின்மயி லோனைப் புரந்தருள்க

அந்தரம் எலாம் அதிர வாய்விட்டு மண்டிவரு
மஞ்சலரெ லாமுறிய வால்சுற்றி மஞ்சுதனை
அங்கைகொடு தாவிஅத னீரைப்பி ழிந்துகடல்
அம்புவியெ லாம்நெளிய வோடித்தி ரும்பிவிட

மந்தரமெ லாம்அசைய வேமுட்டி அங்குலவு
வன்பரிதி தேர்முறிய வேகுத்தி வெண்டரளம்
வந்துலவும் ஏழ்சலதி நீர்வற்ற உண்டுமிழும்
வண்டுகள்ம தாசலம தாயுற்றி ருந்தவனே.

(அ - ரை.) இனம்-கூட்டம். கடல் நீர் சுவற வேல் தொட்ட செங்கையன்-கடல்நீர் வற்றும்படி வேலெறிந்த கையுடைய உக்கிர பாண்டியனானவனை. முண்டகன் - பிரமன். புங்கவன் - மேலானவன். மொய்ம்பு - வலிமை. சதங்கை - சலங்கை. அஞ்சலர் - அஞ்சாத பகைவர். மஞ்சு - மேகம். பரிதி - சூரியன். சலதி - கடல். மதாசலம் - யானை; மத + அசலம்: தீர்க்க சந்தி. (சு)

## வைரவன்

### வேறு

ஒருகைமணி ஒருகைகயி றொருகைசரம் ஒருகைசிலை
ஒருகைகடம் ஒருகை வடிவாள்
பொருகழுமுள் ஒருகைசிரம் ஒருகையிவை யுடையகர
புரிவடுக னடிதுதி செய்வாம்

முருகைஅரி மருகைமயின் முனியைமறை முதலைஅறு
முகனைஉமை மகனை அடியார்
இருள்அகல வருகுகனை எமையடிமை கொளுமரசை
இனிமையொடு புரவு செயவே.

(அ - ரை.) சரம் - அம்பு. கடம் - குடம். கழுமுள் - சூலாயுதம். வடுகன் - வைரவன். அரிமருகை - மால் மருகனை. புரவு செய - காத்தலைச் செய்ய. (எ)

## திருவேல்

### வேறு

முடியொர் ஆறுடை யானைஎம் ஐயனை
முதல்வனைச் செவ்வேளைப்
படியெ லாம்புகழ் தேவனை விரிஞ்சைஅம்
பதிமுரு கனைக்காக்க
கொடிய தானவர் குருதியில் ஆடிவெங்
குடலெனுந் தொடைசூடி
நெடிய யாக்கையின் நிணமெலாம் அருந்திய
அவன்கையின் நெடுவேலே.

(அ - ரை.) படி - பூமி. ஆடி - படிந்து, முழுகி. குடல் என்னும் தொடை சூடி-குடல் என்கின்ற மாலையைத் தரித்து. நிணம்-கொழுப்பு. (அ)

## திருமயில்

### வேறு

தொண்ட னுகை மைக்கொ ளுஞ்சிறு
தோன்றலைச்சதுர் வேதநூல்
சொல்லு மாமணி வாய னைச்சுக
மாயி ருந்தும ணங்கொளும்
வண்டு சேர்தரு நீப மாலைய
னைத்தி ருச்கர னூரில்வாழ்
மரக தக்கொடி பெற்ற செஞ்சுடர்
மணியை யன்பொடு காக்கவே

அண்ட கூட நடுங்க மால்வரை
தூளி யாகஅத் தூளியால்
ஆழி ஏழுகி ரம்பி மேடுப
டக்க லாபம டித்தெழுந்
தெண்டி சாமுக முங்க டைக்கண் இ
மைக்கு முன்னம்உ லாவியே
என்று மாட லியற்றி வாழவன்
ஏறு இன்றம யூரமே.

(அ - ரை.) சதுர்வேதம்-நான்குமறை. நீபமாலையன்-கடப்ப மாலையன். கூட்டம் - முகடு, வட்டம். மால்வரை தூளியாக - பெரிய மலைகள் தூளாகும்படியாக. ஆழி - கடல். கலாபம் - தோகை. கடைக்கண் இமைக்குமுன் - கடைக்கண் திறந்து மூடு தற்குள், ஒரு நொடியில். மயூரம் - மயில். (௯)

## திருமுருகாற்றுப்படையும் திருப்புகழும்

### வேறு

அம்மைமுலை யுண்டுவிளை யாடும் இளை யோனைஎமை
யாட்கொண்ட குமரேசனைச்
செம்மையுள ஆறுமுக னைத்திரு விரிஞ்சைவரு
சேயைப புரந்தருள்கவே
மும்மைமல மகலநக் கீரமுனி சொன்னதிரு
முருகா றெனுந்தேறலும்
எம்அருண கிரிநாதர் ஓதுபதி னொரு
யிரந்திருப் புகழமுதுமே.

(அ - ரை.) குமரேசன் - குமரக்கடவுள். மும்மை மலம் - மூவகை மலம்: ஆணவம், கன்மம், மாயை. தேறல் - தேன். ஓது - சொல்லிய. திருப்புகழ் அமுதம் - திருப்புகழாகிய அமிர்தம். திரு முருகாற்றுப்படையிடத்தும் திருப்புகழிடத்தும் தாம்கொண்டுள்ள பேரன்பு விளங்க, இவ்வாறு கடவுளரோடு சேர்த்து வாழ்த்துக் கூறினர். (௧௦)

## பலதேவர்கள்

### வேறு

கந்தனை வேளை விரிஞ்சையில் மேவு
கடம்பனை மாதுமையாள்
மைந்தனை வேலனை எங்கும ரேசனை
வந்திரு தாள்பணிவார்

இந்திரர் வானவர் சந்திர சூரியர்
எண்டிசை யோர்முனிவோர்
செந்திரு மார்பினர் விஞ்சையர் பாதலர்
செங்கம லாசனரே.

(அ - ரை.) வேளை - முருகனை, எவராலும் விரும்பப்படு பவன். இருதாள் பணிவார் - இரண்டடிகளையும் வழிபடுவார். யாவரெனின்:—இந்திரர், தேவர், திசைக்காவலர், திருமால், பிரமர், வித்தியாதரர், பாதலத்தோர் முதலியோர். (கக)

## உ. செங்கீரைப்பருவம்

[செங்கீரை ஆடும் பருவம். ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்ந்து முகம் அசைய ஆடுதல். இஃது ஐந்தாம் திங்களில் நிகழும்.]

உம்பர்அசு ரேசர்புரி வாதனை உரைத்தருள
உயர்கயிலை வாழ்ப ரமனார்
யோகத்தி லுன்னவெண் ணீறணியு நுதல்விழியில்
ஓர்ஆறு பொறிகள் சிதற
வெம்பொறி யெழுந்தண்ட ரண்டம் பரந்துலவ
விண்ணவர்கள் அஞ்சி மலைவாழ்
வித்தகர்க் கோதவப் பொறிகள்தமை வாவென்று
வெங்கனலி தனையி தனைநீ
சம்பரமொடு சரவணந் தனில்விடுதி யென்னஅத்
தழலவன் கொண்ட கல அத்
தழல்வெம்மை யாற்கங்கை தனில்விடக் கங்கையுஞ்
சரவணந் தனில் வைத்திடச்
செம்பதும முகமா றுடன்குலவு கரனார
செங்கீரை யாடி யருளே
திருமுருக அரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) அசுரேசர் - சூரன் ஆதியோர். புரிவாதனை - செய்யுந் துன்பம். ஆறு பொறிகள் - ஆறு நெருப்புப் பொறிகள். அண்டரண்டம் - தேவலோகம். உலவ - பரவ. கனலி - நெருப்பு. சரவணம் - சரவணப் பொய்கை. விடுதி - விடுவாய்: முன்னிலை ஒருமை வினைமுற்று. தழல் வெம்மை - நெருப்பின் வெப்பம். செம்பதுமுகம் ஆறு உடன் - செந்தாமரை மலர் போன்ற முகங்கள் ஆறுடன். செங்கீரை ஆடிஅருள் - செம்மையான சொல்லைக் கூறி அருள். கீரம் - சொல். (கஉ)

ஆரமா முமைதாட் சிலம்பின்நவ மணிசிதற
　　　　அதனையரன் ஆட லொன்பான்
　　ஆயிழைய ராயவர் கருப்பந் தரித்துமையி
　　　　னருளினால் அவர்கள் அருளும்
வீரவா குவையுமடல் வீரசே கரியையும்
　　　　வீரமா கேந்திர னையும்
　　வீரமா கேசனையும் வீரபுரந் தரனையும்
　　　　வீரராக் கதனை யுந்தோள்
தாருலாம் வீரமார்த் தாண்டனையும் வீரராந்
　　　　தகனையும் வீர தீரன்
　　தன்னையுந் தம்பிய ரெனக்கொண்டு தோலாத
　　　　சமரேறி வடிவே லினால்
தீராம் நிசிசரரை வென்றகரன் ஊராளி
　　　　செங்கீரை யாடி யருளே
　　திருமுருக அரிமருக வரதகுரு பரகுமர
　　　　செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) ஆரம் - மாலை. நவமணி - நவரத்தினம். ஆடல் ஒன்பான் ஆயிழையர் - நடனம் புரியும் ஒன்பது சத்திகள். கருப்பம் தரித்து - கருக்கொண்டு. அருளும் - பெற்ற நவவீரர்கள்:— வீரவாகு, வீரசேகரி, வீரமாகேந்திரன், வீரமாகேசன், வீரபுரந்திரன், வீரராக்கதன், வீரமார்த்தாண்டன், வீரராந்தகன், வீரதீரன். இந்த நவவீரர்களும் முருகக்கடவுளுக்குத் துணையாக அமைந்து நின்று சூரனை வெல்லுதற்குத் துணைபுரிந்தனர். உமாதேவியிடத்துத் தோன்றியமையின் தம்பியர் என்றனர். தார்உலாம் - மாலை விளங்குகின்ற. தோலாத - தோல்வி அடையாத. சமர்ஏறி - போரில சென்று. நிசிசரர் - இராக்கதர். கரனூர் ஆளி - திருவிரிஞ்சை நகர்த் தலைவ! (கரு)

கனமுக டுருவியெழு மகமேரு கிரியையொரு
　　　　கனகபம் பரமாகவே
　　கைக்கொண் டொரா யிரக் கதிர்முடிச் சேடனைக்
　　　　கயிறாக வேசுருட்டிச்

சகலலோ கமும்உறத் தழுவியிடு கமடமது
தன்னையொரு குறியாகவே
சங்கரர் மகிழ்ந்தருள வாவிகட் கிடையூறு
சாராமல் ஆடுகுமரா
மகரதோ ரணமறுகும் மாணிக்க மண்டபமும்
வயிடூரியப புரிசையும்
மரகதக் கோயிலும் பவளநித் திலமருவி
மதியின்மண் டலம்அளாவுஞ்
சிகரகோ புரமும்ஒளி தழையவாழ் கரனூர
செங்கீரை யாடி யருளே
திருமுருக அரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) ககனமுகடு - விண்உச்சி. கனகபம்பரம் - பொற்பம்பரம். சுருட்டி - சுருளசெய்து. கமடம் - ஆமை. மகரதோரணம் - மகரமீன் வடிவாய் அமைக்கப்பெற்ற தோரணங்கள். மறுகு - வீதி. புரிசை - கோட்டை. மருவி-பொருந்தி, அளாவி. வரத - வரத்தைக் கொடுக்கும் மேலான. (கஉ)

பரவையை உறிஞ்சிவட குலகிரி குலுங்கிடப்
பாய்ந்தண்டர் அண்டமெல்லாம்
பயமெழ விழித்துவிழி களிலனல் கொழித்துரக
பந்திமுடி திண்டாடவே
தரணியில் நடந்துதிசை மதகரி யுடன்பொருது
தாவிஆ காயமேவித்
தாரகை யுதிர்த்தமரர் தாருவை யழித்துவரு
தகரின்ஏ றியகுமரனே.
வரையில்குங் குமமரமும் மணநாறு சந்தனமும்
மதுவொழுகு புன்னாகமும்
வாழையின் கனியுமணி யாரமும் உடன்கொண்டு
மழைபொழியு மேகம்அளவாய்த்

திரையெறிந் தொருபாலி நதிவருங் கரனூர
செங்கீரை யாடி யருளே
திருமுருக அரிமருக வரதகுரு திபரகுமர
செங்கீரை யாடி யருளே.

(அ - ரை.) பரவை - கடல். வடகிரி - வடக்கிலுள்ள சிறந்த மலையாகிய மேரு. உரகபந்திமுடி-நாகவரிசை முடி. திசைமதகரி-திக்குயானைகள். தாரகை உதிர்த்து - நட்சத்திரங்களை உதிரச் செய்து. தாரு - மரம். அமரர் - தேவர். தகர் - ஆடு: நாரத முனிவர் யாகத்தில் தோன்றியது: வீரவாகுவால் கொண்டுவரப் பட்டது. மது - தேன். புன்னாகம் - புன்னை. பாலிநதி வரும் கரனூர - பாலியாற்றங்கரையின் பொருந்திய கரனூரனே. (கடு)

பங்கயத் திறையைமறை நூல்வினவி ஓமெனும்
பதவுண்மை நீசொல்லெனப்
பண்டவன் திண்டாடல் கண்டுகுட் டித்தளை
படுத்திவண் சிறையூடுவைத்

தங்கையிற் செபமாலை குண்டிகை தரித்தபய
வரதத்தொ டேகமுகமாய்
அன்றமர்ந் தண்டரண் டங்களையும் உண்டாக்கும்
ஐயனே துய்யஅரசே

கொங்குடைச் சண்டகா டவியும்இள வாழைக்
குருத்துமணி சேர்கரும்புங்
குளிர்தாழை யுங்கமுகு விடுபாளை யுங்கனக
கோபுரக் கொடியுமடவார்

செங்கையிற் கழலுமழை முகில்ளவு கரனூர
செங்கீரை யாடியருளே
திருமுருக அரிமருக வரதகுரு பரகுமர
செங்கீரை யாடியருளே.

(அ - ரை.) பங்கயத்திறை-தாமரைத் தலைவன். ஓம் எனும் பத உண்மை - ஓம் என்று சொல்லப்படுகின்ற பிரணவத்தின் பொருள். தளைபடுத்தி - விலங்கிட்டு. குண்டிகை - கமண்டலம். ஏகமுகமாய் - ஒருமுகமாய். உண்டாக்கும் - படைக்கும். கொங்கு -

வாசனை மணி - முத்து. செண்பகாடவி-சண்பகக்காடு. குருத்து மெல்லிலை. (௧௬)

வேறு

மாசது பொருந்தாத காசிப னுடன்கூடி
மாயைஅரு ளும்பாலராம்
வாளரி முகன்தாரு காசுர னெனும்வேழ
மாமுகன் நெடுஞ்சூரன்ஆ

காசமள வுஞ்சீற சோமுகி எழுந்தேழு
காசினியும் நொந்தேறவே
காவலது கொண்டான வானவர் பயந்தோடு
காலம்அவ ரஞ்சாமலே

வீசுதிரை யம்போதி நீர்சுவற மஞ்சான
வேடமொ டெதிர்ந்தோலமாய்
மேருகிரி யுந்தூளி யாகவரு வெஞ்சூரர்
வீழவிடு கெம்பீரனே

ஆசறு விரிஞ்சேச ஞர்அருள் இளங்காளை
யாடியருள் செங்கீரையே
ஆறுமுக முநதோளு மேரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே.

(அ - ரை.) மாசு - குற்றம். மாயை அருள் பாலர் - காசிபன் மனைவியாகிய மாயையிடம் தோன்றிய பாலர்கள். (1) அரிமுகன் (2) தாருகாசுரன். (3) சூரபத்மன். (4) அசோமுகி. மஞ்சு - மேகம். ஆசறு - குற்றமற்ற. ஏர் - அழகு. (௧௭)

கோடிமணி யந்தூணின் நாடக வரங்கூடு
கோதையா நடங்கூறவே
கோலமத னன்போலும் ஆடவர்கள் கண்டாசை
கூரவிடு வண்டோடியே

நாடியவர் மஞ்சான ஓதியி லலங்கார
நாண்மலர் முகந்தூதுவாய்
நாதமஅவர் நெஞ்சாசை யோதுத லெனும்பாவி
நாடுடைய கெம்பீரனே

பாடிமறை கொண்டாட ஆரமுதம் உண்டார்கள்
பாரவைகள் சலந்தூவமா
பாதக முறிந்தோட மாதவ ரெழுந்தார
வாரமுடன நின்றுடவே
ஆடிய விரிஞ்சேச ஞரரு ளிளங்காளை
யாடியருள செங்கீரையே
ஆறுமுக முந்தோளும் ஏரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே.

(அ - ரை.) ஆடக அரங்கு - நடனசாலை. கூர - செய்யமிக. ஆரவாரம் - முழக்கம். (கஅ)

தாறுடைய டைம்பூக மாதவர் வரும்போது
சாமரை தருஞ்சோலைசூழ்
தாழைமயி லின்சாயல் மாதரிடை மின்சோதி
தானென பலாந்தேடெலாம்
நாறுமண முங்கூடி நீறுபுனை அன்பாளர்
ஞானவிழி யின்பாணிபோல்
நாளுமரு வுந்தாது தேறல்சொரி யும்பாலி
நாடுடைய கெம்பிரனே
சீறுமர வம்பாதி மாமதி கருங்காவி
சீதவன சந்தாதுசெந்
தேனொழுகு மந்தாரை தாதகி செழும்பூளை
தேவர் தலை என்பாமையோ
டாறணி விரிஞ்சேச ஞரருள் இளங்காளை
யாடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளும் ஏரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே.

(அ - ரை.) தாறு - குலை. பூகம்-பாக்குமரம், கமுகு. சாயல் — அழகு. ஏடு - இதழ். பாணி - தரம், தன்மை. சீறும் - கோபிக்கும். சீதவனசம் - குளிர்ந்த தாமரை. தாதகி - ஆத்தி. என்பு ஆமை - எலும்பும் ஆமை ஓடும். (கக)

மாரமத னன்தேரும் ஆனையும் மகிழ்ந்தேறு
வாசியு மவன்காளமும்
வாளியும் நெடுஞ்சோலை ஈயநல வம்போடு
வார்சிலை தரும்பாரில்வாழ்

நாரைவள சந்தாவு மாரலிரை யென்றோடி
நாடிநுக ரும்போதெலாம்
நாவிலதில் வந்தூறு தேனுநுக ரும்பாலி
நாடுடைய பெம்பீரனே

பூரணி கொடுஞ்சூலி நீலியுமை கங்காளி
பூமகள் தொழுர்பூவைமால்
பூவிலுறை யுந்தேவன் மாமுனி கரன்தூய
பூசைபுரி யும்பாதனார்

ஆரணி விரிஞ்சேச ஞரருள் இளங்காளை
யாடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளும் ஏரொழு கிளங்காளை
யாடியருள் செங்கீரையே.

(அ - ரை.) மாரமதனன் - மாரனாகிய மன்மதன். தேர்-தென்றல் தேர். ஆனை - கடல். வாசி - கிளி. காளம் - குயில். வாளி - மலரம்பு. அம்போடு வார்சிலை - அம்புடன் நீண்ட கரும்பு வில். ஆரல் - ஆரல் மீன். நுகரும் - உண்ணும். கங்காளி - முழு எலும்பு அணிந்தவள். பூசைபுரியும் - வழிபடும். ஆர் - ஆத்தி. ஏர் ஒழுகு - அழகு பொழிகின்ற. (உ0)

நீதிபெறும் அன்பாளர் பாவவெயில் அண்டாமல்
நீழலரு ளுஞ்சோலையே
நீடிய கொடுஞ்சூர ராகிய கருங்காடு
நீறெழ எழுந்தீபமே

நாதமொடு கொண்டாடு வாரிருள் இரிந்தோட
நாடொறும் எழும்பானுவே
ஞானியர்கள் நெஞ்சான கோயிலும் அடங்காத
ஞானநிறை அம்பாரமே

மேதினியின் னொந்தாரை யேழ்பிறவி யின்தீர
மேவிட விடுந்தோணியே
மேதியில் வருங்கால ஞரெமை அடும்போது
வீடுதவு சஞ்சீவியே
ஆதிய விரிஞ்சேச ஞரருள் இளங்காளை
ஆடியருள் செங்கீரையே
ஆறுமுக முந்தோளும் ஏரொழு கிளங்காளை
ஆடியருள் செங்கீரையே.

(அ - ரை.) பாவ - துதிக்க. அண்டாமல் - நெருங்காமல். நீறுஎழ - சாம்பலாக. இரிந்து - பின்வாங்கி. பானு - சூரியன். தீரம்-ஓரம். மேதி-எருமை. சஞ்சீவி-உயிர் காக்கும் மருந்து. (உக)

---

## ௩. தாலப்பருவம்

[தாலாட்டைக் கவனிக்கும் பருவம். தாலாட்டு - ஒருவகை பாவகைப்பு. தாலாட்டையேல தாலாட்டையேல் என்னுமடுக்கு, தாலோ, தாலேலோ என இணைத்தும் தால் எனத் தனித்தும் வரீஇயிற்று. ஏழாந் திங்களில் நிகழ்வது.]

கரியுரி கஞ்சுக மாகப் புலிஅதள்
கடிகமழ் பட்டாகக்
கனசடை முடிமயிர் முடியா கச்சிவ
கங்கையொர் பங்காகப்

பரிமள மதிகே தகைமட லாகப்
பாம்பிரு குழையாகப்
படுகனல் விழிபொட் டாகச்சூலம்
பாணியில் வாளாகத்

தெரிய விளங்கிய நான்மறை யாகிய
தேசியில் ஏறிமுனுள்
செட்டி தனக்கு வழித்துணை யாய்வரு
சேவக னுளமகிழத்

தரியலர் உடலஞ் சாடிய வேன்முனி
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ.

(அ - ரை.) கரிஉரி - யானைத்தோல். கஞ்சுகம் - சட்டை. அதள் - தோல். கேதகை - தாழை. தேசி - குதிரை. செட்டி - தனபாலன் என்னும் இளகு வியாபாரி. தரியலர் - பகைவர். சாடிய - தாக்கிய. (உஉ)

செங்கையி லிடுவளை கலகல கலெனச்
செம்முலை வடம் அசையச்
சிலையெனும் நுதன்மட வனிதையர் குடைதரு
தெளிபுனல் நிறைவாவிப்

பங்கய மலரிடை இடையிடு பணிலம்
பவளச் செவ்வானிற்
பலபல முழுமதி நிலவிய வெனநிகழ்
பாலித திருநாடா
கங்கையும் அரவும் இளஞ்சிறு பிறையுங்
கதிர்விடு கொக்கிறகுங்
கடிகமழ் இதழியும் அறுகும் எலும்புங்
கனசடை முடிசூடுஞ்
சங்கரர் மகிழ்வொடு தழுவிய பாலக
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ.

(அ-ரை.) வடம் - மாலை. வளை - வளையல். சிலை-வில். குடைதரு - முழுகும். பங்கய மலரிடை - தாமரை மலரிடத்தில். பணிலம் - முத்து. பவளச்செவ்வான் - பவளம் போன்ற சிவந்த வானம். கடிகமழ் இதழி - மணங்கமழுகின்ற கொன்றை. சரவண பவ - சரவணம் என்பது நாணல். இமயமலையில் உள்ள நாணற் பொய்கையில் தோன்றியபடியினால் சரவணபவன் என்று அறுமுகக்கடவுள் பெயர் பெற்றனர். (௨௩)

களைகளை கடைசியர் முலைகளில் ஒழுகிய
களப நெடுஞ்சேற்றில்
கனவளை உழவர்கள உழவென உழுதொளி
கான்றிடு விதையெனவே
விளைவய லிடைவெண் தரளந் தூவிவி
ரிந்தொளிர் தாரகைசூழ்
வேள்குடை யாமதி போலத னூடு
விளங்கிய பானுடா
வளமலை மகளுமை கௌரி புராதனி
மரகத வல்லிகையான்
மார்பி லணைத்தமு தந்தர உண்டு
மகிழ்ந்து வளர்ந்தணியும்

தளையவிழ் நீபம் உலாவுபு யாசல
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ.

(அ - ரை.) களைகளை - களைகளைப் போக்குகின்ற. வளை - சங்கு. தொளிகான்றிடு விதை - சேறசொரிந்த விதை. தாளம் - முத்து. தாரகை - விண்மீன். மதி - திங்கள். பாளுடா-பாலி வளநாடனே!. தளை அவிழ் நீப உலாவு புயாசல - முறுக்கவிழ்ந்த கடப்ப மலர்மாலை அணிந்து விளங்குகின்ற தோளாகிய மலை யுடையவனே! (உ௪)

வாவியுள் மேதியி னந்திரை வாரியுள்
மழைசொரி கருமுகில்போல்
வந்து பணிந்திட வாளையொர் கன்றெண
மடிமுலை மேல்முட்டத்
தூவிய பால்மல ரோடை நிறைந்தணை
துன்றி வழிந்தோடச்
சோபன மாயுழ மள்ளர்கள் கால்வழி
தோறுமொ துக்கியிடப்
பூவிரை கமழும் பழனத் தலையிற்
புகுதச் சாலியெலாம்
பொன்னிற மாகி யெழுந்து வளர்ந்து
பொலிந்தொளி யொடுவானந்
தாவிய பாலிநல் நாடுடை ஆதிப
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ.

(அ - ரை.) வாவியுள் - தடாகத்தில். மேதிஇனம்-எருமைக் கூட்டம். வாரியுள் மழைசொரி - கடலிலே மழையைச் சொரி கின்ற. வாளை - வாளைமீன். அணைதுன்றி - அணைபொருந்தி. பூவிரை - மலர் மணம். சாலி - நெற்பயிர். கால் வழிதோறும் - வாய்க்கால்களாகிய வழிதோறும். (உ௫)

நிலனெனும் ஒருகுல மடமகள் சிறுபயி
ராயசி றார்களெலாம்
நின்று வருந்தி யிடாமல் முலைப்பால்
நேயமொ டீவதுபோன்

மலைதரும் அருவி விரைந்து வரக்குற
வாணர் இனங்களெலாம்
மகிழ்வுட னுடுகு றிஞ்சி நிலந்தனில்
வாழ்பசு மாமயிலா

பலபல முனிவர்கள் அடியிணை பரவிப்
பதமுடன் இசைபாடப்
பனிபடு சிறுபிறை ஒளியது மிளிரப்
பகிரதி முடிமீதில்

சலசல வெனநட மிடுமவர் பாலக
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ.

(அ-ரை.) சிறார் - சிறுவர். நேயம்-அன்பு. பதம்-சொல். பனிபடு - குளிர்ச்சிபொருந்திய. மிளிர - விளங்க. (௨௩)

மந்திரம் அறியாய் ஆகமம் அறியாய்
மாமறை நூலறியாய்
வழிபட அறியாய் இன்றுன் பூசை
வழுவா வகைசெயவே

முந்திய காணியை ஒற்றிவை என்று
மொழிந்திடு ஞாதியர்தம்
முடிசிறி யோனடி தீண்ட அவன்கை
முன்புதன் முடிதீண்டக்

குந்திய சிறுகால் நோவா ரச்சிவ
கொள்கையர் கொண்டாடக்
கோதறு சீதள நீரபி டேகங்
குறைவற வேபுரியச்

சந்திர மௌலி வளைத்தவர் பாலக
தாலோ தாலேலோ
சரவண பவகர புரியுறை அறுமுக
தாலோ தாலேலோ.

(அ-ரை.) வழுவாவகை - தவறாத விதம். குந்திய-உட்கார்ந்திருந்த, குந்தியிருந்த. கோது - குற்றம். (உஎ)

வேறு

செந்தமி ழாமலர் தூவிய வஞ்சமி
லாதத போதனர் சிந்தையொ ராலய
மாகிய சீமானே
செங்கதி ராரமு தூறிய வெண்கதிர் சூழ்தரு
மாமலை செணபெனை வேவிளை
யாடிய கோமானே

வெந்தழல் போல்வரு தானவர் செங்கறை
வாரியின் மூழ்கிவெ றுங்குடல் மாலிகை
சூடிய வேலோனே
விஞ்சையர் சேகரர் வாசவன் உம்பர்கள்
மாதவ ரோதிய மென்சிறு வாரிசம்
ஆம்இரு தாளோனே

அந்தர மாயுழ லாமலுன் அன்பர்க
ளோடெனை ஆளு'ம ருந்துணை யேயமு
தேகனி யேதேனே
அம்புய ஞலறி யாமறை யின்பொரு
ளானது காணுமோர் அஞ்சன மேயர
சேயடி யார்வாழ்வே

தந்தம தாசல மாமுக வெந்தைக
ணேசர்ச கோதர சண்டம யூரகு
ஞசல தாலேலோ
தண்டலை சூழ்கர ஞருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர ஞரருள்
பாலக தாலேலோ.

(அ - ரை.) தபோதனர் - முனிவர்கள். ஆலயம்-கோயில். செண்டு - பந்து. குடல்மாலிகை - குடல்மாலை. வாரிசம் - தாமரை. அஞ்சனம்-மை. தந்த மதாசல மாமுக எந்தை கணேசர் - கொம்புடைய மதமலையாகிய யானைமுகத்தையுடைய எந்தையாகிய கணபதி. சண்ட - வேகமுள்ள. தண்டலை - சோலை. (உஅ)

அண்டர்க ளூர்குடி யேறவும் அண்டிய
சூர்பொடி யாகவும் அலங்கையி லாழியில்
வேல்விடு மாசூரா
ஐம்புல னுழுழ லாமலும் அந்தக
னூர்பிடி யாமலும அன்றடி யேன்முடி
சூடிய சீர்பாதா

தெண்திரை வாவியில் வாளையெ ழுந்து
நிலாமதி மேவுசெ ழுங்கமு காடவி
தாவிய பானுடா
செங்கம லாசனி தாழ்உமை கொங்கையி
லூறிய பாலமு துண்டழ காய்விளை
யாடிய சீராளா

வண்டு முகாரித நாசிகு றிஞ்சிவ
ராளிபூ பாள மகிழ்ந்திசை யாயிவை
ஓதிய தார்மார்பா
மந்தர மோடொரு மால்வரை வெஞ்சமர்
கோலிய தாமென வன்களி றுனவை
பாய்மலை வாழ்தேவா

தண்டமி ழோதிய பாவலர் சஞ்சித
ஏழ்பவ வேரகளை சண்டம யூரகு
ஞ்சல தாலேலோ
தண்டலை சூழ்தர னூருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர னாருள்
பாலக தாலேலோ.

(அ - ரை ) ஐம்புலனுல் உழலாமலும் - மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளாலும் வருத்தத்தை

அடையாமலும், பொடியாக - தூளாக. அந்தகன் - எமன். செங்கமலாசனி - செந்தாமரையிலிருக்கின்ற திருமகள். மூகாரி, நாசி முதலியவை பண்வகைகள். சமர்கோலியது - போர் தொடங்கியது. சஞ்சிதம் - இருப்பான வினை. (உக)

மந்தர மாமலை மாதர்ம கிழ்ந்துற
வாய்வினை யாடிய மணடப மேடையின்
மேலொரு தேரோடே
வந்தெழு மாதவ ரைர்பரி யங்கெழு
வீணையி னோசை மகிழ்ந்திரு வார்குழை
யேறவு நடவாதே

அந்தர மேவிட ஆரமு தந்தரு
மாமதி யானத தன்பிற கேவர
வீரிய வேளானோன்
அங்கையில் வாளிகள் தூவிஅ ருந்தவ
யோகிகண் மீதுந டந்தம ராடிய
பாலிம காநாடா

செந்திரு ஏரகம் ஆடர வின்கிரி
ஈசுர மாமலை செங்கழு நீர்மலை
யாடக மூதாரா
செந்தில் அ ஞாலை கூடலு டன்கம
லாலய மேவிய செம்புய மாறுடன்
ஆறுள தாளாளா

சந்திர சேகரி யாயிதி கம்பரி
நாரணி தான்மகிழ் சண்டம யூரகு
ஞசல தாலேலோ
தண்டலை சூழ்கர ஞாருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர ஞாருள்
பாலக தாலேலோ.

(அ - ரை.) அந்தரம் - ஆகாயம். திருவேரகம்-சுவாமிமலை. செந்தில் - திருசசெந்தூர். கமலாலயம் - திருவாரூர். ஆயி-தாய். திகம்பரி - திக்கை ஆடையாயுடையவள். (கo)

பங்கய மோவர மோஉரு ஐங்கணை
யோபிணை யோபர வுங்கய லோகடு
வோவடு வோவேலோ
பைங்கமு நீர்மல ரோகரு குங்கட
லோநம னோபல பண்பயில் சேர்சர
மோமத வேள்வாளோ

வெங்கொலை யோகள வோவெனும் வஞ்சிய
ராசையி னலவர் வெங்கணை யேபுகழ்
வாரொடு கூடாதே
வெண்பொடி பூசியி டாவலு வஞ்சக
மூடர்கண் மேலினி வெண்கவி மாலையெ
னுவது பாடாதே

மங்கல மாகிய நூலறி வுங்குல
மானமும் மாளவ ரும்பசி யாலடி
யேனிட ராழாதே
வண்கதிர் ஆதவ னர்வெயின் மஞ்சினை
யேநிக ராகிம றைந்திடு வாழ்வெனும்
மாயையில் வீழாதே

சங்கையி லாவினை யேனைஉன் அன்பரோ
டாளுமு னேகர சண்டம யூரகு
ஞசல தாலேலோ
தண்டலை சூழ்கர னூருறை யுங்கும
ராமுரு காசிவ சங்கர னருள்
பாலக தாலேலோ.

**(அ - ரை.)** பிணை - மான். கரு - விடம். வடு - மாவடு. சரம் - அம்பு. வெண்பொடி - திருநீறு. நாஅது - நாக்கு. மானம் - பெருமை. மாள - அழிய, கெட. "மானம், குலங்கல்வி வண்மை அறிவுடைமை.........பத்தும் பசி வந்திடப்பறந்துபோம்" என்ற பாடற் கருத்தை நோக்குக. ஆதவன் - சூரியன். மஞ்சு-மேகம். சங்கை - அளவு.

(௬௧)

## ௬. சப்பாணிப்பருவம்

[இருகை யொருங்கு சேர்த்துக் கொட்டும் பருவம். இஃது ஒன்பதாந் திங்களில் நிகழ்வது.]

அண்டகூ டச்சிகரம் அடையத் துலங்கியணி
யானகமு காடவியெலாம்
ஆதவன் மணித்தேர் வரும்பொழுது பட்டுதிரு
மாரங்க ளைப்பூவைமார்

வண்டலா யத்தவர்வ குத்தபா வைக்கினிய
மாலையா கக்கோத்திடு
மங்கையர் முலைக்குமிரு செங்கையில் வலைக்குமவர்
வள்ளைமே வியகுழைக்குங்

கொண்டலா குங்கரிய கொண்டைக்கு மழுதாறு
கோவைக்கும் அழகானதோர்
கோகில மொழிக்குமவர் ஓதிமந டைக்குமயல்
கொண்டிளைஞர் தூதுவிடவே

சண்டவே ளூர்திமறு கெங்குமார் கரனூர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) அண்ட கூடச் சிகரம் - ஆகாய வட்ட உச்சி. கமுகாடவி - பாக்கு மரக்காடு. ஆதவன் - சூரியன். அங்கனை - பெண். வள்ளை - வள்ளை இலைபோன்ற காது. கொண்டல்-மேகம். கோகிலம் - குயில். ஓதிமநடை - அன்னநடை. (௩௨)

வேலியா குங்கமுக மெனுமடவி விடுபாளை
வீசுசா மரையாகவும்
வெண்சங்கம் ஓலமிடும் ஏரிமடை மந்துகண்
மேளவொலி போலிசையவும்

வாலிதாம் வயல்வனச மணிவிளக் கேந்தவும்
வண்டினம் பாடியிடவும்
வாடையுல வும்புதிய சோலைமண் டபநடுவின்
மாநடஞ் செயுமயூரங்

கூலியா கத்தரள மணியளந் திடும்உழவர்
கோதைமா ரருகிலணையக்
கோலமே னிச்சாயல் கண்டுநா ணிக்கரிய
கொண்டையது சாய்த்தொ துங்குஞ்

சாலிவா னளவிவளர் பாலிசூழ் கரனூர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) ஏரிமடை மதகு - குளத்தின் மடையிலுள்ள நீர்க்கதவுகள். வாலிது ஆம் - தூய்மையாகிய. வனசமணி விளக்கு - தாமரையாகிய இரத்தின விளக்கு. நாணி - வெட்கி. (கக)

துந்துவெனு மொருநிருதன் அண்டர்அண் டந்தனது
தோள்வலியின் ஆளவதனால்
துன்பசா கரமூழ்கி இன்பசா கரமீது
துயிலுமா லுடன்மொழியவே

அந்தமா லும்பர்களை அஞ்சலென் றவனுடல்
அழிக்கஆ யிரமுளரியால்
அர்ச்சிக்க வோராழி யன்றருள்வ ழித்துணைவ
ரங்கையாற் றழுவுமரசே

வந்தமத கரியொலியும் வாவுபாய் மாவொலியும்
மணிநெடுந் தேரினொலியும்
வந்தனைசெய் வார்கள்அர கரவென்னும் ஒலியுமட
மாதர்நட மாடுமொலியுஞ்

சந்தமறை யொலியுமலை யொலியுமிகு கரனூர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) துன்ப சாகரம் - துயர்க்கடல். துயிலும்-தூங்குகின்ற. அஞ்சல் - பயப்படாதே ஓர் ஆழி - ஒரு சக்கரம். வழித்துணைவர் - மார்க்க சகாயர். பாய்மா - குதிரை. நடம் - நர்த்தனம். சந்தமறை - இனிய வேதம். சிதம்பரி - சிவகாமி. (கஉ)

பொய்யா மொழிப்புலவர் மதுரையிற் சங்கம்
புரக்கவெழு நாள்மறவனுய்ப்
புறவற வளைத்தெனது பெயர்முட்டை பாடெனப்
பொன்போலு மென்றுபாட
வெய்யான பாலைக்கி தேலாது நும்பெயர்வி
ளம்பென விளம்பவவர்மேல்
விழுந்ததுளி யென்றெடுத் துப்பாடி அவர்நாவில்
வேல்கொடு பொறித்தசதுரா
மையான மஞ்சுதவழ் காவில்வா ழுதிர்புன்னை
மலரரும் பைத்தரளமா
வடபால்நதிக்கரையின் வண்டலம் பாவைமுலை
மார்பினி லணிந்துமகிழ்வாய்த்
தையாவி ழிச்சியர்கள் விளையாடு கரனூர
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) சங்கம் புரக்க - சங்கம் பேண. எழுநாள்-புறப் பட்ட காலத்து. மறவனுய் - வேடனுய். பொன்போலும் என்று - பொன் போலும் என்று துவக்கும் பாடலை. ஏலாது-பொருந்தாது

"விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும், வீழின்
எழுந்த, சுடர்சுடு மென்றேங்கிச்—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்திற் பெய்வளையுஞ் சென்றனளே,
பொய்யா மொழிப்பகைஞர், போல்."

வேல்கொடு பொறித்த சதுரா - வேலைக்கொண்டு எழுதிய அறி வுடையவனே. தரளமா - முத்தாக. தையாவிழிச்சியர் - தையாத கண்களையுடைய சிறுமியர். (௩௫)

பரமர்தரு மாதியுஞ் சிவஞான தானமும்
பரவும்ஐ வகைவேள்வியும்
பலபலவி சிட்டகா ரணமோடு தருமமும்
பாதகமு முறைசொர்க்கமும்

நரகஇய லுஞ்சனன மரணஇய லுஞ்சொர்க்க
நரகபே டத்தினியலு
ஞானபோ தமுமினிய பரிகார மாம்இயலு
நற்கோபு ரத்தினியலுங்
கரகமல முடிமிசை குவித்துமன முருகியிரு
கண்கள்நீர் நின்றுசொரியக்
கடலேழும் அங்கையிற் கொண்டகுறு முனியன்று
கயிலையங் கிரியின்மேவிச்
சரணதா மரைதொழ மொழிந்தகர ஞாராளி
சப்பாணி கொட்டியருளே
சங்கரி திகம்பரி சிதம்பரி தருங்குமர
சப்பாணி கொட்டி யருளே.

(அ - ரை.) ஐவகை வேள்வி - ஐந்து வகையான யாகம். அவை தேவ யாகம், பிரம யாகம், பூத யாகம், மானுட யாகம், பிதிர் யாகம் என்பன. இயல் - தன்மை. பரிகாரம் - நிவர்த்தி. குறுமுனி-அகத்தியர். சரண தாமரை-அடித் தாமரை மலர். (கூ௬)

வேறு

துக்கம்அக லத்தினநி னைப்பவர்ம னத்திருள்து
ரத்தியம ணித்தீபமே
சுற்றியபி றப்பினில்இ யற்றியவி னைத்திடர்து
வைக்குமொரு சிற்றுளையே
மைக்கடுவ டக்கியவ ழித்துணைவர் பொற்புயம
லைக்கணியு முத்தாரமே
மற்றுங்க ரற்றசுரு திப்பொருள்க லைப்பொருள்ம
ணக்குமொரு கர்ப்பூரமே
செக்குருகு சிட்டர்கள்கு ளித்திடஅ ருட்புனல்நி
றைத்தருளு செட்டோடையே
சித்தம்உட்த திக்குளுத யப்பரிதி யிற்சுடர்நி
கழ்த்தியம ணிக்கோவையே

குக்குடமூ யர்த்தருள்தி ருக்கரபு ரத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தவசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே.

(அ - ரை.) மணித் தீபமே - இரத்தின விளக்கே! வினைத் திடர் - கருமமேடு. மைக்கடு - நீலவிடம். சுருதி - வேதம். உத்தி-கடல். குக்குடம் - கோழி. (௩௭)

புற்றரவு கச்சென இசைத்தவர்ம ழுக்கனல்பொ
றுத்தகம லப்பாணியார்
புத்தமுதி னைச்சுரர்க ளுக்குதவி நச்சதுபொ
சித்தகரு ணைப்பார்வையார்

வெற்றியிட பக்கொடிப டைத்தவர்ந டத்தொழில்வி
னைத்தஇரு பொற்பாதனுர்
வித்தகர்வ ழித்துணைவர் பொற்புயம ணைத்தவள்வி
ருப்பமுறு நற்பாலனே

சிற்றிடைவ ருத்துசிக ரக்கனத னத்தியர்தெ
றித்தகள பச்சேறுசூழ்
தெற்றிகள்பு லர்த்தமது ரத்தமிழ்ம ணத்திறைஞ
சித்தசர்ம ணித்தேரதூர்

கொற்றமுள நற்கரபு ரத்தறுமு கத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தஅசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே.

(அ - ரை.) பொற்புயம் அணைத்தவள்-பொற்றோளில் அணைக் கப்பட்டவளான மரகதவல்லி. தனத்தியர் - கொங்கையுடையவர். தெற்றி - திண்ணை. கொற்றம்-வெற்றி. (௩௮)

கைத்தலம ழுப்பெறுக ணத்தவர்க ளுற்றகயி
லைத்திரும லைச்சூழலோ
கட்டழகு பெற்றொளிப ரப்புமது மட்டுடைய
கற்பகம லர்ச்சோலையோ

எத்தலமு மெப்பொருளு மிப்படியெ னச்சொல்மறை
யிற்பொருளி னப்பாலுமோ
இக்குவிலெ டுத்தமத னைப்பொடிப டக்கணிலெ
ரித்தவரி டப்பாகமோ

நித்தியம்அ லத்தனுவெ னத்தவநி லைக்கணில்நி
னைப்பவர்ம னக்கோயிலோ
நித்தமும்உ னக்கிடமெ னப்பரவு பத்தர்தொழு
நித்தியக ளிப்பாகவே

கொத்தலர்வ யற்கரபு ரத்தறுமு கத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தஅசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே.

(அ - ரை.) சூழல் - சூழ்ந்திருக்குமிடம். மதுமட்டு - கள் வாசனை. மதுமட்டுமீமிசையுமாம். இக்குவில் - கரும்புவில். தனு - உடம்பு. நித்தியம் அல-உறுதியானது அல்ல, நிலையானது அல்ல. கொட்டம் - தவறு, பொல்லாங்கு. கொத்தலர் வயல் - பூங் கொத்துக்கள் கொத்துக்களாக மலர்ந்திருக்கின்ற வயல்கள். (௩௧)

கற்றவறி விற்பெரிய அப்பரமு ருட்டறிவு
கற்றவர்கள் கற்றாணிலே
கட்டிஉத திக்குள்விட அப்பொழுத வர்க்கதுக
டக்கஅரு ளைத்தூவுவார்

எற்றுபுனல் மத்தம்இத ழித்தொடையெ ருக்கறுகி
ருக்குமுடி யெட்டாமலே
யொக்குமத லைக்குயரு முச்சியைவ ளைத்தவரெ
டுக்குமிள மைப்பாலனே

உற்றிடும்உ ழத்தியர்மு கத்தில்விழி நித்திலம்உ
திர்க்குநளி னப்பூவின்மேல்
உற்பலமெ னத்திகழ்வ தற்குழவர் வெற்றுளமு
ருக்கவரு மக்கோலவேள்

கொற்றவமர் முற்றியதி ருக்கரபு ரத்திறைவ
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தஅசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே.

(அ - ரை.) அப்பரை - திருநாவுக்கரசரை. கற்றூண் - கல்லாகிய தூண். அது கடக்க - அக்கடலைக் கடக்க. மத்தம் - ஊமத்தம். முடி - தலை. விழிநித்திலம் - விழிமுத்து. நளினப்பூ - தாமரை மலர். உற்பலம் - குவளை, நீலோற்பலம். கரபுரம் - கரனூர். (௪0)

அப்புடைவ யற்கயல்கு தித்தெழஉ திர்த்தகம
லத்தரள நற்சோதியா
லற்றையிரு ளைக்கடிய மைக்குவளை யிற்றுகள
தைப்பொருதி டக்காமவேள்
செப்புமதி முற்றிருளி லுற்றதென வட்டமுள
செப்பிளமு லைப்பாவைமார்
சித்தமும யக்கவிடர் சித்தமுமு றப்பொருதி
ருக்கரபு ரத்தேவனே
முப்பழமி தப்படுபொ ரிக்கறிப ருப்புநெய்மு
ளைத்துவரை யிக்கோடுதேன்
முக்கணவ லப்பமடை பிட்டுமது ரித்தவடை
முப்பொழுது முட்டாமலே
கொப்புழ்நல்வ யிற்றிலடை யக்கொளுமவ றகிளவல்
கொட்டியருள் சப்பாணியே
கொட்டமொடெ திர்த்தவசு ரக்குழுவை வெட்டுமுனி
கொட்டியருள் சப்பாணியே.

(அ - ரை.) அப்புடை-நீர் உடைய. இருளைக் கடிய-இருளைப் போக்க. விடர் - காமுகர். முப்பழம்.வாழை, மா, பலாக் கனிகள். இதப்படு - இனிமையான. முட்டாமல் - தட்டாமல், குறையாமல் அடையக்கொளும் அவற்கு இளவல் - அடையும்படி (நிறையும்படி கொள்கின்ற விநாயகக் கடவுளுக்கு இளையவனாகிய முருகன்). (௪௧)

---

# ரு. முத்தப்பருவம்

[குழந்தை முத்தம் தருமாறு தாய்தந்தை முதலியோர் வேண்டுதல். இது பதினொன்றாந் திங்களில் நிகழ்வது.]

சிலையுந்திகழ் பிறையுந்தொழு சிறுவாணுதல் மடவார்
சிகரக்கன தனமொன்றிய செம்மாமணி யொளியை
மலையின்மிசை யெழும்ஆதவ னென்றம்புய மலரும்
வயல்சூழ்கர புரிமேவிய மயிலேறிய வரதா
கலையின்படி நடவாதகொ டுஞ்சூரரை அழிக்குங்
கனதோள்வலி பெறவேசிவ கயிலைக்கிரி யுடையாள்
முலையுண்கனி வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே.

(அ - ரை.) சிலையும் திகழ் பிறையும் தொழுசிறு வாள்நுதல் மடவார் - வில்லும் விளங்குகின்ற இளம்பிறையும் வணங்குதற்குக் காரணமான சிறிய ஒளி பொருந்திய நெற்றியையுடைய இளம் பெண்கள். ஆதவன் - சூரியன். கயிலைக்கிரி உடையாள் - பார்வதி. (சஉ)

மாலானவர் பாலாழியுள் வளர்கின்றவ ளம்போன்
மழைமாமுகில் தவழுந்துய மணிமேடையி லேறப்
பாலார்மொழி மடவாரெறி செம்பந்துடல் பட்டே
பணிவான்மதி செம்மைப்படு பாலித்திரு நாடா
வேலாவுமை பாலாசிவ சீலாவனு கூலா
வேதாசுரர் நாதர்மயில் வீராகர னாரா
மூலாகம வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே.

(அ - ரை.) மால் - திருமால். பாலாழி - திருப்பாற்கடல் மழைமாமுகில்-மழையைப் பொழியும் கரிய மேகம். ஆர்-போன்ற. செம்மைப்படு - சிவப்படைகின்ற. மூலாகம வாயால்-மூல ஆகமம் கூறிய வாயினால். (சங)

தீரக்கவி பாயப்பல தென்னம்பழ மடுவிற்
றிரளாய்விழ நெடுவாளைசி னத்தோடெதிர் நாடிப்
பாரப்புயல் தாவித்திகழ் பலவைப்பொரு துதிரும்
பலவின்சுளை யுடனேவரு பாலித்திரு நாடா

வீரப்பசு மயிலாகர புரமேவிய வரதா
விண்ணோர்தொழும் இறைவாசதுர் வேதப்பொருள்கமழு
மூரற்றிரு வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே.

(அ - ரை.) கவிபாய - குரங்கு பாய்தலால். மடு - குளம். புயல்தாவி - மேகத்திலே தாவி. பலவைப் பொருது - பலாமரத்தைத் தாக்கி. பசுமயில் - பச்சைமயில். மூரல் - பல். (சச)

மற்றாரும்ஒவ் வாமாதர்கண் மறுகெங்குமி றைக்கு
மணமார்பனி நீரோடிவ யற்போயது பாயப்
பொற்றாமமெ னச்சாலிவ ளர்ந்தேறிய பாலிப்
புனல்வேலையெ னச்சூழ்கர புரிவாழினை யோனே
சிற்றாரமு தச்சோமன்மு டிச்சூடிந லஞ்சேர்
சேமேல்வரும் ஈசற்குப தேசந்தனை யருளு
முற்றாகம வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே.

(அ - ரை.) மற்றாரும் ஒவ்வா மாதர்கள் - அழகால் பிறர் எவரும் தமக்கு ஒப்பாகாத பெண்கள். பனிநீர் - பன்னீர். பொற்றாமம் - பொற்பூமாலை. வேலை எனா - கடல் என்னும்படி. சோமன் - சந்திரன். சேமேல் - இடபத்தின் மீது. உபதேசம் - பிரணவப் பொருள் கூறியது. (சரு)

கதிரானிறை செஞ்சாலியும் வயல்மேவுக ரும்புங்
கனசங்கமு மதியுந்திகழ் கமுகாடவி மானும்
எதிராதவ னெழுபோதல ருந்தாமரை மலரும்
எரிமுத்தம ளிக்குங்கர புரிவாழினை யோனே
அதிராஅருள் முகிலேநல மழியாமத களிறே
அறுமாமுக வரசேதொழு மடியார்பெரு வாழ்வே
முதிராமணி வாயாலொரு முத்தந்தனை யருளே
முருகாஅரி மருகாவொரு முத்தந்தனை யருளே.

(அ - ரை.) செஞ்சாலி - செந்நெல். மானும் - நிகர்க்கும். அலரும் - விரிகின்ற. அதிரா - முழங்காத. முதிரா - முற்றாத இளமை வாய்ந்த. (சசு)

**வேறு**

அருணாச லப்பதியை நினைவார்த மக்குமொளி
யழியாத பொற்ச பையைநேர்
அறிவார்த மக்குமொரு கமலால யத்திலுட
லடைவார்த மக்கும் அலைநீர்
வருகாசி யிற்சனனம் ஒழிவார்த மக்கும்அருண்
மறைஞான முத்தி தமதூர்
மறுகேந டக்கிலருள் புரிவார்வ ழித்துணைவர்
மகிழ்வாய்அ ணைக்கும் அரசே
குருமாம ணிக்கிரண வெயில்வீசு முச்சியது
குவிகோபு ரத்தி லழகார்
கொடிமேலி ருக்குமுழு மதிதேவ ரிட்டஒரு
குடையாமெ னத்தி கழவே
திருநாள்பெ ருத்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிகர் அறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே.

(அ - ரை.) அருணாசலப்பதி-திருவண்ணாமலை. பொற்சபை-பொன்னம்பலம்; (தில்லையிலுள்ளது). கமலாலயம் - திருவாரூர். உடல் அடையார் - பிறவாதவர். சனனம் ஒழிவார் - இறப்பார். இஃது அண்ணாமலை நினைக்க, அம்பலம் தரிசிக்க, ஆரூர் பிறக்க, காசி இறக்கமுத்தி கிடைக்கும் என்றபொன்மொழியைப்பின்பற்றியது. இவ்விடங்களினால் அடையும் முத்தி திருவிரிஞ்சை நகர் வீதியில் நடக்கின்றவர்களுக்குங் கிடைக்கும் என்றுஅருமையாய்க் கூறப்பட்டுள்ளது. முழுமதி - நிறை திங்கள். திகழ-விளங்க. சிறு தாமரை - சிறிய தாமரை மலர். நிகர் - ஒப்பான. (௭௭)

உருகாம னத்திமிரம் உடைமேனி ரக்கமுட
னொருபூத ருக்கும் உதவேன்
உலகோர்ப ழித்தசெயல் புரிவேனி டர்க்கடலி
லுழல்வேனி ரக்க எழுவேன்

மருவார்க ருத்தகுழன் மடமாதர் கட்கடையின்
மயலாலி ளைத்து மெலிவேன்
வழிபாடும் அர்ச்சனையும் அறியேனு ளக்கமல
மலர்மீதி ருக்கு முருகா
அருகார்வ யற்குவளை அளிபாடி யிட்டபொழு
தழகாயொ ழுக்கி யிடுதேன்
அடியாரி சைக்குருகி விழிநீர்து ளித்தருளு
மதுவாமெ னத்தி கழவே
திருவார்செ ழித்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிகர் அறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே.

(அ - ரை.) மனத்திமிரம் - மனவிருள். இரக்க - யாசிக்க. மருஆர் - வாசனை பொருந்திய. வார் என்று பிரித்து - நீண்ட என்பதுமாம். மயல் - மோகம். மெலிவேன் - தளர்வேன். வழி பாடும் அர்ச்சனையும் - திருக்கோவிலுக்குச் சென்று வழிபடுதலும் பூசனை புரிதலும். அளி - வண்டு இசைக்கு உருகி-இசைப் பாட லுக்கு இளகி. கள் - நீர்த்துளி, கண்ணீர்த்துளி போன்றதாம் என்க. (௪௮)

அரைமீது கட்டுநவ மணிநாணு நெற்றிதனி
லழகாய பொற்சு டிகையோ
டணிநீறு முத்துவடம் இசைமார்பும் நற்செவியி
லசைவாய பொற்கு ழையுநீள்
வரைவார ணக்கொடியும் மயில்வாக னப்பரியும்
மணநாறு சிற்றடியுமே
மலமாயை விட்டகல மறவாத பத்தருடன்
வறியேனை வைத்த தலைவா
விரைவாயொ லித்தபுனல் மதகூடு பட்டதிர
விசையாகி முட்டி இளநீர்
விழவேகு தித்ததிக வலைவாண ரைக்கறுவி
விளையாடி யிட்ட கயல்சூழ்

இரைவாவி யுற்றகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிகர் அறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே.

(அ-ரை.) பொற்சுடிகை - பொற்சுட்டி. குழை - குண்டலம் வாரணக்கொடி - சேவற்கொடி. பரி - குதிரை. விசை - வேகம். வலைவாணரைக் கறுவி-வலையால் மீன்பிடி வாழ்வுடையவர்களைச் சினந்து. (௬௧)

தவநாவ லிற்சடையன் மகவாய்உ தித்திறைவர்
தடையான்ம ணத்தொரு வியே
தமிழ்பாடி நற்பரவை யொடுகூட விட்டவிறல்
தனையோதி நெற்கு வையெலாம்
நவமாவ ழைத்தருளி நிதியாக மட்சிலைகள்
நதியூடு விட்ட பொருள்தான்
நலமார்கு ளத்தில்வர அருளால்நி னைத்தமலர்
நடமாடும் ஒற்றி நகர்வாழ்
அவள்தோள்அ ணைத்தரனை யொருதூது விட்டருகில்
அலராரெ ருதுக்கி யடைவாய்
அவிநாசி யிற்கரவு நுகர்சேய ழைத்தருளு
மவரோடு முத்த குதியோர்
சிவநூன் மணத்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குநிக ரறுமா முகக்குழவி
திருவாயின் முத்த மருளே.

(அ-ரை.) தவநாவலிற் சடையன் மகவாய் - சிறந்த நாவலூரில் சடையப்ப சிவாசாரியர் புத்திரராய். தடையாய் - தடுத்தாட்கொண்டதால். மணத்து ஒருவி - திருமணத்தைச் செய்யாது நீங்கி. இது, சைவசமய குரவர் நால்வருள் ஒருவராய், திருநாவலூரில் சடையப்ப சிவாசாரியருக்கு இசை ஞானியார் வயிற்றுதித்துப் பின் புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் மகளைத் திருமணம் புரியநின்ற காலத்து, சிவபெருமான் முன்கூறியபடி முதிய

வேதியராய் வந்து, இம்மணமகன் எனக்கு அடிமை என்று பழைய ஆவணங்காட்டி மணத்தையும் தடுத்துத் திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறைக் கோயிலுள் மற்றை யந்தணர் முன் ஆட்கொண்டு 'பித்தாபிறை சூடி' முதலிய திருப்பதிகங்களைப் பாடியருள்வித்த வரலாற்றைக் குறிப்பது. பரவை - பரவை நாச்சியார். இவர் திருவாரூரிற் கணிகையர் குலத்துதித்துச்சுந்தரமூர்த்தியை மணந் தவர். நெற்குவை - நெற்குவியல். பஞ்சம் ஏற்பட்ட காலத்தில் பரவையார் மனமகிழும்படி, குண்டையூர் வேளாளர்மூலம் நெற் குவியல்களைச் சிவபூதங்களின் துணையால் திருவாரூரில் சேர்க்கப் பட்டது. இது சுந்தரர் "நீள நினைந்தடியேன்" என்ற பாட்டில் 'குண்டையூர்ச் சிலநெல்லுப் பெற்றேன்' என்ற முறையில் குறித் துள்ளார். மேலும் சுந்தரர் திருமுது குன்றில் இறைவனிடம் பெற்ற பொன்னை அவர் சொற்படியே மணிமுத்தாற்றிலிட்டுப் பின் திருவாரூரில் கமலாலயக் குளத்தில் வந்துசேரப் பரவை கையிற் கொடுத்தனர். ஒற்றி நகர்வாழ் அவர் - திருவொற்றியூரில் ஞாயிறுகிழார் மகளாய்த் தோன்றிக் கன்னிமாடத்திருந்த சங்கிலி யார் என்னும் பெயர் பூண்டவள். அரனைத் தூதுவிட்டு - சுந்தரர் இரண்டாவதாகச் சங்கிலியாரை மணந்தமையால் ஊடிய பரவை யார் ஊடல் தீரும் வகைக்குத் தியாகராசரையே நள்ளிருளில்தூத ராகப் போய்ச் சமாதானப்படுத்தி. அலர்ஆறு-இறைவனைத் தூது விட்ட பழிமொழியை ஏயர்கோன் கலிக்காமனார் சொல்லாதிருக் கும்படி அவர்க்கு வயிற்று நோய் வருவித்துப் பின் சுந்தரர்சென்ற பின் தீர்ந்து நண்பராக அமரும்படி செய்தது. அவிநாசியில் கரவு நுகர்ச் சேயை அழைத்து - அவிநாசியிற் சென்ற சுந்தரமூர்த்தி, அங்குத் தன் மகனை ஏழு வருடங்கட்கு முன் ஊர்ச்சிறுகுளத்தில் முதலை விழுங்கியதால் அழுது புலம்பிய அந்தண மாதைத்திருப்தி செய்வான், இறைவனருளால் தேவாரம் பாடி நீரற்ற குளத்தில் நீரும் அங்கு முன் குழந்தையை விழுங்கிய முதலையும் வரச்செய்து, பின் அம் முதலையே 12 வயதுள்ள பாலனை உமிழும்படி செய்து பெற்றவளிடம் பிள்ளையை ஒப்படைத்து எதிர்வீட்டிளங் குமரனைப் போல் சுபச்சடங்கு செய்து மகிழ்ந்திருக்கச் செய்தனர். முத் தகுதியோர் - சரியை கிரியை ஞானம் ஆகிய நிலையை புணர்த்திச் சிறந்த திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய மூவர்.

(௯०)

சதுமாமு கற்குமிகர் சிவநாதர் பெற்றசிவ
தருமாஉ னக்கு முறைநீ
தவரும லிப்பொழுது பரிபூச னைக்கிளையை
தருகாணி யொற்றி தரவே
இதுதாய்த னக்குமொழி யெனுஞாதி கட்கிசைய
இயலாவு ரைக்க அரனே
இனியேது திக்குமிலை யெனவாடு மப்பொழுதில்
இளையாய்ம னக்க னவிலே
விதவேதி யத்தலைவ னெனவாயு ரைத்தபடி
விடிபோது தற்சு தனைநீர்
விடமுழ்கி டச்சுருதி யறிவோதி அப்புமுடி
விடவேசி ரத்தை வளைவார்
இதமாய்வ ளர்த்தகர புரிவாழ்தி ருக்குமர
திருவாயின் முத்த மருளே
சிறுதாம ரைக்குமிக ரறுமாமு கக்குழவி
திருவாயின் முத்த மருளே.

(அ - ரை.) சதுமாமுகன்-நான்கு பெரிய முகங்களையுடைய பிரமன். இளையை-இளையவனுயிருக்கின்றாய். காணிஒற்றிதர - வயலை ஒற்றியாக வைக்க. ஞாதிகட்கு - தாயாதிக்காரர்களுக்கு. இசைய - ஏற்க. திக்கு - துணை. வேதியர் தலைவன் என-மறைத் தலைவன் என்னும்படி. வாய் - உண்மை. விடிபோது - விடியற் காலம். நீர்விட - நீரையூற்ற, சுருதி அறிவு ஓதி - வேதமந்திரம் சொல்லி, அப்பு முடிவிடவே - நீரைத் தலையில் அபிடேகிக்க. வளைவார் - சூழ்ந்துகொள்பவர். இதம் - உறுதி. (௨௧)

## கூ. வருகைப்பருவம்

[சிறு நடையெய்தும் பருவம். இது பதின்மூன்றாந் திங்களில் நிகழ்வது.]

செந்தா மரையிற் சிறுசதங்கை
சிலம்பக் குதம்பைக் குழைமின்னச்
செம்பொன் அரைஞாண் நெகிழ்ந் தொளிரச்
சிகரக்குடுமி யிசைந்தசைய

வந்தா தரவின் மணிவாயான்
மழலைகாட்டி மரகதத்தாய்
மடிமீ தேறி முலையுண்டு
வளர்ந்து விரிஞ்சைப் பதிவாழுங்

கந்தா வருக மணங்கமழுங்
கடம்பா வருக அசுரேசர்
காலா வருக பன்னிரண்டு
கையா வருக வழித்துணைவர்

மைந்தா வருக மயிலேறு
மன்னா வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே.

(அ - ரை.) குதம்பை - காதணி. காலா-காலனே. ஒரேயடியில் காலா கையா என வருவது முரண்தொடை. (கூஉ)

உருகா மனமுஞ் சிவஞான
முணரா வறிவும் உனதுபுக
ழோதா நாவும் ஓதக்கேட்
டுவந்தே இனிய நதிபோலப்

பெருகா விழியும் உடையேனைப்
பிறவிக் கடலில் வீழாமற்
பேணி யெடுத்திங் கெனதுள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழு

முருகா வருக சதுர்வேத
முதல்வா வருக வினைதீர்க்கு
முனைவா வருக மலராறு
முகவா வருக திருமாலின்

மருகா வருக மயிலேறு
மன்னா வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே.

(அ - ரை.) சிவஞானம் - கடவுளை யறியும் அறிவு. பிரியா-விலகாத. முனைவா - முதல்வா. (௩௩)

கண்ணா லுனது திருவடியைக்
கண்டா தரவு பெருகியிரு
கையால் தொழுதுன் திருக்கோயில்
காலால் வலஞ்செய் துனதுபுகழ்

பண்ணா லுருகிப் புகழ்ந்துகண்ணீர்
பாயா எனையுந் தாயாகப்
பரிந்துவளர்க்கும் பெருங்கருணை
படைத்து விரிஞ்சைப் பதிவாழும்

அண்ணல் வருக வுலகமுழு
தாண்டாய் வருக கதிருரும்எம்
ஐயா வருக வாறுமுக
அப்பா வருக விளங்குகதிர்

வண்ணா வருக மயிலேறு
மன்னா வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே.

(அ - ரை.) ஆதரம் - விருப்பம். வலம்செய்து-வலம் வந்து, சூழ்ந்து. அண்ணல்-பெருமையுடையவனே. கதிர்வண்ணா-கதிர் வண்ணனே; செந்நிறமுடையவனே. தெய்வசிகாமணி - தெய்வங்கட்கெல்லாம் முடிமணி போன்றவன். (௩௪)

பூந்தா மரையின் மலருழக்கிப்
புதுப்பூங் குவளை நறவருந்திப்
பொய்கைக் கரையி லினிதேறிப்
பொழிலில் துயிலு மேதியினங்

காந்தா ரப்பண் அளிபாடக்
கேட்டு முலையிற் சொரியும்பால்
கரும்புக் கழகு பெறப்பாயக்
கமழும் விரிஞ்சைப் பதிவாழுஞ்

சேந்தா வருக மரகதத்தின்
சிறுவா வருக குறிஞ்சிநிலத்
தேவா வருக இடரொழிக்குஞ்
செல்வா வருக பசுங்கடம்பின்

மாந்தா தணிந்து மயிலேறு
மன்னு வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே.

(அ - ரை.) உழக்கி - கலக்கி. நறவு - தேன். பண்-இசை. குறிஞ்சி நிலத்தேவா - குறிஞ்சிநிலத் தலைவனே. குறிஞ்சிநிலம் மலையும் மலைசார்ந்த இடமும். 'சேயோன் மேய மைவரை உலக மும்' என்பது தொல்காப்பியம். சேந்தா - சேந்தனே, முருகனே. கடம்பின் - கடப்ப மலரின். வண்டுக் கூட்டங்கள் பாடும் இசையைக் கேட்டு, எருமைக் கூட்டங்கள் சொரியும் பால் கரும்புக்குப் பாய விளங்கும் விரிஞ்சை என்க. (௩௩)

தேவே வருக திருவிரிஞ்சைச்
சேயே வருக தெவிட்டாத
தேனேவருக சுவை அமுதத்
தெளிவே வருக கதிகொடுக்குங்

காவே வருக பெருங்கருணைக்
கடலே வருக கலைபொழியுங்
காரே வருக மரகதத்தின்
கண்ணே வருக விண்ணோர்கள்

கோவே வருக பெரியகுணக்
குன்றே வருக உபதேச
குருவே வருக சிவஞானக்
கொழுந்தே வருக ஒருகரத்தின்

மாவே லெடுத்த பரப்பிரம
வடிவே வருக வடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே.

(அ - ரை.) சுவை - உருசி. கலைபொழியும் கார் - எல்லாக் கலை மழைகளையும் சொரிகின்ற மேகம். மாவேல்-வேற்படை.(௫௬)

வேறு

அரிய வடவரையை நிறுவி எழுமதியை
அடைக லெனஅரவு கயிறதா
அமுத மெனமுனிவ ரமரர் அரிபிரமர்
அசுர ரிவர்கள் கடல்கடையுநாள்

எரியி னுடல்கருக அரியி னுடல்கருக
இரவி யுடல் கருக உலகெலாம்
எரிய வெரிபுகையின் மறைய வளர்திசையின்
இபம தலறிவிழ வரையெலாங்

விரிய எழுசலதி கமர்கள் படவருணன்
மிகவு மெலியமுகி லுருவுபோல்
விரவி யடர்தலொடு பரவி யெழுகொடிய
விடமும் அமுதமென மிசையவே

கரிய மிடறுடைய விமல ரருள்குமர
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடும அதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே.

(அ - ரை.) வடவரை - மந்தரமலை. அரவு - வாசுகி. கடையும்நாள் - கடைந்த காலத்தில். எரி - நெருப்பு. அரி - திருமால். திசையின் இபம் அது அலறிவிழ-திக்குயானை பிளிறிவிழ. சலதி

கமர்கள்பட - கடல் வெடிப்படைய. முகில் உருவு - மேகநிறம். அடர்தல் - நெருங்குதல். மிடறு - கழுத்து. தேவர்களைக் காக்கும் பொருட்டு நஞ்சையுண்டதால் கண்டங்கறுத்ததென்க. (கஎ)

முனிவர் பரவிஅர கரென அமரர்தொழ
முயலன் முதுகுநெற நெறெனவே
முடியில் இளமதியும் நதியு மசையமறை
முரல முழுதும்உடல் புளகமாய்

இனிய அரவுபுலி பணிய அடியர்மனம்
இளகி விழிகள்மழை பொழியவே
யிரவி லழகுபெற நடன முடுகியிடும்
இறைவ ரருள்குமர வருகவே

புனித அமுதமெனும் நதியில் வருகயல்கள்
புடையில் உழும் உழவர் வெருளவே
புதிய கதலிகனி உதிர வெழவுழுத
புழுதி தனிலொழுகு மதுவினுற்

கனியு மளறுபடு பழன முடையசிவ
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடு மதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே.

(அ - ரை.) முயலன் - முயலகன். இவன் தாருகாவனத்து இருடிகள் சிவமூர்த்தியைக் கொல்ல அபிசார யாகஞ்செய்ய அதில் எழுந்த பூதன்: இவன் சிவமூர்த்தியிடம் தன் உக்கிர வுருவுடன் வரச் சிவமூர்த்தி இவனை முதுகில் ஊன்றி மிதித்து இடப்பையொடித்தனர். நடனம் - கூத்து. முடுகி - விரைந்து. புடை - பக்கம். வெருள - மயங்க, அஞ்ச. கதலி - வாழை. அளறுபடு - சேறு உண்டாகின்ற. (கஅ)

பழைய அரவின்முது கொடிய நடனமது
பயில இரணியனை முனியஏழ்
படியை மலரடியின் அளவு செயஅமரர்
பசிய கலவமுது கடையவான்

மழையை யொருமலையின் மறைவு செயஇடையர்
மனையில் அளை திருடி வலுமையான்
மருது பொரஅலகை முலையின் அமுதுகொள
வலவன் மகிழ்மருக வருகவே

உழவ ருழுதுபயிர் முழுதும் இடநறவம்
ஒழுகு குவளையெனு மலரின்மேல்
உலவி மதுரம்இசை முரலும் அளிகள்பெற
உதவி யிடுவதென வயலில்வாழ்

கழையின் விழுதரள மதியின் நிலவுதரு
கரபு ரியின்முருக வருகவே
ககன மெனுமுகடும் அதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே.

(அ - ரை.) எழ்படியை - ஏழ்உலகை. மழையை ஒரு மலையின் மறைவுசெய - இந்திரனுடைய வஞ்சகச் செயலால் பெய்த கன்மழையைக் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து மறைக்க. அளவுசெய - அளக்க. அளை - வெண்ணெய். மருது - மருதமரம். அலகை பூதனையாகிய - பேய். நறவம் - தேன், கள். அளிகள் - வண்டுகள். கழை - கரும்பு. (௩௧)

அரையில் வடமசைய அழகு பெறுகுடுமி
யசைய உமைமகிழ வருகவே
அலர்கொள் சரணவணி கலக லெனமழலை
அமுத மொழுகியிட வருகவே

இரையும் உததியது சுவற அயிலைவிடும்
இளமை யிடுகுமரன் வருகவே
இனிய கவிதைகொடு நினது புகழ்பரவி
யெமது வினைகள்கெட வருகவே

வரைகொ ளரவமுயல் முசுவொ டிருளிமரை
வருடை கரடிகலை கவரிமான்
வழுவை உழுவையரி மறவர் குறவர்தின
மருவு மலைகிழவ வருகவே

கரையின் நதியினலை பொருது தரளமெறி
கரபு ரியின்முருக வருகவே
ககனம் எனுமுகடும் அதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே.

(அ - ரை.) மழலை அமுதம்-இளஞ்சொல்லாகிய அமிர்தம். அவற - வற்ற. கவிதை - பாடல். முசு - குரங்கு. மரை-மான் வகை. வருடை - மலை ஆடு. உழுவை - புலி. அரி - சிங்கம். மலைகிழவ - மலைகிழவோனே, மலைக்குரியவனே. நதியின் அலை பொருது - ஆற்றின் அலைமோதி. (௬௦)

அனகை அருள்மொழியும் விமலை யழகொழுகும்
அமலை அருள்குமர வருகவே
அசுரர் மகுடமணி சிதற அயில்விசிறும்
அறுமு கவவருக வருகவே

பனக மவுலியான் மகிழ மறைஇறுதி
பகரு மணி அதர வருகவே
பரவி யெழுமுனிவர் பணியும் ஒளியுடைய
பவள இருசரண வருகவே

மனமும் ஒருமைபெற விழிகள் அருவியென
வழிய உளம்உருக வருகவே
மறலி தொடர்புகெட எனையு னடியரொடு
மருவி யிடஅருள வருகவே

கனக மதிலருண கிரண மெனநிலவு
கரபு ரியின்முருக வருகவே
கனக மெனுமுகடும் அதிர நடனமிடு
கலப மயிலிறைவ வருகவே.

(அ - ரை.) அனகை - குற்றமற்றவள், விமலை, அமலை. விசிறும் - எறியும். பனகம் - பன்னகம், பாம்பு. மணி அதர - அழகிய உதடு உடையவனே. பவழ இருசரண - பவழம் போன்ற இரண்டு அடிகளை உடையவனே. ஒருமை - ஒற்றுமை. மறலி தொடர்பு கெட - எமன் பற்றுதல் ஒழிய. கலபம் - கலாபம், தோகை. (௬௧)

# எ. அம்புலிப்பருவம்

[வானத்திலுள்ள நிலவைக், குழந்தையுடன் விளையாடுதற்குச் செவிலித்தாயர் முதலியோர் அழைக்கின்ற பருவம். பதினைந்தாந் திங்களில் நிகழ்வது.]

நீல ஊணினர்க ணுவை நீயிவனு
நீல வூணினர்க ணனவன்
நேமி யங்குவடு சூழ்வை நீயிவனு
நேமி யங்குவடு சூழ்பவன்

ஏல நீயரிய மானு ளாயிவனும்
என்று மோரரிய மானுளான்
இருளு மாசினையொ ழிப்பை நீயிவனும்
இருளு மாசினையொ ழிப்பவன்

ஓல மாமலையி லெழுவை நீயிவனும்
ஒப்பி லாமலையி லெழுபவன்
உனக்கி வாறுநிக ராத லால்இவன்
உனைக்கு லாவியழை யாநின்றான்

ஆலு மாமயிலன் ஆடுதற் கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரியன் உளமகிழ
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) ஆவை - ஆவாய். ஆனவன்-ஆனவன். நேமியங் குவடு சூழ்வை-சக்கரவாள கிரியைச் சூழ்ந்து வருவாய். சூழ்பவன்-சூழ்ந்து வருகின்றவன். ஏல - பொருந்த. மான் உளாய் - மான் வடிவம் தங்கப்பெற்றுள்ளாய். அரிய மானுளான் - அருமையான மான் பெற்ற குறவள்ளிமானை உடையவன். இருளும் மாசினை-இருளுகின்ற குற்றத்தை. இருளும் ஆசினை - இருளாகிய (அறியாமை) குற்றத்தை. ஓலம் - ஒலி, முழக்கம். ஆம் அலையில் எழுவை - உண்டாகின்ற கடலில் தோற்றுவாய். மலையில் எழுபவன் - கயிலை மலையில் தோன்றுபவன். நிகராதலின் - ஒப்பாதலின். குலாவி - கொண்டாடி. அழையாநின்றான்-அழைக்கின்றான். ஆலும் - ஆடுகின்ற. (சு௨)

இன்ன நீமலைவ லஞ்செய் வாயிவன்
இமைக்கு மூன்நிலம்வ லஞ்செய்தோன்
எறிக திர்க்கிடைவை நீயு முச்சுடரில்
இவன்அ வன்கதிர்அ ழிப்பவன்

மன்னி வாழ்மறு·மு கம்ப டைப்பையிவன்
மறுவி லாஅறு மு கத்தினன்
வருமகத் திருளொ ழித்தி டாய்இவனு
மனவ கத்திருளொ ழிப்பவன்

மின்அ ராவுகொளும் உணவு நீயிவனவ்
விடஅ ராவுண்மயில் வாகனன்
மேனி நீவளர்ந் தழிவை யென்றுமிவன்
மேனி தானுமழி யாதவன்

அன்ன தாலிவன் தனக்கொவ் வாய்அமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரியன் உளமகிழ
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) மலைவலம் செய்வாய் - மேருவை வலமாக வருவாய். இமைக்கும் முன் நிலம் வலம் செய்தோன்-நொடிப் பொழுதில் பூமியைச் சுற்றி வந்தவன். எறி கதிர்க்கு இடைவை - காய்கின்ற கிரணங்களையுடைய சூரியனுக்குப் பின்வாங்குவாய். முச்சுடரில் இவன் - அவன் கதிர் அழிப்பவன் - சோமன், சூரியன், அக்கினியாகிய மூன்று ஒளிப் பொருள்களில் இவன் அச் சூரியன் கிரணத்தைக் கெடுப்பவன். மறுமுகம் படைப்பை-களங்கத்தோடு கூடிய முகத்தைப் படைத்திருக்கின்றாய். மறுஇலா - களங்கமில்லாத. மகத்திருள் - மாகத்திருள். மன அகத்திருள்-மனதிலுள்ள அறியாமையிருட்டு. மின் அராவு கொளும் உணவு நீ - மின்னுகின்ற பாம்பு உண்ணுகின்ற உணவாயிருக்கின்றாய் நீ. அவ் விடஅரா உண் மயில்வாகனன்-அந்த நஞ்சு பொருந்திய பாம்பைக் கொத்தி உண்கின்ற மயிலை ஊர்தியாக உடையவன். மேனி-உடம்பு. அழிவை - அழிவாய். அன்னதால் - அன்ன தன்மையால். ஒவ்வாய் - ஒப்பாக மாட்டாய். எனினும் அவன் அழைக்கின்றான் வருவாயாக. (சுஉ)

வரிசை கொண்டகுடை நீய தாகவிருண்
மாவை யூர்மதனன் வாழ்வையு
மனம கிழ்ந்ததிக மைத்து னச்சரச
வளமை யாலொழிய மாற்றியே

உரிமை கொண்டவவன் ஆணையின்பிடரில்
உன்னை வைத்தருளி நாடொறும்
உனக்க வன்கவிகை யாயி டும்பதமும்
உதவி ஞலுமிவன் உதவுவான்

பிரிய மாயுனைவி ரும்பி வாவெனஅ
ழைத்த பேறெவர்கள் பெற்றுளார்
பெற்றி யாலுனது பெற்றி யேஇனிய
பெற்றி மாதவர்கள் காணுதற்

கரிய கந்தன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரியன் உளமகிழ
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) வரிசை - சிறப்பு. குடை - சந்திரனாகிய குடை. இருள் மாவை ஊர் மதனன் - இருளாகிய யானையை ஊர்ந்து செல்லுகின்ற மன்மதன். சரசம் - சல்லாபம். உரிமைகொண்டு- உரிமையால். பிடரில் - பின்பக்கத்தில். கவிகையாயிடும் - கவி கின்ற கையை உடையவன் ஆகும். பேறு - பாக்கியம். பெற்றி- தன்மை. உன் நற்பேறு அவன் விளையாட அழைக்கின்றனன். வருவாயாக. (௬௪)

பத்தி யாயுலகை வட்ட மிட்டுவரு
பரப ரப்பினையு மாற்றுவான்
பழுது பட்டகலை முழுது முற்றிலகு
பண்பை யுந்தருவன் ஈதலான்

நீத்த மாயுடல முற்றி டுங்குறையை
நீக்கி யேகருணை நோக்குவான்
நின்ம லர்க்கருளு மூல மந்திரமும்
நின்செ விப்படவு மொழிகுவான்

தத்து சாகரம தற்கு ளுஞ்சனன
சாக ரத்தும்உதி யாமலே
தண்டை கிங்கிணிச தங்கை கொஞ்சுமிரு
தாம ரைப்பதமும் உதவுவான்

அத்தன் வேலன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) பத்தியாய்-வரிசையாய். பரபரப்பு-சுறுசுறுப்பு. பழுதுபட்ட - குறைவுபட்ட. முற்றிவரு பண்பை - நிறைந்துவரும் இயல்பை. உடலம்-உடம்பு. உற்றிடும் குறை-உற்றிடும் குறையை, அடைந்திருக்கின்ற குறையை. செவிப்படவும்-கேட்கவும். தத்து சாகரம் - தாவும் அலையையுடைய கடல். சனன சாகரம் - பிறவிக் கடல். உதியாமல் - பிறக்காமல். அத்தன் - தலைவன். வேலன் அழைப்பது விளையாடுதற் பொருட்டே. (௬௫)

எண்ணி லாதபல புண்ணி யங்களை இ
யற்றி நெஞ்சிலிரு ளற்றபேர்
ஏத்தி யேத்தியவர் ஓல மிட்டலறி
னுங்கி டைக்கஅரி தானவன்

விண்ணி னூடுமறு வாய உன்னைவடி
வேலெ டுத்தகர நீட்டியே
வேத வாய்மழலை யால ழைத்திடவு
மேவி டாமலும்இ ருப்பதோ

பண்ணி னல்மதுர மாக வேகவிதை
பாடு வார்வினைக ளோடவே
பச்சை மாமயிலி லேறி வந்திருப
தாம்பு யந்தனைஅ ளித்திடும்

அண்ணல் வேலன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரியன் உளமகிழ
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) நெஞ்சில் இருள் அற்றபேர் - மன இருள் அற்ற ஞானிகள். மறுவாய - களங்கத்தோடு கூடிய. பண்ணினால்-இசையொடு. மதுரமாக-இனிமையாக. கவிதை-பாடல். பதாம்புயம்-அடிமலர். (சுசு)

பங்க யாசனனை வேத நுண்பொருள்வ
ராமை கண்டுமுடி குட்டியே
பாத தாமரையி னாலு தைத்திடர்ப
டுத்தி வன்சிறையில் வைத்தல்போல்

இங்கு நீயினிவ ராதி ருந்திடின்ன
ழிற்க ரங்கொடுபி டித்துன்மேல்
எழுந்த கோபமொடு குட்டி வன்சிறையி
லிடுவ னின்றுனையும் உண்மைகாண்

கொங்கு லாவுமிரு தண்டை யங்கழல்கள்
குந்தி நின்றுவிரல் சுட்டியே
கொஞ்சு வாய்மழலை மொழியி னலிவண்அ
ழைத்த சால்புகுறை யாமலே

அங்கை வேலன்விளை யாடு தற்கமுத
அம்பு லீவருக வருகவே
அமரர் பரவுகர புரிய னுளமகிழ
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) பங்கயாசனன் - நான்முகன். இடர்படுத்தி - துன்பப்படுத்தி. உனையும் சிறையில் இடுவன்-உன்னையும் சிறையில் வைத்துவிடுவான். சால்பு - பெருந்தன்மை. (சுஎ)

பந்த நீகொளவி ருந்த வஞ்சகர்ப
துங்க வேபொருத தறிவையே
பண்டு நாகரரி நம்பர் வந்தடிப
ணிந்த சால்புதனை அறிவையே

உந்தி நீமுழுகி டும்பெ ருங்கடலை
உண்ட வேலுடைய தறிவையே
உன்க ணேறும்அர வங்க ளஞ்சிடவு
றிஞ்சு தோகையுள தறிவையே

இந்த நேரமிவன் நண்பு கொண்டுபகை
யின்றி யேயினிமை யடையலாம்
எம்பி ரானெனமையு மன்பர் தங்களொடி
ணங்க வேகருணை யருளினன்

அந்த ணீர்வயல்வி ரிஞ்சை யம்பதிஅ
மர்ந்த ஆறுமுக முடையவேள்
அம்பு லீவருக வென்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) பந்தம் - கட்டு. உந்தி - தள்ளி. அரவங்கள் - பாம்புகள். தோகை - மயில். நண்புகொண்டு - நட்பைப்பெற்று. இணங்க - சேர. அந்தணீர் வயல் - அழகிய குளிர்ந்த நீரையுடைய வயல்கள். (கூஅ)

எண்டி சாமுகரு மிங்கி தம்புகலும்
இந்த்ர தேவனுல கருளவோ
என்று நீகுடையெ னும்பெ ரும்பதவி
இன்ப வேளுலகை அருளவோ

வண்டு போலும்உரு நந்த னுந்திதனில்
வந்த வேதன்உல கருளவோ
மந்த்ர வேதமுனி தந்தை யென்னவரு
மஞ்சி ரூபன்உல கருளவோ

சண்ட வீரரெனு நண்ப ரொன்பதின்மர்
தங்க ளோடுறவு நல்கவோ
தண்டை சேரிருப தங்க ளுன்சிரசு
தங்க வோவெதுவு மறிகிலேம்

அண்டர் சூழ்திருவி ரிஞ்சை யம்பதிய
மர்ந்த வாறுமுக முடையவேள்
அம்பு லீவருக வென்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) எண்திசா முகரும் - எட்டுத் திக்கிலுள்ளவர்களும். இன்பவேள்-இன்பத்தைத் தருகின்ற. நந்தனுந்தி தனில்

வந்தவேதன் - திருமால் உந்திக் கமலத்தில் உதித்த நான்முகன். நல்க - கொடுக்க. (௬௯)

வன்ப ராவுனைவி ழுங்கு துன்புறும
ருந்து நேயமுடன் உதவவோ
மங்கை பாகர்பெறு மந்த மந்திரம
கிழ்ந்து நின்செவியின் மொழியவோ

உன்ச ரீரமரு வுங்க ளங்கமதொ
ழிந்து தீரவருள் புரியவோ
உன்றன் மேனியில குங்க வின்கொளவொ
டுங்கு கூனிமிர நினையவோ

இன்ப ஆரமுதம் உம்பர் பங்கினிலி
ருந்த மாபலனை யருளவோ
எங்க ளால்இவைதெ ரிந்தி லேம்புகலின்
இன்று நீபெறுவ தென்கொலோ

அன்பர் சூழ்திருவி ரிஞ்சை யம்பதிஅ
மர்ந்த ஆறுமுக முடையவேள்
அம்பு லீவருக வென்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே.

(அ-ரை.) வன்பு அரா - வலிய பாம்பு. மருவும் - பொருந்தும். தீர - நீங்க. கவின் - அழகு. கூன்நிமிர - வளைவு தீர்ந்து ஓங்க. உம்பர் பங்கில்-தேவரிடத்தில். நீ வரின் உன் கூனிமிர்ந்து அழகுறவை. (௭0)

இஞ்சி சூழருணை யன்பன் அன்புறஇ
யம்பு பாடல்களை யறியலாம்
எங்கள் கீரன்மொழி யும்ப சுந்தமிழெ
னுஞ்சொல் வேதநிலை தெரியலாம்

விஞ்சு சூரர்களை வென்றி டுந்திறல்வி
ளம்பு காதைகளை வினவலாம்
வெந்த பூதியை அணிந்த தொண்டர்கள்வி
ரும்ப வேகவிதை புகலலாம்

வஞ்சம் ஓடவரு தண்டை யங்கழல்வ
ணங்க லாமுலகை வலமதா
வந்து சூழ்வதிலும் இன்றி வன்தனைவ
லஞ்செய் தேபிறவி யொழியலாம்

மஞ்ச மார்வயல்வி ரிஞ்சை யம்பதிஅ
மர்ந்த ஆறுமுக முடையவேள்
அம்பு லீவருக என்ற னன்கடுகி
அம்பு லீவருக வருகவே.

(அ - ரை.) இஞ்சி சூழ் அருணை அன்பன் - மதில்சூழ்ந்த திருவண்ணாமலையில் முருகன் அருள்பெற்ற அருணகிரிநாதன். பாடல்கள் - திருப்புகழ். கீரன் - நக்கீரன். பசுந்தமிழ் - திருமுருகாற்றுப்படை திறல் விளம்பு காதைகள்-கந்தபுராணம் முதலியன. வெந்தபூதி - திருநீறு. கவிதை புகலலாம்-பாடல் சொல்லலாம். தண்டை அம்கழல் - தண்டை அணிந்த அழகிய திருவடிகளை. கழல்: தானியாகு பெயர். வலஞ்செய்து-வலம் வந்து. மஞ்சம் ஆர் - முகில் பொருந்திய. மஞ்சு + அம், அம்: சாரியை. (எக)

## அ. சிற்றிற்பருவம்

[சிறு+இல்=சிற்றில். சிறுமியர் கட்டிய சிறு வீடுகளைச் சிதைத்தல். பதினேழாம் திங்களில் நிகழ்வது.]

வேதன் முடியிற் படுங்கமலம்
விண்ணோர் சிரத்தி லணிபதுமம்
விசய மயில்மே லெழுமுளரி
விமலர் புயஞ்சேர் திருக்கஞ்சம்

சாத மொழிக்கும் அம்புயமெந்
தலைமே லிருக்கும் புதுநளினம்
தண்டை சதங்கை கிங்கிணிசேர்
சலசம் புவியிற் படலாமோ

காதம் புதிய மணங்கமழுங்
கடம்பா முருகா கதிர்வேலா
கந்தா குமரா பெருங்கருணைக்
கண்ணா வண்ணா கதியருளா

யாதண் களப மணிமார்பா
அடியேம் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேம் சிற்றி லழியேலே.

(அ - ரை.) வேதன் - நான்முகன் கமலம் - தாமரை. முளரி, கஞ்சம், நளினம். விசயம் - வெற்றி. சாதம் - பிறப்பு. சலசம் - தாமரை. காதம் - பத்து மைல். களபம் - கலவை, வாசனை. அழியேல் - அழியாதிருப்பாய். (எஉ)

வங்கத் தரங்கக் கடலன்று
மாயக் கிரவுஞ்ச கிரிஅன்று
வானத் துயரு மாவன்று
மருவா ருறையும் பதியன்று

துங்கத் தகரார் முடியன்று
தொலையா அமரர் சிறையன்று
துரகக் கொடுமா முகியன்று
தொழுவார் பிறவித் துயரன்று

சங்கத் தவனும் மலரோனுந்
தவளா சலத்தில் வருவோனும்
சரணஞ் சரண மெனும்புதிய
தண்டை முழங்குஞ் சிறுதாளால்

அங்கைக் கதிர்வே லுடையோனே
அடியேம் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேம் சிற்றி லழியேலே.

(அ - ரை.) வங்கம் - தோணி. மாயம் - வஞ்சகம். மால் - திருமால். மருவார் - பகைவர். பதி - ஊர். துங்கத்து - உயர்வாகிய. சிறை - காவற்கூடம். துரகம் - குதிரை. சங்கத்தவன் - பாஞ்ச சன்னியம் என்னும் சங்கைக்கொண்டவன். தவளாசலம் - வெள்ளை யானை, ஐராவதம். அங்கை - அழகிய கை. (எகூ)

பூத்தே உலகம் புரப்பாளைப்
பொய்யர் தமக்குக் கரப்பாளைப்
பொழியுங் கருணை விழியாளைப்
பொற்புங் கற்பும் அழியாளைக்

கூத்தை யுடையா னிடத்தாளைக்
குவிமா முலைமேல் வடத்தாளைக்
குறையா எண்ணெண் கலையாளைக்
குளிர்சேர் இமய மலையாளை

மாத்தே வருக்குந் தெளியாளை
வணங்கும் அடியார்க் கெளியாளை
வரையைச் சிலையா வளைத்தாளை
மறைக்கு முதலாய் முளைத்தாளை

ஆத்தே ஆத்தே யெனுங் குமரா
அடியேம் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேம் சிற்றி லழியேலே.

(அ - ரை) பூத்து - தோற்றுவித்து. புரப்பாளைக் - காக்கின்றவளை. கரப்பாளை - மறைக்கின்றவளை. பொற்பு - அழகு.

எண்ணெண் கலையாள் - அறுபத்திநான்கு கலைகளையுடையவள்.
ஆத்தே - தாயே. (எச)

பொய்யா உளத்தி லிருப்பாரைப்
பொலியுங் கயிலைப் பொருப்பாரைப்
பொருமா கரியை உரிப்பாரைப்
புரமூன் றெரிய எரிப்பாரைக்

கையார் மறிமான் மழுவாரைக்
கமலா லயன்மால் தொழுவாரைக்
கனக சபையில் நடிப்பாரைக்
கங்கை முடியில் முடிப்பாரை

மையார் மலத்தை யொழிப்பாரை
மதவே ளெரிய விழிப்பாரை
மறலி நடுங்கப் பொருவாரை
வழிக்குத் துணையா வருவாரை

ஐயா வையா வெனுங் குமரா
அடியேம் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேம் சிற்றி லழியேலே.

(அ-ரை.) பொருப்பாரை-மலையிலிருப்போரை. பொருமா கரியை உரிப்பாரை - போர் செய்கின்ற பெரிய யானையைக் கொன்று தோல் உரித்தவரை; இது தாருகாவனத்து இருடிகள் சிவனைக் கொல்ல அனுப்பிய யானையைக் கொன்றது. கையார் - கையில் பொருந்திய. மழு - பரசு. கமலாலயன் - நான்முகன். முடியில் - சடையில். மையார் - குற்றம் பொருந்திய. மதவேள் எரிய-காமன் எரியும்படி. மறலி-எமன். ஐயா - அப்பா. சிவ பெருமான் கூற்றுதைத்த குணத்தினன். நன்னெறிக்குத் துணை வரும் முன்னோனும் அவனே. (எரு)

இம்மா நிலத்தை யளந்தானை
இகல்மா மருதம் பிளந்தானை
இலங்கா புரியைக் கெடுத்தானை
இமையோர்க் கமிர்தங் கொடுத்தானைக்

கைம்மா இடுக்கண் களைந்தானைக்
ககனம் அளவா வளர்ந்தானைக்
கன்றால் விளவை யெறிந்தானைக்
கருதா ருளத்திற் பிரிந்தானை

மைம்மா சுணத்தில் நடித்தானை
வருபா ரதத்தை முடித்தானை
வையம் அனைத்தும் அயின்றானை
வடத்தின் இலையில் துயின்றானை

அம்மான் அம்மா னெனுங் குமரா
அடியேம் சிற்றி லழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே
அடியேம் சிற்றி லழியேலே.

(அ - ரை.) நிலத்தை அளந்தான் - உலகத்தை அளந்த திருமால். மாபலிச் சக்கரவர்த்தியிடம் திருமால் வாமன வடிவு கொண்டு மூவடிமண் வேண்டி அளக்க மூற்பட்டது. மருதம் பிளந்தான்-மருத மரத்தைத் தன்னைக் கட்டிய உரலோடு சென்று பிளந்தவன். கைம்மா இடுக்கண் - கஜேந்திர யானையின் துன்பம். விளவை - விளாமரத்தை. கருதார் - பகைவர், சிந்தியாதவர். மைம்மாசுணம் - கரிய பாம்பு. பாரதத்தை - பாரதப் போரை. வையம் - பூமி. அயின்றான் - உண்டான். வடத்தின் இலையில் - ஆல் இலையில். அம்மான் - தாயுடன் பிறந்தவன். (எசு)

வேறு

பசுமை மலர்த்தட நளினம் அளித்திரள்
படிவ அனற்சொரி கரிபோலே
பதும நிறத்தினை அறுபத முற்றுடல்
பவள மெனத்திகழ் வயலூடே

கசியு மதுப்பொழி குவளை களைச்சில
களைக ளெனக்களை மடமாதர்
கரகம லத்தினில் வளையொலி சித்தசர்
கலைக ளுரைத்தருள் கரனூரா

நிசியின் இருட்கண மெனுமுரு வத்தோடு
நிலவி னெயிற்றொடும் உயர்வான்மேல்
நிலவிய செக்கரை யனைய மயிர்த்தலை
நிரையொடும் உக்கிர முடனேசூழ்

அசுரரை வெட்டிய அயிலுள கைத்தல
அடியவர் சிற்றிலை யழியேலே
அழகொழு கப்புழு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே.

(அ - ரை.) தடம் - குளம். நளினம் - தாமரை. அனல் சொரிகரி - நெருப்புச் சொரிகின்ற கரி. அறுபதம் - வண்டு, அறு கால். குவளைகளை-குவளை மலர்களை. களைகளென களை மடமாதர்களைகள் என்று பறிக்கின்ற இளமை (அழகு) பொருந்திய பெண்கள். வளை ஒலி - வளையலின் சத்தம். சித்தசர் - மன்மதர். நிசியில்-இரவில். இருட்கணம் - இருள் கூட்டம். நிலவின் எயிற்றோடு-நிலாப்போல் விளங்கும் பற்களோடு, பிறைபோன்ற பற்களுடன். செக்கரை - செவ்வானத்தை. உக்கிரம் - கோபத்துடன். அயில் உள கைத்தல - அயிற்படையுடைய கையையுடையவனே. அருளழகு பொழியும் திருத்தோள் அவ்வழகுக்குப் பொருந்த மணங் கமழும் கத்தூரி அணியப்பட்டுள்ளது. (எஎ)

முதல்வர் இணைப்பத மலர்கொ டரக்கிய
முனிவைநி னைத்தினை மலையாதே
மொழிதி யெனக்கழல் செரியு மலர்ப்பத
முளரி தனைப்பணி குதல்போலே

கதிர்மணி யிட்டிழை கனகம தில்திகழ்
கனஇட பத்தினை யடியூடே
ககனமு கட்டினி லிருளைய கற்றிய
கலைமதி யுற்றெழு கரனூரா

ததிபரு கச்சுதர் மலரி லிருப்பவர்
சனக ரகத்தியர் புலவோர்மா
தவர்கள் வசிட்டரொ டடியர் துதித்திரு
சரணம் விருப்பொடு தொழவேதான்

அதிமது ரத்துடன் மறைசொலும் உத்தம
அடியவர் சிற்றிலை யழியேலே
அழுகொழு கப்புழு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே.

(அ - ரை.) முனிவை - சினத்தை. பணிகுதல் - வணங்குதல். கனகம் - பொன். கனஇடபம் - பெரிய காளை. கலைமதி - கலையுடன் கூடிய சந்திரன். ததிபருகு அச்சுதர்-தயிரைக் குடித்த பெருமாள். உத்தம - உத்தமனே. (எஅ)

மழையுறு அத்திரு வுருவு படைத்தவன்
மலரவ னுற்றிடு மிடம்ஓவார்
மதலை தனக்குயர் முடியை வளைத்தருள்
வரதர் வழிக்கொரு துணையாவோர்

கழல்தொழு கற்கவர் வருபொழு துற்றிடு
களையக லப்பயி லுதல்போலே
கரிய மணிக்கிர ணமுமதி லிற்கண
கமுமரு வித்திகழ் கரனூரா

பழநி திருத்தணி அருணை இடைக்கழி
பழமுதிர் பொற்கிரி அலைவாயோர்
பணிமலை சற்குரு மலையொடு பற்பல
பனிமலை யுச்சியி லுறைவோனே

அழலொளி கக்கிய அயிலுள கைத்தல
அடியவர் சிற்றிலை யழியேலே
அழுகொழு கப்புழு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே.

(அ - ரை.) மழை உறு அதிருஉரு-மேகத்தில் பொருந்திய அந்த அழகிய நிறம். ஓவார் - நீங்கார். மதலை - குழந்தை. வரதர்-மேலானவர். களை - களைப்பு. மருவித்திகழ்-பொருந்தி விளங்குகின்ற. அருணை - அருணாசலம். இடைக்கழி - திருவிடைக்கழி எனும் ஊர், தரங்கம் பாடிப் பக்கம் உள்ளது. பழமுதிர் பொற்கிரி-பழமுதிர்சோலை யென்னும் அழகிய மலை, அழகர்மலை. அலைவாய்-திருச்செந்தூர். பணிமலை-பாம்புமலை, சேடகிரி. பனி-குளிர்ச்சி.

இரவி ரதத்துள புரவி கள்தத்தளி
யிடஉயர் பொற்றிரு மதின்மேலே
எழுதிய சித்திர விடப மணிக்கொடி
இமையவர் கற்பக மலரூடே.

பொரவத னிற்பரி மளநற வத்துளி
புயலுல கத்தருள் மழைபோலே
பொழிய வயற்றிகழ் பயிர்கள் தழைத்தெழு
புகழை விளக்கிய கரனூரா

வரமரு ளித்தன தடியவ ருச்சியின்
மலரடி வைத்ததி மதமாறு
மருவலர் முப்புர மெரிய நகைத்தடல்
மதனை எரித்தவவ் வரையாளும்

அரன்மகி ழப்பொரு ளுரைசெயும் உத்தம
அடியவர் சிற்றிலே யழியேலே
அழுகொழு கப்புழு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலே யழியேலே.

(அ - ரை.) இரவிரதத்துள புரவிகள் தத்தளியிட-சூரியன் தேரில் பூட்டப்பெற்ற குதிரைகள் தடுமாறும்படி. இடபம்-காளை. பொர - தாக்க. பரிமளநறவத்துளி -வாசனை பொருந்திய தேன் துளிகள். புயல் உலகம் - மேகமண்டலம். உச்சியில் - தலையில். அதிமதம் மாறுமருவலர்-மிகுந்த மதம் நீங்காத பகைவர். முப்புரம் எரிய - திரிபுரம் சாம்பர் ஆகும்படி. நகைத்து - சிரித்து. அடல் மதன் - வலிய மன்மதனை. (அ0)

மழலை தனிற்சிவ மறைகள் முழக்கியு
மணியை முழக்கியு மணிவாயால்
வயிரை முழக்கியும் ஒருகுழல் பற்றியு
மகிழ்பறை கொட்டியு மணியாலே

இழைய மலர்ப்பத நடனம் இயற்றியும்
இசைகள் பயிற்றியு மகிழ்நாளு
இரத மெனக்குல வரையை நடத்தியும்
இறைவர் களிப்பது பெறஎழ்பார்

முழுதும் அடிக்கடி யுலவிய மைக்குல
முதலை நடத்திய மருவார்மேல்
முனியு மருப்பிரு பிறைநிகர் கைக்கய
முனியை நடத்தியும் விளையாடி

அழகிய பொற்கர புரியுறை யுத்தம
அடியவர் சிற்றிலை யழியேலே
அழகொழு கப்புழு கொழுகிய பொற்புய
அடியவர் சிற்றிலை யழியேலே.

**(அ - ரை.)** வயிரை - கொம்பை. குழல் - ஊதுகுழல். **குலவரை - சிறந்த யானை. மைக்குலமுதல் - மேகக் கூட்டத் தலைவன், இந்திரன். கைக்கயம் - யானை.** **(அக)**

---

## ௯. சிறுபறைப்பருவம்

[சிறு ஓசைக்கருவி மீது ஒலியிட்டு மகிழ்தல். பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வது.]

சந்தாச லம்பொருவு முலைசுமந் திழையெனத்
தளரும்இடை யிந்த்ராணியும்
தடவிகட கரடகவ ளத்தவள ஒருநாலு
தந்தவிறல் மாவுமணியும்

ஐந்தாரு வுஞ்சுரபி யும்படைத் திந்திரனும்
அம்மனை பெறக்கருணையால்
அங்கைவேல் கோலாக வசுரர்முடி பந்தா
அடித்துவிளை யாடும்அரசே

எந்தாயெ னப்பரவு தொண்டர்முடி மீதிலணி
இருபாத மலர்கமழவே
இன்பமட வார்கருங் குழலினுங் காமமுறும்
இளைஞர்தங் கொண்டைகளினும்

செந்தாழை யின்புது மணங்குலவு கானூர
சிறுபறை முழக்கியருளே
திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே.

**(அ - ரை.)** சந்தாசலம் - சந்தனமலை. தடவிகட கரடக வளத்தவளவொரு நாலு தந்தவிறன் மாவும்-பெரிய விகடத்தோடு கூடிய மதம் ஒழுகுகின்ற கவளம் கொள்கின்ற வெண்மையான ஒரு நான்கு கொம்புகளையுடைய வெற்றி பொருந்திய யானையும் (ஐராவதமும்). மணி - சிந்தாமணி. ஐந்தாருவும் - தேவதருக்களாகிய, அரிசந்தனம், கற்பகதரு, சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பவை. சுரபி-காமதேனு. அம்மனை-அழகிய வீடு. கருங்குழல்-கரிய கூந்தல். செந்தாழை - செந்தாழம்பூ. (௮௨)

சந்தியினும் அந்தியினு முள்ளும் புறம்பினுஞ்
சாகா வரம்பெற்றுமூ
தண்டமுழு துந்தனது பெயர்நிறுவும் இரணியன்
றன்னைநர சிங்கவடிவாய்

வந்துமணி வாசற் படிக்கிடை கிடத்திமணி
மார்புகீண் டொளிஉகிரினல்
மணிக்குடல் பிடுங்கிஉதி ரந்தனை யருந்திய
மாமேக வண்ணன்மருகா

அந்தண ருரைத்தருளு மாகம முழக்கமும்
அமுதமெனு மொழிவனிதைமார்
ஆடலின் முழக்கமும் பாடலின் முழக்கமும்
அடியார்க ளோதியருளும்

செந்தமிழ் முழக்கமுமு ழங்குகரன் ஊராளி
சிறுபறை முழக்கியருளே
திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) சந்தியினும் அந்தியினும் - சூரியோதயத்தினும் அத்தமனத்தினும். புறம் - வெளி. மூதண்டம் - பழைய உலகம். வாசற்படிக்கிடை - வாசல்படி நடுவில். கீண்டு - கிழித்து. உகிர் - நகம். உதிரம் - இரத்தம். மேகவண்ணன் - திருமால். இரணியனை அழித்தது, பிரகலாதன் பொருட்டு. மழலை மொழியில் - குதலைச் சொல்லில். மறை - வேதம். (அ௯)

மத்தமத வாரணந் தன்கிழலை மாறெனா
வளர்ந்துவிசை யிற்பாயமேல்
மண்ணுருவி அரவின்மணி தெரிதாலு மற்றதன்
மருப்பிற் சொரிந்தமுத்தும்

புத்திரவி யுடன்மதிய மொத்தடவி இருளெலாம்
போகத் துரந்துதிகழப்
பூமகள் முலைக்கனியும் ஆரவட மெனஅருவி
புரளுமலை யாளும்இறைவா

சத்தநிலை வழுவாம லத்தமொரு சற்றுந்
தளர்ந்துவெளி ருமல்அமுதந்
தழுவுபதி னொரு யிரந்திருப் புகழெனுந்
தமிழ்மாலை சாற்றிஉருகிச்

சித்திபெறும் அருணகிரி நாதர்புகழ் கரனூர
சிறுபறை முழக்கியருளே
திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) மத்தமத வாரணம் - மிகுந்த மதம் பொருந்திய யானை. மாறஎன - பகை என்று. விசையின் - வேகத்தால். அரவின்மலை - நாகமலை. மருப்பு - கொம்பு. புத்திரவி - புதிய சூரியன். அடவி - காடு. தூர்ந்து - தூர்த்தி. சத்தநிலை - ஓசை நிலைமை, (சந்தமுறை). அத்தம் - அர்த்தம், பொருள். (அ௪)

மந்தமா ருதரதமும் அந்திமா லைக்களிறும்
மாசுக மெனுந்துரகமும்
வளர்மதிக் கவிகையுந் திரைகடற் படகமும்
மைக்கோகி லக்காளமும்

கந்தமா மோலையுஞ் சுரிகையும் பெற்றொரு
கரும்பணி சுரும்புசிலைநாண்
கமழுமலர் வாளிகொண் டுலகம்வ ழும்பொருத
காமமத வேள்மைத்துன

தந்திவாழ் பழனியங் கிரியினும் வெள்ளிமலை
தன்னிலும் அருணைதனிலும்
சந்ததமு முக்குவளை மலர்மருத் தணியாச்
செருத்தணி திருத்தணியினும்

செந்திமா நகரினும் பயில்குமர கரனூர
சிறுபறை முழக்கி யருளே
திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) மந்தமாருதரதம் - தென்றலாகிய தேர். அந்திமாலைக் களிறு-அந்திமாலையாகிய யானை. சுகம்-கிளி. மதிக்கவிகை-சந்திரனாகிய குடை. திரைகடற்படகமும்-அலைகடலாகிய முரசும் கோகிலம் - குயில். சுரிகை - வாள். கரும்பணி சுரும்புசிலைநாண் கமழுமலர் வாளிகொண்டு-கரும்பாகிய வில்லையும் அழகிய வண்டாகிய நாணையும் மலராகிய அம்பையும் கொண்டு. மதவேள் மைத்

துனு - மன்மதன் மைத்துனனே! தந்தி - யானை. மருத்தணியா - வாசனை குறையாத. செருத்தணி - போர்தணிந்த. (அ௫)

மலையைப் பிளந்தசுரர் மார்பைப் பிளந்துதிரை
வாரிநீ ருண்டுமகவான்
வாழ்வைப் புரந்தமரர் துன்பந் துரந்துவட
வரைபோல வருதாரகன்

தலையைப் பிளந்துபந் தாடிவே தாளபூ
தங்கள்பசி தன்னைமாற்றிச்
சண்டன்அணு காமலடி யாரிடர் துணிக்குமொரு
தனிவே லெடுத்தஅரசே

அலையிற் பொலிந்துவரு பாலியினில் வரும்வாளை
ஆயிரம் வலைபீறிநா
ருளைவிழ முட்டிவினை யாடிவய லோடிமிக
ஆரவா ரித்துமதவேள்

சிலையைத் தடிந்துவந் துலவுகர ஞாராளி
சிறுபறை முழக்கியருளே
திருமதலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) மலை - இரவுஞ்ச மலை. வாரி - கடல். மகவான் - இந்திரன். வடவரை - மேரு. சண்டன் - எமன். வலைபீறி - வலையைக் கிழித்து. உலவு - உலாவுகின்ற. (அ௬)

## வேறு

அதிர்த்திடு குரல்களும் நெரித்திடு புருவமும்
அழற்பொறி விழிகளுமாய்
அதுக்கிய சிறுபிறை எயிற்றெளி களுநடை
அதிர்ச்சியு மணியணியாய்

விதிர்த்திடு படைகளும் மழைப்புய லுருவமு
மிகுத்துள தலைகளுமாய்
வெளிப்படும் அசுரர்கள் சிரக்குவை பலபல
விழப்பொரும் ஒருசதுரா

பொதுத்தனில் அழகுற நடித்தவர் மழுவது
பொறுத்தவர் குறுகலர்வாழ்
புரத்தினை எரிபட நகைத்தவர் மதனுடல்
புகைத்தவர் அமரர்களால்

முதுக்கொடு விடநுகர் மிடற்றினர் அருள்குக
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே.

(அ - ரை.) அதுக்கிய சிறுபிறை எயிற்று ஒளி - துடித்த சிறிய பிறை போன்ற பற்களின் பிரகாசம். சிரக்குவை - தலைக் குவியல். பொது - அம்பலம். குறுகலர் - பகைவர். உடல்புகைத் தவர் - உடலை எரித்து அழித்தவர். முதுக்கொடுவிடம் நுகர்மிடற் றினர் - பழைய கொடிய ஆலகால நஞ்சை உண்ட கழுத்தை யுடையவர். (அஎ)

அருக்கனை முறுவலை உதிர்த்தெழு மதியுட
லரக்கியல் எமனிருதோள்
அறுத்தொரு குயில்கொடி கரித்தலை விழவிழ
அடித்தம ரர்களுடனே

தருக்கொடு மகமது வளர்த்தவன் மணிமுடி
தரித்தவன் அகமனையாள்
தரித்திடு குழையற வடித்தடி யவர்வினை
தவிர்த்திடு மவர்துணைவா

நெருப்பெழ விழிகளை விழித்தல கைகள்பல
நிருத்தம திடுளழுபார்
நெளித்திட வருநடை படைத்திடும் அசுரர்கள்
நிணக்குவை குவைபடவே

முழக்கிய வடியயி லெடுத்தரு ளியகையின்
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே.

(அ-ரை.) அருக்கனை முறுவலை உதிர்த்து-சூரியன் பல்லைத் தட்டி. கரித்தலை விழ - நெருப்பில் விழ. மகம் வளர்த்தவன் - வேள்வி செய்த தக்கன். அடியவர் வினை தவிர்த்திடும் அவர் துணைவா - அடியார்களின் துன்பத்தை ஒழித்த வீரபத்திரன் சகோதரனே!. அலகைகள் - பேய்கள். நிருத்தம்-நடனம். நிணக் குவை - கொழுப்புக் குவியல். வடிஅயில் - கூர்மையான அயிற் படை. (அஅ)

கருப்புவி லுடையவள் மலர்க்கணை யுடையவள்
கடைக்கணி லருளுடையாள்
கருப்புகு வினையனை யெடுத்தவள் அடியவர்
களித்திட வரமருள்வாள்

அருப்புறு மணிமுலை உறுத்திட அமலனை
அணைத்தவள் உலகமெலாம்
அளித்தவ ளுயிர்களை வளர்த்தவள் திரிபுரம்
அழித்தவள் இடரடையாள்

திருச்சடை மிசைமதி முடித்தவள் பலகலை
தெரித்தவள் அரியறியாள்
சிறப்புள வரமது பெருத்தவள் இடையது
சிறுத்தவள் நிறையழியாள்

முருக்கிதழ் உமையவ ளளித்தருள் குருபர
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே.

(அ-ரை.) மலர்க்கணை - மலரம்பு. கருப்புகு வினையனை - கருவில் புகக்கூடிய தீவினை உடையவன். அருப்புறு - அரும்புறு, அரும்பு போன்ற. அளித்தவள் - காத்தவள், ஈன்றவள். அமலனை அணைத்தவள் - சிவபெருமானைத் தழுவிக் கொண்டவள். நிறை - கற்பு. முருக்கிதழ் - முருக்கமலர் போன்ற உதடு. (அகூ)

இளைத்திடு பவவினை குளித்திடும் அடியரை
யெடுத்திடும் ஒருபுணையாய்
எதிர்த்திடும் அசுரர்கள் முடித்தலை யெனுமதில்
இடித்திடும் ஒருபடையாய்

அளப்பற அயனெழு தெழுத்தெனு மலினம
தகற்றிடும் ஒருகலையாய்
அடித்தல நினைபவ ரிரப்பற நவநிதி
யளித்திடும் ஒருதருவாய்

விளக்கிய வடியயி லிருக்குமி ணியவெழில்
விரித்தொளி விடுமுறையாய்
விரைத்தெழு கடுநடை விடைச்சிவ னுமையவள்
விழிக்கணி மதுமலராய்

முனைத்தம ரர்கள்பய மொழித்தரு ளியகையின்
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே.

(அ - ரை.) புணை - தெப்பம். மதில் - சுவர். படை - ஆயுதம். அளப்பற - அளவற. மலினம் - அழுக்கு. இரப்புஅற - யாசிக்கும் தன்மை ஒழிய. விடை - காளை. (கூ0)

வடித்திடு கணையென மணிக்குழை கறுவிய
மதர்த்திடும் இருவிழியால்
மணத்தொளி பரவிடும் அகிற்புகை யிடுமது
மலர்ச்செரு கியகுழலால்

அடிக்கடி விடரறி வினைத்திரு டிகள்கள
வடக்கிய முறுவலினல்
அடற்சிலை மதன்முடி யசைத்திட லதுவென
அசைத்திடு மலைமுலையால்

எடுத்திரு கனதன முனைப்புடன் அனுதினம்
இளைத்திடு கொடியிடையால்
இழுக்குடை மயலினை யளிப்பவர் வசமுறும்
எமக்குள விடர்கெடவே

முடிச்சடை யுடையவ னளித்தருள் குருபர
முழக்குக சிறுபறையே
முழுத்தமிழ் தெரிகர புரத்தறு முகமுனி
முழக்குக சிறுபறையே.

(அ - ரை.) வடித்திடு கணையென - கூர்மையாக்கிய அம்பு போல. கருவிய - வெறுத்த. மதுமலர்ச்செருகிய குழலால்-தேன் பொருந்திய மலர்மாலை சூட்டிய கூந்தலால். விடர்அறிவினை - தூர்த்தர் அறிவை. முறுவல் - சிரிப்பு. மலைமுலை - மலைபோன்ற முலையால். முனைப்பு - சுமை. இளைத்திடுகொடி இடை - தளருகின்ற கொடி போன்ற இடை. இழுக்கு - குறைவு. (கக)

## கூ. சிறுதேர்ப்பருவம்

[சிறு தேர் உருட்டி விளையாடுதல். இருபத்தொன்றாந் திங்களில் நிகழ்வது.]

மாதரிரு விழியாகும் அம்புக்கும் மதனவேள்
வாளிக்கும் நடுவாகியே
மாலாகும் அருணகிரி நாதரரு ணைச்சிகரி
வடவாச லீற்பயிலநம்

பாதமலர் பாடுநீ என்னஅடி யேனுமெப்
படிபாட என்றஅளவில்
பத்திதரு முத்தநகை அத்தியிறை வாவெனப்
பாடென்று சொல்லிஇயலாற்

பூதலமு மெங்கிளையும் ஈடேற நாவிற்
பொறித்தவ ருரைத்தகவிதைப்
புத்தமுது பன்னிரு செவிக்குநிறை யக்கொண்டு
போதமுன் அளித்தருளினாற்

சீதளம லர்ச்சரணம் உதவுகர னூராளி
சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) வாளி-அம்பு. நடுவாகி-இடைப்பட்டு. அருணைசகிரி-அண்ணாமலை. பத்திதரு முத்தநகை அத்தி இறைவா-வரிசை

பொருந்திய முத்துப் போன்ற பற்களையுடைய தெய்வயானையின் தலைவனே. கவிதைப் புத்தமுது - பாடலாகிய புதிய அமுதம். போதம் - ஞானம். சீதளம் - குளிர்ச்சி. அசுரர்முடி சிதறுமுனி - அவுணர் தலைகள் சிதறும்படி செய்த முனிவனே. (கஉ)

ஓராயி ரம்பேரை வருடத்தி லொருநாளில்
உண்கின்ற கற்கி முகிதான்
ஒன்றுகுறை யாகியிடு மன்றுநக் கீரர்வர
ஓடிப்பி டித்த வரையும்

காரரய குன்றத் தடைத்துரிய நியதிக்
கடன்துறை முடிக்க அகலக்
கருதிமுரு காறவ ருரைத்தருள நீலக்
கலாபமயில் ஏறி யணுகிப்

பேரான குன்றந் திறந்திவுளி முகியைப்
பிளந்துநக் கீரர்தமையும்
பெரியவேல் கொண்டுபுனல் கண்டுசுனை மூழ்கிப்
பிரான்முகலி நதியின் மேவச்

சீராய திருவருள் புரிந்தகர னூராளி
சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டி யருளே.

(அ - ரை.) கற்கிமுகி-குதிரைமுகம் உடைய பூதம். நியதிக் கடன் துறைமுடிக்க - தினந்தோறும் செய்யும் கடன்வகை செய்ய முருகாறு - திருமுருகாற்றுப்படை. நீலக்கலாப மயில் - நீலநிறம் பொருந்திய தோகையையுடைய மயில். இவுளிமுகி - குதிரை முகம் உடையவனே. முகலிநதி - பொன்முகலி ஆறு (திருக் காளத்தியிலுள்ளது.) (கங)

மரகதக் கொடிதவஞ் செய்தகதை யுங்கரி
மாயவன் புரமானதும்
வருகரன்அ ருச்சித்த துஞ்சது முகக்கடவுள்
மாபூசை செய்தவாறும்

ஒருவழித் துணையான தும்பரமர் பரகதிக்
குதவியதும் ஒருபாலனுக்
குச்சியை வளைத்ததுவும் உத்தம வசிட்டருக்
கோதியருள் புரியுமுருகா

அரதனக் கடலில்எழும் ஆயிரங் கதிருடைய
ஆதவர் தமக்கழகதாய்
அலர்தூவி மேல்மே லருக்கியம் அளிப்பதென
ஆகாய முகடுமுட்டத்

திரைவிரிந் தெழுபாலி நதிவருங் கரனூர
சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை) மரகதக்கொடி - மரகதவல்லி. கரன் அருச்சித்ததுவும்-கரன் பூசித்ததும். சதுமுகக் கடவுள்-நான்முகன். அரதனம் - இரத்தினம். ஆதவர் - சூரியர். அலர் தூவி - பூவைவீசி. அருக்கியம் - மந்திர நீர் இறைத்தல். பாலியாற்றலையின் துளிகள் கதிரவன் அடியில் சென்று விழுதல் மலர்தூவி மந்திர நீர் இறைத்தலைப்போல் விளங்குகின்றதென்க. ஆகாய முகடு - விண்ணின் முடிவிடம். (கூ௪)

வண்டியிரு சுடராக வையகந் தேராக
மாவாக நாலுமறையும்
வானவர்க ளனைவரும் பரிவார மாகமலர்
வாழ்பவன் பாகனாகக்

கொண்டுமலை சிலையாக அரவுநா ணாகமால்
கோலாக அழலாகவாய்
கோலிறகு காலாக வெந்துமுப் புரமெரிகொ
ளுந்தளய் தவர்குமரனே

அண்டமள வாகுமணி மேடைதனி லேறிமலர்
அளகமுகில் அசையவழகாய்
ஆரவடம் அசைய அதி பாரமுலை யசைய இடை
யசையமே கலைகள் அசையச்

செண்டுவிளை யாடிமட மாதர்பயில் கரனூர
சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) இருசுடர் வண்டியாக-சூரிய சந்திரர் இருவரும் சக்கரங்களாக. வையகம் - பூமி. மாவாக - குதிரையாக. பரிவாரம் - பரிசனம். மலர்வாழ்பவன் பாகனாக-பிரமன் சாரதியாக. மலைசிலையாக - மேருமலை வில்லாக. அரவுநாணாக-வாசுகி கயிறாக. மால் கோலாக-திருமால் அம்பாக. அழலாக வாய்-அம்பின் நுனி நெருப்பாக. கோல் இறகு காலாக - அம்பின் இறக்கை காற்றாக. அளகமுகில் - கூந்தலாகிய மேகம். மேகலைகள் - மேகலாபரணங்கள். செண்டு - பந்து. (கூ)

பந்தாடு மடவார்கள் விளையாடு தற்கேறு
பாதசெம் பஞ்சுபதியப்
பரியதித் திலமேடை பவளமா மேடையாய்ப்
பரிதியின் கிரணமெனவே

நந்தா எறிக்கவது கண்டிதழ்க் கதவுதனை
நளினம் திறக்க அதிலே
நறவொழுகி யோடியிட வயலின் பரப்பெலாம்
நதியின்ப்ர வாகமாக

அந்தார வாரமொடு பாலாறு டன்புகுத
வாழையின் கனிகள்சிதறி
வரமள்ளர் தேனுடன் பால்பழம் புசியுமென
வழிவந்த வர்க்கருளியே

சிந்தா குலம்பொடி படுத்தியருள் கரனூர
சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) பாதசெம்பஞ்சு - அடியில் பூசிய செம்பஞ்சுக் குழம்பு. பரிய தித்திலமேடை - பருத்தமுத்துமேடை, பரிதியின் கிரணம் - சூரியன்கிரணம். நந்தா-கெடாது. இதழ்கதவு-இதழா

கிய கதவு. பிரவாகம் - வெள்ளம், பெருக்கு. வாழையின்கனி - வாழைப்பழம். சிந்தாகுலம் - மனத்துயர். பொடிபடுத்தி-அழித்து.

### வேறு

விழிததும் பியபுனலின் முழுகிவந் தனைபுரியும்
அடியார்க ளுக்கமு தமே
வினையெனுங் குவடுபொடி படநடம் பயிலுமொரு
மயில்வாக னக்கடவுளே

பழிசுமந் திடும்அசுரர் முடியொடுந் தலைசிதற
வடிவேலெ டுத்த அரசே
பவமெனுங் கடலில்விழும் எனையுமன் பெனும்இனிய
கரையேற விட்டபுணையே

பொழிகரும் புயலனைய இனியஅம் பிகைமுலைகள்
பொழிபால் குடித்தகளிறே
புதியசெங் கமலமலர் சரவணம் தனின்மருவி
விளையாடி யிட்டவரசே

செழியசெந் தமிழ்குலவு திருவிரிஞ் சையின்முருக
சிறுதேர் உருட்டியருளே
சிவசிதம பரநடன மிடுதிகம் பரர்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(அ-ரை.) விழிததும்பிய புனல்-கண் துளும்பிய நீர். வந்தனை- வணக்கம். வந்தனை புரிவோர் நீரில் முழுகவேண்டியதற்கேற்ப, ஈண்டு மகிழ்ச்சிக் கண்ணீரையே குறிப்பிட்ட நயம் காண்க. பவ மெனும் கடல் - பிறப்பாகிய கடல். கரும்புயல் - கருகிய மேகம். செழிய செந்தமிழ்குலவு - செழித்த செந்தமிழ் விளங்குகின்ற. செழிய என்பதை அண்மைவிளியாக்கி, பாண்டியனே எனவுமாம். (கஎ)

கனகங் கணிகள்கல கலகலென் றொலிபரவும்
இருதாம ரைச்சரணனே
கடைபடுங் கடலிலெழும் அமுதமுண் டவர்பரவு
கருணா கரக்குரிசிலே

மனமும்ஐம் புலனுமொரு வழிசெலும் படியெனது
மலமா சொழித்த குகனே
வளர்சிலம் பிடைபொழியு மழையெனும் படிசொரியு
மதவா ரணற்கிளையனே

தனனதந் தனனஎன அளிமுழங் கியகுவளை
மணமாலி கைச்சதுரனே
தபனசெங் கதிருதயம் உலகறிந் துணரமுரல்
சரணயு தக்கொடியனே

தினகரன் சசியளவு திருவிரிஞ் சையின்முருக
சிறுதேர் உருட்டியருளே
சிவசிதம் பரநடன மிடுதிகம பரர்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(அ-ரை.) கனக இண்கிணிகள் - திருவடிகளில் அணிந்துள்ள பொன் தண்டைகள். அமுதம் உண்டவர் - தேவர். கருணாகரக் குரிசில் - அருட்கடற் பெருமான். ஐம்புலன் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். மலமாசு - மலக்குற்றம். சிலம்பிடை - மலையில், அளி - வண்டு. தபனன் - சூரியன். சரணயுதக் கொடியன் - கோழிக்கொடியன். தினகரன் சசி - சூரியன், சந்திரன். (கூஅ)

முதியஅம் புயனையொரு குடிலையின் பொருள்வினவி
முடிமீது குட்டுமுனியே
முழுதும்அன் பர்களிதய மலர்குளிர்ந் தலரவரு
முதிராத பொற்பரிதியே

கதிபெறும் படியுலகில் உயிரெனும் பயிர்தழைய
அருள்நீ ரொழுக்கு முகிலே
கயிலையம் பிகைமுழுக அதரமஞ் சனமுதவும்
அபிஷேக பொற்கலசமே

புதியசெந் தமிழ்மணமு மறையுடன் கலைமணமும்
அழியாமலர்க்குமுதனே
பொதியவந் தணன்உருகி யுருகிவந் தனைபுரியு
மறுமாமு கக்குழவியே

சிதைவில்தண் டலைமருவு திருவிரிஞ் சையின்முருக
சிறுதேர் உருட்டியருளே
சிவசிதம் பரநடன மிடுநிகம பரர்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) முதிய அம்புயன் - பெரிய பிரமன். குடிலையின் பொருள் - பிரணவ மந்திரப் பொருள். முதிராத பொற்பரிதியே - அழகிய இளஞ்சூரியனே. கதிபெறும்படி - மோட்சம் அடையும் படி. உயிரெனும் பயிர் - உயிராகிய பயிர். தழைய - தழைக்க. அருள்நீர் - அருளாகிய நீரை. மஞ்சனம் - நீர். மலர்க்குமுதனே - மலராகிய குமுதம் போன்ற வாயுடையவனே. தண்டலை - சோலை.

உலகமுண் டுலகுதனை யொருபதந் தனில்அளவு
செயுநா ரணற்குமருகா
உதயசெங் கதிரனைய சரணபங் கயம்எனது
முடிமே லழுத்து முதல்வா

சலதிவெந் தலறியிட வரைபிளந் திடயவடி
அயிலைவி விட்டதலைவா
தவமெனும் பெருமையுள குறியவன் பெறவினிய
தமிழ்நூ லுரைத்தசதுரா

மலையினும் பெரியதன இனியவஞ் சியர்பயிலு
மணிமாளி கைச்சிகரமேல்
மரகதஞ் சிறுபகலில் ஒளிதயங் கிடவதனை
இருள்மாலை யுற்றதெனவே

சிலைமதன் சமர்குலவு திருவிரிஞ் சையின்முருக
சிறுதேர் உருட்டியருளே
சிவசிதம பரநடண மிடுநிகம் பரர்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) ஒரு பதந்தனில் - ஒரு அடியில். சரணபங்கயம் - அடித்தாமரை சலதிவெந்து அலறி இட - கடல்நீர் எரிந்து சத்திக்க. குறியவன் - குறுமுனி. பெரியதன இனிய வஞ்சியர் - பெரிய தனங்களையுடைய அழகிய வஞ்சிக்கொடி போன்ற பெண்கள். மரகதம் - பச்சை. சமர் - போர். (௧00)

அகநெகிழ்ந் துருகியிரு விழிசலம் பொழியஉன
திருதாள்து திக்க அறியேன்
அநுதினங் கலைமறைகள் நெறிநடந் திடல்வழுவி
அதிபாத கத்தை நினைவேன

இகபரந் தனையறியும் அறிவறிந் திடுமுனிவர்
இடநாடி யுற்று மருவேன்
எனையுமன் பினர்களுடன் அடிமைகொண் டருளியெழு
பவவேர் ஒழிக்கு மரசே

மகரகுண் டலம்அசைய முலைசுமந் திடையசைய
மலைபோலி ருக்கு முலைமேல்
மணிவடங் களும்அசைய களபகுங் குமவிரக
மடவார் கிருத்தம் இடவாழ்

சிகரமண் டபமருவு திருவிரிஞ் சையினமுருக
சிறுதேர் உருட்டி யருளே
சிவசிதம் பரநடனம் இடுதிகம் பரர்குமர
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) அகம் - மனம். நடந்திடல் வழுவி - ஒழுகுதல் தவறி. மருவேன் - பொருந்தேன். எழுபவவேர் - எழுபிறப்பின் வேரை. விரகமடவார் - ஆசைப் பெண்கள். திகம்பரர் - திக்கை ஆடையாக உடையவர். சிவசிதம்பர - சிவனுகிய சிதாகாசத்தி லுள்ளவனே. சிறுதேர் உருட்டி அருள் - நடைவண்டியாகிய தேரை உருட்டி அருள்வாய். (௪0௧)

## திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்

## முற்றிற்று.

---

# பொருட் குறிப்புக்கள்

[எண் : பாட்டு எண்]

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]

# முருகன் பிள்ளைத்தமிழ்

# நூல்கள்

முருகன் பிள்ளைத்தமிழ் நூல்களில் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் ஆகிய மூன்று நூல்களும் அரிய குறிப்புரை விளக்கங்களுடன் கழகவழி வெளிவந்துள்ளன. ஏனைய இரண்டும் விரைவில் வெளிவரும்.

| | ரூ. | பைசா. |
|---|---|---|
| முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | 2 | 00 |
| திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் | (அச்சில்) | |

கழக வெளியீடு : கசஎ

கவிராச பண்டாரத்தையா

இயற்றிய

# திருமலை முருகன்
# பிள்ளைத்தமிழ்



பேராசிரியர், பெருநாவலர்

திரு பு சி புன்னைவனநாத முதலியார்

எழுதிய

அரும்பொருள் விளக்கத்துடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. மதுரை-1. சென்னை - 1.
1968

புத்தனேரி சிதம்பரநாத புன்னைவனநாத முதலியார் (1889)



Ed I Feb 1929.

Reprints :

March 1957; July 1968.

O31, IMl1,1
K8

THIRUMALAI MURUGAN PILLAITH THAMIZH

Appar Achakam, Madras-1. (1-2)

# பதிப்புரை

இனிய மெல்லிய இழுமெனுஞ் சொற்கள் வாய்ந்த தமிழ்மொழியில், அவ்வினிமை நலம் பொருந்திய பாட்டு வகைகளே முழுதும் அமைந்திருக்கின்றன. அவை யெல்லா வற்றுள்ளும், அவ்வினிமை நலத்தினைச் சுவை மிகுத்துக் காட்டுவது பிள்ளைத்தமிழ்ப் பாட்டாகும். மக்கள் வாழ் நாள் முழுமையிலும், 'பிள்ளைப்பருவ' மென்பது எத்துணை இனிமையானதோ, அத்துணை இனிமையானதே ஏனைத் தமிழ்ப் பாட்டுக்களினும் பிள்ளைத்தமிழ்ப் பாட்டென்பது. இனிக் கோவைப்பாட்டும் அனையதொன்றேயாயினும், அது களங்கமற்ற அன்பினிமை யுடையதன்றும். மற்றுப், பிள்ளைப் பருவம் களங்கமற்ற நல்லெண்ணத்தையும், அவ்வெண்ணத் தின்வழியே களங்கமற்ற தூய அன்பையும் விளைப்பதாய்த் திகழ்தலால், அவைதம்மைப் பெற விரும்புவோரும் பிள்ளைத் தமிழ்ப் பாட்டுக்களில் உள்ளம் இடையறுது பழகுதல் இன்றி யமையாததாகும். கடவுளிடத்திலும் பெரியாரிடத்திலும் அனபிற் பழக விரும்பும் ஆசிரியன்மார்கள், அவர்களை அவ் வன்பிற்கினிய குழந்தைப் பருவத்தராய் உருவெண்ணி. ஆண் பாலானல் ஆண் குழந்தைகளின் விளையாட்டு வகைகளையும் பெண்பாலானற் பெண் குழந்தைகளின் விளையாட்டு வகை களையும் அமைத்து இனிய கொஞ்சு தமிழ்ச் சொற்களாற் பாடுகின்ற நூலே பிள்ளைத் தமிழெனக.

அவ்வகை வந்த பிள்ளைத்தமிழ் நூல்களுள் இத் 'திருமலை முருகன் பிள்ளைத்தமி'ழும் ஒன்று. திருமலை யென்னும் முருகப் பெருமான் திருப்பதி, செங்கோட்டையை அடுத்துள்ளது. இப் பிள்ளைத் தமிழைச் சொல்லும் பொருளுஞ் சுவை விஞ்சும்படி இதன் ஆசிரியர் கவிராச பண்டாரத்தையா அவர்கள் மிகத் திற மாகப் பாடியிருக்கின்றார்கள்

இதற்குப் பேராசிரியர், பெருநாவலர், திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்களைக்கொண்டு அரும் பொருள் விளக்கம் எழுதுவித்து நல்ல முறையில் யாம் இதனைப் பதிக்கலானேம். தமிழுலகம் இதனருமையை யறிந்து பயனடையுமாக!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூல் திருமலை என்னும் தலத்து எழுந்தருளியிருக்கும் செவ்வேள் முருகன்மீது பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ் நூல் என விரியும். திருமலை என்னும் பதி செங்கோட்டையை அடுத்துள்ளது. தென்காசி வட்டத்தைச் சார்ந்த பண்புழியைச் சேர்ந்தது. இதுவே இச் செய்யுள் நூலில் பண்பை நகர் என்று அழைக்கப்பெறுகின்றது. உலகினர் இப்பொழுது பண்புழி என்று வழங்குவது பைம் பொழில் என்று இருக்கவேண்டுமென்று சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் சைவத் திருவாளர் டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் B.A., B.L., தாங்கள் எழுதி வெளியிட்டுள்ள 'ஊரும் பேரும்' என்னும் நூலில் குறித் துள்ளார்கள்.

இப் பிள்ளைத்தமிழ் அருளிய புலவர் முருகப் பெருமானிடம் ஈடுபட்ட பேரன்பர். இஃது இவ்வொரு பிள்ளைத் தமிழோடன்றி, திரிகூடாசலம் என்னும் திருக்குற்றாலத் தருகில் விளங்கும் திரு இலஞ்சிமா நகரில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான்மீதும் அழகிய இனிய பிள்ளைத்தமிழ் பாடி யுள்ளார். இதுகுறித்துப் பாயிரம் பாடிய சண்முகதாசர் என்பவர், "மங்காத செந்நெல்வளர் செங்கோட்டையில், உதித்து நற்கலை பயின்றுயர் மகாவித்துவான், இயலிசை நற்கவிராச பண்டாரத்தையா அவர்கள் ஆர்வமொடியற்றிய" என்னும் அடிகள் படிக்கத்தக்கன.

இந் நூலாசிரியர் கவிராச பண்டாரத்தையா எனப்படுவர். இவர்கள் 'செவ்வரண்' என்னும் செங்கோட்டையில் பிறந்து வளர்ந்த தமிழ்ச்செல்வர். ஐயா என்ற சிறப்பு அடைமொழி இவர்கள் வேளாளர்களுக்குக் குருக்களாயிருந்து வந்தவர்கள் என்பதைக் குறிக்கும். இவர்கள் பெண்வழி உரிமையாளராக சிவத்திரு சண்முகசுந்தரக் குருக்கள் என்பவர் பாளையங் கோட்டையில் விளங்குகின்றார். இவரின் மாதாமகியே

(தாயைப் பெற்ற பாட்டியார்) நம் பண்டாரத்தையா அவர்களின் செல்வப் புதல்வியாவர். இவர்கள் தமிழ் இலக்கிய இலக்கணப் புலமை சான்ற பெருந்தகையராய், ஒழுக்கநிறை குணசீலராய், நாற்கவி பாடும் நற்புலவராய்த் திகழ்ந்தவர். இவ் வுண்மை இவர்கள் இயற்றிய பிள்ளைத்தமிழ் நூல்களில் கண்டு இன்புறலாம். இற்றைக்கு எழுபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் விளங்கியவர்களாவர். இந்நூல், 1929இல் நம் கழக வெளியீடாக வெளிவந்துள்ளது. நூலில் சொற்சுவை, பொருட்சுவை, தொடைவளம், நடைவளம், கற்பனைத்திறம் முதலியவற்றைக் கண்ட அறிஞர் விருப்பின்படி சந்தி பிரித்து, குறிப்புரையுடன் தற்போது வெளியிடப் பெறுகின்றது.

இந் நூல்போல் வேறு முருகன் பிள்ளைத்தமிழ் நூல்களையும் குறிப்புரையுடன் வெளியிட்டுத் தமிழ்ப்பற்றையும், கடவுள் உணர்ச்சியையும் தமிழகத்தில் பெருக்கி வளர்க்க முற்பட்டுழைத்துவரும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை யவர்கள் என்னை இப்பணியில் ஈடுபடச் செய்தமைக்குப் பெரிதும் மகிழ்ந்து என் உளமார்ந்த நன்றியை அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்புள்ள,

புலவரகம், நெல்லை
20—3—1957

பு. சி. புன்னைவனநாதன்.

உ

திருச்சிற்றம்பலம்

## திருமலை முருகன்

# பிள்ளைத்தமிழ்



### காப்பு

வெள்ளைக் கணபதியை வேய்ந்தசடி லப்பெருமான்
பிள்ளைக் கணபதிதாள் பெற்றுரைத்தேன்—வள்ளியுடன்
வந்தகந்தன் காவி மலைபோல வாழவருள்
தந்தகந்தன் பிள்ளைத் தமிழ்.

(அருஞ்சொல் உரை) வெள்ளைக் கணபதி-வெண்ணிறம் வாய்ந்த விண்மீன் கூட்டத்துக்குத் தலைவனாகிய திங்களை. வேய்ந்த சடிலப் பெருமான் - சூடிய சடைக் கடவுளான சிவபெருமான். பிள்ளை - புதல்வன். காவிமலை - திருமலை. அருள்தந்த - அருள்கொடுத்த. கந்தன் - யாவர்க்கும் பற்றுக்கோடாகியவன்; உமையம்மையால் ஆறு வடிவங்களும் ஒன்றாகச் சேர்க்கப்பட்டவன். வாழ: வினையெச்சம். (௧)

### அவையடக்கம்

பிள்ளைத் தமிழாம் பெரியபசுஞ் செந்தமிழை
வெள்ளைத் தமிழாய் விளம்பினேன்—எள்ளுறுமென்
புன்மொழியைக் காட்டிப் புனிதத் தமிழ்ப்புலவோர்
நன்மொழியை மேம்படுத்த நான்.

(அ - ரை.) பசுந்தமிழ் - இனிய தமிழ். பசுமை - இளமை. இனிமை. வெள்ளைத் தமிழாய் - எளிதில் விளங்குந் தமிழ்ச்சொற்களாய். எள்உறும் என்புன்மொழி - இகழப்படும் எனது அற்பச் சொற்கள். புனிதம் - தூய்மை. மேம்படுத்த - மேன்மையுறச் செய்ய. (௨)

---

## க. காப்புப்பருவம்

பிள்ளைத் தமிழ் பாடும் இடத்து இரண்டாம் திங்களில் பிள்ளையைக் காக்க என்று திருமால் முதல் முப்பத்துமுக்கோடி தேவர் சமுகப் பல கடவுளர் காக்க என நூலிற் கூறுதல் மரபு.

[இந் நூற்குத் திருமால் வணக்கம் முதற்கண் கூறப்புகுந்தது என்னையெனின், "மங்கலம் பொலியும் செங்கண்மாலே சங்கு சக்கரம் தரித்தலானும், காவற் கடவுளாதலானும் பூவினட் புணர்தலானும்" என்பவாகலான்.]

### திருமால்

சீரார் கமலத் திருஈன்ற
தெய்வப் பிடியுங் குறக்கொடியுஞ்
சேரும் பெருமாள் வேற்பெருமாள்
சேந்தற் பெருமாள் மயிற்பெருமாள்

காரார் குடுமித் திருமலையிற்
கருணைப் பெருமாள் குகப்பெருமாள்
கந்தப் பெருமாள் முத்தொழிலுங்
காக்கும் பெருமாள் தனைக்காக்க

பார்ஆ யிழையைத் திருமகளைப்
பாரப் புயத்தில் திருமார்பிற்
பதிக்கும பெருமாள் வேயின் இசை
பாடும் பெருமாள் பசும்பெருமாள்

ஆரா அமுதங் கடைந்தமரர்க்
கருளும் பெருமாள் திகிரிசங்கம்
அணியும் பெருமாள் முதலைதடிந்
தானை காத்த பெருமாளே.

(அ - ரை.) கமலத்திரு ஈன்ற தெய்வப் பிடியும் குறக்கொடியும் - செந்தாமரைவாழ் இலக்குமி பெற்ற மகளிர் அமிர்தவல்லி, சுந்தரவல்லி என்பவர் பின் தெய்வயானை, வள்ளி என்னும் பெயரோடு பூவுலகில் முருகனை மணந்துகொண்டனர். பெருமாள் பெருமையை ஆளுதலுடையவர். முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல். பார் ஆயிழை - பூமகள். புயம் - தோள் வேயின் இசைபாடும் - வேய்ங்குழல் வழி இசையைப் பாடுகின்ற. ஆரா - உண்ணு. திகிரி - சுதரிசனம் என்னும் சக்கரம். தடிந்து - கொன்று. ஆனை - கயேந்திரன் என்னும் யானை. (க)

சிவபெருமான்

வேறு

வணநதி அறுகு சிறுபிறை இதழி
வளர்சடை முடியின் மீதினில் சேர்த்திய
வரதனை நடன பரதனை இமய
மடமயில் தழுவும் வாமனைப் பாற்கடல்
வரமுனி மதலை அழஅருள் புரியும்
மழவிடை உடைய பாகனைக் கார்க்கடு
மணிமிட றொளிரும் அமலனை நமனை
வதைசெய்த சரண மாமலர்ச் சேர்ப்பனை
இனிமுனி வரர்கள் தவமுயல் இடமு
மினியபண் மொழியும் ஆரணக் கூட்டமும்
இருநில வனிதை முலையணி தரளம்
எனவிழும் அருவி நீர்உகத் தூற்றிய
இயல்பெறு வளமை பழமையும் உடைய
எழில்வரை எழிலி தோயுமுக் கோட்டினில்
இலகிய பலவின் நிழலமர் கடவுள்
எழுதிய சபையில் ஈசனைப் போற்றுதும்

அனகனை எமது குலகுரு பரனை
அருள்பெறும் அமரர் சேனையைக் காத்துமுன்
அடையலர் மனது படபட படென
அடலயில் நடவு வீரனைக் கார்த்திகை
அழகிய புளக களபமென் முலையின்
அமுதுணும் இளைய பாலனைத் தீர்த்தனை
அருமறை முடியில் நடமிடு பரனை
அறுமுக குகவி சாகனைத் தேர்ப்பொலி

தினகரர் ஒருபன் னிருவரும் ஒளிகள்
திகழ்உடு பதியும் ஏகுதற் கேக்குறு
சிகரியின் அழகு சினகர மருவு
திருமதி ளேயிலின் மேற்றிசைப் பாற்படு
தெரிவையர் எழுபெண் அரசியர் தமது
திருவருள் புரியும் வாவியிற் பூத்திடு
தினமொரு குவளை மலர்தனை உதவு
திருமலை விசய வேலனைக் காக்கவே.

(அ - ரை.) வளநதி - அழகிய கங்கையாறு. இதழி - கொன்றை. நடன பரதனை - பரத நாட்டியம் ஆடுபவனை. வாமன் - அழகன். வரமுனி மதலை - வசிட்டர் மைத்துனர் மகனான உபமன்னியர். "கண்பிசைந் தொருசேய் இன்னும் கலுழினுந் தனைக்கொ டுப்பன், மண்பிசைந் துண்டமாயன் மறித்திட வலிய னல்லன்" என்று பாற்கடல் திரண்டு வெள்ளிமலையாகி நின்றது என்று பிரபுலிங்கலீலையில் கைலாசகதியில் வெள்ளிமலையைச் சிறப்பித்த பாடலில் இவ் வரலாறு வருகின்றது. கார்க்கடு - கரியவிடம். அமலன் - மலமற்றவன். சரணம் - அடி. ஆரணம் - வேதம். நிலவனிதை-பூதேவி. உக - சிந்த. போற்றுதும் - வணங்குவாம். அடையலர் - பகைவர். அயில்நடவு - அயிற்படையைச்செலுத்து. தீர்த்தன் - தூயவன். உடுபதி - சந்திரன். ஏக்குறுதல் - அச்சமடைதல் சினகரம் - கோயில். வாவி - தடாகம். விசயவேலன் - வெற்றி வேலன். திருமலைமுருகன் ஒரு பெரும் சிறப்பை நாடொறும் தவறாது பூக்கும் நறுமலர்க்குவளையே நவிலும். (உ)

## உமையம்மை

### வேறு

கிறம்வ ளர்த்திடு நீலிசொற் பாத்தரு
நிமலி மட்டவிழ் தாமரைத் தாள்துணை
நினைப வர்க்கருள் கோமளக் கோல்தொடி
நிலைமை பெற்றிரு நாழிநெற் சேர்த்துல

கறம்வ ளர்த்தவள் தூயபொற் கோட்டிம
அசல புத்திரி யாமளை கார்த்திகை
அருளு டைக்குழல் வாய்மொழிப் பார்ப்பதி
அடியி ணைப்புகழ் தானெடுத் தேத்துதும்

மறம்வ ளர்த்தநி சாசரச் சீற்றர்கள்
வலிதொ லைத்தசு ரேசனைத் தாக்கியோர்
மயில் நடத்திய வீரனைச் சூர்ப்பகை
மறவ னைக்கதிர் வேலனைத் தேக்குறு

திறம்வ ளர்த்தசி வாகமப் பாற்கடல்
தனைம தித்ததி லேஎடுத் தூற்றிய
தெருள் ஒழுக்கமு தீசனுக் கூட்டிய
திரும லைக்குரு நாதனைக் காக்கவே.

(அ - ரை.) சொற்பா - சொல்லால் ஆகிய பாடல். மட்டு - தேன், மணம். கோமளம் - இளமை. கோல்தொடி - கோலில் அமைத்துச் செய்யப்படும் தொடி, அல்லது அழகிய தொடி; தொடி - வளை; தொடுக்கப்படுவது என்னும் பொருட்டு. கோடு - சிகரம். இமாசல புத்திரி - இமயமலையரசன் புதல்வி, பார்வதி. யாமளை - பச்சை வடிவாள். குழல்வாய்மொழி - திருக்குற்றாலத் திறைவி பெயர். ஏத்துதும் - போற்றுவம். சீற்றர்கள் - கோபிகள். மறவன் - வீரன். தெருள் அமுது - தெளிந்த அவியாகிய அமுதம். செந்தமிழ்ச் சிவாகமத் திருப்பாற்கடலைக் கடைந்து அதிலிருந்தெழுந்த ஆராஅமுதினை அப்பனுகிய சிவபெருமான் திருச்செவிக் கூட்டிய திருமலைமுருகன். (௩)

### உச்சிப்பிள்ளையார்

*வேறு*

**சுரரை** வளைத்துத் தலைமிசை குட்டித்
தொகைலோகக் காப்பினர்
**தொ**ழிலை அடக்கிக் கொடுமை செலுத்தித்
தொலையாமைத் தேக்கொடு
**செரு**வில் எதிர்த்துப் பொருத தயித்தியத்
திறலாளைப் போர்ப்புரி
**தி**ருமலை யுச்சிக் கணபதி பற்பச்
சிறுதாளைப் போற்றுதும்
**அர**வு பிடித்துச் சடைஅணி கொற்றத்
தரனார்கண் தீப்பொறி
**அறு**வகை முற்றிச் சரவண முற்றிட்
டடியாரைக் காத்தொரு
**பிரண**வ நுட்பப் பொருளை விரித்துப்
பிரமாவைத் தாக்கிய
**பிரச** மலர்க்கண் குவளை மலைக்குள்
பெருமாளைக் காக்கவே.

**(அ - ரை.)** *தயித்தியர் - அசுரர், திதிமைந்தர். தேக்கு - தடைபண்ணு. கண்பொறி - கண்ணினின்றும் பிறந்த தீ. பிரசம் - தேன். பிரணவம் - ஓங்காரம் செந்தமிழ் ஓங்காரமே இயற்கை ஓங்காரமாகும். வரிவடிவின்கண் அதன் எழுத்தும் ஐந்து. அவை, அ, உ, ம், விந்து, நாதம் என்ப.* (௬)

### திருமகள்

*வேறு*

**இச்சைக்** கிசைந்த வரங்கொடுக்கும்
எங்கள் குவளைத் திருமலையை
**ஏத்தும்** அடியார் வீட்டகத்தில்
எங்கோன் மாமன் மார்பகத்திற்

பச்சைப் பசுந்தாள் செங்கமலப்
பனிப்பூம் பொகுட்டில் குடியிருக்கும்
பவளத் துருவத் திருமடந்தை
பாகத் துணையைப் பணிந்திடுவாம்
கொச்சைக் குறவர் குலச்சிறுமி
குமரி குறத்தி பசுநிறத்தி
கொங்கைக் குவட்டிற் குடைந்துமற்றக்
குவட்டுக் கிரியைத் தகர்த்துழக்குஞ்
செச்சைப் புயபூ தரத்தழகன்
செழிக்கும் திருச்சண் முகத்தழகன்
செவ்வேல் அழகன் பண்ணைநகர்ச்
செவ்வேள் பனுவல் தழைக்கவே.

(அ - ரை.) வீட்டகத்தில் - வீட்டில். பசுந்தாள் - இளந் தண்டு. உருவம் - வடிவம். குவடு - சிகரம். முடி. தகர்ந்து உழக் கும் - பேர்த்துக் கலக்கும். செச்சை - செஞ்சாந்தின் குழம்பு. புய பூதரம் - தோண்மலை. (இ)

நாமகள்

உதரத் திடையின் உலகொடுக்கி
உமிழ்ந்தோன் இருவர்க் கொருகொழுநன்
உந்தி மலரின் வந்துதித்த
ஒருநான் முகத்தன் திருமனையாள்
அதரச் சிவப்பி குழல்விழிகள்
அழகு கறுப்பி உடலிடம்பூண்
ஆடைமுறுவல் வெள்ளைநிறத்
தம்மை வாணி பதம்பணிவாம்
மதுரக் கவிதை மழைபொழியும்
வரத அருண கிரிமேகம்
வழங்குந் தமிழ்மா ரியில்தோய்ந்து
வளர்பன் னிருபொன் வரையின்மிசை

கதிர்நித் திலமும் செம்மணியும்
கடம்பும் குரவும் வள்ளிகோங்கை
களபப் புழுகும் கமழ்ந்திலகும்
கந்தன் கவிதை செழிக்கவே.

(அ - ரை.) உதரம் - வயிறு. உலகு ஒடுக்கி உமிழ்ந்தோன் - ஊழிக் காலத்து வெள்ளத்தில் பூமியை உண்டு வற்றினபின் உமிழ்ந்த திருமால். இருவர்க்கு ஒரு கொழுநன் - சீதேவி பூதேவி யாகிய இருவர்க்கும் ஒப்பற்ற நாயகன். உந்திமலர் - கொப்பூழாகிய தாமரை. அதரம் - உதடு. குழல் விழி கறுப்பு - கூந்தலும், கண்ணும் கறுப்புநிறம். உடலிடம், பூண், ஆடை, முறுவல் - இவை வெண்ணிறம். கவிதை - கவி வரத அருணகிரி மேகம் வழங்கும் தமிழ் மாரியில் தோய்ந்து - மேலான அருணகிரிநாதனாகிய மேகம் பொழியும் தமிழ்மழையில் படிந்து. அஃதாவது திருப்புகழ்ச் சந்தப்பாட்டில் மகிழ்ந்து. புழுகு - கத்தூரி. (சு)

பிரமதேவன்

படிஎழுலகும் படைத்துயிர்க்கும்
பலவேறுருவம் படைத்ததிலே
பரிந்துமுகபே தமும்படைத்துப்
பாராய்பனுவ லாட்டியென்று
பகர அதற்கு நிகராக

முடியாவாணி அவன்படைத்த
முகங்கள்தோறும் இருந்திருந்து
மொழியும்பேதங் காட்டமின்னை
முழுதுமகிழ்ந்து நாவில்வைத்த
முளரிப்பிரமன் சரணபணிவாம்;

வடியாக்கடலைச் சிறைபுரிந்து
மழலைச்சீதை சிறைமீட்ட
மாயன்மருகன் வச்சிரத்தால்
மலையின்சிறையைத் தடிந்தவிண்ணோன்
மதலைசிறையைத் தீர்த்தசுரக்

கோடியோனுடற்கே நான்குசிறை
கொடுத்துநடத்திக் கொடியுயர்த்த
குமரக்கடவுள் திருமலையில்
குடிகொண்டிருந்து விளையாடுங்
குரிசில்பனுவல் தழைக்கவே.

(அ - ரை.) *படி - உலகம், பூமி. பரிந்து - விரும்பி. பேதம் - வேறுபாடு. பனுவல் - பாடல். மின்னை - நாமகளை. முளரி - தாமரை. சிறை புரிந்து - அணைகட்டி. சிறைமீட்ட - காவலிலிருந்தும் திருப்பிய. மலையின் சிறை - மலையின் இறகு. தடிந்த விண்ணோன் - வெட்டிய தேவேந்திரன். மதலை சிறையைத் தீர்த்து - சயந்தனைச் சிறையினின்றும் விடுவித்து. குரிசில் - ஆடவரில் சிறந்தவன்.* (எ)

**காளி**

*வேறு*

பண்அம் பணத்திதிரி சூலிகௌ மாரியொரு
பாலைக் கிழத்திநீலி
பச்சைப் பசுங்கமாரி கொற்றப் பெரும்படைப்
பசாசுவே தாளம்உடையாள்
கண்ணன் திருத்துணைவி கைச்சக் கரக்கௌரி
கல்வா கணக்கபாலி
கதிகொடுத் தாளும்என் திருமலைக் காளிசெங்
கமலசர ணம்பணிகுவாம்
வண்ணம் கறுத்ததிரு மேனியொரு பாதியின்
வடிவக் கருங்கடலின்நீர்
மட்டுமிஞ் சிப்பெருகி அப்புறச் செம்மையில்
வழிந்தொழுகும் வாழ்தெனவே
கண்ணுந் திருக்கந்த ரத்தில்விடம் வைத்தருளும்
நகர்ஈசர் மார்பிலணியும்
காமவேள் ஊைப்பொடிப் புழுதிஆ டுங்குமர
நாயகன் கவிபெருகவே.

(அ - ரை.) அம்பணத்தி - துர்க்கை. பாலைக்கிழத்தி - பாலை நிலத் தலைவி; கிழவன் ஆண்பால். துணைவி - உடன் பிறந்தாள். கமல சரணம் - தாமரை அடிகள். மட்டும் - அளவும். கந்தரம் - கழுத்து (அ)

வள்ளிதேவயானை, கன்னிமார், சத்தமாதர்கள்

வேறு

தருவிற் கிறையும் குறவர்களும்
தவளக் களிறும் செம்மானும்
தலைமை பெறவந் துதித்தருளுந்
தாய்மார் இருவர் சரண்போற்றி
மருவிட் டொழுகும் பைங்காவி
வாவிக் கரையின் மேவுகன்னி
மார்கள்எழுவர் சத்தகுல
மாதர் இவர்கள் சரண்பணிவாம்
துருவைப் பரியிப் பேரடலைத்
துணைவன் கரத்தால் துடைத்தேறின்
சூரைத் துடைத்தங் கவன்செனனத்
துயரைத் துடைத்துச் சொல்அவுணர்
கருவைத் துடைத்தோர் அயிராணி
கண்ணீர் துடைத்து மெய்யடியார்
கவலை துடைத்த திருமலையிற்
கந்தன் கவிதை விளங்கவே.

(அ - ரை.) தருவிற்கு இறை - இந்திரன். தவளக் களிறு ஐராவதம். தாய்மாரிருவர் - வள்ளி தேவயானையாகிய இருவர்கள். காவி வாவி - நீலோற்பலக்குளம். கன்னிமார்கள் எழுவர் - அபிராமி, இந்திராணி, கவுமாரி, காளி, நாராயணி, மகேசுவரி, வராகி என்னும் ஏழுமாதர்கள்; துருவைப்பரி - செம்மறியாடாகிய வாகனம். செனனத்துயர் - பிறவித் துன்பம், கரு - கருப்பம். துடைத்து - அழித்து. (க)

## வீரபத்திரர், வயிரவர், சாஸ்தா, அட்டவசுக்கள், ஏகாதச ருத்திரர், அசுவினி தேவதைகள், சந்திரன், ஆதித்தர், பதினெண்கணம், சப்தரிஷிகள்

வேறு

வட்ட நிலத்தோ டடுக்குல கத்துள
வஞ்சம் ஒழிந்திடவே
மலைதக ரும்படி மயில்நட வுஞ்சிறு
மதலையை எந்தையையே

சிட்டர்கள் உத்தம பத்தி மிகுத்திடு
சிந்தை மகிழ்ந்திடவே
திருமலை யிணை குவ டதனில் உறைந்தருள்
சிவசுத கந்தனையே

துட்டன் மகத்தை உழக்கிய விக்ரம
தும்பி நிரம்பியசீர்
தோலைவறு திண்திறல் வயிரவர் இம்பர்கள்
தொழுமணி கண்டனுமே

அட்ட வசுக்கள் உருத்திரர் மருத்துவர்
அம்புலி செங்கதிரோன்
அருள்பதி னெண்கண முனிவர் புரந்தரன்
அமரர் புரந்திடவே.

(அ - ரை.) அடுக்கு - ஒன்றின்மேல் ஒன்று அடுக்கப்பட்டிருப்பது. சிவசுதகந்தன் - சிவ குமாரனாகிய முருகன். துட்டன் - தக்கன். இம்பர்கள் - இவ்வுலகத்துள்ளவர்கள். அட்ட வசுக்கள்- எண்வகை வசுக்கள்: அனலன், அணிலன், ஆபன், சோமன், தரன், துருவன் பிரத்தியூடன், பிரயாசன். புரந்தரன் - இந்திரன். அமரர் - தேவர். (கO)

## உ. செங்கீரைப்பருவம்

[இருகையும், முழந்தாள்களும் ஊன்றித் தலைநிமிர்த்தி ஆடும் பருவம். இஃது ஐந்தாந் திங்களில் நிகழ்வது.]

மனத்தினில் நினைத்துருகும் உத்தமர் உளத்தின்மிசை
மங்காத வேதமுடிமேல்
மயிற்பரி திருப்போலி புறத்தேன தகத்தினோடு
வன்போரின் மேடமிசையே
புனற்சடை முடிக்கடவுள் அற்புத மடிக்குள்உமை
பொங்கார மார்புதனில்நீ
பொருப்பினை முதற்சிறை அறுத்தவிச யத்தினோடு
பொன்றாத தேவர்தலைமேல்
அனத்தினை உயர்த்தவன் முடித்தலை யினிற்சுரர்கள்
அன்பான வாறுதலைமேல்
அனிச்சமும் உருத்திய பதற்சிறு குறச்சிறுமி
அம்பாகு நீலவிழியாள்
தினைக்கதிர் வனத்திலும் மலர்ச்சரணம் வைத்தருக
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே.

(அ - ரை.) வேதமுடிமேல் - மறையுச்சியில். மேடமிசை - ஆட்டின்மேல். பொன்றாத - அழியாத. அனத்தினை உயர்த்தவன் - அன்னப் பறவையைக் கொடியில் எழுதியுயர்த்தவனாகிய பிரமன். உருத்திய - அழுத்திய. (சக)

கூராடும் வேல்விழிகள் குழையில் ஆடக்குழைகள்
கொண்டாடு தோளில்ஆடக்
குறவியர்வு திருநுதற் சிலையில் ஆடச்சுட்டி
கூடத்து வண்டாடவே

வாராடு பொன்மார்பின் மாலைஆ டத்தரள
மாலையொடு சேலைஆட
மலராடு செங்கைதனில் வெள்வளைகள் ஆடநின்
மனதுநின் றூசல்ஆடத்

தாராடு மைக்குழல் சரிந்தாட வல்லிஇடை
தள்ளாட நகையாடியே
தளிராடு கற்பகச் சோலையிற் பந்தாடு
தனியானை முலையானைமேற்

சீராடு மான்மதச் சேறுடும் ஒருகளிறு
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே.

(அ - ரை.) கூர் ஆடும் - கூர்மை பொருந்திய. குறுவியர்வு - சிறுவியர்வை. நகை ஆடி - சிரித்து. தனியானை முலையானை - ஒப்பற்ற தெய்வயானையம்மையின் முலையாகிய யானைகள். சேறு - குழம்பு. (கஉ)

மங்காத கற்பகக் காவினில் செந்தினையின்
வனசர மிசைப்பிறந்து
வண்மைச் செழுஞ்சர வணப்பொய்கை நதிசரமும்
வாழவே தவமுயன்று

பொங்கார முங்குரவும் நீபமுஞ் செச்சையும்
பூங்குவளை யும்கோடலும்
பூத்துப் பொலிந்தழகு வாய்த்திலகு பன்னிரு
புயக்கிரி சரத்தைமேவுங்

கொங்கார் கதுப்பிளங் குஞ்சரியும் மஞ்சரிக்
கோதைக் குறப்பிடியுமே
குணபேத மில்லா திடத்தினும் வலத்தினுங்
கூடப் பிணைக்கநடுவோர்

சிங்கார வச்சிரத் தூண்போல் இருப்பவன்
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே.

(அ - ரை.) வனசரம் - பெருங்காடு ஆரம் - சந்தனம் கோடல் - காந்தள். மஞ்சரி - பூங்கொத்து. பிணைக்க - சேர்க்கப்பட. வச்சிரம் - வயிரம். (கக)

கொந்துகமழ் சரவணப் பொய்கையின் மருங்கில்இரு
கோட்டொருவெள் ஏற்றேறிக்
கூர்மழுக் கையனும் தையலும் திருவுளங்
கூடக் கசிந்துருகியே

வந்துமக வாறுருவும் ஓருருவம் ஆகவே
மங்கைபாரப் பத்எடுத்து
மடியில் வைத் துச்சியின் முகந்துபுற நீவிமணி
வாய்தோறும் முத்தமிட வே

இந்துமுக மண்டலத் துமைமங்கை கொங்கையின்
இழிந்தொழுகு பாலைவளளத்
தேந்திக் கொடுக்கக் குடிக்குமப போதுபணி
ரண்டுகடை வாயின்வழியே

சிந்திவழி கின்றதென முத்தணியு மார்பனே
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உறபல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே.

(அ - ரை.) மருங்கு-பக்கம். கோடு - கொம்பு. ஆறு உருவும்-ஆறு வடிவமும். முகந்து - மோந்து புறம்நீவி - முதுகைத்தடவி. இந்து - சந்திரன். இழிந்து - இறங்கி. வள்ளம் - கிண்ணம். பன்னிரண்டு வாயின்வழி சிந்தும்பால் முத்துப்போன்றது என்க. (கச)

கால்பெயர்த் தசைநடைக் கொண்டுநீள் ளத்திலை
கற்த்துக் குதட்டுமேதி
கன்றுக் கிரங்கிக் கனைத்துநீர் விட்டுமுற்
கால்வாரி நின்றமுலையின்

பாலுகுத் திடஅது பரந்தோடி முப்பழப்
பங்கச் செழுங்கழனியிற்
பாய்ந்தொழுக அதனிடை கிடந்து சேறும்
பருங்கரும் பகடூட்டிச்

சாலடித் துழும்உழவர் மார்பினில் தோளினில்
தலைதோறும் முகங்கடோறும்
தளிரடிப் பிடிநடைச சாதிக் கடைசியர்கள்
தங்கள்நய னங்கள்போலச்

சேல்குதிக் குந்திருப் பண்ணைநக ராதிபதி
செங்கீரை ஆடியருளே
திருக்கிளரும் உற்பல மலர்த்திரு மலைக்குமர
செங்கீரை ஆடியருளே.

(அ - ரை.) *நளினம் - தாமரை. கறித்து - கடித்து.* மேதி - எருமை. *உகுத்திட - சொரிய. பங்கம் - சேறு. கரும்பகடு - கரிய எருமைக்கடா அல்லது கரிய எருது. பிடிநடை - பெண்யானை நடையையுடைய. கடைசியர்கள் - உழத்தியர்கள். நயனங்கள் - கண்கள். பண்ணை நகர் - இக் காலத்துப் பண்பொழில் நகர் என்று வழங்கப்படுவது, திருக்கிளரும் - அழகு விளங்குகின்ற.* (கடு)

வேறு

இனமுனி வரர்கள் குருமுனி குருபரன்
என்றே கொண்டாடும்
இவைஅவ ரோடுபொரு பகைநிசி சரர்பதி
எங்கே என்றேகி

மனவலி புயவலி படைவலி தவவலி
மஞ்சா ருஞ்சூரன
மதலைகள் துணைவர்கள் கிளையுடன் அவனுடல்
வன்பா ரம்தீர

கனைமலர் சிதறியும் அரிஅபன் முதலினர்
நணபோ டும்பாட
நகைமணி வளையணி கரதல வயிரொடு
நம்பா சங்க்ராமா

தினகரர் விழிபையும் அருள்செயும் ஒருமணி
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) நிசிசரர்பதி - சூரபதுமன். மதலைகள் - குழந்தைகள். (கசு)

பசைஅறு நெஞ்சுடை அவுணர் பெரும்படை
பஞ்சாய் நொந்தேழ
பரவையின் மிசைபுக அலைகெட வடகிரி
பந்தாய் நின்றாட

விசையின் நொறுங்கிய திகிரி நெடுங்கிரி
விண்டே சென்தூளாய்
விடவிட அரவொடு கமடமு மசைவுற
வெந்தீ யுங்காலும்

இசைபெறு மண்புனல் வெளியுடன் ஐந்தெனும்
எண்பூ தம்சோர
இமையவா முனிவர்கள் துயரொடு மகிழஇ
ரண்டோ டொன்றேழ

திசைசுழ லும்படி மயில்நட வும்பதி
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) பசை - பற்று. பரவையின்மிசை - கடலில். விண்டு - பிளந்து. விடஅரவு - நச்சுப்பாம்பு. கமடம் - ஆமை. தீ கால் மண் புனல் வெளி:-இவை ஐம்பெரும் பூதங்கள். நடவும் - செலுத்தும். செங்கோ செங்கீரை:-என்பது செங்கீரை ஆடியருள் என்பதன் மரூஉ. (கஎ)

கொந்து கமழ்ந்திடு குஞ்சியு மூவிரு
குலமண்ணி மௌலிகளும்
கோகநகங்களோர் ஆறு மலர்ந்தன
குளிருந் திருமுகமுஞ்

சந்த மணங்கமழ் கந்தர மும்கிரி
தண்டிய திண்புயமும்
தனிஅயி லும்கர தலமும் இலங்கிய
சந்துறு கடமார்பும்

தொந்தி தருஞ்சிறு பண்டியும் மேலணி
சுந்தர அரைஞாணும்
துகிலும் பரிபுர பதமும் கொடுதுயர்
தொலையும் படிஅடியார்

சிந்தையின் நின்று நடம்புரி யுங்குக
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) கொந்து - கொத்து, பூங்கொத்து. குஞ்சி - ஆண் மயிர். கோகநகங்கள் - தாமரைகள். மலர்ந்தன - விரிந்தவை போல். தண்டிய - விலக்கிய. இலங்கிய சந்து - விளங்கிய அழகு. தொலையும்படி - கெடும்படி. (கஅ)

மகரக் கடலிற் கடுவிட முண்டவன்
வளையா வலியாலு
மாயக் காலுக் குடைபட் டுருளா
மணிமுடி பெறலாலும்

நிகரோப் புவமை இலாத சுதந்தர
நீவிளை யாடியநாள்
நேரிபட் டடிபட் டுன்றனல் நிலைகுலை
யாதுவி ளங்கியதால்

தகரக் கருமைக் கோதைஅ ரம்பையர்
தயவுறு கொழுநருடன்
தடவட வரையினும் இவைபெரி தெனவே
தங்கி இருந்தேகுஞ்

சிகரிப் பண்பைத் திருநக ரதிபதி
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) விடமுண்டவன் - சிவபெருமான். மாயக்காலுக்கு இடைபட்டு - மாயக்காலுக்குத் தோற்று. தகரம் - மயிர்ச்சாந்து. (கக)

காயோடு பூவோடு கனிஉறு மாவுங்
கண்டம்இ ரண்டாகக்
கண்டகர் நெஞ்சம் உலைந்துகு லைந்து
கலங்கி மலங்கிஅழப்

பேயோடு காளி நடஞ்செய உம்பர்
பிழைத்தோம் என்றாடப்
பேருல குயந்து சராசர கோடி
பிராணி தழைத்தாடத்

தாயோடு தமரும் இலாத அதீதன்
தழல்விழி வழிதோன்றித்
தண்டிய அணடம் நிரம்பிய காலின்
தலைஒரு வாகனமாய்த்

தீயோடு நீரோடும் வரும்இடி ஏறே
செங்கோ செங்கீரை
திருமலை அறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) மா-மாமரவடிவினன் ஆன சூரபதுமன். உலைந்து - கெட்டு. மலங்கி - கலங்கி. உம்பர் - தேவர். தண்டிய அண்டர்- வருத்தமடைந்த தேவர்கள். இடியேறு - ஆண்இடி. (உ0)

## ௬. தாலப்பருவம்

[தொட்டிலிட்டுத் தாலாட்டும் பருவம்; ஏழாந் திங்களில் நிகழ்வது.]

பண்டைக் கொடிய தீவினையும்
பழிக்கும் குலமும் நானெனும்ஓர்
பகையும் தீர்ந்திட் டிம்மையிலே
பரிந்து மனது குழைந்துருகுந்
தொண்டைத் தொகையி னுடன்கூடித்
தொனிக்க இனிக்குந் திருப்புகழைச்
சொல்லித் துதிக்க நல்இயலாந்
தொலையா வாழ்வு கொடுத்தருளி
அண்டத் திறைவன் பொன்முடிக்கும்
அமலக் கமலன் மணிமுடிக்கும்
அமரர் முனிவர் தலைகளுக்கும்
அணியப் பணியக் கிடையாத
தண்டைப் பதத்தை எனக்களித்த
தலைவா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ.

(அ - ரை.) நான்எனும் - நான் என்று சொல்லப்படும் ஆணவம். இம்மை - இப் பிறப்பு. இனிக்கும் - தித்திக்கும். இயல் - இயல்பு. இலக்கணம். அண்டத்து இறைவன் - உலகத் தலைவன். அமலக்கமலன் - குற்றமற்ற தாமரையிலிருக்கும் நான்முகன். அணிய பணிய - சூடவும், வணங்கவும். தாமம் - ஒளி. (௨௧)

மையற் குறவர் குறத்தியர்கண்
மருளு மடம்போய்த் தெருளெய்த
மான்கள் பசியும் மனப்பயமும்
மறந்து சுரந்த மடிப்பாலைப்

பையப் பதுங்கும் புலிப்பிணவின்
பறழுக் கருத்திக் கோலைமறந்த
பாரப் புலிதன் முலைப்பாலைப்
பன்றிக் குருளைக் கினிதூட்டக்

கையில் கவணில் பதித்தமணிக்
கல்லும் உருகக் கிளிகள்தினை
கவரா திருந்து கசிந்துருகக்
கனிவாய் ஆலோ லம்புகலும்

தையற் குறத்தி மனம் உருக்குஞ்
சமர்த்தா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ.

(அ - ரை.) மையல் - மயக்கம். மருளும்மடம் - மயங்கும் அறியாமை. தெருள் - தெளிவு. சுரந்த - சொரிந்த. புலிப்பிணவு- பெண் புலி. பறழுக்கு அருத்தி - குட்டிக்கு ஊட்டி. குருளை - குட்டி. தினைகவராது - தினைக்கதிரைக் கொள்ளாமல். புகலும் - சொல்லும். வள்ளி நாச்சியார் திருமொழி மட்டிலா இனிமை வாய்ந்தது. கவணில் வைத்த மணிக்கல்லுருகும். தினைகவர வந்த கிளி கவராதிருக்கும். (உஉ)

நீடுங் கருணைத் திருவருளால்
நீறு தனுப்ப விடைவாங்கி
நெடிய கடலைக் கடந்திலங்கை
நீரில் அழுந்தக் குதித்தவுணர்

கூடும் பதிம கேந்திரத்தின்
குணபால் காக்குங் கயமுகனைக்
கொன்று சயந்தன் சிறைச்சாலை
குறுகிக் சுகஉன் வரவுரைத்துச்

சூடு மகுடச் சூரன்முன்போய்த்
தூது பகரச் சூரன் எதிர்
சொல்லச் சீற வல்லையிலோச்
சுடர்க்கோ புரத்தால் அயுன்கோவுவைச்

சாடும் வீர வாகுதுணைத்
தமையா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ.

(அ - ரை.) விடை வாங்கி - உத்தரவு பெற்று. பதி - ஊர். குணபால் - கீழ்திசை. கயமுகன் - யானைமுகன். சயந்தன் - இந்திரன் மகன். சீற - கோபிக்க. (உக)

செப்பா மோனப் பரமசுகச்
செங்கைக் கருநெல் லியங்கனியே
திருக்கார்த் திகைபார்ப் பதிமுலைப்பால்
தேக்கும் ஒருசெம் பொறகுடமே

கோப்பார் குழைச்சி குறத்திகொங்கைக்
குவட்டில் அணியுஞ் செம்மணியே
குளிருஞ் செழுங்கங் கையில்பிறந்த
கோமே தகமே கூர்வடிவேல்

அப்பா அரசே உமைமடந்தைக்
கருமைக் குருந்தே கண்மணியே
அமரர் விருந்தே யுலகினுயிர்
அனைத்தும் புரக்கும் அருமருந்தே

தப்பா விரதப் பெருமான்சந்
ததியே தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ.

(அ - ரை.) செப்பா - சொல்லமுடியாத. கரு - கரிய. தேக்கும் - நிறையும், தங்கும். கொப்பார் குழைச்சி - கொப்பணிந்த காதுடையவள். கோமேதகம் - நவமணிகளுள் ஒன்று. புரக்கும் - காக்கும். சந்ததி - தோன்றல். (உஉ)

கன்னங் கரிய மால்இடத்தே
கலந்து விளங்குந் தாணுவின்மேல்
கண்ணில் உதித்தோர் ஆறுருவாய்க்
கால்மே லேறிக் குளம்புகுந்து

மன்னும் உயிருக் குயிராகி
வடிவோன் றாகிப் பலமுகமாய்
வளர வயலுஞ் சோலையினும்
வாவிதோறும் விளையாடி

அன்னம் இருபால் இருக்கஇசைந்
தார்க்கும் வேலை நடத்திமகிழ்ந்
தன்பு புரிந்து பரிந்துபுரிந்
தடுத்தோர் பரவச் சூர்தடிந்துன்

தன்னைப் பொருவும் அனுமநதித்
தலைவா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ.

(அ - ரை.) *தாணு - சிவன். மன்னும் உயிர் - நிலைபெற்ற உயிர்கள். ஆத்மா அழியாதது என்பது சித்தாந்தம். வாவி - குளம். பரிந்து புரிந்து - விரும்பிச் செய்து. பொருவும் - நிகர்க்கும்.* (௨௫)

குமரன் சரணம் சரணமென்று
கூறிச் சுரர்கள் சரண்புகுதக்
கொடியோர் மனத்தில் பயம்புகுதக்
கொலையும் களவும் கெடிபுகுத

அமரர் உலகம் குடிபுகுத
அவுணர் பதியில் எரிபுகுத
அடையார் உயிர்கள் சோர்க்கமுடன்
அழல்வாய் நரகம் போய்ப்புகுதத்

துமிர்த அலையா ழியில்அவுணர்
சோரிக் கடல்போய்ச் சுரந்துபுகத்
துங்க வீர வாகுசொன்ன
சொல்லுப் புகுதாச் சூரன்நெஞ்சில்

சமர வடிவேல் புகஎறிந்த
சதுரா தாலோ தாலேலோ
தாமக் குவளைத் திருமலைவித்
தகனே தாலோ தாலேலோ.

(அ - ரை.) சரணமென்று - அடைக்கலமென்று. புகுத புக. கெடி-அச்சம். எரி - நெருப்பு. அடையார் - பகைவர். அழல்வாய் - தீநிறைந்த. சமரம் - போர். (உசு)

வேறு

மதமலை துணைவா குறமகள் கணவா
வானோர் கோமானே
மலைமகள் புதல்வா அறுமுக முதல்வா
வாகா மேகாரா

பதபரி புரனே மூகவசி கரனே
பாலா சீராளா
படைபோர அசையா ரணமுக விசையா
பாராள் சூரேறே

சிதமுறு குழகா அதிசய அழகா
தேனே பாலாறே
சிவகுல திலகா அவகுல கலகா
தேவே சேயோனே

சதமகன் மருகா திருமலை முருகா
தாலோ தாலேலோ
தமிழறி புலவா தனிஅயில் வலவா
தாலோ தாலேலோ.

(அ - ரை.) மதமலை-விநாயகன். மேகாரா - மயில்வாகனனே. ரணமுகம் - யுத்தகளம், போர்க்களம். சதமகன் - இந்திரன். சிதம்-சித்தம். (உஎ)

வேறு

இந்து நெடுஞ்சிலை சந்திர திலகம்
இரண்டும் உரிஞ்சிடவே
இந்துவொ டுஞ்சிறு தென்றல் வருந்தோறும்
இளகி நறுஞ்சேருய்க்

கோங்கு கமழ்ந்து வழிந்ததை ஆவின்
குழுவிடும் எருவெனவே
கூடைகள் தோறும் எயிற்றியர் வாரிக்
குடில்மெழு கக்குறவர்

செந்தினை யோடு கருந்தினை அள்ளிச்
சிதறு புனங்கள்தோறுஞ்
செல்உகு நீரான் ஐவனம் விளையுஞ்
செய்தோறும் உரம் இடவே

சந்த மணங்கமழ் திருமலை முருகா
தாலோ தாலேலோ
தமிழுற் புலவா தனிஅயில் வலவா
தாலோ தாலேலோ.

(அ - ரை.) இந்து நெடுஞ்சிலை - நெடிய சந்திரகாந்தக்கல். நறுஞ்சேறாய் - வாசனைக்குழம்பாய். ஆவின் - பசுவின். குழு - கூட்டம். புனல் - கொல்லை. தினைப்புனம், செல்உகு - முகில் சொரிகின்ற. ஐவனம் - மலைநெல். செய் - வயல். செல்வ வள மிக்க மாளிகைகளில் பதித்த நிலாக்கல்லும் நெற்றிப்பொட்டும் திங்கள் தோற்றம் கண்டு இளகி உருகிவிடும். அச்சேறு உரமாகி விடும். (௨அ)

தோண்டர் தொழுந்தோறும் இன்ப மிகுந்துதி
சொல்லிய நல்ஒலியும்
தும்புரு நாரதர் இங்கித வீணை
சுரந்திடும் ஏழிசையும்

அண்டர் அரம்பையர் மங்கல கீதம்
அறைந்திடு துழனிகளும்
அந்தர துந்துமி யுங்குட முழவும்
அதிர்ந்திடும் ஓதைகளும்

மண்டிய வன்புடை முனிவர் சிவாகம
வகையும் சதுமறையும்
வாய்க்கும் புலவர் செவிக்கும் இனிக்க
வடித்த திருப்புகழின்

தண்டமி ழின்தொனி தருதிரு மலையா
தாலோ தாலேலோ
தமிழறி புலவா தனிஅயில் வலவா
தாலோ தாலேலோ.

(அ - ரை.) துதி - புகழ்ச்சி. இங்கிதம் - இனிமை, ஏழிசை: குரல், துத்தம், கைக்கிளை, இளி, விளரி, உழை, தாரம். துழனி - ஓதை. மண்டியவன் - நெருங்கியவன். இனி மண்டி அவன் எனவும் பிரிக்கலாம். இனிக்க - இனிக்கும்படி. தொனி - குரல். (உகூ)

கங்குலும் மங்குலும் ஓருரு வாகிக்
கானில் நடந்ததெனுங்
காட்டெரு மைக்குலம் வேட்டுவ ரேனல்
கதிரை மிகப்பருகிக்

கோங்கவிழ் குவளை நறுஞ்சுனை நீர்கள்
குடித்து மதர்ப்புடனே
குகரக் குடுமி முழைக்குள் விடுத்த
குழக்கன் றைத்தேடிச்

செங்கண் மருண்டு கனைப்ப முலைப்பால்
சிந்தி வழிந்தோடிச்
சேரநனைந்து வெளுப்புற லாலும்
தெய்விக நீராலும்

சங்கரன் மலைநிக ருந்திரு மலையா
தாலோ தாலேலோ
தமிழறி புலவா தனிஅயல் வலவா
தாலோ தாலேலோ.

(அ - ரை.) கங்குல் - இரவு. மங்குல் - மேகம். ஏனல் - தினை. சுனை - மலையிலுள்ள தடாகம். மதர்ப்பு - செழிப்பு. குகரம்-குகை, முழை. குழக்கன்று - இளங்கன்று. சங்கரன் மலை - கைலாயம், வெள்ளிமலை. (௬0)

---

## ௯. சப்பாணிப்பருவம்

[இருகை யொருங்கு சேர்த்துக் கொட்டும் பருவம்; இஃது ஒன்பதாந்திங்களில் நிகழ்வது.]

**அடித்துணை** நினைப்பவர் மனத்திருள் விளக்க
அனற்பூ டுதித்தசுடரே
**அகத்தினின்** மிகக்கிருபை செனித்தருள் கொடுக்கு
அப்பா இனிக்கும் அமுதே [மயில்

**தொடிக்கைகள்** சிவக்கம ழலைக்குரல் பிறக்கநிறை
சொற்பாக முற்றபுலவோர்
**துதித்திடு** புயக்கிரி துளக்குற இதழ்க்குலவு
துப்பூடு முத்தொளிரவே

**மடப்பிடி** நடைத்துடி இடைக்குட முலைக்குமரி
மட்டூறி நெய்த்தகுழலாள்
**மதித்திரு** முகத்தினள் குறச்சிறுமி மிக்கவடி
வப்பாவை மைக்கண் எனவே

**தடத்தினில்** முளைத்தகுவ ளைத்திரும லைக்குமர
சப்பாணி கொட்டியருளே
**தடக்கிரி** பொடிப்பட அயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) *அடித்துணை - இரண்டடிகள். அனற்பூடு - நெருப்பாகிய பூண்டு. செனித்து - பிறந்து. துப்பு - பவளம். துடி - உடுக்கை. மட்டுஊறி - தேன்பெருகி. நெய்த்த - நெய் தடவிய. குழல் - கூந்தல். மதி - திங்கள்.* (௧௪)

**வேய்தோறும்** எயிற்றியர்கள் தொட்டில்கட் டிச்சிகியின்
மென்பீலி யுள்விரித்து
**வெம்முலை** அருத்திவாய் முத்தாடி மதலைகளை
மெல்லஅதன் மேல்வளர்த்தி

**நேயமுறு** கொழுநருடன் மலைவிட் டிறங்கிவளர்
நீள்சோலை யில்புணர்ந்து
**நினைவழிய** உடைகுலைய மனதுபா வசம்உருகி
நித்திரை தெளிந்துவரும்முன்

தூயபூ ரணமதி தவழ்ந்தேறி ஏறியத்
தொட்டிலின் கிட்ட அணுகித்
துண்ணென விழித்துக் குறச்சிறூர் மழலைமொழி
சொல்லிவிம் மிப்பொருமியே

தாய்முகம் எனக்கண்டு மகிழ்திரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட அயிற்படைவிதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே.

(அ - ள.) வேய்தொறும்-மூங்கில்கள்தோறும். எயிற்றியர்-வேடு விச்சிகள். சிகி-மயில். பீலி-தோகை. வெம்முலை அருத்தி - விரும்பப்படும் முலைப்பாலூட்டி. நேயம் - அன்பு. கொழுநர் - கணவர். நினைவு - எண்ணம். கருத்து. பரவசம் - தன்வசமிழத்தல். பூரணமதி - நிறைதிங்கள். பொருமி - ஏங்கி. விதிர்த்தல் - அசைத்தல். (கஉ)

இருநில வரம்பையொரு குடைதனில் அமைத்தர
சியைந்திடு பெருஞ்செல்வமும்
இயலாதி முத்தமிழ்ச் செஞ்சொல்முத லானபதி
னெட்டுவகை யில்பாடவும்

மருமலர் உகுத்துலவை குலவுதரு விற்சசிதன்
வனமுலை திளைத்த மார்பும்
வாலமா மதிசூடி பாலலோ சனம்உரு
மன்மதன் விரும்பும் அழகும்

அருமறை விரித்துரைசெய் சதுமுகமும் வெற்றிபுனை
ஐம்படை தரித்தகரமும்
அம்புயக் கண்களும் பரமபத முத்தியுடன்
அத்தனையும் அன்பர் பெறவே

தருபனிரு கட்கருணை புரிதிரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட வயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) வரம்பை - எல்லையை. இயைந்திடு - பொருந்தும். இயல் - இலக்கணம். உலவை - உலர்ந்த தன்மை. சசி - இந்திராணி. வால - வெள்ளிய. பாலலோசனம் - நெற்றிக்கண். ஐம்படை-பஞ்சாயுதம்: வில், வாள், சங்கு, சக்கரம், தண்டு என்பவை. அம்புயக்கண் - தாமரைக்கண். குக முருக: அன்பர் மனக் குகையுள் தங்குபவனே ! (௬௬)

வண்டுமோய்த் திலகுவெண் கேதகைப் பூவினை
மடப்பெடைக் குருகிம்தனவே
வண்மைப் பெருஞ்சேவ லங்குருகு கண்டிரு
மணிச்சிறகி னுல்அணைத்துக்

கோண்டுதுயி லப்பேடு பார்த்துப் பதைத்துக்
கோதித்துக் கோதித்துவிம்மிக்
கோபமுற் றங்கங் குழைந்தேகி உம்பர்தங்
குளிர்போதும் பரின்ஒதுங்க

அண்டருல கத்துள அரம்பையரும் ஆடவரும்
அதிசயம் இதென்றுகாண
அச்சேவல் பின்தொடர்ந் தோடியூ டற்குறைகள்
அகலப் புணர்ந்து மீளுந்

தண்டலைப் பண்பைப் பதித்திரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட வயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) கேதகைப்பூ - தாழம்பூ. சேவலங்குருகு - ஆண் பறவை. உம்பர் - தேவர், மேலிடம் பொதும்பர் - பொழில். ஊடற் குறை - பிணங்குதலால் ஆன குற்றங்குறைகள். தண்டலை-சோலை, பொழில். (௬௭)

ந்தமிகு முண்டகக் கண்ணனும் கருணைஎண்
கண்ணனும் உடற்கண்ணனும்
கதிதனை வழங்குமுன் திருமுன்பு வந்துசெங்
கதிர்வேல் புகழ்ந்திரநது

சுந்தரக் குங்குமக் கொங்கைஒரு மங்கைநஞ்
சுதையைவேட் டருளுகெனவே
சுடர்முடி துளக்கிவெகு மகிழ்வுடன் நகைத்தருள்
சுரந்துள மிசைந்துமறுநாள்

அந்தரத் தமரர்முசு குந்தன்முதல் இம்பர்கள்
அருந்தவர் பெருந்திசையினோர்
அணிமணக் கோலத்தின் அதிசயம் கண்டுய்ய
அப்பரங் குன்றின்மிசையே

தந்தியை மணந்தகுவ ளைத்திரு மலைக்குமர
சப்பாணி கொட்டியருளே
தடக்கிரி பொடிப்பட வயிற்படை விதிர்த்தகுக
சப்பாணி கொட்டியருளே.

(அ - ரை.) கந்தம் - மணம். முண்டகம் - தாமரை. எண் கண்ணன் - பிரமன். உடற்கண்ணன் - மெய்யெல்லாங் கண்கள் அமைந்த இந்திரன். கதி - மோட்சம், நன்னிலை. வேட்டு-விரும்பி. துளக்கி - அசைத்து. அந்தரம் - விண், ஆகாயம். முசுகுந்தன் - முசுகுந்த சக்கரவர்த்தி, இந்திரனுக்குப் போரிலுதவிபுரிந்து பின் நெடுநாள் நித்திரை பங்கமில்லாதிருந்தவன். இம்பர்கள் - இவ் வுலகத்துள்ளவர்கள். தந்தி - தெய்வயானை. தெய்வயானை. அம்மை யார் திருமணம் திருப்பரங்குன்றத்து விண்ணவர், முசுகுந்தர், மண்ணவர், அருந்தவர், புலக்காவலர் வியப்புற நிகழ்ந்தது. (கூஇ)

வேறு

வம்போன்றுஞ் சந்தோடு குரவு
மணத்த புயக்காரா
மஞ்சம்தின் சுங்குல கிரியை
மடித்த வயிற்காரா

அம்பஞ்சுங் கண்பெறு குறமகள்
அத்தி நயக்காரா
அன்பும்பண் புங்கொடு தொழும்அடி
யர்க்கெளி மைக்காரா

செம்பைம்பொன் தந்திடு மொழிதிகழ்
சித்ர மயிற்காரா
செம்பொன்கொஞ் சுந்திரு மலைவளர்
செக்கர் நிறக்காரா

கும்பன்கண் டின்புறு குருபர
கொட்டுக சப்பாணி
குன்றெங்குந் தங்குஞ் சிவசுத
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) வம்பு ஒன்றும் - மணம் பொருந்திய. சந்து - சந்தனம். மஞ்சு துஞ்சும் - மேகம் தங்கும். அம்பு அஞ்சும் - அம்பானது பயப்படும். அத்தி - யானை. நயக்காரா - விரும்புதலைச் செய்கின்றவனே!' சித்ர - அழகிய. செக்கர் - சிவந்த. (கூசு)

வேறு

துட்ட அரக்கர்கள் பட்ட பிணக்குவை
சுற்றுக டற்பூமி
தோக்கு மறைக்கவி ழிக்கன லைக்கொடு
சுட்டட லைப்பூதி

இட்டுல கத்துள சட்சம யத்தரும்
இச்சம யத்தாக
இப்படி யுத்தம் விளைத்த களத்தில்
எதிர்த்து மறுத்தோடி

நெட்டை மரத்தியல் பைக்கொ டுரத்தொடு
நிற்கும தச்சூரன்
நெட்டுரு வத்துடல் பட்டுரு வத்தசை
நெய்த்தவு டற்சோரி

கொட்ட அயிற்படை தொட்ட திறற்குக
கொட்டுக சப்பாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) பிணக்குவை - பிணக்குவியல். கனலைக்கொடு - நெருப்பைக் கொண்டு. பூதி - நீறு. சட்சமயத்தர் - அறுவகைச் சமயத்தவர். உரம் - பலம். சோரி - இரத்தம். (கூஎ)

அளவில் அரக்கர்கள் கதறு தொனிக்குரல்
அசனி இடித்திடவே
அங்கவர் செம்மணி யணிமுடி சிந்தி
யழற்போலி மின்னோட
இளமதி ஒத்தில கெயிறெனு மாம்பிமண்
எங்கும் உறச்சோரி
இந்திர கோப மலிந்திட வேபுவி
யில்அவிர் வில்லிடவும்
வளமை ஒழித்திட அழுத அரக்கியர்
மண்டுகம்போல
வானுல கென்னும் வயிற்பயிர் உய்ந்திட
வன்சூ ரனகால்வாய்
குளமுடை யச்சர மழைபொழி புயலே
கொட்டுக சடபாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) இந்திரவில் - வானவில். வில்இட - ஒளிவீச. மண்டூகம் - தவளை. சரம் - அம்பு. குக்குடம் - கோழி. துவசம் - கொடி. அசனி - இடி. இலகு - விளங்கு. (கூஅ)

துடித்த சரத்தைய துக்கியு ழக்கிய
சுழல்கண் தீயவுணர்
சோரிகு டைந்துகு ளித்திகல் வெற்பைத்
துண்ணென நீற்றிட்டுப்
பிடித்தக ரத்திரி சூலிஇ டாகினி
பேழ்வாய் வெம்பூசம
பேய்நரி கழுகுப ருந்துக ருங்கோடி
பெரிய விருந்தாக

வடித்தஉ வர்த்தசி பாகொடுபோல் நெய்
மதுப்புனல் ஏழ்கடலும்
மாறுப டாமல் அளாவிநி ணத்தொடு
மாவடு வுங்கூட்டிக்
குடித்து மதத்தஅ யிற்படை யானே
கொட்டுக சப்பாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) *அதரம் - உதடு. அதுக்கி - மென்று. சுழல்கண் சுழல்கின்ற கண்கள். இடாகினி - காளிஏவல் செய்வோள், பிணந் தின்னும் பேய். கருங்கொடி - கருங்காகம். மது - தேன், கள். நிணம் - கொழுப்பு.* (கக)

நெஞ்சுகு ழைந்துகு ளிர்ந்தப கீரதி
நீராட் டிப்போற்றி
நீறொடு திலகமோர் ஆறுசே மும்பிறை
நெற்றிதோ றுந்தீட்டி
அஞ்சனம் அன்பொடு கண்களில் எழுதியோர்
ஐம்படை யும்பூட்டி
அரைவடம் ஆழிசி லம்புகு தம்பைஅ
ணிந்துமு கம்பார்த்து
வஞ்சிதி கம்பரி கொங்கைசு ரந்தும
கிழ்ந்தும கிழ்ந்தூட்டி
வாய்தோறு முத்தம டிக்குள் இருத்திமென்
மழலைச சொற்கேட்டுக்
கொஞ்சிம கிழ்ந்தருள் பிள்ளைப் பெருமாள்
கொட்டுக சப்பாணி
குக்குட மெய்த்துவ சத்திரு மலைமுகில்
கொட்டுக சப்பாணி.

(அ - ரை.) *பகீரதி - கங்கை. நீறுதிலகம் - திருநீறும் பொட்டும். அஞ்சனம் - மை. குதம்பை - காதணி. திகம்பரி - திக்கை ஆடையாக உடையவள். மென்மழலைச் சொல் - மென்மையான குதலைமொழி. பிள்ளைப் பெருமாள் - இளைய பெருமானே!* (௨0)

## ரு. முத்தப்பருவம்

[இது பதினொன்றாந் திங்களில் நிகழ்வது]

நித்தங் குவளைச் சுனை ஆடி
நெடுஞ்சோலையிற்பூக் கொய்துகல்லும்
நெகிழச் சிலம்பின் எதிர் கூவி
நெடிய வேங்கை நிழல்மேவி

அத்தஞ் சிவக்க அம்மனைபந்
தாடிக் கழங்கு எடுத்தாடி
அரத்த மணியின் பேரூசல்
ஆடி ஆடி உடலிளைத்துச்

சித்த மதனுக் கிளையாத
செவ்வாய்க் கருங்கண் எயிற்றியர்கள்
சிற்றில் விளைத்து விளையாடத்
திரிகண் மதமால் கரிக்கோடு

முத்தங் கொடுக்குங் குறிஞ்சிநில
முதல்வா முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே.

(அ - ரை) குவளைச்சுனை - குவளை மலர்க்குளம். சிலம்பு - மலை. அத்தம் - கை. கழங்கு - கழற்சிக்காய். அரத்தமணி - சிவந்த மணி. செவ்வாய்க் கருங்கண் : முரண்தொடை. திரிகண் மதமால் கரிக் கோடு - மூன்று கண்களையும் முகத்தையுமுடைய யானைமுகக் கடவுள் கொம்பால். (சக)

அழிந்து புவனம் ஒழிந்திடினும்
அழியாத் தோணி புரத்தின்மறை
யவர்கள் குலத்தி னுதித்தரனோ
டம்மை தோன்றி அளித்தவள்ளச்

செழுந்தண் முலைப்பால் குடித்துமுத்தின்
சிவிகை யேறி மதுரையில் போய்ச்
செழியன் பிணியுஞ் சமண்பகையுந்
தேவி துயருந் தீர்த்தருளி

வழிந்து நறுந்தேன் உகுவனபோல்
மதுரங் கனிந்து கடைதுடிக்க
வடித்துத் தெளிந்த செந்தமிழ்த்தே
வாரப் பாடல் சிவன்கேட்க
மொழிந்து சிவந்த கனிவாய்ச்சண்
முகனே முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே.

(அ - ரை) புவனம் - உலகம். தோணி புரம் - சீகாழி அம்மை - உமையம்மை. சிவிகை - பல்லக்கு. செழியன் - பாண்டியன். தேவி - மங்கையர்க்கரசி மதுரம் - இனிமை. இப் பாட்டில் முருகனே திருஞானசம்பந்தராகத் தோன்றித் தேவாரம் பாடியவர் என்பது குறிக்கப்பட்டுள்ளது. (சஉ)

தலைமுத் தொழிலும் இயற்றும்அயன்
தன்மால் ஈசன எனுமூவர்
தால மிசைப்போன் உரத்தனமிசைத்
தலையின் மிசையின் தயவாகக்
கலைமுத் தமிழ்வா ணியைத்திருவைக்
கங்கை தனையுந் தரித்ததல்லால்
காத லுடன்வேட் டகத்தில் இன்னங்
கருத்து நாண இருப்பதற்கே
சிலைமுத் துதிரப் பூவாளி
செலுத்து மதனும் இரதியுமே
செவ்வாய் முத்தம் இடும்போது
சேர்த்து நெருங்கும் அவர்முடிநேர்
முலைமுத் தழுந்த வள்ளிபுணர்
மோகா முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே.

(அ - ரை.) தலைமுத் தொழிலும் - முதன்மையான படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழிலும். தாலமிசை -

நாவில். வேட்டகம் - மணந்த வீடு. சிலை - வில், (கரும்பு). பூவாளி-பூஅம்பு. மோகா - மோகம் உடையவனே. (௪௨)

தகட்டிற் சிறந்த இதழ்க்கமலத்
தடத்தில் குளத்தில் தண்பணையில்
தழங்குந் தழனிப் பெருமதகில்
சயிலப் புதுநீர் தத்துந்தோறும்
பகட்டு முரட்டுப் பருவாளை
பணைத்துப் பாய்ந்து செழும்பலவின்
பழத்தைத் தகர்த்து மாங்கனியின்
படுவைச் சிதறிப் பசியமுகில்
அகட்டைக் கிழிக்க முகில்வெருவி
அழகஞ் சொரிந்து மடவார்கள்
அளகத் தழகுக் குடைந்தனபோல்
அங்கம் வெளிறி அணிமாட
முகட்டிற் கிடக்கும் பண்ணைபங்கர்
முதல்வா முத்தந் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே.

(அ - ரை.) பணை-தாழ்ந்த இடம் (வயல்). தழங்கும் துழனி - முழங்கும் ஓசை. சைலம்-மலை. தத்துதொறும் - பாயுந்தோறும். முகில் அகடு - மேகவயிறு. அங்கம் வெளிறி - உடல் வெளுத்து. அளகம் - கூந்தல். (௪௩)

தொழுது புலவர் புகழ்ந்ததண்டைத்
துணைத்தா மரையி லிருமுத்தந்
தூய கணைக்கான் முழந்தாள்செந்
துடையி லிடையி லேழுமுத்தம்
எழுத அரிய தோர்ந்தியுந்தி
இலங்கு மார்பின் மூன்றுமுத்த
மேய்ந்த மரகதந் தரம்புயத்தில்
இருபத் தைந்து திருமுத்தம்

அழுது சிரித்து மழலைசொல்லு
மருமைத் துகிரி லாறமுத்தம்
அழகு கதுப்புக் கண்குடுமி
அனைத்தும் அந்தப் படியுடல

முழுதும் உமையாள் முத்தம்இடு
முத்தே முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே.

(ப - ரை.) துணை - இரண்டு. தொந்தி - அடிவயிறு. துகிர் - பவளம் (உதடு). கதுப்பு - கன்னம். (௪௫)

வேலைப் புனலைக் கலக்கிஎட்டு
வெற்பைப் பிடுங்கிப் பந்தாடி
மேருக் குடுமி திருகிஉம்பர்
வேந்து தனையுங் கொன்றெழுப்பித்

தூலத் துருவம் எடுத்தயனைத்
தொடரிட் டிரங்கிப் புரந்துசிவத்
துரகம் அனைத்தும் விளையாட்டால்
தொலைத்துத் துணைவ ருடன்மேவிக்

கோலச் சடிலத் தரன்செவியின்
குலவண் டினங்கள் அருந்துதற்குக்
குழந்தை வயசில் பெருமதியால்
குமுதம் நெகிழ்த்துப பிரவணவத்தின்

மூலச் செழுந்தேன் உகுத்தருளும்
மூர்த்தி முத்தம் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே.

(ப - ரை.) வேலைப் புனல் - கடல்நீர். உம்பர்வேந்து - இந்திரன். தொடரிட்டு - விலங்கிட்டு. துரகம் - குதிரை. குமுதம் - ஆம்பல் போன்ற வாய். இந்திரனைக்கொன்றெழுப்பு மியைபு என்னின் அந்தமில் ஆங்காரத்தை அடக்கல் ஆகும். (௪௬)

### வேறு

திருந கர்ப்பண் ணையில் இருக்குஞ்
செழியன் முத்தம் தருகவே
தெருள்கொ டுத்திங் கெனை உருக்குஞ்
சிறுவன் முத்தம் தருகவே

கருதி மொய்க்குஞ் சமண் அழிக்குங்
களிறு முத்தம் தருகவே
களிறி னுக்கும் குறமக ட்கும்
கணவன் முத்தந் தருகவே

பருவ ரற்கங் குலை ஒழிக்கும்
பரிதி முத்தந் தருகவே
பரம னுக்கும் பொருளு ரைக்கும்
பவள முத்தந் தருகவே

தருப ரைக்கும் புனல்ம கட்குந்
தனையன் முத்தம் தருகவே
சதும றைக்குந் திரும லைக்குந்
தலைவன் முத்தம் தருகவே.

(அ - ரை) பண்ணை - பண்பொழில். செழியன் - பாண்டியன். சமண் அழிக்குங் களிறு - சமண மதத்தை அழித்த யானை போன்றவனே. களிறினுக்கும் - தேவ யானைக்கும். பரை - பராசத்தி, பார்வதி. புனல்மகளைக் கங்கை என்னும் புராணக் கூற்றுமட்டுமன்றிச் சலமகள் எனும் பொருளால் நடப்பாற்றலாகிய திரோதான சத்தி என்றலுமொன்று. (௪௭)

தோந்த மிட்டின் பங்கு திக்குந்
தொண்ட சித்தம் குளிரவே
சுந்த ரப்போங் கங்கோ டுக்குந்
தொந்தி வட்டஞ் சரியவே

கெந்த மொய்க்குஞ் செம்ப தத்தின்
கிண்கி ணிப்பொன் சலவவே
கிஞ்சு கத்தின் சந்த்ரன் ஒக்கும்
கிம்பு ரிக்கொம் பொளிரவே

சிந்து ரத்தின் செஞ்சி வப்புந்
திண்சே விக்குந் திகழவே
செங்க ணிக்கன் பும்க ளிப்பும்
சிந்தை முற்றம் பெருகவே

தந்தை சுற்றுந் தும்பி மெய்ச்சுந்
தம்பி முத்தம் தருகவே
சதும றைக்கும் திரும லைக்கும்
தலைவன முத்தம் தருகவே.

(அ - ரை.) சித்தம்-மனம். பொங்கம் - பொலிவு. குலவ - விளங்க. சிஞ்சுகம் - கிளி. தந்தை சுற்றும் தும்பி - தந்தையாகிய இறைவனை வலம் வந்த யானைமுகன். (௪௮)

வேறு

சினவாள் அரிக்குருளை அனையாய் எனக்குனது
திருவாயின் முத்தமருளே
சிதவா ரணக்கடவுள் மருகா எனக்குனது
திருவாயின் முத்தமருளே

மனமாயை யைப்பொடிசெய் தருள்வாய் எனக்குனது
மணிவாயின் முத்தமருளே
வரதா குறச்சிறுமி விரகா வெனக்குனது
மணிவாயின் முத்தமருளே

சுனைவா சமைக்குவளை யணிவாய் எனக்குனது
துகிர்வாயின் முத்தமருளே
துடியாய் நடத்துதகர் உடையாய் எனக்குனது
துவர்வாயின முத்தமருளே

கனகா சலக்குமரி குமரா எனக்குனது
கனிவாயின் முத்தமருளே
கனமேக மொய்த்ததிரு மலையாய் எனக்குனது
கனிவாயின் முத்தமருளே.

(அ - ரை.) சின வாள் அரி குருளை - கோபம் மிகுந்த ஒளி மிக்க சிங்கத்தின் குட்டி, சிதவாரணம்-வெள்ளை யானை, துடியாய் -

துடுக்காய். தகர் - ஆடு. கனகாசலம் - பொன்மலை. கனமேகம் - மிகுந்த மேகம், மீமிசைமொழி. (சுகூ)

சலியாது பற்பபத நடையாய் வனத்தின் இடை
தனியே தனித்துலவியே
தடிமேல் நடக்குமொரு முதியோன் எனக்குறவர்
தருமான் இடத்தணுகியே

மலியா தரத்தினொடு மால்தீர்வ தற்குமொரு
வழிநீ யுரைத்திடெனவே
வகைபேசி அத்திமுகன் வரவே நினைத்தவளை
மறைவாய் மணந்தகலவே

புலிபோன் மலைக்குறவர் பிறகே தொடுத்தும்எதிர்
பொரவே செயித்தவர்முனே
பொருமா மயிற்பரியின் அறுமா முகத்தினொடு
பொலிவாய் உதித்தருளியே

கலியாண இட்டமுறு முருகா எனக்குனது
கனிவாயின் முத்தமருளே
கனமேக மொய்த்ததிரு மலைவாய் எனக்குனது
கனிவாயின் முத்தமருளே.

(அ - ரை.) பற்ப பதம் - தாமரை மலரடி. தடி-கம்பு. அத்தி முகன் - யானைமுகன். பொரு - போர் செய்ய. இட்டமுறு-பிரிய முற்ற. (இ0)

## ௬. வாரானைப்பருவம்

[சிறு நடையெய்தும் பருவம். பதின்மூன்றாந் திங்களில் நிகழ்வது.]

தந்தா வளமுன் அழைப்பமனஞ்
சற்றுந் தரியா தெழுந்துதுல்லைத்
தாமம் சரிய உடைசரியச்
சக்ரா யுதத்தை முன்நடத்திச்
செந்தா மரைப்பெண் புவிமடந்தை
திகைப்போ டெழுந்து பின்தொடரச்
சேடன முதுதும் அவனமனமும்
திருப்பாற் கடலும் வெளிறிவெஃகப்
பைந்தார்க் கருடன் கடைக்கண் அருள்
பார்த்து நேரே பறந்துவரப்
பாரக் கொடிய முதலைவதைப்
படவும் பாதம தரைப்படவும்
வந்தான் மருகா முருகாசேம்
மலையே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையன
மழலைக் குழவி வருகவே.

(அ - ரை.) தந்தா வளம் - கசேந்திரன் என்னும் யானை. துல்லை - துளசி. தாமம் - மாலை. திகைப்பு - பிரமிப்பு. தத்தளிப்பு. சேடன் - ஆதிசேடன். வெளிறி வெஃக - வெளுத்து விரும்ப. முதலைவதைபட - முதலை கொல்லப்பட. சரதம் - உண்மை. (இக)

வெண்சா மரைபோல் பலவிதமாய்
விரிந்த மனத்தின் சருவியெல்லாம்
வெவ்வே றாகப் பகுத்தறிந்த
விநயம் அறிந்தங் குனையறிந்து
கண்சா ரொழுக விம்மிவிம்மிக்
சரைய அழுது கசிந்துருகிக்
களித்துச் சிரித்துக் குதித்தாடிக்
கவிணக் குளறத் துதித்திடுவோர்

எண்சாண் உடம்பும் இனிக்கமகிழ்ந்
தெங்கும் பெருகி அலைமோதி
இரண்டு வினையின் கரைகள்கடந்
தெழுந்த பரமா னந்தமெனும்

வண்சா கரத்தில் உதித்தசுதை
மருந்தே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

(அ - ரை.) விநயம் - வஞ்சம், மரியாதை. சாறு - நீர். இரண்டு வினைகள் - நல்வினை தீவினைகள். வள்சாகரம் - வளவிய கடல். சுதை - சாந்து, வெண்மை. (௧௨)

சினந்தான் மிகுந்து பொருஞ்சூரன்
தேவி தாலி தீப்புகுதத்
திறல்சேர் அவுணா மனைவியர்கள்
திருநூல் இழந்து கைமையெய்த

அனந்தான் வெளிற நடைபயிலும்
அழகு கசியுங் கலைமகளும்
அரம்பை மாரும் செழுந்திருவும்
அணியுந் திருமங் கலந்தழைப்பக்

கனந்தாழ் குடுமி மலையரசன்
கரநீர் வார்க்க மேனைகண்டு
களிக்க அமரர் துதிக்கஉமை
கழுத்தில் ஒருமங் கலநாணை

வனைந்தான் இலகு திருநுதற்கண்
மணியே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

(அ - ரை.) சூரன்தேவி - பதுமகோமளை. திருநூல் - மங்கல நாண், தாலி. கைமை - விதவைத் தன்மை. அனம் - அன்னப் பறவை. கனம் - மேகம். மலை அரசன் - இமவான். மேனை -

இமவான் மனைவி வனைந்தான் - சூடின பரமசிவன். திருநுதற் கண் மணியே - அழகிய நெற்றிக்கண்ணில் தோன்றிய மாணிக்கமே! (௬௧

அயல்சூழ் நாரை களைக்கால்கண்
டணுகி அணுகிப் பின்தொடர
அன்னஞ் சோற்க நடந்துகளை
அகழ்ந்தே உறுப்பின் பகைதீர்த்துப்

புயல்சூழ் மலைபோல் முலைகள்தோறும்
பூட்டு நீல வடம்புரளப்
பொன்னங் கொடிபோல் ஒல்கி ஒல்கிப்
பொருந்து மருத நிலம்குலவுங்

கயல்சூழ் விழியின் கடைசியர்கள்
கருத்திற் புலவி தவிரஎன்று
கருதி அவர்கள் புறந்தாளைக்
கமடம் இதென மள்ளர்பற்றும்

வயல்சூழ் பண்பைத் திருநகரின்
வாழ்வே வருக வருகவே
வரதச் சரசத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

(அ - ரை.) களை அகழ்ந்து - களைபிடுங்கி. நீலவடம் - நீலமாலை. ஒல்கி - அசைந்து. கடைசியர்கள் - உழத்தியர்கள். புலவி - ஊடல். கமடம் - ஆமை ; இது பெண்கள் புறஅடிக்குவமை. (௬௭)

அனையுங் கயிலைப் பெருமானும்
அங்காப் புடனே மார்பிலெடுத்
தணியச் சமைத்த பதக்கம்என
அமரர் முனிவர் அதிசயித்து

இனையும் படிக்கு விளையாட்டு
நிகழ்ச்சி புரிந்து மேருஎனும்
நெகிழ்ந்த பசும்பொன் மலைமீது
நேசத் துணைவர் இலக்கரோடு

முனையும் கனிவும் பெறவீர
மொய்ம்பன் முதலோன் பதுபேரும்
முதிரு நவமா மணிபோல
முயன்று புடைசூழ்ந் திலங்க அங்கே

வனையு நடுநா யகமணிபோல்
வயங்கும் பெருமாள் வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

(அ - ரை.) அங்காப்புடன் - வாய்திறத்தலுடன். இலக்கர் - இலட்சம் பேர். வீரமொய்ம்பன் - வீரவாகு. வயங்கும் - விளங்கும். (குகூ)

தோயாத் துகிலும் அரைவடமும்
சுற்ற வருக வருகவே
சுரந்து வடியுங் கடைவாய்நீர்
துடைக்க வருக வருகவே

ஆயாய் ஈன்ற கங்கைநன்னீர்
ஆட்ட வருக வருகவே
அருமைப் பதமென் கண்ணிலெடுத்
தணைக்க வருக வருகவே

வீயா தொழுகுந் திருமுலைப்பால்
மிசைய வருக வருகவே
வீணை தெவிட்ட மழலைமொழி
விள்ள வருக வருகவே

வாயால் எனக்கோ ராணிமுத்தம்
வழங்க வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

(அ - ரை.) தோயாத - நனைக்கப்படாத. துகில் - ஆடை, ஆயாய் - தாயாக. நீராட்ட - குளிப்பாட்ட. வீயாது - கெடாமல் மிசைய - உண்ண. விள்ள - சொல்ல. ஆணி முத்தம் - ஆணித்தரமான மூத்தம். (குசு)

முதிருங் கலைவா ணியும் தமிழ்மா
முனிவோ டருண கிரிமுதலோர்
மொழியுங் கவிகேளா செவிபால்என்
மோட்டுச் சிறுசொற் கேட்பதுபோல்

கதிர்கொள் வடிவேல் ஏந்தியசெங்
கையில் ஒருசெங் கோல்வாங்கிக்
கடம்பு புனைந்த திருப்புயத்திற்
காட்டு வேம்புந் தரித்தருளி

அதிருங் குரற்சே வலைஉயர்த்த
வாணமைக் கொருமீன் கொடிஉயர்த்த
தண்ட முழுதுந் தானாகி
ஐந்து தொழிலுஞ் செய்தவனோர்

மதுரை யரசு புரிந்தஉக்ர
வழுதி வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

**(அ - ரை.)** *தமிழ் மாமுனி - தமிழாசிரியரான அகத்திய முனிவன். கலைவாணி - நாமகள் மோட்டு - முரட்டுத்தனமான. கடகம் புனைந்த - காப்பணிந்த, வேம்பு - வேப்பமாலை. மீன்கொடி- மீன் எழுதிய கொடி. ஐந்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற தொழில்கள். உக்ரவழுதி - பாண்டியன்.* (௯)

எதிரும் புலவன் வில்லிதொழ
எந்தை உனக்கந் தாதிசொல்லி
ஏழைப் புலவர் செவிகுருத்தோ
டெறியுஞ் சருவி பறித்தெறிந்தே

அதிருங் கடல்சூழ் பெரும்புவியில்
அறிந்தார் அறியார் இரண்டும் இல்லார்
ஆரு மெனைப்போல் உனைத்துதிக்க
அளித்த அருண கிரிநாதன்

உதிருங் கனியை நறும்பாகில்
உடைத்துக் கலந்து தேனைவடித்
தூற்றி யமுதின் உடன்கூட்டி
ஒக்கக் குழைத்த ருசியிறந்து

மதுரங் கனிந்த திருப்புகழ்ப்பா
மாலை புனைந்தானை வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக குழவி வருகவே.

(அ வுரை.) வில்லி - வில்லிபுத்தூராழ்வார். எறியும் கருவி - வீசிய அரிவாள். பாகு - சர்க்கரைப்பாகு; திருப்புகழ்ப் பாடலின் இயல்பு உயர்த்திக் கூறப்படுவது காண்க. (௧௮)

நாரி ஒருத்திக் கிடப்பாகம்
நல்கும் பெருமான் நுதல்விழியில்
நண்ணும் பொறியைப் பவனன் அங்கி
நடுங்கிச் சுமந்து கங்கையெனனும்

வேரிப் புனலில் புகுத்தஅவள்
வெம்பிப் பயந்து சரவணத்தின்
மீதில் இடமூ விருகுழவி
விரைந்து பிறந்தங் கழுதுவிம்மி

மூரி நெருப்பின் உடன்மடவார்
முலையுண் டுறங்கி எழுந்திருந்து
மூளரிப் பூவில் தவழ்ந்திடஐ
முகத்தோ னுடன்வந் துமைகரத்தால்

வாரி அணைக்கத் திரண்டதிரு
வடிவத் தொருவனை வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

(அ - வுரை.) நாரி - நாண். பவனன் - காற்று. அங்கி - நெருப்பு. வேரி - வாசனை. வெம்பி - வெதும்பி. மூவிரு குழவி - ஆறு குழந்தை. மூரி - வலிமை, பெருமை. கரத்தால் - கையால். (௧௯)

### வேறு

பகைநிசி சரர்கள் மனதையும் இனிது
பருகிய அழகன் வருகவே
பரிபுரம் அதிர நடைபயில கமல
பதமத களிறு வருகவே

மோகுமோகு மோகென நகைமணி கதற
முனிதகர் கடவி வருகவே
முருகவிழ் குடுமி அவிழ்வது அனைய
முலைதர வருக வருகவே

அகமெனு முளரி நறவொடு மலர
அருள்வெயில் ரவி வருகவே
அரனுமை மடிபோன் உரமிசை தவழும்
அறுமுக மதலை வருகவே

மகபதி முடியில் இலகிய சரண்என்
மனமிசை புனைய வருகவே
மணமலி குவளை சுருதிரு மலையின்
வரும்ஒரு குழவி வருகவே.

(அ - ரை.) இகல் - பகை. பரிபுரம் - சிலம்பு. தகர்கடவி - ஆட்டைச் செலுத்தி. நாரத முனிவர் வேள்வியில் தோன்றியது இத்தகர். அகம் - மனம். அருள் - இரக்கம் உரமிசை - மார்பின் மேல். மகபதி - இந்திரன். மணமலி : மணம் நிறைந்த. (௬0)

## எ. அம்புலிப்பருவம்

[முருகனுடன் கூட விளையாடச் சந்திரனைத் தாதியர் அழைத்தல். பதினைந்தாந் திங்களில் நிகழ்வது.]

கலைஏறி மேலேறி வந்திலகு வாய் இவன்
கலையேறி மேலேற்றனை
காமனுக் கேகவிகை யாய்விரிந் தாய்இவன்
காமனுக் கேகவிகையான்.

நிலையர்த கோட்டைகொண் டோடிவரு வாய்இவன்
நிசிசரர்கள் கோட்டைகொண்டான்
நீடுகுவ ளைக்குரிமை யாகிவரு வாய்இவன்
நித்தமொரு குவளை புனைவான்

தோலையாத வேலையூ டுருவிவிடு வாய் இவன்
சுடர்வேலை உருவிவிடுவான்
சோல்லில்இவ னுக்குவமை யாரும்இலை நீசிறிது
தோழில் உவமை பெற்றதாலே

அலைஆழி யில்துயில்கோள் அரியருமை மருகனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குநிமி யிற்கோலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே.

அ-ரை.) கலை -(1) அமுதகலை (2) கல்வி. காமனுக்கு - மன்மதனுக்கு. கவிகை - குடை. காமனுக்கு - இந்திரனுக்கு. கவிகையான் - கவிகின்ற கையான். கோட்டை - (1) பரிவேடம் (2) மதில். குவளைக்கு உரிமையாகி - ஆம்பலுக்கு நாயகனாய். ஒரு குவளை-ஒப்பற்ற குவளைமலர். வேலை-(1)கடலை, (2) வேற்படையை. சொல்லில் - மொழியில். தொழிலுவமை - செயல் உவமை. அலை ஆழியில் துயில் கொள் அரி - அலைகின்ற திருப்பாற் கடலில் அறி துயில் கொள்கின்ற திருமால். (சுக)

கோஞ்சமதி யிற்பேரிய மதியுடையோர் காணஒணுக்
குற்றமொரு நாள்படைத்தாய்
கூறிவிளைலற்ஞர் ஆவலோடு காணக்
குழந்தையில் உயர்ந்ததிவனே

நஞ்சுபோதி வாளெயிற் றரவுபோர வேயுடல்
நடுங்கிப் பயந்தோளிப்பாய்
நாகப் பெரும்பகை துணுக்குற மயிற்பரி
நடத்திய சமர்த்தன இவனே

கஞ்சமல ராளிசுதன் இடசாப மேகொண்டு
கலையிழந் தேதிரிந்தாய்
கமலனைக் குடுமிகள் பிடித்துப் புடைத்துக்
கடுஞ்சிறை புரிந்ததிவனே

அஞ்சுமுக நாதனருள் ஆறுமுக நாதனுடன்
அம்புலீ யாடவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனொ
டம்புலீ யாடவாவே.

(அ - ரை.) கொஞ்ச மதி - அற்பபுத்தி கூரறிவினல் - மிகுந்த அறிவினல். நஞ்சு பொதிவாள் எயிற்று அரவுபொர - விடம் அடங்கிய வாள்போன்ற பற்களையுடைய பாம்பு தாக்க. நாகம். பாம்பு. துணுக்குற - நடுங்குற மயிற்பரி - மயிலாகிய குதிரை. கஞ்சமலராளி சுதன் - தாமரையில் உறைபவனாகிய பிரமன் புத்திரனாகிய தட்சன். கமலன் - பிரமன். (கஉ)

ஒழியாத மறுவேனுங் குட்டரோ கத்தினல்
உடல்கூனி வீங்கிவாடி
உற்பலத் திருமலைதோ ழாதவர்கள் போலவே
உலகிடை பிறந்திறந்து

பழியால் வரும்பகைப் பாம்பினை விழுங்கவும்
பதைபதைத் தேசழன்றாய்
பரிவினொடு சந்நிதி புகுந்தவர் பெரும்பிணி
பறத்துவது நீயும் அறிவாய்

விழியால் இவன்சிறிது கருணைபுரி யக்கூனும்
வெப்புந் தவிர்ந்ததுன் தன்
மேன்மைக் குலஞ்சொல்லும் வெந்துயர் ஒழிந்திடவே
வெய்யபகை யுந்துடைப்பாய்

அழியா வரம்பெறுவை அருள்பெறுவை முருகனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனோ
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) மறு - களங்கம். கூனி - வளைந்து. உற்பலம் - குவளை. கழன்றாய் - உழன்றாய். பரிவு - அன்பு. வெப்பு - சூடு. (௯௯)

தமராகி ஆயிரத் தெட்டண்ட மேவிய
தைத்திய ரோடுஞ்சூரனுந்
தம்பிமார் மைந்தர்கள் மகிழ்ந்திட இரத்தச்
சமுத்திரம் எழுந்துபொங்க

எமராயன் ஆகுமோரு நளையன்வலை வீசியுயிர்
என்னுமீ னைப்பிடிக்க
ஈராறு செங்கதிர்கள் வனசமல ராகவே
எழுமுகில்சை வலமாகவும்

உமராக வேசூழ் உடுத்திர ளேலாமதில்
உதித்தபுற் புதமாகநீ
ஒருதோணி யாய்மிதந் தோடிக்க ளேபரத்
தோங்கல்தோறு மேங்கிமோத

அமராடு திண்டிறற் சேவகப் பெருமான்முன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனோ
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) அண்டம் - உலகம். தமர் - சுற்றத்தார். தைத்தியர் அசுரர். இரத்தச்சமுத்திரம் - இரத்தக்கடல். வனசமலர் - தாமரை மலர். சைவலம் - பாசி. உடுத்திரள் - நட்சத்திரக் கூட்டம். அமர் ஆடு - போர் செய்கின்ற. சேவகம் - வீரம். (௧௦௦)

புத்திதனில் இரவிநீ அட்டமம் செவ்வாய்
பொருந்திய களத்திரத்திற்
புதன்நாலின் மூன்றினிற் பொன்வெள்ளி ஆறினிற்
போற்றுசனி சென்மமாகத்

துத்திதிக ழும்பட்டப் பாம்புகள்ஓர் ஒன்பதில்
தோன்றிப் பகைத்தபகையுந்
துட்டமிரு கங்களும் பேயுநோ யுங்கலித்
துன்பமும் வெம்புபடையுங்

கத்துபுன லுங்கனலு மவமிருத் துங்கோலக்
காலனுஞ் செய்வினைகளுங்
கண்டதுண் டப்படக் கூவுசே வற்கொடிக்
கட்டியழி யாதசெல்வம்

அத்தனையு மேகொடுத் தன்பருடன் வாழ்பவனே
டம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனே
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) *இரவி - ஞாயிறு. அட்டமம் - எட்டாமிடம். களத்திரம் - மனைவி. பொன் - வியாழன், வெள்ளி - சுக்கிரன். சென்மம் - சென்ம இராசி. துத்தி - புள்ளி. புனலும் கனலும் - நீராலும் நெருப்பாலும் உண்டாகிற துன்பங்கள். அவமிருத்து - காலமில்லாச் சாவு. கண்டதுண்டம் - துண்டு துணுக்கு. இச் செய்யுளிற் சோதிடக் குறிப்புக்கள் கூறப்பட்டுள்ளன.* (கூ௫)

மிடலோடு திசைசுமக் கின்றவே ழங்கவள
வேழஞ் சுமப்பதாக
மேதினியை முதலான புவனங்கள் தாங்குமக
மேருவே தூணதாகக்

கடலேழை யுங்குடித் தெழுமேகம் ஏழுங்
கடாம்பொழி கவுட்களாகக்
காஞ்சனச் சுவர்சுற்றும் அண்டமொரு கூடமாய்க்
கந்தமலை யிற்பிறந்து

திடமான தடைமீறி யேபூத வெளிஎலாந்
தெருவீதி யாய்நடந்து
திங்களுன் கலைகளைக் கோம்புக்கு மாறெனச்
செங்கைநீட் டிப்பிடிக்கும்

அடல்ஆனை ஏறுங்கு மாரரா வுத்தனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) மிடல் - வலிமை. திசை சுமக்கின்ற வேழம் திக்கு யானை. மேதினி - பூமி. கடாம்பொழிகவுட்களாக:- மதம் பொழிகின்ற கன்னங்களாக. காஞ்சனம் - பொன் கலை - சந்திர கலை. மாறு - பகைமை. அடல் யானை - வலிய யானை, பிணிமுகம் ராவுத்தன் - யானைப் பாகன். (௬௬)

என்றைத் தடுத்துவெளி எல்லா மறைந்திட
எழுந்தசூர் மாவோர் அயிலா
லேறுபட் டிருதுண்ட மாகவொரு துண்டம்இவன்
ஏறுமயி லாகவொன்று

வென்றித் துணைச்சிறை கடித்தண்ட கூடமும்
வெடித்திடக் கூவிவானின்
மீனைநெற் பொரியெனக் கொத்திக் கொறித்துணையும்
வெண்சோறு தென்றுதாக்கிக்

குன்றக் குறத்தியெம் பெருமாட்டி யைப்பெறுங்
குலமான் இருத்தல்கண்டுங்
கோமளக் குகன்இவன் விருப்போடு தரித்திடுங்
குவளைச் சகாயன்என்றும்

அன்றைக்கு நின்னுயிர் கொடுத்தசர ணாயுதனொ
டம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனொ
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) என்று - சூரியன். சூர்மா - சூரனாகிய மாமரம். முருகக்கடவுளது வேலால் சூரன் அழிக்கப்பட்டபோது சேவலும் மயிலுமானான். வென்றி - வெற்றி. துணைச்சிறகு - இரண்டு சிறகு. வானின்மீன் - விண்மீன். கொறித்து - கடித்து. சரணாயுதன் - சேவற்கொடியோன். (௬௭)

பணிலமுத் தும்பவள முஞ்சாலி னூடேழும்
பசும்பொன்னு நீலமணியும்
பன்னிறக் கதிர்விரித் தங்கிலத் தரசன்விற்
பான்மைகாட் டக்குரண்டம்

பிணிமுகத் துருவடைந் தருகுறுஞ் சேவலைப்
பேடுதே டப்பேடையினைப்
பேராத சேவற் பெருங்குருகு தேடவது
பேதைக் கடைச்சியர்கள்கண்

மணிநிழற் கதுவுறப் பார்த்துமகி ழக்கண்கள்
வாய்ந்தசிறை யும்படைக்க
மள்ளரது கண்டுகண் டேமுருகன் ஏறுமயில்
வாகனமிதென்று போற்றும்

அணிவயற் பண்பைப் பதிக்குமர நாயகனே
டம்புலீ ஆடவாவே
யருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனே
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) *சாலி* - நெல். *குரண்டம்* - கொக்கு. *கதுவுற* - *பற்ற.* (கூஅ)

வன்புடைய கண்டக ரேணுங்கொடிய நிசிசரர்கள்
வாழ்பதிம கேந்திரத்தின்
மாமதி ளிடித்தவுண ரைக்கொன்று கொன்றுதிரை
வாரியிற் பிணநிரப்பித்

தென்புலத் தேப்புரமும் வீரசொர்க் கத்தினுஞ்
செருநருயி ரேநிரப்பித்
தேவலோ கத்தினிற் கற்பகச் சோலையில்
தெய்வச் செழும்பிடியுடன்

என்புநெக் குருகவுட லம்புளகம் வரமனமும்
இளகியிள கித்தெணீராய்
இருவிழியி னுந்தரள மாலைவர மால்கொண்
டிசைந்துதொழும் ஏழை அடியார்

அன்பெனுஞ் சேவகம் அடைந்தமத யானையுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோலு இருப்பவனே
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) வன்பு - வலிமை. கண்டகர் - பாதகர். வாரி - கடல். தென்புலம் - எமன் உலகம். நெக்கு - நெகிழ்ந்து. புளகம் - மயிர்ச்சிலிர்ப்பு. தெணீராய் - தெளிந்தநீராய். மால் - ஆசை. (சுக)

திருமலைக் கயிலையில் பரமனுமை நடுவினில்
சேர்ந்திவன் இருக்குநாளில்
திருமால் அயன்சதக் கிருதுமுதல் அமரர்சூர்
செய்குறை இரந்துரைப்பப்

பொருபடைத் தலைவருந் தம்பிமா ருந்திறற்
பூதப் பெரும்படைகளும்
புடைவரத் திண்தேர் நடத்திமா யாபுரி
புகுந்தொரு பொருப்பினோடும்

ஒருதனித் தாரகனை வென்றவலி கண்டுகண்
டுரிமைபெற தேவகிரிமேல்
உம்பரிறை யுங்கமல னுந்தேவர் யாவரும்
உவப்புடன் அருச்சனைசெயும்

அருமணிப் பரிபுரத் திருபதத் தொருவனுடன்
அம்புலீ ஆடவாவே
அருட்டிரு மலைக்குடுமி யிற்கோல இருப்பவனே
டம்புலீ ஆடவாவே.

(அ - ரை.) சதக்கிருது - இந்திரன். புடை - பக்கம். தாரகன் தாரகாசுரன். மணி - இரத்தினம். (௭0)

---

## அ. சிற்றிற்பருவம்

[சிறு+இல்=சிற்றில். சிறுமியர் கட்டிய சிறு வீடுகளைச் சிதைத்தல். பதினேழாந் திங்களில் நிகழ்வது.]

கூண்ட மாயப் பரசமயக்
குழியின் வீழ்ந்தங் கழியாமற்
கொங்கை மலையும் மடவார்கள்
குழற்காட் டினும்போய்ச் சுழலாமற்

பூண்ட விரதச் சைவநெறி
புகுந்து சரியை கிரியையொடும்
புனிதச் சிவயோ கமும்புரிந்து
பூத வீட்டைச் சுத்திபண்ணி

ஆண்ட குரவன் உனதருளால்
அருள்மூப் பொருளும் பிரித்தறிந்தங்
கத்து விதத்தின் உருவடைந்த
அடியார் சிரத்தின் அயன்பொறியைத்

தீண்டி அழிக்குஞ் சேவடியால்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையில்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) கூண்ட - கூடிய. பரசமய - புறமத. குழற்காடு - கூந்தற்காடு. சைவநெறி - சைவசமயம். சரியை கிரியை யோகம் என்பன ஞானத்தை அடைவதற்குரிய வழிகள். பூதவீடு - ஐம்பெரும் பூதங்களால் ஆகிய உடம்பு. குரவன் - ஆசிரியன். மூப்பொருள் - பதி, பசு, பாசம். அத்துவிதம் - இரண்டறக்கலத்தல். அயன்பொறி - பிரமன் எழுத்து. செல் - மேகம். (எச)

நேய முடைய அடியவர்க்கு
நிகழுஞ் சேனனப் பிணியல்ல
நித்தம் பரவுங் கடவுளர்க்கு
நிருதர் புரிந்த சிறையல்ல

மாய முடைய கிரவுஞ்ச
மலையுங் கடலுஞ் சூரும்அல்ல
வலிய குறவர் காவல் அல்ல
மழலைக் குறத்தி குமரும் அல்ல

ஆய வமரர் முனிவர்சிவத்
துரோக மல்ல மேருவல்ல
துங்கச் சிலைவேள் உடலம் அல்ல
துதிக்கும் புலவர் வறுமையல்ல

தீய புரமும் அலஅவைபோற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) *செனனப்பிணி - பிறப்பு நோய்.* **துங்கச் சிலை வேள்** - *உயர்ந்த வில்லையுடைய மன்மதன்.* இப்பாட்டில் செனனப் பிணி முதல் அல்ல என்று சொல்லப்படுகின்றவை எல்லாம் அழிக் கப்படவேண்டியவை. *அவற்றை அழித்தது சரி,* எம் சிற்றிலை அழியாதே. (எஉ)

பாடக் கிடையாப் புகழைவேளைப்
பாட்டிற் புனைந்து புகழ்ந்திடுவேம்
பவனி வரும்போ தயினிசுற்றிப்
பரவிப் பரவிக் கடன்கழிப்பேங்

கூடக் கிடையாத் திண்புயத்தைக்
கூடுங் குறத்தி குஞ்சரிக்குங்
குலவு மாய ரிகுலையராய்க்
குற்றே வலிலே சஞ்சரிப்பேஞ்

சூடக் கிடையாத் தண்டையந்தாள்
துகளைத் துடைத்துத் தாலாட்டித்
தொட்டில் உழைவைத் தாட்டிடுவேஞ்
சோதிக் கடவுளுமைமடந்தை

தேடக் கிடையாத் திரவியமே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) *அயினிசுற்றி - ஆலத்தி எடுத்து. இகுளை - தோழி. உழை - இடம்.* (எ௩)

வருநா மகட்குத் திருமடந்தை
மாமிக் கொடுமை புரியாமல்
மாமி தனக்குக் கலைவாணி
மருகிக் கொடுமை செய்யாமல்
ஒருநாட் கொருநாள் உவகைபொங்கி
ஒருவர்க் கொருவர் களிப்பெய்தி
ஒளிர்செங் கமல வெண்கமலத்
துறையும் பான்மை போன்மகிழ்ந்து
தருநா கரிகத் தாடவர்கள்
தன்மார் பினுநா வினுமேவித்
தவிராச் செல்வத் தொடுகல்வி
தழைத்துச் செழிக்கும் வடவாரித்
திருநா டுடைய குகப்பெருமாள்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையில்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) *மருகி - மருமகள். ஆடவர்கள் - திருமால், பிரமன் எனுமிருவர். வடவாரித் திருநாடு - வடஆரிய நாடு.* (எ௪)

தோணிக்குந் தொடிக்கைக் கடைசியர்கள்
துண்ணென் றெழுந்து குரவைசெய்து
துள்ளிப் புதுநீர்ச் செழுங்கழனி
தோறுநாள் நடவு தொடங்கிநட்டுத்
தனிக்கு மனத்தான் மருதநிலத்
தலைவர்ப் போற்றிக் கடமதுவைத்
தடக்கை வள்ளத் தினில்வார்த்துத்
தயவா யருந்த அம்மதுவுட்

பணிக்குங் கருணை முகம்அளக
பாரந் தோன்றப் பகைஇரவு
பரந்த தெனமள் ளரைநினைந்து
பகற்போ தினுமள் ளியர்க்காசை

சணிக்கும் பண்பை நகர்க்கரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) *தொடி - வளை. குரவை செய்து - குரவையாடி. நாள்நடவு - முதல் நாள் நடுதல். கடமது - குடக்கள். கைவள்ளம் - கையாகிய கிண்ணம். அளகபாரம் - கூந்தற்சுமை. மள்ளியர் - பள்ளியர்.* (௭௫)

அல்லைத் திடுங்கூந் தலம்பிடித்தெய்
வானைத் திருவைப் பரங்குன்றில்
அயிரா ணியும்விண் ணவர்க்கிறையும்
அளிப்ப மணஞ்செய் தருளினவன்

வல்லைத் திடும்பூண் முலைச்சிறுமி
வள்ளிதனையுந் தினைப்புனத்தில்
வரிவிற் குறவன் குறத்திதர
மணந்தான் என்று மொழிந்தேமோ

கல்விச் செருக்கால் விளையாட்டுக்
களிப்புச் செருக்கால் சூர்தடிந்த
கடிய செருக்கால் சமண்பகையைக்
கடந்த செருக்கால் இளஞ்செருக்கால்

செல்வச் செருக்கான் மனச்செருக்காற்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) *அல் - இருள். வல் - சூது கருவி. செருக்கு - வலிமை. இளஞ்செருக்கால் - வாலிப முறுக்கால்.* (௭௬)

காவிச் சுனைநீர் குடைந்தாடிக்
கரையி லிருந்த தொழுத்தைமனங்
கரையக் கருதி உருவேற்றிக்
கன்னி மாரை யும்பரவி

ஆவிப் புலனின் றுருகமகிழ்ந்
தாடிப் பாடி அங்கைகொட்டி
அருமைப் புகழைப் புகழ்ந்துபுகழ்ந்
தங்கம் பிரதக் கிணமாகத்

தூவிச் சிகரச் சினகரத்தைச்
சுற்றிப் பரிந்து கந்தசஷ்டி
சோம வாரங் கார்த்திகைநாள்
சுக்கிர வாரந்தோறும்வந்து

சேவித் துனையே தெரிசிப்பேஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுந் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) குடைந்து - திளைத்து. தொழுத்தை - அடியாள். தொழும்பன் : ஆண்பால். அங்கம் பிரதக்கிணமாக - உடம்பால் வலமாக. சினகரம் - கோவில் சேவித்து - வணங்கி. (எஎ)

மருமா லிகைப்பூங் குழல்மடவார்
வாவி குடைய அவர்துகிலை
வாரிக் குருந்தின் மிசையேறி
மடநாண் விரகம் தலைக்கொண்டு

கருமா நாகஞ் செங்நாகங்
கலந்த தெனஅவ் வனிதையர்கள்
கையால் நிதம்பத் தலம்பொதிந்து
கருத்துந் துகிலு நின்றிரப்பப்

பெருமா யைகள்செய் திடைச்சியர்கள்
பின்னே தொடர வேயிசைத்துப்
பேய்ப்பெண் முலையுண் டுயிர்வாங்கிப்
பெண்க ளிடத்திற் குறும்புசெயுஞ்

திருமால் மருகன் அலவோநீ
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்வத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ . உரை.) மருமாலிகை - வாசனைப் பூ மாலை. துகிலை - உடையை, ஆடையை. வாரி - அள்ளி குருந்தின் மிசை - குருந்த மரத்தின்மேல். விரகம் - ஆசை. கருமா நாகம் - கரிய பெரிய நாகம். வனிதையர் - பெண்கள். நிதம்பத்தலம் - அல்குல் இடம். இரப்ப - வேண்ட. பேய்ப்பெண் - பூதனை, கஞ்சனால் ஏவப் பட்டவன். (எஅ)

கந்தப் பதுமச் சரவணமும்
கந்த புரியும் கந்தவெற்பும்
கழுநீ ருதிக்குந் திருத்தணியும்
காஞ்சி புரத்தின மாவடியும்

சோந்தப் புரிஏ ரகத்துடனே
சோலை மலையும் பரங்குன்றும்
துங்கத் திருவா வினன் குடியும்
சோதித் திருவேங் கடமலையும்

சந்தப் பொதியும் குற்றலத்
தலமும் இலஞ்சித் தமிழ்ப்பதியுந்
தழைக்குங் கதிர்கா மத்தடமுஞ்
சயிலந் தோறும் விளையாடிச்

செந்திற் பதியும் புரந்தபிரான்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - உரை.) கந்தம் - மணம். திருத்தணி - திருத்தணிகை. மாவடி - மாமரத்தினடி. ஏரகம் - சுவாமி மலை. சோலை மலை - அழகர் மலை. திருவாவினன்குடி - பழநி. துங்கம் - உயர்வு. சந்தப் பொதியும் - சந்தனப் பொதிகைமலை. குற்றலம் - திருக்குற்றாலம். சயிலந்தோறும் - குன்றுதோறும் புரந்த - காத்த. கதிர்காமத் தடம் - கதிர்காம மலை ; இலங்கையிலுள்ளது. (எக)

பொன்னி னிறமாய்ச் சிவந்துமுளை
புறப்பட் டெழுந்து மரகதத்தின்
பொலிவு பெறவே குருத்துவிட்டுப்
பூத நாதன் படைபோல

மன்னு மருங்கிற் கிளைகிளைத்து
வள்ளற் குணத்தோர் செல்வமெனை
வளர்ந்து தூணி வனப்பிதெனை
வசியப் பசிய பாம்பிதெனத்

துன்னும் பொதியாக் கதிரீன்று
துட்ட ரெனவே செம்மாந்து
சொல்லும் அறிஞர் போலருட்பால்
சுரந்து சுரந்து தலைவணங்குஞ்

செந்நெல் வயற்பண் ணைபயம்பதியாய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழுந் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) மரகதம் - பச்சை. பொலிவு - தோற்றம்; எழுச்சி மருங்கு - பக்கம். வள்ளற்குணம் - கொடையாளர் குணம். தூணி வனப்பு - அம்புக் கூட்டின் அழகு. வசியம் - மயக்கம். பசிய பாம்பு-பச்சைப் பாம்பு. கதிரீன்று-கதிரைத்தந்து, இப் பாட்டில் வரும் கருத்து, "சொல்லரும்சூற் பசும்பாம்பின் தோற்றம்போல் மெல்லவே கருவிருந்தீன்று மேலலார், செல்வமேபோல் தலைநிறீ இத் தேர்ந்த நூற், கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே" என்ற சிந்தாமணிப் பாட்டிலும் காணத்தக்கது. செம்மாந்து - இறுமாந்து, அருட்பால் - அருளாகிய பாலை. (அ0)

---

## கூ. சிறுபறைப்பருவம்

*[சிறு ஓசைக் கருவிமீது ஒலியிட்டு மகிழ்தல். பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வது]*

சங்குற்ற செங்கைதோட் டழல்கரிய தாகவே
சயமா முடித்து மேவுந்
தவிராத கற்புடைய தையலர்கள் பூண்முலைச்
சையோக மேத ணந்து

பொங்குற்ற பள்ளியுட் சப்ரமஞ் சத்தினிற்
பூவணையு மேது றந்து
போதுமாதர் சேரியில் இராப்பகல் நடந்தவர்கள்
போகம் வேட் டிடும்வி டர்கள்போற்

கொங்குற்ற சோலையும் புளினமும் இகழ்ந்துபைங்
கூழ்ச்சேந் நெலைத்து தைத்துக்
கோடுகோண் டிக்குக் குலங்களையு முறித்திளங்
கொடிவள்ளை யைக்க றித்துச்

சேங்கட் கரும்பகடு சேருடும் வளநாட
சிறுபறை முழக்கி யருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கி யருளே.

(அ - ரை.) சங்கு - சங்கரேகை. சயம் - வெற்றி. சையோகம் - புணர்ச்சி. தணந்து - நீங்கி. சப்ரமஞ்சம் - கட்டில். பொது மாதர் - உருத்திர கணிகையர். வேட்டிடும் - விரும்பும். விடர் - தூர்த்தர். கொங்கு - வாசனை, தேன். புளினம். மணல்மேடு - பைங்கூழ் - இளம்பயிர். துவைத்து - அழித்து. கோடுகொண்டு - கொம்பால். இக்குக்குலங்களை - கரும்புக் கூட்டங்களை. கரும்பகடு - கரிய எருமைக்கிடா. (அக)

வள்ளிமலை தனில்முதிய சிவமுனிவன் முன்னரொரு
மான்வந் துலாவ மானை
மாமுனிவன் நயனத்தி னூற்புணர்ந் திடஅதன்
வயிற்றிடைக் கருப்ப மாகித்

துள்ளிஅயர் வோடுவயி றீற்றுளைந் தீன்றெயினர்
தோட்டகுழி இட்ட கலவுந்
துங்கச் சிலைக்குறவர் மரகதச் சிலையெனத்
தோகையைக் கண்டெ டுத்து

விள்ளுமுவ கைக்கடல் படிந்தவர்கள் சிற்றூரில்
விரைவினொடு கொண்டு வந்து
வீறுடன் வளர்த்துத் தினைப்புனத் தினில்வைத்த
வேட்டுவ மடந்தை கையால்

தெள்ளுதினை மாவுக் கவாவுற்ற மோகனே
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) நயனம் - கண். ஈற்றுளைந்தீன்று - வருந்திக் கரு உயிர்த்து. எயினர் - வேடர். தொட்ட - தோண்டிய. சிலை - உரு. தோகையை - மயில்போல்வாளை. விள்ளும் - விரியும். சிற்றூர் - குறிஞ்சி நிலவேடர் ஊர். வீறு - பெருமை. அவாவுற்ற - ஆசைப்பட்ட. சிவமுனிவர் அருளால் வள்ளிநாயகியை மான் ஈன்றதாகப் புராணங் கூறும். (௮௨)

பெண்கள்சங் கத்தினொ டிலவைநகர் விட்டுப்
பெயர்ந்துதிரு மலையின் மேவிப்
பிரசவேர் கல்லிப் பிடுங்கிவிளை யாடிஒரு
பேதைமடி யில்து யிலவுந்

தண்புனற் சுனையுண்டு பூவுண்டு நாளும்வட
சாரலிடை வைகு மெனவே
சண்முகப் பிள்ளைநீ யருள்புனைந் திடவுனைத்
தயவினொடு கண்டு போற்றிப்

பண்புபெற் றிடுசுப்ர மணியனொடு விக்கிரம
பாண்டியன் செங்கை யாலும்
பங்கயக் கண்ணனருள் குஞ்சரி குறத்திஇரு
பாவையர்கள் பார்வை யாலும்

திண்புயத் தைந்துகட் குவளைசூ டுங்குளக
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) சங்கம் - கூட்டம். இலவைநகர் - இலஞ்சி. கவ்வி - தோண்டி. பிரசம் - தேன். சாரல் இடை - மலையடிவாரத்தில். பங்கயக் கண்ணன் - தாமரை மலர் போன்ற கண்களையுடைய திருமால். குளக - குமர. (அகூ)

வனமுழங் குங்கவிகள் தாவவளர் தெங்கின்மிசை
மலிமுப் புடைக்கனிகளும்
மாங்கனி பலாக்கனிகள் சம்பீர மென்கனிகள்
மாருமல் வீழோசையும்
இனமுழங் கும்பழைய சைவர்கள் சிவாகமமும்
இன்னிசைத் தேவாரமும்
எங்கணும் பரவச முடன்பரவும் அடியவர்
இயம்பும்ஆ கரசத்தமுங்
கனமுழங் குங்கன முழக்கமும் வடவருவி
கல்லெனை ஒலிக்குமோலியுங்
கரகமுனி முதல்ஞோர் வேதபா ராயணக்
கம்பலையும் உம்பர்முரசுங்
தினமுழங் குஞ்சித்திர சபைநடனன் அருள்புதல்வ
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) கவிகள் - குரங்குகள், முப்புடைக்கனிகள் - தேங் காய்நெற்றுக்கள், சம்பீரம் - எலுமிச்சை. இன்னிசை - இனிய பண். சத்தம் - முழக்கம். கரகம் - கமண்டலம். (அச)

தண்டைகள் சிலம்புகள் சதங்கைகள் பதங்களில்
சரிகலங் திசைமுழங்கத்
தாமரைப் பன்னிரு தடக்கையில் வியப்போடு
தரித்தபொன் வளைமுழங்கத்

தொண்டர்கள் விருப்பொடு தெருட்பெற திருப்புகழ்
துதித்திடு துதிமுழங்கச்
சுந்தரத் திருவரையில் அரைவடக் கிண்கிணிச்
சோதிமணி தான்முழங்க

அண்டருலக கம்புவி அனந்தனுலக கெவ்வுலகும்
அணிமணப் பறைமுழங்க
அறுசமயம் அல்லாத பரசமய வாதிகள்
அகத்தோடு மிகுந்தஅவுணர்

திண்திறன் மனத்திற் பெரும்பறை முழங்கநீ
சிறுபறை முழக்கி யருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கி யருளே.

(அ. ரை.) இசை முழங்க - இசை எழுப்ப. வளை - வளையல். தெருள் - அறிவு. அனந்தன் உலகம் - நாகர் உலகம். பறை - கொட்டு. அகம் - செருக்கு. திண்திறல் - மிக்கவலி. (அ)

பொருவரிய கயிலைமலை அண்ணல்கைச் சூலமும்
போராழி யுங்குலிசமும்
பொங்கும் திருப்புகழ்ச் சாணைதீட் டிக்கதிர்
பொலிந்திலகு கூர்மைபெறவே

ஒருபெரிய வீரவேல் சூரனுர முங்கிரியும்
ஊடுருவி ஓடிமீள
ஒல்லையில் எறிந்துபகை வென்றுசே வற்கொடி
உயர்த்தசே வகமிருந்துந்

தருநிழலில் அரசுபுரி அரசனருள் குஞ்சரி
தடங்கண்வேற் கஞ்சியஞ்சித்
தையலவள் குங்குமச் சந்தனச் சேறுடன்
தகரமிரு மதமொழுகிய

திருமுலைக ளென்னுமிரு மலையரண் அடைந்தவன்
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) பொருவரிய - ஒப்பற்ற. சாணை - கத்தி முதலியவற்றைக் கூர்மைப்படுத்தும் கருவி(கல்). உரம் - மார்பு. ஓல்லை - விரைவு. எறிந்து - வீசி. தருநிழல் - கற்பக மரத்தடி. மிருகமதம் - கத்தூரி. (அசு)

கத்துபுனல் அருவிசொரி பொதியமலை யில்திகழ்
கடத்தினில் இருந்தெழுகையாற்
கடலகடு புகுதலான் மலையையு முறித்துக்
கயற்புலம் அழுத்திவிடலால்

அத்தர்திரி கூடத்தர் திருமவுலி தீண்டிநின்
றபிடேக மாட்டுகையினல்
அன்புட னடுத்தவர்க் கருள்புரிந் திடுகையால்
அழியாத சாபமிடலால்

பத்திமிகும் உத்தமத் தவமுனிவர் பாலிகல்
படைத்தகரை மீறிவரலால்
பாரமா கிச்சிறிய நாமமுற லால்கலை
படித்தகுறு முனியைமானுஞ்

சித்திர நதித்தலைவ முத்தமிழ் முதற்புலவ
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ-ரை.) சித்திரநதி:—பொதிய மலையில் எழுதலால் (தோன்றுதலால்) கடத்தில் - காட்டில். கடலகடு - கடல் வயிறு. கயற்புலம் - கயல்மீன் இருக்குமிடம். (கடல்) அபிடேகமாட்டுகையினல் - திருமுழுக்கு ஆட்டுதலால். படைத்த கரை - அமைத்த கரையை. சிறிய நாமம் - சிற்றாறு. மானும் - ஒக்கும். கலை படித்த - எல்லாக் கலைகளையும் ஓதியுணர்ந்த. குறுமுனி - அகத்தியமுனி. பொதிகை மலையில் கும்பத்தில் எழுதலால், வயிற்றில் கடல்நீர் பருகுதலால். மவுலி - முடி. அபிடேகமாட்டுதலால் - நீராட்டுதலால். இகல் படைத்தகரை - வலிமை படைத்த ஆடுகளை. சிறிய நாமம் - குறுமுனி. (அஎ)

உறுநாக மும்கமட மும்கனக மேருவுடன்
ஓரேழு திரைவாரியும்
உட்புறப் போராழி யும்சக்ர வாளகிரி
யும்திசை சுமந்தகளிறும்

இறுநாளில் அவையவை படும்பாடு படஅமரர்
ஏங்கிக் குதித்தாடவே
இப்படி மிகுத்தபகி ரண்டமு நடுங்கஅசு
ரேசன்மன முஞ்சலிப்ப

நறுநான வார்குழற் பதுமைமுதல் அவுணர்குல
நங்கையர்கள் மங்கலப்பொன்
நாணற் றுதிர்ந்துவிழ வேணுப் பெருஞ்சிலையில்
நாண்வளை தேற்றிவாங்கிச்

சிறுநாண் முழக்கிநிசி சரர்தள முழக்குநீ
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை அருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) உறுநாகம் - உலகத்தைத் தாங்கிக்கொண்டிருக்கும் ஆதிசேடனாகிய பாம்பு. கமடம் - ஆமை. கனகமேரு - பொன் மலை. திசை - திக்கு. இறுநாளில் - முடிவு காலத்தில். அசுரேசன் - அசுரர் தலைவன். பொன்நாண் - பொற்றாலி. வேணு - மூங்கில். சிலை - வில். நாண் - நாரி. நானம் - கத்தூரி. (அஅ)

தையலர்கள் ஊடியெழும் ஊடறீர்ந் திடஅவர்கள்
தாளையிளை ஞோர்கள் வருடிச்
சந்திரதில கங்குழைத் திந்துநுத லுக்கழகு
தருதிலக மேபுனைந்து

தோய்யில்எழு திக்கோங்கை மேலுத்த ரீயமுஞ்
சுடர்மணிக் கலனும்வீக்கிச்
சுந்தரப் பொன்மேனி யணிபணி திருத்திவேல்
துணைக்கஞ் சனங்கள் தீட்டி

மையொழுகு குழன்முடித் தவர்முடித் திடவுமதில்
வண்டுமொய்த் திடுதல்கண்டு
வஞ்சியிடை முறியுமென அம்மலர் கழித்தும்பர்
வனமலர்கள் கொய்து சூட்டுஞ்

செய்யமணி மேடைதிகழ் பண்ணைநக ருக்கதிப
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) வருடி - தடவி. இந்து நுதல் - பிறைபோலும் நெற்றி. திலகம் புனைந்து - பொட்டிட்டு. தொய்யில் - சந்தனக் கோலம், உத்தரீயம் - மேலாடை. வீக்கி - கட்டி. பணி - நகை. வேல் துணைக்கு அஞ்சனம் தீட்டி - வேல் போன்ற கண்களுக்கு மை தீட்டி. மை - கருமை, மயிர்ச் சாந்து. உம்பர் வனமலர் - மேலிடச் சோலைப் பூக்கள். (அக)

மருவாத பாலையிற் பொய்யா மொழிக்குமுன்
வந்தொரு செழுங்கவிதையு
மாறுன சூரன்முன் தம்பிநீ தூதுபோய்
வாவென் றியம்புமொழியுங்

குருவாக வந்தருண கிரியைத் திருப்புகழ்
கூறெனு முதற்சந்தமுங்
கும்பமுனி இருசெவி மனத்தோடு சரீரமுங்
குளிரமுத் தமிழின் இயல்பும்

அருவாய் மிகுந்தபல வுருவாய் நிறைந்தருளும்
அப்பனுக் கொப்பிலாத
ஆனந்த மதுரரசம் ஒழுகுதே வாரமுடன்
அழியாத ஒருவாய்மையுந்

திருவாய் மலர்ந்துரைசெய் குமரகுரு நாதனே
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறு திருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே.

(அ - ரை.) மருவாத - மக்கள் பொருந்தாத. பொய்யா மொழி - பொய்யாமொழிப் புலவர். செழுங்கவிதை - சிறந்த பாடல். ''பொன்போலும் கள்ளிப் பொறிபறக்கும் கானலிலே, என் பேதைச் செல்லற் கிசைந்தனளே - மின்போலும், மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர் போம், கானவேல் முட்டைக்கும் காடு'' - இதில் முட்டை என்ற இடுகுறி ஆக்கப்பெயர் முருகனால் சொல்லப் பெற்றது, தம்பி - வீரபாகு. அருணகிரியை - அருணகிரி நாதரை. முதற்சந்தம் - ''கைத்தலம் நிறைகனி.'' கும்பமுனி - அகத்தியன். குளிர - இன்பமுற. முத்தமிழ்-இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ். அருவாய் - வடிவில்லாததாய், ஆனந்த மதுர ரசம் ஒழுகு தேவாரம் - இன்பமான இனிய ருசிபொருந்திய தேவாரப் பாடல். (இது, கூறியவர் திருஞானசம்பந்தராகிய முருகர்.) வாய்மை - உண்மை. (௯0)

## ௧௦. சிறுதேர்ப்பருவம்

[சிறுதேர் உருட்டி மகிழ்தல். இருபத்தொன்றாந் திங்களில் நிகழ்வது.]

இசைக்குழலும் வீணையுங் கஞ்சமும் பல்லியமும்
எல்லாம் பயின்றுபாடி
ஏறுதக ரானைபரி தேருகைத் துங்கடல்கள்
ஏழையுந் துளியாக்கியே

வசைத்தொழி லரக்கர்கள் துணுக்கென மலைத்தமரர்
வஞ்சகமி தென்றயிர்ப்ப
வானவர்கள் தானவர்கள் செய்கையென் றேமதி
மருண்டுளம் வெருண்டுசோர

மிசைப்படு முடுக்கதிர் களைத்தலை மயக்கிமக
மேருவை முறித்துழக்கி
விண்டுவிண் டண்டங் குலுங்கக் குலுங்கநவ
வீரர்கள் இலக்கர்சூழத்

திசைக்கிரி யனைத்தையும் உருட்டிவிளை யாடுநீ
சிறுதே ருருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே.

(அ · ரை.) கஞ்சம் - கைத்தாளம். பல்லியம் - பலவாத்தியம். தகர் - ஆடு. உகைத்து - செலுத்தி. அயிர்ப்ப - சந்தேகிக்க. தானவர்கள் - அசுரர்கள். மருண்டு உளம் வெருண்டு சோர - மயங்கி மனம் பயந்து தளர. தலைமயக்கிய - கலந்த. உழக்கி - கலக்கி. விண்டுவிண்டு - வெடித்து வெடித்து. சிவஞானமுத்தி - சிவஞானத்தால் அடையும் முத்தி. சிவஞானம் - அடிஞானம், திருவருள் ஞானம். (௧௧)

புவியுலகு துயரகல அசுமேத யாகம்
புரிந்துபல வேள்வி ஆற்றிப்
புண்ணியமும் வீரமுஞ் செல்வமுங் கல்வியும்
பொன்றாத ஆடவர்களால்

அவியுணவை அனுதினம் விழைந்தும்பர் வாய்வயி
றனைத்துந் தேவிட்டலூட்டி
ஆனந்த மதுபெருகி மனதுருகி விழிசோருகி
அசையாமன் மேடைதோறுங்

குவிஉபய முலையின்மிசை வீணைசேர்த் துச்சுருதி
கூட்டிஎழு கரமுமூட்டிக்
கோதையர் குயிற்குதலை மழலைமொழி அமுதினொடு
கூடவா சிக்கும் இசையாற்

செவியுணவு மன்னவற் கூதவுபண் ணைக்கதிப
சிறுதே ருருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே.

(அ - ரை.) *அசுமேத - யாகம் குதிரையைக்கொண்டு செய்யப் படுவதாகிய அசுவமேத யாகம் என்னும் வேள்வி. துய ரகல - துன்பம் நீங்க. பொன்ருத - கெடாத, அழியாத. அவி உணவு - வேள்வி உணவு. விழைந்து - விரும்பி. உபய - இரண்டு. கோதையர் - பெண்கள். செவி உணவு - செவிக்குணவு, கேள்வி.*

(கஉ)

உகமும் பரித்தோகை கரித்தோகைபல் இரதமுடன்
ஒளிரும்வாள் அவுணர்மாள
உன்னுடைய போர்ஆழி சென்றறுப் பச்சூரன்
ஒருவனே நின்றுநெஞ்சை

அகமும் பெருங்கவலை கொண்டதி சயித்துவிழி
அழலுகுத் தெயிறதுக்கி
அப்படி அவன்படையும் இப்படி முடிப்பனென
அன்னவன் முன்னியேவப்

புகழ்கொண்ட திறல்வீர வாகுவுடன் நவவீரர்
பூதர்கள் இலக்கர்தம்மைப்
புந்தியை மயக்கியொரு நொடியில்வா ரிக்கொண்டு
போயண்ட கோளகையின்மேல்

திகழிந்திர ஞாலப் பெருந்தேர் பறித்தநீ
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) உகழும் - தாவும், உகளும். பரி - குதிரை. கரி - யானை. அகழும் தோண்டும் - எயிறு அதுக்கி - பல்லைக் கடித்து. முன்னி - நினைத்து. நவவீரர் - ஒன்பது வீரர்கள். கோளகை - வட்டம். இந்திர ஞாலப் பெருந்தேர் - இந்திரஞாலம் என்ற பெரிய தேர். (கரு)

உருத்தார வாரித் திடுங்கொடிய நிசிசரர்
உமாபதி வலக்கண்எதிரும்
ஒருமருக னடவுகளி றேத்திருந் தோடவே
உம்பர்கோ மான்புரக்குந்

தருத்தாம நந்தனவ னஞ்செழித் ததிலுறு
சராசரம் எலாந்தழைப்பச்
சாபநா ணும்பூணு மாபரண முந்திகழ்
சரக்கறை மிகத் தழைப்ப

மருத்தா மரைத்தவி சுடைப்பாக னுஞ்சிலை
வளைத்தெய்தி டாதகணையும்
வாசியும் பேசிய திருப்புகழ் விருப்புடன்
வழுத்தித் துதிக்கவந்த

திருத்தாதை ஏறும் பெருந்தேரும் வாழ்கவே
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) உருத்து ஆரவாரித்திடும் - கோபித்து முழக்கம் செய்யும். நிசி - இருள், நிசிசரர் - இருளில் சஞ்சரிப்பவர்களாகிய அசுரர்கள், தருதாம நந்தனவனம் - தருக்களை உடைய மாலைகளைத் தருகின்ற நந்தவனம்- சாபநாண் - வில்நாண். மரு வாசனை - தவிசு - இருக்கை. (கசு)

கனந்திகழ் கிரிக்குலம் இரண்டையும் எறிந்துவெங்
காஞ்சனத் தளிர்மாவையும்
கண்டதுண் டப்பட முறித்திரு வகைப்புலவர்
காரகந் தூள்படுத்தி

இனந்தனை முடிந்தவன் இவன்றனையும் வெல்வதற்
கிதுசமயம் என்றுமலைகள்
எல்லாந் திரண்டுபய மாகிமா வடுவுடன்
இணங்கிஅம ராடுவனபோல்

வனந்தனை விருப்போடு புரந்தருள் குறத்திமான்
மதம்ஒழுக்கு வனமுலைகளும்
வள்ளைச் செழுங்குழையில் வாசக் கருங்குழலில்
வாவிவிளை யாடுவிழியுந்

தினந்தின முரத்தோடு போரக்குழையும் விரகனே
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) காஞ்சனத்தளிர் - பொன் போன்ற தளிர். காரகம்-கருவி. அமராடுவன - போர் செய்வன. வனம் - காடு, அழகு. உரம் - மார்பு. (கஇ)

பெருகுகரு ணைக்கடல் உவட்டெறிந் தருளொழுகு
பெரியபன் னிருவிழிகளும்
பேரழகு பெறுநுதல் களுந்திலத முந்தெருட்
பிரணவம் சொலும்வாய்களும்

இருவனிதை யர்க்குமயல் செயுமந்த காசமுடன்
இலகும்ச ராறுகுழையும்
ஏரிலகு நாசிகள் கபோலங்கள் அத்தனையும்
எழில்சிறந் தொளிததும்பி

முருகுகமழ் சண்முகத் தாமரைக ளேபின்னு
முன்னும்விக சித்திடுதலால்
முத்தமிழ்ப் புலவர்க்கும் அடியர்க்கும் அமரர்க்கு
முனிவரோடு சூரனுக்குந்

திருமுதுகு தாராத தண்ணளிச் சேவகன்
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) உவட்டெறிந்து - பெருக்கெடுத்து. பிரணவம் - ஓங்காரம். மந்தகாசம் - புன்சிரிப்பு. குழை - குண்டலம். ஒளி ததும்பி - ஒளி நிரம்பி. முதுகுதாராத - புறங்காட்டாத. (௬௬)

அரிக்கும்அய னுக்கும்வெரு வாதசூர் வென்றதுகை
அயிலோஅன் னோர்கள்படையோ
அப்பனுக் கும்பொருள் நிரப்பிய குருக்களென்
றாரணத் தொகைபுகலுமே
பரிக்குமயி லுக்குமொரு சேவற் கொடிக்கும்இணை
பகரஒரு பொருளும்இல்லை
பதினு யிரங்கோடி மன்மதன் அழகுநின்
பாததூ ளிக்குநிகரோ
புரிக்குளுயர் பொன்னுலகு நின்னுடைய பண்பா
புரிக்குநிகர் ஒப்பாகுமோ
பூதரம் எலாமிருந் துஞ்சுனையி லோர்குவளை
பூத்ததிரு மலைஒக்குமோ
தெரிக்கில்உல கத்துவமை இல்லாத தெய்வநீ
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) வெருவாத - அஞ்சாத. கை அயிலோ - கையி லுள்ள சிறு வேற்படையோ. ஆரணத்தொகை - வேதத் தொகுதி. இணைபகர - ஒப்புரைக்க. பாததூளிக்கு நிகரோ - அடித்தூசிக்கு ஒப்போ. பொன் உலகு - அமராவதி. (௬௭)

பாரோடு பதினலு லோகத்தில் உள்ளவெம்
பழியோடு பாவம்ஓடப்
பஞ்சம்ஓ டக்கொடுமை யஞ்சிஓ டத்தமிழ்ப்
பாவலர்கள் வறுமை ஓடச்

சூர்ஓட அவுணர்கள் பயந்தோட வானவர்கள்
துன்பங் கலங்கியோடச்
சொல்லோடு பழகாத புலவரோ டப்பழைய
தொண்டர்மன மாயையோட

வாரோடு கொங்கைமட வாரோடு மிளைஞர்தம்
மனையோடு மேவிவாழ
வந்துதெரி சித்துளோர் பிணிஓட அங்கவர்
மனத்துயர் அனைத்தும்ஓடத்

தேரோடி வரும்வீதி திகழ்பண்பை வாழவே
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) *வெம்பழி - கொடிய பழி, வசை. பாவலர்கள் - கவிராயர்கள். மாயை - அறியாமை யிருள். பிணி - நோய்.* (கூஅ)

பொன்மௌலி யுங்கருணை பொழிவதன மும்திருப்
புருவமும் நெற்றியழகும்
புண்டரிக நயனஅரு ளும்குழைக ளும்தமிழ்ப்
புத்தமுத மொய்த்தவாயும்

மின்மலிந் திலகுகூ ரியதுண்ட மும்கவின்
விளங்கியக போலங்களும்
வெண்தரள மாலையணி கண்டமுந் திண்புயமும்
வேலுமுள ரிக்கைகளும்

பன்மணியு நூலுமணி மார்பமுந் தோயாத
பட்டுடையும் மிக்கதண்டைப்
பாதமுந் தோகைமயி லும்சிந்தை யுள்ளே
பதித்துத் துடிக்கும் அடியார்

சென்மஇருள் முழுதும்விடி யக்கூவு சேவலாய்
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்ததரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) வதனம் - முகம். புண்டரிக நயனம் - தாமரைக் கண்கள். மொய்த்த - நிறைந்த. வில் மலிந்து இலகு கூரிய துண்டம் - ஒளி நிறைந்து விளங்குகின்ற கூரிய மூக்கும். கபோலம்- கன்னம். கண்டம் - கழுத்து. பாதம் - அடி. தோயாத பட்டுடையும்- நீரில் அடித்துத் துவைக்கப் பெறாத பட்டாடையும். துடிக்கும் - பதைக்கும், உருகும். விடிய - நீங்க, வெளியாக. (௯௯)

மங்கல மடப்பிடி குறக்கோடி இடத்தினும்
வலத்தினும் இருந்துவாழ்க
மாமயிலும் வாழ்கஅதன் மேலிலகு நூபுரம்
வணைந்தசே வடியும்வாழ்க

பொங்கொளி தயங்குதிரு ஆபரண முந்நூல்
புனைந்திடுபொன் மார்பும்வாழ்க
போர்வேலும் ஈராறு செங்கையும் பன்னிரு
புயங்கள்சுந் தரமும் வாழ்க

தங்குகரு ணைக்கண்கள் ஆறிரண் டுந்திருச்
சண்முகத் தருளும்வாழ்க
தாழ்குழைமுந் நான்கினொடு பவளவா யாறுடன்
றடமகுட மினிதுவாழ்க.

திங்கண்முமும் மாரிபொழி யச்சேவல் வாழ்கநீ
சிறுதேர் உருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதேர் உருட்டியருளே.

(அ - ரை.) மடப்பிடி இடத்தினும் - அழகிய தெய்வயானை இடப்பக்கத்திலும். குறக்கொடி - வள்ளி. நூபுரம் - பரிபுரம், சிலம்பு. முந்நூல் - முப்புரிநூல். சுந்தரம் - அழகு. மகுடம் - முடி. உருட்டியருளே - உருட்டி அருள். (௧00)

திருமலைமுருகன் பிள்ளைத்தமிழ்

முற்றும்

---

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]

# முருகன் பிள்ளைத்தமிழ்

# நூல்கள்

முருகன் பிள்ளைத்தமிழ் நூல்களில் சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் தவிர ஏனைய முருகன் பிள்ளைத்தமிழ் நூல்கள் அரிய குறிப்புரை, விளக்கங்களுடன் கழகவழி வெளிவந்துள்ளன. சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் விரைவில் வெளி வரும்.

| | ரூ. | பை. |
|---|---|---|
| மூத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | 1 | 75 |
| திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ் | 1 | 00 |
| சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் | (அச்சில்) | |

